# வள்ளுவர் சமூகத்தின் வாழ்வியலும் வழக்காறுகளும் (கடலூர் மாவட்டம்)

# LIFE AND LORES OF VALLUVAR COMMUNITY (CUDDALORE DISTRICT)

முனைவர் பட்டம் பெறும் முகமாகப்
புதுவைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெறும் ஆய்வேடு

Thesis Submitted to Pondicherry University for the award of the degree of Doctor of Philosophy


ஆய்வாளர்
**சீ. பரந்தாமன்**

Research Scholar
**S. PARANTHAMAN**

ஆய்வு நெறியாளர்
முனைவர் **மு. கருணாநிதி**

Research Supervisor
**Dr. M. KARUNANIDHI**






**சுப்பிரமணிய பாரதியார் தமிழியற்புலம்**
**புதுவைப் பல்கலைக்கழகம்**
**புதுச்சேரி - 605 014.**

**Subramania Bharathi School of Tamil Language & Literature**
**Pondicherry University**
**Puducherry 605 014.**


ஏப்ரல் - 2013.

April - 2013.

முனைவர் **மு. கருணாநிதி,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,

உதவிப் பேராசிரியர் (முதுநிலை),

சுப்பிரமணிய பாரதியார் தமிழியற்புலம்,

புதுவைப் பல்கலைக்கழகம்,

புதுச்சேரி – 605 014.

## மேற்பார்வையாளர் சான்றிதழ்

**“வள்ளுவச் சமூகத்தின் வாழ்வியலும் வழக்காறுகளும் (கடலூர் மாவட்டம்)”** என்ற தலைப்பில் திரு. **சீ. பரந்தாமன்** அவர்கள் செய்துள்ள இந்த ஆய்வு, புதுவைப் பல்கலைக்கழகச் சுப்பிரமணிய பாரதியார் தமிழியற்புலத்தில் அவர் முனைவர் பட்டத்திற்காக (பிஎச்.டி.,) முழுநேர ஆய்வாளராக ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இவ் ஆய்விற்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் வழங்கப்படவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

இடம் : புதுச்சேரி **(மு. கருணாநிதி)**

நாள் : மேற்பார்வையாளர்

**சீ. பரந்தாமன்,,**

முனைவர் பட்ட ஆய்வாளர்,

சுப்பிரமணிய பாரதியார் தமிழியற்புலம்,

புதுவைப் பல்கலைக்கழகம்,

புதுச்சேரி – 605 014.

## ஆய்வாளர் உறுதிமொழி

**“வள்ளுவச் சமூகத்தின் வாழ்வியலும் வழக்காறுகளும் (கடலூர் மாவட்டம்)”** என்ற தலைப்பில் முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்கு மேற்கொள்ளப்பட்ட இந்த ஆய்வு என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ் ஆய்வேட்டினை அளிக்கவில்லை என உறுதி அளிக்கின்றேன்.

இடம் : புதுச்சேரி **(சீ. பரந்தாமன்)**

நாள் : ஆய்வாளர்

# நன்றியுரை

ஈன்று புறந்தந்து பல்வேறு துன்பங்களுக்கிடையிலும், வறுமையிலும் என்னை ஆளாக்கிய என் பெற்றோர் **அம்பிகா – சீனுவாசன்** அவர்களின் பாதங்களை நன்றியுடன் வணங்குகிறேன்.

முனைவர் பட்டத்திற்காக ஆய்வு செய்ய எனக்கு வாய்ப்பளித்த புதுவைப் பல்கலைக்கழகத்திற்கு என் நன்றி உரித்தாகுக.

விண்ணப்பித்தல் தொடர்பான விவரங்களை அறிந்துகொள்ள நான் அறிமுகம் இல்லாதபோதும் இனிய முகத்துடன் எனது ஐயங்களைக் களைந்தும், முறையாக விண்ணப்பியுங்கள்; வாய்ப்புக் கிடைக்கும் என்று நம்பிக்கையளித்து, வாய்ப்புக் கிடைத்த பின்னரும் ஆய்வுத் தொடர்பான பல்வேறு கருத்துக்களை விளக்கி உதவிசெய்த தமிழியற்புலத்தின் முன்னாள் புல முதன்மையர் முனைவர் **அ. அறிவுநம்பி** அவர்களுக்கு என் பணிவான நன்றி.

என் குடும்பச்சூழலைக் கருத்தில் கொண்டு, தேவையைக் கருதிப் பல்கலைக்கழக உதவித்தொகையைக் காலத்துடன் கிடைத்திட வழிசெய்து ஆய்வுக்குப் பலவகைகளில் உதவியும் வந்த தமிழியற்புலத்தின் முன்னாள் புல முதன்மையர் முனைவர் **எஸ். ஆரோக்கியநாதன்** அவர்களுக்கும் என் பணிவான நன்றி.

பேராசிரியராக இருந்தபோது பல்வேறு ஆய்வுப் பணிகளுக்கிடையில் எனக்கும் நேரம் ஒதுக்கி ஆய்வு தொடர்பாகக் கலந்துரையாடி, பெரியாரின் கருத்துக்களை எடுத்துக்காட்டி ஊக்கமளித்த தமிழியற்புலத்தின் புல முதன்மையர் முனைவர் **அரங்க. நலங்கிள்ளி** அவர்களுக்கும் பணிவான நன்றி.

இவ் ஆய்வுக்கு மேற்பார்வையாளராக இருந்து எனது குணங்களைக் கொண்டும், குற்றங்களை மறந்தும் கருணை உள்ளத்துடன் என்னை வழிநடத்திய முனைவர் **மூ. கருணாநிதி** அவர்களுக்கும் என் பணிவான நன்றி.

தொடக்கம் முதற்கொண்டே ஆய்வு சரியான பாதையில் செல்ல ஒட்டியும், வெட்டியும் பல்வேறு திருத்தங்களைச் செய்து வழிநடத்திய இவ்வாய்வின் வல்லுநர் குழு உறுப்பினர்கள் பேராசிரியர்

முனைவர் **ம. மதியழகன்** அவர்களுக்கும், புதுச்சேரி மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவன இயக்குனர் முனைவர் **சீ. பக்தவத்சல பாரதி** அவர்களுக்கும் என் பணிவான நன்றிகள்.

தமிழியற்புலத்தின் கம்பன் இருக்கையின் சிறப்புநிலைப் பேராசிரியராக இருந்தபோது ஆய்வு தொடர்பான பல்வேறு குறிப்புகளைக் கொடுத்து உதவியும், என் முன்னேற்றத்தில் அக்கறை கொண்டவருமான எனது ஆசிரியர், சென்னை, பச்சையப்பன் கல்லூரியின் முன்னாள் முதல்வர் முனைவர் **தெ. ஞானசுந்தரம்** அவர்களுக்கும் என் பணிவான நன்றி.

ஆய்வு தொடர்பாகப் பல்வேறு கருத்துகளை நான் கேட்கும் பொழுதெல்லாம் மனமுவந்து அளித்த தமிழியற்புலப் பேராசிரியர்களான முனைவர் **க. இளமதி சானகிராமன்**, முனைவர் **ஆ. திருநாகலிங்கம்**, முதுமுனைவர் **ம.சா. அறிவுடைநம்பி**, முனைவர் **பா. இரவிக்குமார்** ஆகியோருக்கும் என் நன்றிகள்.

எனக்கு எல்லாமுமாக இருந்து, என் முன்னேற்றத்திற்கு முழுமையாகப் பாடுபடும் என் இல்வாழ்க்கைத் துணைநலம் **தெ. ருக்குமணி** பி.ஏ., பி.எட்., ஆசிரியர் அவர்களுக்கும், எனதருமைப் பிள்ளைகள் **ப. ரிஷிகேஷ், ப. முகிலேஷ்** ஆகியோருக்கும் என் அன்பான நன்றிகள்.

முனைவர் பட்டச் (பிஎச்.டி.,) சேர்க்கைக்கான விளம்பரம் இணையதளத்திலும், செய்தித்தாள்களிலும் வெளியாகியிருப்பதை எடுத்துக்கூறி, விண்ணப்பிக்க வைத்து எனது வாழ்க்கைப் பாதையை மாற்றிய அன்பு மைத்துனர் திரு **தெ. ஞானவேல்** (முனைவர் பட்ட ஆய்வாளர்) அவர்களுக்கும் என் நன்றி.

இவ்வாய்வேடு செம்மையுற உதவிய எனது சக ஆய்வாளர்கள் **இரா. கந்தசாமி, பா. விநாயகம்,** முனைவர் **ஆ. இராஜாராமன்**, **க. இளந்தென்றல்** ஆகியோருக்கும் என் மனமார்ந்த நன்றிகள்.

நன்றியுடன்

***சீ. பரந்தாமன்***

# பொருளடக்கம்

# 1. ஆய்வு முன்னுரை

## 1.1. முன்னுரை

பழந்தமிழரின் வாழ்வியலும், வழக்காறுகளும் தமிழ் இலக்கியங்களில், இலக்கணங்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன. இப்பதிவுகளின் மூலம் பன்முகத் தமிழியல் ஆய்வுகள் வெளிவந்துள்ளன. சில தமிழ்த் தொல்குடியினரின் வாழ்வியல், வழக்காறுகள் பதிவு செய்யப்படாமல் காலங்காலமாக வாய்மொழியாகவே இருந்து வந்துள்ளன. அவை தலைமுறை மாற்றத்தால் மாற்றம் பெறுவதுடன் மாற்று மரபுகளின் ஆதிக்கத்தால் நலிந்துவரும் நிலையும் காணப்படுகிறது. காலச்சூழலில் இவை முற்றிலும் அழிந்துபோகும் நிலையும் உருவாகலாம். எனவே இவற்றினை ஆவணப்படுத்துவதும், ஆராய்வதும் மிக அவசியமான ஒன்றாகும் என்ற கருத்தின் அடிப்படையில் இவ் ஆய்வு அமைகிறது.

## 1.2. தலைப்புத் தேர்வு

நாட்டுப்புற மக்களில் ஒரு பகுதியினரான தாழ்த்தப்பட்ட சாதிகளுள், வள்ளுவர் சாதியினர் கல்வி அறிவு சார்ந்த பிரிவினராவர். நாட்டுப்புறங்களில் வாழ்ந்துகொண்டிருக்கும் இவர்களின் பழக்கவழக்கங்கள், பண்பாடுகள், தொழில்கள், சடங்குமுறைகள் முதலியன பிற தாழ்த்தப்பட்ட சாதியினரிடமிருந்து பல்வேறு நிலைகளில் வேறுபட்டுக் காணப்படுகின்றன. மேலவர் மயமான போக்கும் இவர்களிடம் அதிகமாகக் காணப்படுகிறது. இவர்கள் பழைய பண்பாட்டுக் கலைகளைக் கைவிடவும் இயலாது, புதிய பண்பாடுகளைப் புறக்கணிக்கவும் முடியாது உள்ள நிலை களப்பகுதியில் காணப்படுகிறது. எனவே, வள்ளுவர் சமூகத்தைப் பற்றி ஆய்வு செய்ய வேண்டும் என்ற எண்ணம் இத்தலைப்புக்கு வித்திட்டது. கடலூர் மாவட்டச் சிற்றூர்களில் வள்ளுவச் சமூக மக்களில் வள்ளுவ நாயனார், வள்ளுவ ஆழ்வார் என்ற சைவ, வைணவச் சமயங்கள் சார்ந்த இரு உள்ளினப் பிரிவினரும் அதிக அளவில் காணப்படுவதால் இதனைக் களப்பகுதியாகக் கொண்டு, **“வள்ளுவர் சமூகத்தின் வாழ்வியலும் வழக்காறுகளும் (கடலூர் மாவட்டம்)”** என்ற தலைப்பில் இவ்வாய்வு அமைகிறது.

### 1.3. ஆய்வுச் சிக்கல்

வள்ளுவர் சமூகத்து மக்களின் வாழ்க்கை முறைகள், வழக்காறுகள், சமய வழிபாடுகள் ஆகியன இம்மாவட்டத்தில் உள்ள பிற அட்டவணைச் சமூகத்து மக்களிடமிருந்து வேறுபட்டவையாகக் காணப்படுகின்றன. வள்ளுவர்கள் பிற அட்டவணைச் சமூகத்து மக்களைத் தாழ்த்தப்பட்டவர்களாகக் கருதுகின்றனர். இன்றைய நிலையில் உயர்குடிகளாகக் கருதப்படுவோர் வள்ளுவர்களைத் தாழ்த்தப்பட்டவர்களாகக் கருதும் நிலையும் காணப்படுகின்றது. தமிழரின் வழக்காற்றில் தொன்றுதொட்டு அறிவுசார் தொழில்களைச் செய்துவருவோர் குறிப்பாகப் பார்ப்பனர்கள் உயர்ந்தவர்களாகக் கருதப்படும் நிலை இருந்தும், அறிவுசார் தொழில்களான புரோகிதம், சோதிடம், மருத்துவம் இவற்றைச் செய்துவரும் வள்ளுவர்கள் தாழ்த்தப்பட்டவர்களாக இன்றைய சமூக நிலையில் கருதப்படுவது ஏன்? என்பது இவ்வாய்விற்கு சிக்கலாக அமைகிறது.

### 1.4. ஆய்வு நோக்கம்

- ❖ வள்ளுவ மக்களின் சமூக வரலாற்றுப் பின்புலத்தையும், தமிழ் இலக்கியங்களில் இவர்களின் நிலை குறித்த பதிவுகளையும் வெளிக்கொணர்தல்.
- ❖ வள்ளுவர்களின் தொழில்கள், சமய வழிபாட்டு முறைகள், சடங்கு முறைகள் இவற்றை ஆராய்தல்.
- ❖ வள்ளுவ மக்களின் வாழ்க்கை நிலைகளில் ஏற்பட்டுள்ள சமகால மாற்றங்களையும் அதனால் அவர்களுடைய வாழ்க்கை முறையில் ஏற்பட்ட தாக்கங்களையும் ஆராய்தல்.
- ❖ பிற தாழ்த்தப்பட்ட சாதியினருடனும், உயர்குடிகளாகக் கருதப்படும் சாதியினருடனும் ஒத்துப்போகின்ற, வேறுபடுகின்ற செயல்பாடுகளை ஆராய்தல்.

### 1.5. ஆய்வு முன்னோடிகள்

தாழ்த்தப்பட்ட சாதியினரைப் பற்றிப் பல்வேறு நிறுவனங்களிலிருந்து பல்வேறு ஆய்வுகள் வெளிவந்திருக்கின்றன. அவற்றுள் வள்ளுவர் இனத்தைப் பற்றிப் புதுவைப் பல்கலைக்கழகத்தின் காரைக்காலில் உள்ள தமிழ்த்துறையில்

1992-ஆம் ஆண்டு வெ.முத்தன் அவர்கள் இளமுனைவர் பட்டத்திற்காக மேற்கொண்ட **“காரை வட்டார வள்ளுவர் சமூகம்”** என்ற ஆய்வேடு இவ்வாய்வுக்கு முதன்மையான தூண்டுணர்வாய் அமைகிறது.

## 1.6. ஆய்வுக் களம்

கடலூர் மாவட்டத்தில் இடம்பெற்றுள்ள வட்டாரங்களில் கடலூர், பண்ருட்டி ஆகிய இரண்டு வட்டாரங்களைச் சார்ந்த வள்ளுவர்கள் பெரும்பான்மையாக வசிக்கும் அறுபது சிற்றூர்களும், விழுப்புரம் மாவட்டத்தைச் சார்ந்த ஆறு சிற்றூர்களும் ஆய்வுக்களமாக அமைகின்றன.

கடலூர் வட்டாரத்தில் அழகியநத்தம், அன்னவல்லி, ஆலப்பாக்கம், ஆனையம்பேட்டை, ஆடூர் அகரம், கண்ணாடி, கருங்குழி, களையூர், காரணப்பட்டு, காரைக்காடு, குள்ளஞ்சாவடி, குறிஞ்சிப்பாடி, குண்டு உப்பளவாடி, குடிகாடு, கோண்டூர், செஞ்சிக்குமாராபுரம், செல்லங்குப்பம், செம்மங்குப்பம், தியாகவல்லி, தூக்கணாம்பாக்கம், தென்னம்பாக்கம், தேவனாம்பட்டினம், நைனார்குப்பம், பள்ளிப்பட்டு, பூவாணிகுப்பம், மருதாடு, மஞ்சகுப்பம், மருவாய், வரக்கால்பட்டு, வானமாதேவி, விலங்கல்பட்டு, வெள்ளப்பாக்கம், பண்ருட்டி வட்டத்திலுள்ள அவியனூர், ஆண்டிக்குப்பம், இராயர்பாளையம், எனதிரிமங்கலம், காடாம்புலியூர், கோரணப்பட்டு, சுந்தரவாண்டி, சேமக்கோட்டை, சோழவல்லி, திருவதிகை, திருவாமூர், பாலூர், புலவனூர், புலியூர், வான்பாக்கம், பண்ரக்கோட்டை, பூங்குணம், மருங்கூர், லட்சுமிநாராயணபுரம், விசூர், விழமங்கலம், வீரப்பெருமாநல்லூர், வைடபாக்கம் ஆகிய ஊர்களும் கடலூர் மாவட்டத்திற்கு அருகில் உள்ள விழுப்புரம் மாவட்டத்தைச் சார்ந்த ஊர்களான ஆண்டிக்குழி, ஆனத்தூர், அரசூர், திருவெண்ணெய்நல்லூர், திருநாவலூர், தனியாளம்பட்டு ஆகிய ஊர்களும் ஆய்வுக்களமாக அமைகின்றன.

## 1.7. கருதுகோள்

❖ வள்ளுவர் சாதியினர் பிற தாழ்த்தப்பட்ட சாதியினரிடையே ஒன்றிக்கலக்கும் இயல்பில்லாமலும் கல்வி, தொழில், வாழ்க்கைமுறை, சமய வழிபாடு, சடங்குமுறைகள் போன்றவற்றில் பிற தாழ்த்தப்பட்ட சாதியினரிடமிருந்து பல வழிகளில் விலகியும், தனித்தியங்கியும் வருகின்ற தனி மரபுக்குரிய போக்குகளும் அதிகம் காணப்படுகின்றன.

வள்ளுவர்களின் இத்தகைய வாழ்வியல் நிலைப்பாடுகளைக் கருத்தில் கொண்டால் இவர்கள் நிறுவனப்பட்ட சைவ, வைணவ, வைதீக சமயங்களிடமிருந்து விலகிய ஒரு தனித்துவமான நிலையில் இருந்திருக்கலாம் எனக் கருத இடமுண்டு.

- எனவே, இச்சமூக மக்கள் இன்றைக்கு இருப்பதுபோல் அல்லாமல் முற்பட்ட காலத்தில் சமய, சடங்கு, சோதிட, புரோகித, மருத்துவம் போன்ற அறிவு மரபைப் போற்றி வளர்த்தவர்களாக இருந்துள்ளனர். இத்தகைய மரபு பின்னாளில் ஏற்பட்ட மற்ற மாற்று மரபுகளின் ஆதிக்கத்திற்கு ஆட்பட்டு நலிந்து காணப்படுகிறது என்பதே இவ்வாய்வின் கருதுகோளாக அமைகிறது

## 1.8. ஆய்வு மூலங்கள்

கடலூர் மாவட்டக் கிராமங்களுக்குச் சென்று வள்ளுவர் சமூகத்து மக்களோடும், இச்சமூகத்தைப் பற்றிப் பிற சமூக மக்களோடும் வினாக்கள் தொடுத்து விடைகள் கண்டும், நேரில் கலந்துரையாடலின் போது சேகரித்தும், வள்ளுவ மக்களின் விழாக்கள், சமயவழிபாடுகள், சடங்குமுறைகள் ஆகியனவற்றில் கலந்து கொண்டும் பெறப்பட்ட செய்திகளும், அவர்களிடமுள்ள வாய்மொழிப் பாடல்கள் மற்றும் சமகாலத் தரவுகளும் இவ்வாய்வின் முதன்மை மூலங்களாக அமைகின்றன.

சங்க இலக்கியங்கள், பிற தமிழிலக்கியங்கள், நாட்டுப்புற நூல்கள், மானிடவியல் நூல்கள், எட்கர் தர்ஸ்டன், ஞா.தேவநேயப்பாவணர் போன்றோரின் நூல்களில் கிடைத்த குறிப்புகள் ஆகியவை துணைமைச் சான்றுகளாகக் கொள்ளப்படுகின்றன.

## 1.9. ஆய்வு அணுகுமுறை

வள்ளுவர் சமூகத்தின் (கடலூர் மாவட்டம்) வள்ளுவ நாயனார், வள்ளுவ ஆழ்வார் ஆகிய இரு உள்ளினப் பிரிவுகளின் வாழ்வியல், வழக்காறுகள் தொடர்பான கருத்துகளை ஆராயும் வகையில் இவ்வாய்வு விளக்கமுறை ஆய்வாக (Descriptive Method) அமைகிறது.

### 1.10. ஆய்வேட்டின் அமைப்பு

இவ்வாய்வேடு பின்வருமாறு எட்டு இயல்களாகப் பகுக்கப்படுகிறது.

1. முன்னுரை
2. வள்ளுவர் சமூகம்: சமூக வரலாறு
3. வள்ளுவர்களின் தொழில்கள்
4. வள்ளுவர்களின் சமயமும் வழிபாடும்
5. வள்ளுவர்களின் வாழ்வுசார் சடங்குகள்
6. வள்ளுவர்களின் இறப்புசார் சடங்குகள்
7. வள்ளுவர்களின் வழக்காறுகள்.
8. முடிவுரை

### 1.10.1. முன்னுரை

முதலாவது இயலாக அமைந்துள்ள இப்பகுதியில் தலைப்புத் தேர்வு – ஆய்வுச் சிக்கல், ஆய்வு நோக்கம், ஆய்வு முன்னோடிகள், ஆய்வுக்களம், கருதுகோள், ஆய்வு மூலம், ஆய்வேட்டின் அமைப்பு முதலியன விளக்கப்படுகின்றன.

### 1.10.2. வள்ளுவர் சமூகம் : சமூக வரலாறு

முன்னுரை – வள்ளுவர் சமூகத்தின் உள்ளினப் பிரிவுகள் - நாயனார் - ஆழ்வார் - தனிமொழி - இருப்பிடம் - சுடுகாட்டு அமைப்பு – சமூக நிலைகள் - தீண்டாநிலை – கல்விநிலை – சொத்துரிமை ஆகிய இன்றைய நிலைகள்; வள்ளுவர் சமூகத்தின் பின்புலத்தை அறிந்துகொள்வதற்காக வள்ளுவன் என்பதன் பொருள் - சங்ககாலச் செய்திகள் - வள்ளுவக் கணியர்கள் - காப்பியங்களில் வள்ளுவர்கள் - வள்ளுவர் பற்றிய பிற இலக்கியச் செய்திகள் - வரலாற்றுச் செய்திகள் - கல்வெட்டுச் சான்றுகள் - வள்ளுவம் - வள்ளுவர் சமூகம் தாழ்நிலை அடைந்தமை ஆகியன இரண்டாவதாக இடம்பெற்றுள்ள இவ்வியலில் ஆராயப்படுகின்றன.

### 1.10.3. வள்ளுவர்களின் தொழில்கள்

சோதிடத் தொழில் - சோதிடம் சொல்லும் பொருளும் - சோதிடர் - சோதிடருக்கு வழங்கப்பெறும் பெயர்கள் - சோதிடருக்குரிய சிறப்புகள் - சோதிடருக்குரிய இலக்கணம் - கணித சோதிடம் - சாதகம் சொல்லும் பொருளும் - வள்ளுவர்கள் சாதகம் கணிக்கும் முறை – பயன்படுத்தும் பஞ்சாங்கம் - சோதிட நூல்கள் - வள்ளுவர்கள் பார்க்கும் சாதக வகைப்பாடுகள் - பிறப்புச் சாதகம் - ருது சாதகம் - திருமணப் பொருத்தம் - பெயர் இராசி பார்த்தல் - சாதகம் எழுதும் முறை – ஏடெழுதும் முறை – பயன்படுத்தும் எழுத்தாணிகள் - ஏடுகள் விளங்க, சாதகம் எழுதும்போது தொடங்கும் பாடல் - ஆருடம் - கைரேகை – காண்ட சோதிடம் - கிளி சோதிடம் - புரோகிதம் - புரோகித கிராமம் - சிக்கல்கள் - விளக்கு வைத்தல் - ஊர்ப்பாடுதல் - தப்பு, சேமக்கலம் இசைத்தலுக்கான தொன்மைச் செய்தி – வருமுடி வாங்குதல் - குருத்துவம் - நாட்டு மருத்துவம் - மருத்துவம் செய்யும் முறை – மருந்து கொடுக்கும் முறை – மருத்துவ அறிவு – நாட்டு மருத்துவத்தின் வீழ்ச்சி – மருத்துவக் கூலி – பெண் மருத்துவர்கள் - மந்திர சமய மருத்துவம் - புனித போலிப் பொருள் - சாங்கியம் செய்தல் - சீட்டு எழுதிக் கட்டுதல் - முட்டை ஓதி வைத்தல் - சூனியம் வைத்தல் - தெருக்கூத்து – தச்சுத்தொழில் - வேளாண் தொழில் - வள்ளுவ விவசாயிகள் - கால்நடை வளர்த்தல் - அரசுப் பணிகள் முதலானவை வள்ளுவர் இனத்தோடு தொடர்புப்படுத்தி மூன்றாவது இயலில் ஆய்வு செய்யப்பெறுகின்றன.

### 1.10.4. வள்ளுவர்களின் சமயமும் வழிபாடும்

நான்காம் இயலில் தொன்மைத் தமிழர் சமயம் - சைவம் - மாலியம் - சிவ வழிபாடுகளான பிரதோசம், மகா சிவராத்திரி, கார்த்திகை தீபம் - முருகனுக்குரிய தைக் கிருத்திகை - பங்குனி உத்திரம், பிள்ளையாருக்குரிய விநாயகர் சதுர்த்தி - சங்கடகர சதுர்த்தி முதலியனவும் வைணவத் தெய்வமான திருமாலுக்குரிய புரட்டாசி மாத விரதம் - வைகுண்ட ஏகாதசி - மார்கழி மாத பஜனை முதலியனவும் சனிக்கிழமை வழிபாடு - பெண்தெய்வ வழிபாடுகளான வரலட்சுமி விரதம் - ஆயுத பூஜை - சரஸ்வதி பூஜை முதலிய வழிபாட்டு முறைகளும் இத்தெய்வங்களை அன்றாடம் வழிபடும் முறைகளும் விளக்கப்பட்டு ஆராயப்படுகின்றன. இம்மக்களின் சிறுதெய்வ வழிபாட்டுமுறைகளான

குலதெய்வப் படையல் - உதிரவாய் துடைத்தல் - ஆண், பெண் தெய்வங்களை தொழில்வாரியாகப் பகுத்தாய்தல் - கூத்தாண்டவர் வழிபாடு முதலியனவும் - இறந்தோர் வழிபாடுகளான அமாவாசை - மாசிமகம் - திதி கொடுத்தல் - இயற்கை வழிபாடுகள் ஆகியனவும் இவ்வியலில் ஆய்வு செய்யப்பெறவுள்ளன.

### 1.10.5. வள்ளுவர்களின் வாழ்வுசார் சடங்குகள்

ஐந்தாம் இயலில் வள்ளுவ மக்களின் பிறப்புச் சடங்குகளான சேணை வைத்தல், செலவுத்தூள் கொடுத்தல் - தீட்டுக்கழித்தல் - அரைஞாண்கயிறு கட்டுதல் - கைக்காப்பு அணிவித்தல் - பெயர்சூட்டல் - காதுகுத்துதல் - பூப்பெய்தல் சடங்குகளான தண்ணீர் ஊற்றுதல் - குடிசைக்குள் விடல் - வீட்டுக்கு அழைத்தல் - அம்மான்சீர் - குடிசையை எரித்தல் - தெரட்டி கல்யாணம் - மஞ்சள்நீர் - திருமணச் சடங்குகளான பெண் தேடல் - பொருத்தம் பார்த்தல் - பெண்வீடு பார்த்தல் - பிள்ளைவீடு பார்த்தல் - உறுதிப் பத்திரம் அல்லது ஒப்புத் தாம்பூலம் மாற்றுதல் - முகூர்த்தம் குறித்தல் - திருமணம் - காப்புக் களைதல் - மருவுண்ணல் - அம்போகம் - தனிவழிப் போதல் - ஆடிமாதச் சீர் – தீபாவளிச் சீர் - பொங்கல் சீர் - வளைகாப்பு - நடுவீட்டுத் தாலி கட்டுதல் - அறுபதாம் கல்யாணம் ஆகிய சடங்கு முறைகள் ஆய்வு செய்யப்பெறுகின்றன.

### 1.10.6. வள்ளுவர்களின் இறப்புசார் சடங்குகள்

ஆறாவது இயலில் வள்ளுவர்களின் இறப்புச் சடங்குகளான அனைமுரித்தல் - எழவு சொல்லல் - பாடைகட்டல் - பிணத்திற்கு அபிஷேகம் செய்தல் - கை மாற்றுதல் - முத்திரை இறக்குதல் - மஞ்சப்பத்து இடித்தல் - சக்கரம் எடுத்தல் - கலசம் எடுத்தல் - புதைத்தல் அல்லது எரித்தல், அபிஷேகம் செய்தல் ஆகிய பச்சைச் சடங்குகளும் - ஏழாந்துக்கம் - பதினாறு நாள் விரதம் - நடப்பு, சக்கரம் பிரித்தல் - கலசம் எடுத்தல் - படையல் - கருமாதி - நாலுவாசப்படிப் பாடல் - வைகுந்தம் அல்லது கைலாயம் சேர்த்தல், முப்பது கும்பிடல் ஆகிய உலர் சடங்குகளும் ஆய்வு செய்யப்பெறுகின்றன.

### 1.10.7. வள்ளுவர்களின் பிற வழக்காறுகள்

ஏழாம் இயலில் வள்ளுவ மக்களின் உணவுமுறைகள் - உடை அணிதல், நாட்டுப்புற நம்பிக்கைகள் - சோதிட நம்பிக்கைகள் - பயன்படுத்தும்

பழமொழிகள் - வாழ்வியல் சிக்கல்கள் - திருவிழாக்கள் - கொண்டாடும் நன்னாள் - பொழுதுபோக்குகள் - வள்ளுவச் சிறார்களின் வழக்காறுகள் - வள்ளுவர்கள் பயன்படுத்தும் வடசொற்கள், கொச்சைச் சொற்கள் ஆகியன ஆய்வு செய்யப்பெறுகின்றன.

### 1.10.8. முடிவுரை

மேற்கண்ட இயல்களில் கிடைத்துள்ள தொகுப்புகளைக் கருத்தில் கொண்டு ஒட்டுமொத்த ஆய்வுக்கான முடிவுகள் இங்கே கூறப்படுகின்றன.

### 1.10.9. துணைநூற்பட்டியல்

ஆய்விற்குப் பயன்படுத்தப்பட்ட இலக்கிய, இலக்கண நூல்கள், நாட்டுப்புறவியல் நூல்கள், வரலாற்று நூல்கள், நிகண்டுகள், அகராதிகள், கலைக் களஞ்சியங்கள் ஆகியவை அகரவரிசைப்படுத்தப்பட்டுத் துணைநூற்பட்டியலாகத் தரப்படுகின்றன.

### 1.10.10. பின்னிணைப்புகள்

ஆய்விற்குப் பயன்பட்ட களப்பகுதி வரைபடங்கள், புகைப்படங்கள், தகவலாளிகளின் பட்டியல், வள்ளுவர்கள் இறைவன் மீது பாடும் பாடல்கள், வடமொழி மந்திரங்கள் ஆகியன பின்னிணைப்புகளாக இடம்பெறுகின்றன.

# 2. வள்ளுவர் சமூகம் : சமூக வரலாறு

## 2.1. முன்னுரை

தமிழகத்தில் இன்றைய நிலையில் நூற்றுப்பன்னிரண்டு சாதிகள் தாழ்த்தப்பட்ட சாதிகளாக காணப்படுகின்றன. அவற்றுள் முப்பத்தாறு சாதியினர் பழங்குடியினராகவும் (Scheduled Tribal) எழுபத்தாறு சாதியினர் ஆதிதிராவிடர்களாகவும்(Scheduled Caste) தமிழக அரசால் பட்டியலிடப்பட்டிருக்கின்றனர். இந்த அட்டவணை இனத்து மக்களில் அம்பட்டர், சக்கிலியர், பறையர், வண்ணார், வள்ளுவர் ஆகிய சாதியனரே கடலூர் மாவட்டத்தின் பெரும்பான்மையான கிராமங்களில் வாழ்ந்து வருகின்றனர். ஆதிதிராவிடர் பட்டியலில் வரிசை எண்கள் அறுபத்தெட்டு மற்றும் எழுபது ஆகியவற்றில் முறையே இடம்பெற்றுள்ள ‘திருவள்ளுவர்’, ‘வள்ளுவன்’ என்று குறிப்பிடப்படும் சமூகத்து மக்கள் ஒருவரே ஆவர். இன்று தாழ்த்தப்பட்டோர் பட்டியலில் இடம்பெற்றுள்ள இவ்வள்ளுவர் சமூகத்து மக்கள் தொன்றுதொட்டு அறிவு சார்ந்த மரபினராகவும், அறிவு சார்ந்த தொழில்களான சோதிடம், புரோகிதம், மருத்துவம் ஆகிய தொழில்களைச் செய்பவர்களாகவும் உள்ளனர். இம்மக்களின் உள்ளினப் பிரிவுகள், தனிமொழி, இருப்பிடம், கல்வி மற்றும் சமூக நிலைகளை விளக்கும் முகமாகவும், இன்று தாழ்நிலையை அடைந்துள்ள இச்சமூகத்தின் பின்புலம் என்ன? என்பதனை அறிந்துகொள்ளும் வகையில் தமிழிலக்கியங்கள், கல்வெட்டுகள், வரலாறுகள் ஆகியவற்றில் இடம்பெற்றுள்ள வள்ளுவச் சமூகத்தைப் பற்றிய குறிப்புகளைக் கொண்டு ஆராயும் முகமாகவும், முதன்மையானதொரு இயலாக இவ்வியல் அமைகின்றது.

## 2.2. வள்ளுவர் சமூகத்தின் உட்பிரிவுகள்

‘‘வள்ளுவர் சமூகத்தில் ஒன்பது குலப்பிரிவுகள் உள்ளன. அவை, ‘‘திருமூலத்தேவர், அம்பலத்தடையார், வள்ளிக்கநாதர், ஆழ்வார், தாதர், தப்புக்கொட்டி, பூக்கட்டிப் பண்டாரம், ஆண்டிப் பண்டாரம்’’[1] என்பனவாகும். இன்றைய நிலையில் ஆழ்வார், நாயனார் என்னும் இரண்டு குலப்பிரிவுகளே கடலூர் மாவட்டத்து வள்ளுவச் சமூகத்தவரின் உட்பிரிவுகளாகக் காணப்படுகின்றன.

---

[1]. பக்தவத்சல பாரதி, தமிழகத்தில் நாடோடிகள் சங்ககாலம் முதல் சமகாலம் வரை, ப.260.

### 2.2.1. நாயனார்

வள்ளுவர் சமூக மக்களில் ஒரு பிரிவினர் சிவனை வழிபடும் சைவ சமயத்தைச் சார்ந்தவர்கள் சிவனடியார்களாகவே காணப்படுகின்றனர்; வாழ்கின்றனர்; தங்களை நாயனார் என்றே அழைத்துக்கொள்கின்றனர். தங்களின் பெயர்களுக்குப் பின்னால் 'நாயனார்' என்று போட்டுக்கொள்வதை அவர்களின் பிறப்பு முதல் இறப்பு வரையிலான அழைப்போலைகளில் காணமுடிகிறது.

பறையர், சக்கிலியர், வண்ணார், அம்பட்டர் ஆகிய சமூகத்து மக்களுக்கு வள்ளுவர்கள் புரோகிதர்களாக இருந்து வருவதால் பிற தாழ்த்தப்பட்ட சாதி மக்கள் இவர்களை 'ஐயர்' என்றே அழைக்கின்றனர். இவர்களின் வீடுகளைச் சுட்டும்பொழுதுகூட 'ஐயர் வீடு' (அயிருஊடு) என்று சொல்வதிலிருந்து இதனை அறியமுடிகிறது. ஆனால் உயர்சாதி மக்கள் இவர்களைப் "பண்டாரம்" என்றுதான் அழைக்கின்றனர். இவர்களின் வீடுகளைக்கூடப் 'பண்டாரம் வீடு' (பண்டாரமூடு) என்று குறிப்பிடுகின்றனர்.

"பண்டாரம் என மற்ற சமூகத்தவர்களால் அழைக்கப்படும் இவர்கள் தங்களை வள்ளுவர்கள் என்றும், வள்ளுவ நயினார் என்றும் கூறிக்கொள்கின்றனர். திருவள்ளுவர் வழியில் வந்தவர்களாகவும் குறிப்பிடுகின்றனர். தொழில்களடிப்படையில் இவர்களுக்கு வேறு பெயர்களும் உண்டு. சங்கூதி, ஜோசியன், அய்யர், பற அய்யர், வள்ளுவன் என வெவ்வேறு பெயர்களால் இவர்கள் குறிப்பிடப்படுகின்றனர்"[2].

"பண்டாரம் என்பதற்கு இறைவனுக்குப் பாமாலை சூட்டுபவன், சிவனடியான், பொக்கிஷம், மடாதீனத்தான்"[3], எனத் தமிழ்மொழி அகராதி பொருள் கூறுகிறது. "பண்டாரம் என்பதற்கு 'உயர்பொருட்பேரறிஞர்' என்று பெயர் விளக்கம் கூறப்படுகிறது. பண்டாரத்தில் நான்கு உட்பிரிவுகள் காணப்படுகின்றன. அவை,

---

[2]. பக்தவத்சல பாரதி, தமிழகத்தில் நாடோடிகள் சங்ககாலம் முதல் சமகாலம் வரை, ப.259.

[3]. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப.955.

1. வெள்ளாளப் பண்டாரம் (கோவிற்பண்டாரம்), மடத்துப் பண்டாரம், ஆண்டிப் பண்டாரம்.
2. பள்ளிப் பண்டாரம்
3. பள்ளர் பண்டாரம்
4. வள்ளுவப் பண்டாரம்(பறையர் குரு)

என்பவையாகும்''[4] என, தேவநேயப் பாவாணர் குறிப்பிடுகின்றார். இதில் வள்ளுவப் பண்டாரம் என்பது வள்ளுவச் சமூகத்திஊடைய ஓர் உட்பிரிவாகக் பிரிவாகக் காணப்படுகிறது.

### 2.2.2. ஆழ்வார்

வள்ளுவர் சமூகத்து மக்களில் மற்றோர் உட்பிரிவினர் திருமாலை வழிபடும் வைணவ சமயத்தைச் சேர்ந்தவராவர். இவர்கள் தங்களை 'ஆழ்வார்கள்' என்று கூறிக்கொள்கின்றனர். தங்களின் பெயர்களுக்குப் பின்னால் 'ஆழ்வார்' என்று போட்டுக் கொள்வதைப் பெருமிதமாகக் கருதுகின்றனர். ஆனால் இளைய தலைமுறையினர் இதனை விரும்புவதில்லை. பெயருடன் ஆழ்வார் என்னும் சொல் இணைக்கப்படுவதை இந்தச் சமூகத்து மக்களின் பிறப்பு முதல் இறப்பு வரையிலான அனைத்து அழைப்போலைகளிலும் (அழைப்பிதழ்கள்) காணமுடிகிறது. மேலும் இறப்புச் சடங்குகளில் ஒன்றான 'திதி கொடுத்தல்' என்ற நிகழ்வின்போது இறந்தவரின் பெயருடன் சேர்த்து ஆழ்வார் என்று கூறுவதைக் காணமுடிகிறது. பிற சமூகத்து மக்களில் ஆண்கள் மட்டுமே தங்களின் பெயருடன் ரெட்டியார், செட்டியார், படையாட்சி என்று போட்டுக் கொள்வதைப் போல் வள்ளுவச் சமூகத்திலும் இருபிரிவினர்களிலும் ஆண்கள் மட்டுமே ஆழ்வார், நாயனார் எனப் போட்டுக்கொள்வதைக் காணமுடிகிறது.

''ஆழ்வார் என்பது விட்டுணுவின் வாகனமான கருடனுக்குரிய பெயர் என்றும் 'ஆழ்வார் தாசரி' வள்ளுவச் சாதியாரின் ஓர் உட்பிரிவாக உள்ளது என்றும், இவர்கள் தொண்டரடிப் பொடியாழ்வாரின் வழித்தோன்றல்கள் என்றும் தங்களைக் கூறிக்கொள்கின்றனர்''[5] என எட்கர் தர்ஸ்டன் கூறுகிறார்.

---

[4]. ஞா.தேவநேயன்(பாவாணன்), தமிழர் வரலாறு, ப.292.

[5]. எட்கர் தர்ஸ்டன், தென்னிந்தியக் குலங்களும் குடிகளும், தொகுதி-1, ப.31.

தாழ்த்தப்பட்ட பிற அட்டவணை இனத்து மக்களுக்கு இவர்கள் புரோகிதர்களாக இருந்து வருவதால், அத்தகையோரும் வள்ளுவ ஆழ்வார்களை ‘ஐயர்’ என்றே அழைத்து வருகின்றனர். உயர்சாதி மக்கள் இவர்களை ஆழ்வார், தாசரி, தாதன் (தாசரி என்பதன் கொச்சை மொழி) எனும் சொற்களால் அழைக்கின்றனர். உயர்சாதி மக்களுள் வன்னியர்கள்(படையாட்சி) இவ்வள்ளுவர்களை ஐயர் என்று அழைக்கின்றனர்.

‘‘தாசரிகள் அல்லது தாதர்கள் வைணவ சமயம் சார்ந்த இரந்துண்ணும் சாதியராவர். பலிசர், சணப்பர், பள்ளி, வள்ளுவன், கதேதுலர், கொல்ல தாசரி என ஆறு உட்பிரிவினர் என்று திரு.எச்.ஏ.ஸ்டுவர்ட் கூறுகின்றார்’’[6]. இதில் வள்ளுவத் தாசரி என்பது வள்ளுவச் சமூகத்தின் ஓர் உள்ளினப் பிரிவாகும்.

‘‘ஒரு செல்வர் மகப்பேறு இல்லாது வருந்தித் தனக்குக் குழந்தைகள் பிறக்குமாயின் அவர்களுள் ஒருவனை இறைப்பணிக்கு ஆளாக்குவதாக வேண்டிக் கொண்டார். அதன்பின் அவருக்குப் பல பிள்ளைகள் பிறந்தன. அவர்களுள் ஒருவனைத் தாசன்(அடிமை) எனப் பெயரிட்டுத் தான் வேண்டிக் கொண்டபடி இறைப்பணியில் நிற்கும்படி விட்டார். தாசன் தன் தந்தையின் நிலபுலன்களின் மீது தனக்கிருந்த உரிமையை விட்டுக்கொடுத்ததால் அவனுக்குப் பிறந்த பிள்ளைகள் இரந்துண்ண வேண்டியதாயிற்று எனத் தாசரி பற்றி, திரு.எச்.ஏ.ஸ்டுவர்ட் அவர்கள் வட ஆர்காடு மாவட்டக் கையேட்டில் எழுதியுள்ளார்’’[7].

*‘‘ஆண்டியைக் கண்டால் லிங்கன்*
*தாதனைக் கண்டால் ரங்கன்’’*

என்னும் பழமொழி வள்ளுவச் சமூகத்தின் சைவ மற்றும் வைணவப் பிரிவுகளை உறுதி செய்வதாக அமைந்துள்ளது.

### 2.3. தனிமொழி

வள்ளுவச் சமூகத்தினர் சமயக்கொள்கைகளால் இரண்டு பிரிவினராகக் காணப்பட்டாலும் வழக்காறுகளால் (சமயங்களுக்குட்பட்டு) ஒன்றுபட்டவர்களாகவே காணப்படுகின்றனர். இவர்கள் தங்கள் சமூகத்திற்கு

---

[6]. எட்கர் தர்ஸ்டன், தென்னிந்தியக் குலங்களும் குடிகளும், தொகுதி-1, ப.32.

[7]. மேலது, ப.143, 146.

மட்டுமே புரியுமாறு குழூஉக்குறியாகப் பல வழக்குச் சொற்களைத் தொன்றுதொட்டுப் பேசி வருகின்றனர். இதனை ‘வள்ளுவ பாஷை’(வள்ளுவ மொழி) என்று கூறுகின்றனர்.

“வள்ளுவர்களின் தாய்மொழி தமிழ். மற்றவர்களிடமும் தமிழையே பேசுகின்றனர். ஆனால் இவர்களுக்குள் பேசும்போது பிற சமூக மக்களைக் குறத்துக் குறிப்பிட குழூஉக்குறியைப் பயன்படுத்துகின்றனர். பிற சமூகத்தவரைப் பொக்கன், வாஞ்சி, மேங்காஞ்சி, நாவிந்தன் எனக் குறிப்பிடுகின்றனர். இவை முறையே பறையர், வன்னியர், பிற உயர் சாதியினர், சக்கிலியர் ஆகிய இனங்களைக் குறிப்பனவாகும்”[8].

மனிதர்கள் தற்போது பேசுகின்ற, எழுதுகின்ற சொற்கள் முன்னோர்கள் கற்பித்தவையே ஆகும். முன்னோர்கள் எப்பொருளை எந்தச் சொல்லால் குறிப்பிட்டார்களோ பின்வருபவர்கள் அப்பொருளை அதே சொல்லால் வழங்குவது ‘வழக்கு’ அல்லது ‘மரபு’ ஆகும் என இலக்கண நூல்கள் கூறுகின்றன. இவ்வழக்கின் உட்பிரிவுகளில் ஒன்று குழூஉக்குறியாகும்.

“ஒரு கூட்டத்தார் ஒரு பெயருக்கு இயல்பாய் அமைந்த பெயரை ஒழித்துப் பிறர் அறியாதபடித் தம் இனத்தாருக்கு அல்லது கூட்டத்தாருக்கு மட்டுமே பொருள் விளங்குமாறு அடையாளச் சொற்களால் வழங்குவது குழூஉக்குறியாகும் (குழூஉ = கூட்டத்தினர், குறி = அடையாளம்)”[9].

வள்ளுவர் சமூகத்தினர் குழூஉக்குறியாகப் பேசிவந்த தனிமொழி காலத்தினாலும், தலைமுறைகளின் மாற்றத்தினாலும் அதிக அளவில் பயன்படுத்தப்படாமல் அழிந்துகொண்டு வரும் நிலை காணப்படுகிறது. நூற்றுக்கும் குறைவான சொற்களையே இன்றுள்ள வள்ளுவச் சமூகத்தினர் பேசி வருகின்றனர்.

| **தனிமொழி** | | **பொருள்** |
|---|---|---|
| அரும்பியம் | - | அரிசி |
| அரும்பேரி | - | அரிசி |

---

[8]. பக்தவத்சல பாரதி, தமிழகத்தில் நாடோடிகள் சங்ககாலம் முதல் சமகாலம் வரை, ப.260.

[9]. நன்னூல், நூ. 267, ப.14.(சோம. இளவரசு, மணிவாசகர் பதிப்பகம்).

| | | |
|---|---|---|
| ஆடைமினுக்கி | - | ஒட்டுக்காய் |
| இடிசல் | - | சாப்பிடுதல் |
| ஊந்தான் | - | நத்தை |
| ஊருகாமணித்தாளன் | - | ரெட்டியார் |
| எத்து | - | உயர் சாதியினர் |
| எத்தா வதிதல் | - | அதிகமாகக் கொடுத்தல் |
| ஒண்டிசக்தி | - | வள்ளுவப் பெண் |
| ஒண்டிசுல்லான் | - | வள்ளுவச் சிறுவன் |
| ஒண்டித்தாளன் | - | வள்ளுவன் |
| கரத்தி | - | பெண் |
| கரவன் | - | ஆண் |
| கதவுமுட்டி | - | நாய் |
| கரிமேனி | - | சாராயம் |
| கருக்கன் | - | சாராயம், பிராந்தி |
| கவண்டக்காமணி | - | நண்டு |
| கவுச | - | வீடு |
| கவுந்தர் | - | நண்டு |
| கனுக்கல் | - | குழம்பு |
| காந்தலாரம் | - | கருவாடு |
| குடுக்கையார் | - | நத்தை |
| குழந்தி | - | தண்ணீர் |
| கூத்தாடும் தேவர் | - | கோழி |
| கொரக்காச்சி | - | ஆடு |

| | | |
|---|---|---|
| சரடையம் | - | துணி |
| கொழுக்கத்தாளன் | - | காவலர் |
| சாடைத்தாளன் | - | வண்ணான் |
| சாரி | - | பெண் |
| சாயம் | - | குழம்பு |
| சாலு | - | வயிறு |
| சின்னிக்கரவன் | - | அம்பட்டர் |
| சீராமணி | - | மீன் |
| சீராமணி சக்தி | - | மீனவப்பெண் |
| சீராமணித்தாளன் | - | மீனவன் |
| சுள்ளன் | - | சிறுவன் |
| சுள்ளி | - | சிறுமி |
| சுள்ளு | - | குழந்தை |
| சொரியல்பாரம் | - | நெல், அரிசி |
| சொனங்குத்தாளன் | - | இசுலாமியன் |
| சௌகத்தாளன் | - | வசதியானவன், வயதானவன் |
| தாயபாரம் | - | அடி, உதை |
| துலங்குபாரம் | - | தங்கம்,வெள்ளி அணிகலன்கள் |
| தூவல் | - | சோறு |
| தேவரமுடி | - | தேங்காய்முடி |
| தோல்பாரம் | - | பழம் |
| நமரத்தாளன் | - | அம்பட்டர் |
| நமரையர் | - | நண்டு |

| | | |
|---|---|---|
| நம்பி | - | கள் |
| நழுவை | - | பாம்பு |
| நறுக்குக்கரவன் | - | சக்கிலிய ஆண் |
| நனைஞ்சான் | - | மாடு |
| நீலு | - | தண்ணீர் |
| நெடுவுதல் | - | வருதல் |
| பச்சைக்கிளி | - | மாங்காய் |
| பரமர் | - | பாம்பு |
| பாய் நழுவி | - | கம்பு, கேழ்வரகு |
| பானி | - | பொய் (சும்மா) |
| பானிக்கரத்தி | - | திருடி |
| பானிக்கரவன் | - | திருடன் |
| பானித்தாளன் | - | திருடன் |
| பானியா வதிதல் | - | குறைவாகக் கொடுத்தல் |
| பீணம் | - | பணம், காசு |
| பூணூல் கரவன் | - | பார்ப்பான், செட்டியார், கம்மாளர். |
| பூணித்தாளன் | - | பிராமணன் |
| பொக்குகரவன் | - | பறையர் |

## 2.4. இருப்பிடம்

கடலூர் மாவட்டத்தில் உள்ள ஒவ்வொரு கிராமங்களிலும் மேல்திசை என்றழைக்கப்படும் மேற்குத் திசையில் உயர்சாதி மக்கள் வசித்து வருகின்றனர். உயர்சாதி மக்கள் வசிக்கும் பகுதி 'ஊரு' அல்லது 'ஊர்த்தெரு' என்றழைக்கப்படுகிறது. இவர்கள் குடியிருப்புகளுக்கு அரை கி.மீ. முதல் ஒரு கி.மீ. வரையிலான தொலைவில் கீழ்த்திசை எனப்படும் கிழக்குத் திசையில்தான் தாழ்த்தப்பட்ட சமூகத்து மக்களின் குடியிருப்புகள்

காணப்படுகின்றன. இந்தத் தாழ்த்தப்பட்ட சமூக மக்களின் குடியிருப்புகள் அமைந்துள்ள இடத்தினைச் ‘சேரி’ அல்லது ‘காலனி’ என்றழைக்கின்றனர். சேரிகளை ஒட்டிய பகுதியிலும் அல்லது சேரிக்கு அரை கி.மீ. தொலைவிலும் அல்லது ஊருக்கும் சேரிக்கும் இடையிலுமாக வள்ளுவச் சமூகத்தவரின் குடியிருப்புகள் காணப்படுகின்றன.

ஆய்வெல்லைக்குட்பட்ட கடலூர் வட்டாரத்தில் அமைந்துள்ள நூற்றுமுப்பத்தாறு வருவாய்க் கிராமங்களில் அழகிய நத்தம், அன்னவல்லி, ஆடூர் அகரம், கண்ணாடி, கருங்குழி, களையூர், குறிஞ்சிப்பாடி, குண்டு உப்பளவாடி குடிகாடு, கோண்டூர், செல்லங்குப்பம், செம்மங்குப்பம், தியாகவல்லி, தூக்கணாம்பாக்கம், தென்னம்பாக்கம், நைனார்குப்பம், பள்ளிப்பட்டு, பூவாணிகுப்பம், மருதாடு, மஞ்சக்குப்பம், மருவாய், வரக்கால்பட்டு, வானமாதேவி, விலங்கல்பட்டு, வெள்ளப்பாக்கம் ஆகிய இருபத்தெட்டுக் கிராமங்களில் இரண்டு முதல் ஐந்து குடும்பங்கள் வரை காணப்படுகின்றன.

ஆலப்பாக்கம், ஆனையம்பேட்டை, காரணப்பட்டு, காரைக்காடு, குள்ளஞ்சாவடி, செஞ்சிக்குமராபுரம், தேவனாம்பட்டினம், தோட்டப்பட்டு ஆகிய எட்டுக் கிராமங்களிலும் இருபத்தைந்து முதல் முப்பது குடும்பங்கள் வரை காணப்படுகின்றன. மேற்கண்ட இருபத்தெட்டுக் கிராமங்களில் வள்ளுவக் குடியிருப்புகள் சேரிகளை ஒட்டியும் சேரிகளுக்குள்ளும், தனித்தும் காணப்படுகின்றன. இந்த எட்டுக் கிராமங்களில் தனித்த நிலையில் தனி வீதியில் வாழ்கின்றனர். கடலூர் மாவட்டத்தில் வள்ளுவச் சமூகத்தவர்கள் தனித்து வாழும் வீதிகள் அனைத்தும் வள்ளுவர் வீதி, வள்ளுவர் தெரு, திருவள்ளுவர் தெரு எனும் பெயர்களிலேயே அழைக்கப்படுகின்றன.

பண்ருட்டி வட்டாரத்தில் இடம்பெற்றுள்ள நூற்றுப் பதினான்கு வருவாய்க் கிராமங்களில் அவியனூர், ஆண்டிகுப்பம், இராயர்பாளையம், எனதிரிமங்கலம், காடாம்புலியூர், கோரணப்பட்டு, சுந்தரவாண்டி, பண்ரக்கோட்டை, பூங்குணம், மருங்கூர், லட்சுமிநாராயணபுரம், விசூர், விழமங்கலம், வீரப்பெருமாநல்லூர், வைடபாக்கம் ஆகிய பதினாறு கிராமங்களில் இரண்டு முதல் ஐந்து வரையிலான வள்ளுவச் சமூகத்துக் குடியிருப்புகள் காணப்படுகின்றன. இக்குடியிருப்புகள் தாழ்த்தப்பட்ட மக்களின் குடியிருப்புகளுக்கு மிக அருகில், நடுவில் அல்லது ஒதுக்குப்புறமாகக் காணப்படுகின்றன. சேமக்கோட்டை, சோழவல்லி, திருவதிகை, திருவாமூர், பாலூர், புலவானூர், புலியூர், வான்பாக்கம் ஆகிய எட்டுக் கிராமங்களில்

இருபத்தைந்து முதல் முப்பது குடும்பங்கள் வரை வள்ளுவச் சமூகத்திற்கான தனி வீதியில் இவர்களின் குடியிருப்புகள் அமைந்துள்ளன. இவையல்லாமல் பண்ருட்டி வட்டாரத்தை ஒட்டிய விழுப்புரம் மாவட்டத்துக் கிராமங்களான ஆண்டிக்குழி, ஆணத்தூர், அரசூர், திருவெண்ணைநல்லூர், திருநாவலூர், தனியாளம்பட்டு ஆகிய ஊர்களிலும் வள்ளுவச் சமூகத்தினரின் குடியிருப்புகள் அதிக அளவில் காணப்படுகின்றன.

இவ்வள்ளுவர் சமூகத்து மக்களின் வீடுகள் மாடி வீடுகளாகவும், ஓட்டு வீடுகளாகவும் காணப்படுகின்றன. ஆனால் பெரும்பான்மையான வீடுகள் மண்சுவர் வைத்துக் கருப்பஞ்சோலை (கரும்புச்சோலை) வேய்ந்த வீடுகளாகவே அமைந்துள்ளன. இவர்கள் பிற தாழ்த்தப்பட்ட சமூகத்திற்குச் சொந்தமான சேரிகளில் அமைந்துள்ள மாரியம்மன் கோயில்களுக்குப் பூசாரிகளாக இருந்து வருகின்றனர். எனவே அக்கோயில்களுக்குச் சொந்தமான(கிராம மக்களால் கோவில்களுக்கென்று ஒதுக்கப்பட்ட கிராமநத்தம்) மண்ணில் பல்லாண்டுகளாகக் குடியிருந்து வருகின்றனர். தமிழக அரசின் வருவாய்த்துறை வள்ளுவச் சமூகத்தவர்களுக்கு அவரவர் குடியிருந்து வந்த கிராமநத்தத்தை(புறம்போக்கு நிலம்) அவரவரின் பெயர்களுக்கே மனைப்பட்டா வழங்கி இருக்கின்றது.

## 2.5. சுடுகாட்டு அமைப்பு

பிணத்தைச் சுடுவதால் ‘சுடுகாடு’ என்றும், குழி தோண்டி அதற்குள் இட்டுப் புதைப்பதால் ‘இடுகாடு’ என்றும் சுடுகாடு என்பது இருவேறு பெயர்களால் அழைக்கப்படுகின்றது. இதனை ‘மயானம்’ என்றும் அழைப்பர். கிராமங்களில் உயர் சாதியினருக்கென்று தனிச் சுடுகாடும், தாழ்த்தப்பட்டவர்களுக்குத் தனிச் சுடுகாடும் காணப்படுகின்றன. ஒரு சமூகத்து மக்களுக்குரிய சுடுகாட்டில் மற்ற சமூகத்தவர்களுக்குரிய பிணங்கள் அனுமதிக்கப்படுவதில்லை.

தாழ்த்தப்பட்ட சமூகத்திற்கான சுடுகாடுகள் அனைத்துக் கிராமங்களிலும் அம்மக்களின் குடியிருப்புகளுக்குக் கிழக்குத் திசையிலேயே காணப்படுகின்றன. ஒரே சுடுகாட்டில் சாதிப் படிநிலையின்படிச் சுடுகாட்டின் மேற்பகுதியில்(மேற்குத் திசையில்) வள்ளுவச் சமூகம், அதற்குக் கீழ்(கிழக்குத் திசையில்) பறையர், வண்ணார், அம்பட்டர், சக்கிலியர் எனப் பிற தாழ்த்தப்பட்ட சமூகங்களின் சுடுகாடுகள் தோராயமாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இதில் அவரவர்களுக்கென்று ஒதுக்கப்பட்டுள்ள

இடங்களில் மட்டுமே அந்தந்தச் சமூகத்தவரின் பிணங்கள் எரிக்கப்படுவதும், புதைக்கப்படுவதும் நடைபெற்று வருகின்றன. ஒரு சமூகத்தவருக்குரிய இடத்தில் மற்ற சமூகத்தவரின் பிணங்களுக்கு இடமளிக்கும் வழக்கம் காணப்படவில்லை.

### 2.6. சமூக நிலைகள்

வள்ளுவர் சமூகத்து மக்கள் பிற தாழ்த்தப்பட்ட சமூகத்தவரிகளிடமிருந்து பெரும்பான்மையான வழக்காறுகளில் வேறுபட்டுக் காணப்படுகின்றனர். அவர்களிடமிருந்து விலகியே வாழ்ந்தும் வருகின்றனர். இவர்களிடம் மேனிலையாக்கம் (Sanskritisation) அதிக அளவில் காணப்படுகிறது. இவர்கள் மாட்டிறைச்சியினை உண்பதில்லை. பசுவையும், எருதையும் முறையே கோமாதா, நந்தீஸ்வரர் என வழிபாடு செய்கின்றனர். மாட்டிறைச்சியை உண்பது மிகக் கொடிய பாவம் என்றும் உண்பதால் தரித்திரம் உண்டாகும் என்றும் நம்புகின்றனர்.

பிற தாழ்த்தப்பட்ட சமூகத்தவரின் வீடுகளில் உணவு உண்ணும் பழக்கம் இவர்களிடம் இல்லை. தண்ணீர்கூடப் பருகுவதில்லை. ஆனால் அவர்கள் கொடுக்கும் சமைக்காத உணவுப் பொருட்களைப் (பச்சரிசி, பச்சைக் காய்கறிகள், பழங்கள்) வாங்கி உண்ணும் பழக்கம் உடையவர்களாகக் காணப்படுகின்றனர். உயர்சாதியினர் விரும்பி அழைத்தால் அவர்களின் இல்லங்களில் உண்ணும் நிலை இவர்களிடம் காணப்படுகிறது.

‘‘பறையர் எனும் தொல்குடிக்குப் பூசாரியான வள்ளுவர்கள் சிலர் பறையர்களின் வீடுகளில் உண்ணார். இவர்கள் புலாலும் கள்ளும் மறுத்தவர்களாம். இத்தகு வள்ளுவர்கள் தொன்றுதொட்டுப் பூணூல் அணிவதும் உண்டு’’[10].

வள்ளுவர்கள் தொன்றுதொட்டுப் பூணூல் அணிவார்கள். இதற்கு ஞானவெட்டியான் 1500ஆம் பாடல் சான்று கூறும்.

*‘‘பூணூல் தரித்துக் கொள்வோம் - சிவசிவ!*
*பொறிமையும் புலனையுந் தொழுதுகொள்வோம்*

[10]. குணா, வள்ளுவத்தின் வீழ்ச்சி, ப.127.

*வேன விருதுகளும் விகிதமாய்*

*வெண்குடை வெண்சாமரம் பிடித்துக் கொள்வோம்''*[11]

பிற தாழ்த்தப்பட்ட மக்களில் நெருக்கமான சிலரை உறவு முறைப் பெயர்களை (அண்ணன், அக்கா, மாமன், மாமி…..) வைத்து அழைக்கின்றனர். அவர்களுடன் நெருக்கமாகப் பழகுகின்றனர். எவ்வளவு நெருங்கிப் பழகினாலும் அவர்களுடன் திருமண உறவுகள் வைத்துக் கொள்வதில்லை. காதல் வயப்பட்டுப் பிற தாழ்த்தப்பட்ட சமூகத்தவருடன் திருமணம் செய்துகொண்ட வள்ளுவ ஆண்கள், பெண்களும் மிகக்குறைந்த அளவில் ஓரிரு இடங்களில் காணப்படுகின்றனர். இந்த வள்ளுவ ஆண்கள், பெண்களை வள்ளுவச் சமூகம் மிகவும் கடுமையாக எதிர்க்கின்றது. தங்களின் சமூகத்துப் பிறப்பு முதல் இறப்பு வரையிலான அனைத்து நிகழ்வுகளிலும் விலக்கியும், ஒதுக்கியும் வைக்கும் நிலை காணப்படுகிறது. உயர்சாதி மக்களுடன் காதல் திருமணம் செய்துகொள்ளும் வள்ளுவ ஆண்கள், பெண்களையும் எதிர்க்கின்றனர். ஆனால் காலம் செல்லச்செல்ல ஏற்றுக் கொள்ளும் நிலை காணப்படுகிறது.

வள்ளுவர் சமூகத்து மக்களில் பெரும்பான்மையர் பிற தாழ்த்தப்பட்ட மக்களுடன் உறவு வைத்துக்கொள்ள மனமில்லாமல் மேலோட்டமாகப் பழகி வருகின்றனர். பல்வேறு நிலைகளில் அவர்களிடமிருந்து விலகியும் காணப்படுகின்றனர். உயர்சாதி மக்களுடன் வள்ளுவச் சமூகத்தினர் விரும்பிப் பழகுபவர்களாகக் காணப்படுகின்றனர். உயர்சாதி மக்கள் இவர்களுடன் முழுமனத்துடன் உறவு வைத்துக் கொள்ளாமல் மேலோட்டமாகப் பழகும் நிலை உள்ளது. சில நிலைகளில் வள்ளுவர்களைப் புறக்கணிக்கும் நிலையும் காணப்படுகிறது. வள்ளுவர் சமூகம் பிற தாழ்த்தப்பட்ட சமூகங்களைப் புறக்கணிப்பதும், உயர்சாதிச் சமூகங்கள் வள்ளுவச் சமூகத்தைப் புறக்கணிப்பதும் எந்நிலையிலும் வெளிப்படையாகத் தெரிவதில்லை.

வள்ளுவர் சமூகத்திலும் குலங்களைத் தாழ்த்தி உயர்த்திப் பார்க்க மனமில்லாத சிலர் பிற தாழ்த்தப்பட்ட மக்களிடம் அன்பும், பரிவும் கொண்டு விளங்குகின்றனர். அவர்களின் இன்ப, துன்ப நிகழ்வுகளில் முழுமனத்துடன் பங்கு கொள்கின்றனர். உயர்சாதிச் சமூகத்திலும் சிலர் வள்ளுவர்களிடம் உள்ளன்புடன் பழகி வருகின்றனர். வள்ளுவர்களின் வீட்டு அனைத்து நிகழ்வுகளிலும் பங்கேற்று, உணவு உண்ணும் நிலையும் காணப்படுகிறது.

---

[11]. ஞானவெட்டியான், 1500 ஆம் பாடல், 4: 1-4.

### 2.6.1. தீண்டா நிலை

வள்ளுவர் சமூகத்தவரை உயர்சாதி மக்கள் தீண்டத்தகாதவர்களாகவே நடத்தி வந்துள்ளனர். முன்பெல்லாம் பொது நீர்நிலைகளில் தண்ணீர் எடுக்க, குளிக்க வள்ளுவர்களை உயர்சாதியினர் அனுமதிப்பதில்லை. அவர்கள்(உயர்சாதியினர்) வாழும் வீதிகளின் வழியே செருப்பு அணிந்து கொண்டும், மிதிவண்டி ஓட்டிக்கொண்டும் செல்லும் வள்ளுவ மக்களைப் பார்த்தால் கடுமையாகத் தண்டிக்கப்படும் கொடிய நிலையே இருந்துள்ளது. கையில் செருப்பை எடுத்துக் கொண்டும், மிதிவண்டியை(Bicycle) தள்ளிச் சென்றுமே வள்ளுவ மக்கள் உயர்சாதியினரின் வீதிகளைக் கடந்திருக்கின்றனர்”[12].

காலப்போக்கில் குதிகால்வரை வேட்டி(சோமம்) கட்டி, தோளில் துண்டு அணிந்து செல்ல அனுமதித்துள்ளனர். இவ்வள்ளுவச் சமூகத்தினரை நாள்கோள் பார்த்தல், நிமித்தம் பார்த்தல், திருமணப் பொருத்தம் பார்த்தல், மாந்திரிகம், மருத்துவம் இவற்றுக்காகப் பயன்படுத்திக் கொண்டாலும், இவர்களைத் தீண்டத்தகாதவர்களாகவே உயர்சாதி மக்கள் நடத்திவந்துள்ளனர்.

இந்திய விடுதலைப் போராட்டம் தொடங்கியதற்குப் பின்னர் அன்பும், அறிவுமுடைய அம்பேத்கர் போன்ற தலைவர்களின் முயற்சியால் படிப்படியாகச் சமஉரிமை பெறத் தொடங்கினர். இன்று அரசியல் அறிவு, கல்வியறிவு பெற்றுத் தன்னம்பிக்கையுடன் வள்ளுவர்கள் வாழ்ந்து வருகின்றனர். தீண்டாமைக் கொடுமையைப் பொருட்படுத்தாமலும், அஞ்சாமலும் இருந்துவருகின்றனர். உயர்சாதி மக்களில் தற்போது இந்திய அடிப்படைக் குடியுரிமைச் சட்டத்தின் திறம் அறிந்து. வேறு வழியில்லாமல் மனத்தில் வெறுப்பை வைத்திருந்தும் வெளியில் காட்டிக் கொள்ளாமல் பலரும், அன்பும் அறிவும் கொண்டு தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சமமாக நடத்தும் சிலரும் களப்பகுதியில் காணப்படுகின்றனர்.

தங்களைத் தீண்டத்தகாதவர்களாகக் கருதும் உயர்சாதி மக்களின் மீது கோபமும், வெறுப்பும் கொள்ளும் வள்ளுவச் சமூகத்தினரிடம் பிற தாழ்த்தப்பட்ட சமூகத்தவர்களைத் தீண்டத்தகாதவர்களாகக் கருதும் நிலையும் காணப்படுகிறது. தாழ்த்தப்பட்ட சமூகத்து மக்களைச் சில உறவுமுறைப்

---

[12]. எஸ்.என்.இராமச்சந்திரன், வயது, 85, வள்ளுவர் சமூகம், சேமக்கோட்டை, பண்ருட்டி வட்டம்.

பெயர்களைச் சொல்லி அழைத்தாலும் அதில் உண்மைநிலை இல்லை என்றே கூறலாம். இது வெளிப்படையாகக் காணப்படுவதில்லை. வள்ளுவர்கள் பிற தாழ்த்தப்பட்ட சமூகத்தவர்களிடமிருந்து விலகியே காணப்படுகின்றனர்.

“அரசியல் அமைப்புச் சட்டத்தின் வழி இச்சமூகம் ‘தாழ்த்தப்பட்ட சாதி’ (Scheduled Caste ) என்றே அடையாளப்படுத்தப்படுகிறது. இவர்கள் வள்ளுவர் எனக் கூறிக்கொள்ளவே விரும்புகின்றனர். பறையர்களைவிட உயர்வானவர்களாகவே தங்களைக் கருதுகின்றனர். ‘வெறும் பறங்கிறத வள்ளுவப் பறன்னு’ என்னும் வழக்காறு இவர்களைப் பற்றிக் குறிப்பிடுகிறது”[13].

இன்றுள்ள கல்வியறிவு, நட்புச்சூழல், தெளிவான மனநிலை, அன்பு ஆகியவற்றால் தீண்டாநிலை மாறியுள்ளது என்றே கூறலாம். வள்ளுவ மக்கள் பிற தாழ்த்தப்பட்ட மக்களைத் தங்களின் வீடுகளுக்குள் அழைப்பதும், உணவு கொடுத்து உபசரிப்பதும், அவர்களின் வீட்டு நிகழ்வுகளில் பங்குகொள்வதும் அதிகரித்து வருகின்றன. இந்நிலைக்கு இன்றைய கல்வி நிலையே முதன்மைக் காரணம் என்று சொல்லலாம். வள்ளுவ மாணவர்களிடையே தீண்டாநிலை பெருமளவில் காணப்படவில்லை.

சமய அடிப்படையில் இரண்டு உள்ளினப் பிரிவினராகக் காணப்படும் வள்ளுவ நாயனார்கள், வள்ளுவ ஆழ்வார்கள் தங்களுக்குள் உயர்வு, தாழ்வு என்ற பாகுபாடுகளுடனேயே முன்பு இருந்து வந்துள்ளனர். அப்பொழுது பெண் கொடுப்பதும், கொள்வதும் இவர்களுக்குள் இல்லாமல் இருந்தது. தற்போது பெண் கொடுப்பது, கொள்வது அதிகரித்துள்ளதால் அப்பாகுபாடு மறைந்துவிட்ட நிலை காணப்படுகிறது.

### 2.6.2. கல்வி நிலை

வள்ளுவர் சமூகத்து மக்களில் ஆண்கள் அனைவரும் தமிழ் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாகவே காணப்படுகின்றனர். அதற்குச் சோதிடம், புரோகிதம் ஆகிய இவர்களது குலத்தொழில்களே காரணம் எனக் கருத இடமுண்டு. பெண்களிலும் மிக வயதான சிலரைத் தவிரப் பெரும்பான்மையர் தமிழை எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாகவே இருக்கின்றனர். அக்காலத்தில் திண்ணைப் பள்ளிகளில் ஓலைச்சுவடிகள் மூலம் கல்வி கற்ற சில வயதானவர்களும் இன்று காணப்படுகின்றனர். இவர்கள் சோதிடம், புரோகிதம்

---

[13]. பக்தவத்சல பாரதி, தமிழகத்தில் நாடோடிகள் சங்ககாலம் முதல் சமகாலம் வரை, ப.260.

ஆகிய தொழில்களைச் செய்பவர்கள் என்பதால் பனை ஓலைகளிலும், செப்புத் தகடுகளிலும் எழுத்தாணிகளால் எழுதவும், படங்கள் பல வரையவும் பயிற்சி பெற்றவர்களாக உள்ளனர். புரோகிதம் செய்யும் வள்ளுவ மக்கள் சில வடமொழி (சமஸ்கிருதம்) மந்திரங்களையும், சில வடமொழிச் சொற்களையும் கூறுகின்றனர். இவற்றை எழுதத் தெரியாது, மனப்பாடமாகத் தொழில் செய்யும் இடங்களில் மட்டுமே பயன்படுத்தும் அளவில் வடமொழி அறிவு உடையவர்களாகக் காணப்படுகின்றனர்.

‘‘தங்களின் வேதாந்தங்களும் மந்திரங்களும் கீழ்ச் சாதியினருக்குத் தெரியவே கூடாது என்று மனுநூல் விதித்திருந்த நிலையில், வள்ளுவர்களும் சில சங்கத (சமஸ்கிருத) மந்திரங்களை ஓதுவதைப் பிராமணர்கள் சில நூற்றாண்டுகளாக எப்படித்தான் பொறுத்துக்கொண்டனர் என்பதும் புதிராகும்’’[14].

சில சங்கத (சமஸ்கிருத) மந்திரங்களை அவற்றின் பொருளையே சரிவரத் தெரிந்து கொள்ளாமல் மனப்பாடம் செய்து ஒப்புவித்து வந்த வள்ளுவர்கள், அவற்றை மிகப்பழமையிலேயே கற்றிருக்க வேண்டும் என்று கசுத்தவ் ஓப்பர்ட் கூறுவார். பிராமணர்களுக்கும், வள்ளுவர்களுக்கும் நல்ல உறவு இருந்தபோது அவற்றை அவர்கள் கற்றிருக்கலாம் என்பது அவருடைய கூற்றாகும்’’[15].

ஏட்டுக் கல்வியறிவு இல்லாத வயதான பெண்கள்கூட இராமாயணம், மகாபாரதம் ஆகியவற்றில் ஈடுபாடு கொண்டவர்களாகவும், அவற்றின் கதைகளையும், தொன்மங்களையும் கூறும் அறிவுடையவர்களாகவும் காணப்படுகின்றனர். காத்தவராயன் கழுவேற்றல், அல்லிராணி, மதுரைவீரன் பொம்பி, பவளக்கொடி மாலை, கர்ண மோட்சம், வாலி மோட்சம், பதினெட்டு நாட்கள் ஆடும் பாரதக்கூத்து போன்ற தெருக்கூத்து நாடகங்களையும் நல்லதங்காள் கதைப்பாடல், தேசிங்குராசன் கதைப்பாடல் போன்றவற்றின் கதைகளையும் கூறுவது, பாடலாகப் பாடுவது என்ற நிலைகளில் அனுபவ மற்றும் ஏட்டுக் கல்வியறிவு உடையவர்களாக இருக்கின்றனர்.

பிற தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் வள்ளுவர்களை ஐயர் என்றும், குரு என்றும், வள்ளுவச் சிறார்களைக் குருவீட்டுப் பிள்ளை என்றும் அழைத்து

---

[14]. குணா, வள்ளுவத்தின் வீழ்ச்சி, ப.127.

[15]. Gustan Oppert, The Drabidians,P.69.

வரும் வழக்காறு காணப்படுகிறது. இதனடிப்படையில் வள்ளுவர்கள் ஆசிரியர்களாக இருந்திருக்க வேண்டும் என்று எண்ண முடிகிறது.

“வள்ளுவர்களே பாடம் கற்பிக்கும் ஆசிரியர்களாகப் பண்டு இருந்தமையாலேயே அவர்கள் ஆசான் என்ற பட்டத்துக்கு உரியவர்களாக இருந்தனர்”[16].

“தொல் தமிழகத்தின் ஆசிரியப் பணிகளைச் செய்தவர்கள் வள்ளுவர்களே. இதனால் அவர்களை ஆசான் என்றும் அழைத்தனர்”[17] எனும் குணா, மா.சோ. விக்டர் ஆகிய அறிஞர்களின் கருத்துகள் வழி, வள்ளுவர்கள் நூலுரை ஆசிரியர்களாக விளங்கினர் என உறுதி செய்யலாம்.

கடலூர் மாவட்டத்தில் ஒரு பல்கலைக்கழகம், ஐந்து கல்லூரிகள், மூன்று தொழிற்பயிற்சிக் (பாலிடெக்னிக்) கல்லூரிகள், முப்பத்தெட்டு மேல்நிலைப் பள்ளிகள், எண்பத்தாறு இடைநிலைப் பள்ளிகள், இரண்டாயிரத்து எழுநூற்று ஐம்பது தொடக்கப் பள்ளிகள் அமைந்துள்ளன. வள்ளுவச் சமூகத்து மக்களில் தங்களுக்குரிய (தாழ்த்தப்பட்ட இனத்திற்குரிய) சலுகைகளுடன் இளைய தலைமுறையினர் ஆண், பெண் என்ற பாகுபாடின்றி இந்நிறுவனங்களில் கல்வி பெற்று வருகின்றனர். இவர்கள் மருத்துவம், பொறியியல், விஞ்ஞானம் எனப் பல்துறைப் பட்டதாரிகளாகவும், பன்மொழி கற்றவர்களாகவும் வலம் வருகின்றனர். சில வள்ளுவ மாணவர்கள் இந்திய அரசின் உதவி பெற்று ஆஸ்திரேலியா, அமெரிக்கா, தென் கொரியா ஆகிய வெளிநாடுகளுக்குச் சென்று உயர்கல்வி பெறுகின்றனர். சில குடும்பங்களில் வறுமை காரணமாகப் பெண்கள் உயர்நிலைக் கல்வி (SSLC)யும், ஆண்கள் மேல்நிலைக் கல்வி (HSC)யும் பெற்றிருப்பது வள்ளுவச் சமூகத்தின் இன்றைய குறைந்தபட்சக் கல்வி பெற்றுள்ள நிலையைக் குறிப்பதாகும்.

### 2.6.3. சொத்துரிமை

வள்ளுவர் சமூகத்தில் ஆண்களுக்கு இணையாகப் பெண்களுக்குச் சொத்தில் சமபங்கு அளிப்பதில்லை. ஆண் வாரிசுகள் இல்லாத நிலையிலேயே பெண்களுக்குச் சொத்துரிமை வழங்கப்படுகிறது. ஆண் வாரிசுகள் இருக்கும் நிலையில் பெண்களுக்குச் சொத்துரிமை

---

[16]. குணா, வள்ளுவத்தின் வீழ்ச்சி, ப.152.

[17]. ம.சோ.விக்டர், வானியலும் தமிழரும், ப.31.

மறுக்கப்படுகிறது. அதிகச் சொத்துள்ள சில குடும்பங்களில் மொத்தச் சொத்தில் மிகக் குறைந்த பகுதியே பிரித்துத் தரப்படுகின்ற நிலை காணப்படுகிறது. பெண்களுக்கு அவர்களின் திருமணம், வளையல் காப்பு, புதுமனை புகுவிழா ஆகிய நிகழ்வுகளில் தாய்வீட்டுச் சீதனம் வழங்கப்படுகிறது. பெண்களின் வாரிசுகளுக்குக் காதணி விழா, மஞ்சள் நீராட்டு விழா, திருமணம் ஆகிய நிகழ்வுகளில் அம்மான் வரிசை (தாய்மாமன் சீர்) செய்யப்படுகிறது. பெண்கள் புகுந்த வீட்டில் அல்லது பங்காளிகள் வீட்டில் இறப்புச் சடங்கான கருமாதி நடக்கும் பொழுது அவர்களின் கணவர்களுக்குத் ‘‘தலைக்கட்டு’’ எனப்படும். முதல் சம்மந்தச் சீர்(தங்க மோதிரம், குடை, செருப்பு, புத்தாடைகள்) கொடுக்கப்படுகிறது. ஒவ்வொரு தீபாவளியின் பொழுதும் பிறந்த பெண்களுக்குத் தாய் வீட்டிலிருந்து சிறுதொகை கொடுக்கப்படுகிறது. இதற்கு ‘எண்ணெய்ப் பணம்’ என்று பெயர். காசு, துணிமணிகள், தானியங்கள் கொடுக்கும் வழக்கம் எப்பொழுதும் காணப்படுகிறது. நிலம், நீர், வீடு, மனை இவற்றில் பெண்களுக்குச் சமபங்கு அளிப்பதில்லை. ஆண்களுக்கு மட்டுமே சமபங்கு அளிக்கப்படுகிறது. காலத்தின் மாற்றத்தால் ஆண்களும், பெண்களும் சமமானவர்கள் என்றுணர்த்த சிலர் தாமாக முன்வந்து உடன் பிறந்த பெண்களுக்குப் பெற்றோர்கள் சம்பாதித்த சொத்தின் ஒரு பகுதியையோ அல்லது சம பங்கினையோ வழங்கும் நிலை ஏற்பட்டுள்ளது எனலாம்.

வள்ளுவர் சமூகத்தில் இந்திய அரசியல் சட்டம் தெரிந்த அல்லது உலகியலை நன்குணர்ந்த ஒருசில பெண்கள் உடன்பிறந்த ஆண்களிடம் நேரடியாகப் பங்கு கேட்டோ அல்லது நீதிமன்றங்களின் மூலமாகவோ சொத்துரிமைகளைப் பெற்றுக்கொள்கின்றனர். அப்படிச் சொத்தினைப் பெற்ற பெண்களிடமிருந்து கொடுக்க மனமில்லாத ஆண்கள்(உடன் பிறந்தவர்கள்) தங்களுக்குள்ள உறவினைத் துண்டித்துக் கொள்ளும் நிலை காணப்படுகிறது. அப்பெண்களின் வீடுகளில் நடைபெறும் எந்த நிகழ்விலும் அவர்கள் பங்கு கொள்வதில்லை. தாய்வீட்டுச் சீர் செய்ய முன்வருவதில்லை. அப்பெண்கள் புறக்கணிக்கப் படுகிறார்கள். இந்நிலை அதிக அளவில் காணப்படுகிறது. எனவே பெரும்பான்மையான வள்ளுவப் பெண்கள் சொத்திற்காக உடன் பிறந்த ஆண்களைப் பகைத்துக்கொள்வதில்லை. உடன் பிறந்த ஆண்களின் உறவினை முறித்துக்கொண்டு வாழ மனமில்லாத வள்ளுவப் பெண்கள் சிலர் தாய்வீடு, தாய்வீட்டு உறவு தங்களுக்குத் தேவை என்ற எண்ணத்தினடிப்படையில் தமக்குள்ள சொத்துரிமையைவிட்டுக் கொடுத்து வாழும் நிலையே அதிக அளவில் காணப்படுகிறது.

## 2.7. வள்ளுவர் சமூகத்தின் பின்புலம்

இன்றைய நிலையில் மேற்கண்ட நிலைகளில் தாழ்த்தப்பட்ட சமூகத்தினுள் ஒன்றாகக் காணப்படும் வள்ளுவச் சமூகம் பழங்காலத்தில் எந்நிலையில் இருந்தது? அதன் பின்புலம் என்ன? என்பதனைத் தமிழிலக்கிய நூல்கள் பலவற்றிலும் தமிழர் பற்றிய ஆய்வு நூல்கள் சிலவற்றிலும் காணப்படும் தரவுகளின் மூலமே அறிய முடிகிறது.

### 2.7.1. வள்ளுவர் என்பதன் பொருள்

''வள் என்பது கூர்மை எனும் பொருள் குறிப்பதாகும். வள்ளுவன் என்பதற்கு ஒரு சாதியன், புரோகிதன், வருங்காரியம் சொல்லுவோன் என்றும், வள்ளுவச் சாத்திரம் என்பதற்கு ஒரு சோசியம்''[18] எனறும் தமிழ்மொழி அகராதி பொருள் தருகிறது.

''தமிழகத்தில் பழங்காலந்தொட்டுக் கணியத்தொழிலைச் செய்துவந்த இனத்திற்கு வள்ளுவர் இனம் என்று பெயர். வள்ளுவச் சாத்திரம் என்பதற்குச் சோதிடம் என்றும், வள்ளுவப் பண்டாரம், வள்ளுவப் பறையன் எனும் சொற்களுக்கு வள்ளுவச் சாதியிற் குறிசொல்வோன்''[19] என்றும் தமிழ் லெக்ஸிகன் பொருள் தருகிறது.

''வள்ளுவன் என்பதற்கு நிமித்திகன் என இலக்கியச் சொல்லகராதி பொருள் தருகின்றது''[20]. ''பழந்தமிழ்க் குடியினரில் பாணரையடுத்துத் திராவிடரால் மதிக்கப்பட்டவர் இவ்வகுப்பினர். இவர்கள் அரசர்பால் கருமத்தலைவராயும், யானை மேலிருந்து முரசறைந்து அரசாணை சாற்றுவோராயும் விளங்கினர். இக்குடியினர் இன்றும் உளர். இவர் பறையரில் சற்றுயர்ந்தவர்கள். இவர்கள் பறையருக்குப் புரோகிதர்கள். இவர்கள் பிராமணர்கள் புரோகிதராகும்முன் பல்லவ அரசர்களுக்குப் புரோகிதம் செய்திருந்தவர்கள். கிராமங்களில் துணி தைத்தல் இவர்களின் தொழில். இவர்கள் புரோகிதஞ் செய்தும், சோசியம் கூறியும் வாழ்கிறார்கள். இவர்களில் தாசரியாகவும் பூணூல் தரிப்பவராகவுமிருப்பர். இவர்கள் அறுப்புக் காலத்தில் குடிகளிடமிருந்து நெல் பெறுவர். இவர்களில் லிங்கதாரிகளும் உண்டு.

---

[18]. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப.1263.

[19]. தமிழ் லெக்ஸிகன், தொகுதி – 6, ப. 3552.

[20]. Chunnaham.A.Kumarasamy Pillai, இலக்கியச் சொல்லகராதி, ப.157.

இவர்களில் இரண்டு பிரிவுகள் உண்டு. அறுபது கஷி, நாற்பது கஷி. முதலில் கூறியவன் நத்தி குருக்கள் சந்ததியான்; மற்றவன் சிதம்பர சாயுச்ச ஐயங்கார் வகையினன்; திருப்பாணாழ்வார் குலம் என்பர். இவர்கள் திருவள்ளுவரைத் தங்களின் இனத்தவர் என்பர்''[21]. என அபிதான சிந்தாமணி குறிப்பிடுகிறது.

### 2.7.2. சங்ககாலச் செய்திகள்

வள்ளுவர் சமூகத்தைப் பற்றி நோக்கும்போது தமிழ் இலக்கியத்தின் தொன்மைப் பகுதியான சங்கப் பாடல்களில் வள்ளுவச் சமூகம் என்ற தனியொரு சமூக அமைப்பு இருந்ததாகக் காணப்படவில்லை.

''கடைக்கழகக் காலத் தொழிற் குலங்களுள் 'வள்ளுவர் குலம் அரசர் விளம்பரப் பறையர்''[22] எனத் தேவநேயப் பாவாணர் கூறுவதன் மூலம் புறநானூற்றில் 335 ஆம் பாடலில் உள்ள ஏழு, எட்டாம் வரிகளில் சிறப்பித்துச் சொல்லப்பட்ட நான்கு குடிகளுள் ஒன்றான பறையறிவிக்கும் பறையர் குடியின் ஒரு பகுதியினராக வள்ளுவச் சமூகம் வாழ்ந்திருக்கக் கூடும் எனக் கருத இடமுண்டு.

*''துடியன், பாணன், பறையன், கடம்பன் என்று*
*இந்நான்கு அல்லது குடியும் இல்லை''[23]*

'நாஞ்சில் வள்ளுவன் என்ற சிற்றரசனைப் பற்றி ஒருசிறைப் பெரியனார் புறநானூற்றின் 137 ஆவது பாடலிலும் மருதன் இளநாகனார் 138, 139 ஆகிய இரண்டு பாடல்களிலும், ஔவையார் 140 ஆவது பாடலிலும், கருவூர் கதப்பிள்ளை 380 ஆவது பாடலிலும் புகழ்ந்து பாடியுள்ளனர். ''கடைக்கழகக் காலக் குறுநில மன்னர்களில் ஒருவன் நாஞ்சில் வள்ளுவன்''[24]. இந்த நாஞ்சில் வள்ளுவன் நாஞ்சில் மலையையும் அதனடியில் உள்ள நாஞ்சில் நாட்டையும் ஆண்டு வந்தான். இவன் சேர வேந்தரை முடிவேந்தராகக் கொண்டு வாழ்ந்த சிற்றரசன். ஔவையாரால் பெரியோர் வரிசையில்

---

[21]. அபிதான சிந்தாமணி, பக்.1699-1700.

[22]. ஞா.தேவநேயன்(பாவாணன்), தமிழர் வரலாறு, ப.292.

[23]. புறநானூறு, பாடல்-335.

[24]. ஞா.தேவநேயன்(பாவாணன்), தமிழர் வரலாறு, ப.234.

வைத்துப் போற்றப் பட்டவன் என்ற செய்திகளை ஔவை துரைசாமிப் பிள்ளை அவர்களின் உரை கூறுகிறது.

‘‘வள்ளுவர் என அறியப்பட்டோர் தொன்மைக் காலத்தின் அறிவுடைய மக்களே ஆவார். தொடக்கக் காலத்தின் அறிவியல், மெய்யியல் நூல்களை அளித்தவர்கள் வள்ளுவர்களே. மன்னர்களுக்கு அறிவுரை கூறும் எண்பேராயத்தில் முதலிடம் பெற்றிருந்தோர் வள்ளுவர்களே. ‘‘வள்ளுவக்கோன்’’ எனும் சொல் இவர்தம் சிறப்பினை உணர்த்தும். மன்னர் பணியைச் சிறப்புடன் செய்தவர் வள்ளுவ மரபினரே. மன்னர் பணியில் சிறப்புறச் செயலாற்றியவர்களுக்கு வள்ளுவர் என்ற சிறப்புப் பட்டயமும் வழங்கப்பட்டதாக அறிய முடிகிறது’’[25] என மா.சோ.விக்டர் குறிப்பிடுகிறார்.

குறுந்தொகை நெய்தல் திணைப் பாடலான 228 ஆம் பாடலைப் பாடியவர் ‘செய்தி வள்ளுவன் பெருஞ்சாத்தன்’ என்ற குறிப்பின் மூலம் வள்ளுவன் என்ற சொல் காணப்படுவதை அறிய முடிகிறது. ‘‘இது திருவள்ளுவர் வள்ளுவர் குடியில் பிறந்தவர் என்பதற்கு அரண் செய்தமைகிறது’’[26] என ந.சஞ்சீவி குறிப்பிடுவார். மேலும், ‘‘வள்ளுவர் திருக்குறள் எழுதிய காலத்தே அதனோடு சோதிடம் முதலிய தூய நூல்கள் சிலவற்றைச் செய்தார் எனப் புலவர் புராணம் கூறுகிறது’’[27].

‘‘மக்களின் வழிகாட்டிகளாக ஆசான்களாக அறிவுடையோராக இருந்த வள்ளுவ மரபு அக்காலத்தின் மிகச் சிறந்த சிந்தனை ஆற்றலாக விளங்கியது. இவற்றுக்கெல்லாம் விடை சொல்வது வள்ளுவர் அளித்த திருக்குறளாகும். ஞாலத்தின் மிகச் சிறந்த அறிவுடையோராகிய வள்ளுவரால் மட்டுமே இந்நூலை எழுதியிருக்க முடியும். வள்ளுவ மரபின் புகழுக்கும், பெருமைக்கும் திருக்குறளைவிட வேறு சான்று காட்டுவது தேவையில்லாதது’’[28].

‘‘திருக்குறள், ஆத்திசூடி, மூதுரை, வெற்றிஞானம், ஔவையின் குறள், நீதிவெண்பா, விவேக சிந்தாமணி முதலான அரிய தமிழ் நூல்களை

---

[25]. ம.சோ.விக்டர், வானியலும் தமிழரும், ப.31.

[26]. சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள், ப.45.

[27]. ஔவை.சு.துரைசாமிப் பிள்ளை, தெய்வப் புலவர் திருவள்ளுவர், ப.54.

[28]. ம.சோ.விக்டர், வானியலும் தமிழரும், ப.32.

இயற்றியவர்களெல்லாம் வள்ளுவ மரபினரே''[29] என்று கூறப்படுவதிலிருந்து வள்ளுவச் சமூகத்தினர் பல தமிழிலக்கியக்களை இயற்றி இருக்கின்றனர் என்பதை அறியலாம்.

### 2.7.3. வள்ளுவக் கணியர்கள்

''வான நூலறிஞனுக்குத் தமிழில் கணியன் என்பது பெயர். கணியன் காலத்தைக் கணிப்பவன். பண்டைத்தமிழ் நாட்டில் வள்ளுவர்களே பெரும்பாலும் கணியர்களாயிருந்தனர். தமிழர் கணியத்தில் வல்லவராயிருந்ததால் வானியலிலும் வல்லவராயிருந்தனர்''[30]. ''நாள்கோள்களின் இயக்கத்தை யறிந்து ஐந்திரம் (பஞ்சாங்கம்) வகுத்தற்கும், அரசர்க்குப் பிறப்பியம் சாதகம் எழுதுதற்கும் நுண்மான் நுழைமதி வேண்டியிருத்தலின் கணியருள் ஒரு பிரிவார் வள்ளுவர் எனப்பட்டதாகத் தெரிகிறது''[31] எனத் தேவநேயப் பாவாணர் வள்ளுவக் கணியர்களைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

*''மறுவில் செய்தி மூவகைக் காலமும்*
*நெறியி னாற்றிய வறிவன் தேயமும்''*[32]

என்று அமையும் தொல்காப்பிய வரிகளில் வரும் அறிவன் என்பது கணியனைக் குறிக்கிறது என்பதனை விளக்க,

*''பனியும் வெயிலுங் கூதிரும் யாவும்*
*துணியில் கொள்கையொடு நோன்மை எய்திய*
*தனிவுற்று அறிந்த கணிவன் முல்லை''*

என்ற பன்னிரு படலப் பாட்டை மேற்கோள்காட்டி அறிவன் கணியன் என்ற பெயரீடுகள் ஒரே பொருளுடையன. அறிவன் என்றது கணியனை''[33] என்று தொல்காப்பியத்தின் மீதான இனம்பூரணர் உரை விளக்குகிறது.

---

[29]. ப.மதுரையார், அகப்புறச் சமயங்கள், பக்.56-60.

[30]. பாவாணன், ஒப்பியல் மொழிநூல், ப.142.

[31]. ஞா.தேவநேயன், திருக்குறள் தமிழ் மரபுரை, ப.5.

[32]. தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல்(இளம்பூரணம்) 74:4-5).

[33]. மேலது, ப.127.

‘‘கணியத் தொழிலை மேற்கொண்ட வள்ளுவ மக்கள் ‘வள்ளுவக் கணியான்’ என்றழைக்கப் பட்டிருக்கின்றனர். பின்னர் வள்ளுவன் என்று சொன்னாலே சோதிடர் என்னும் பொருளுணர்த்தும் சிறப்புத் தகுதியைப் பெற்றிருக்கின்றனர். எனவே வள்ளுவக் கணியான் என்பதில் கணியான் மறைந்து வள்ளுவர் என்பவர் சோதிடர் என மாறியுள்ளது’’[34] என தி.மகாலட்சுமி கூறுகின்றார். இவற்றைக் கருத்தில் கொண்டு பார்த்தால் தொல்காப்பியம் குறிப்பிடும் அறிவன், கணியன் என்னும் சொற்கள் சோதிடத் தொழிலை மேற்கொண்டுவரும் வள்ளுவ மக்களையே குறிப்பிடுகின்றன எனலாம்.

‘‘கணியர்களை அறிவர் என்றழைப்பது தமிழர் மரபு. கணக்கன், அறிஞன், புலவன், மேதை என்று கூறுவது அவ்வழி. இப்பெயர்களெல்லாம் வள்ளுவக் கணியர்களைக் குறிக்கும் சொற்களாகும்’’[35] என வெங்காலூர் குணா அவர்கள் குறிப்பிடுகிறார். இதன் மூலம் வள்ளுவர்கள் தொல்காப்பியர் காலத்தில் அரசவைக் கணியர்களாக இருந்திருக்கின்றனர் என்று துணியலாம்.

‘‘தொன்றுதொட்டுக் கணியத்தொழில் செய்துவரும் தமிழ் வகுப்பான் வள்ளுவன். வள்-கூர்மை, வள்ளுவன் கூர்மதியன், ஆரியக்குலப் பிரிவால், அவன் தாழ்த்தப்பட்டுப் பேரிடங்களிற் பெரும்பாலும் பிழப்பிழந்தான்’’[36] எனத் தேவநேயப் பாவாணர் குறிப்பிடுகிறார்.

‘‘தமிழகத்தின் மீது படையெடுத்துத் தொண்டை நாட்டைக் கைப்பற்றிய வடுக வந்தேறிகளான பல்லவர்கள்(ஆனைச் சாத்தன் அல்லது வலியன் என்ற பறவையைக் குறிக்கும்) பாரதுவாசக் கோத்திரத்தைச் சேர்ந்த பிராமணர்களே தாங்கள் எனச் சொல்லிக்கொள்ளத் தொடங்கியதற்கு முன்பு வள்ளுவர்களே பல்லவர்களின் அரசவைகளில் பெருங்கணிகளாய் இருந்து, முடிசூட்டுதல் முதலான அத்தனை நிகழ்ச்சிகளையும் நடத்தினர்’’[37] எனத் தெரிகிறது.

---

[34]. தி.மகாலட்சுமி, இலக்கியத்தில் சோதிடம், ப.129.

[35]. குணா, வள்ளுவத்தின் வீழ்ச்சி, ப.107.

[36]. ஞா.தேவநேயன்(பாவாணன்), தமிழர் வரலாறு, ப.269.

[37]. Edgar Thurston and K.Rangachari, Castes and Tribes of South India, Vol-VII, Pages.303-304.

“தமிழ்க் கணியர்களான வள்ளுவர்கள் வடிவமைத்த ஆண்டுக் கணக்குகளை வடுக பிராமணர்கள் தம்வயமாக்கிக் கொண்டனர். ஆயினும் கணக்கியலின் முன்னோடிகளாக வள்ளுவக் கணியர்கள் தொடர்ந்து விளங்கி வரவே செய்தனர். சேரலத்தில் நம்பூதிரிப் பிராமணர்களும்கூடத் தங்களின் பிள்ளைகளை வள்ளுவக் கணியரிடமே அனுப்பிவைத்து, அவர்களிடமிருந்து வானியலையும், கணியத்தையும் கற்கச் செய்தனர்”[38] என்ற செய்தியும் நோக்கத்தக்கது.

மேலும் “பிறப்பியத்தை (சாதகத்தை) எழுதுவதற்குச் சென்ற நூற்றாண்டு வரையில் வள்ளுவர்களையே எல்லோரும் நாடிவந்தனர். பிற்காலத்தில் ஒதுக்கப்பட்டுக் கீழ்ச்சாதியினராக்கப்பட்ட பிறகும், பிராமணர்களும் அவர்களை மதித்து வந்தனர். கணியம் கேட்பதற்கும், பிறப்பியம் எழுதுவதற்கும் குறிப்பாகப் பிராமணப் பெண்கள் வள்ளுவர்களையே நாடினர்”[39] என காசுத்தவ் ஒப்பர்ட் குறிப்பிடுகிறார்.

“வடுக பிராமணர்கள் வள்ளுவர்களிடமிருந்து கற்றுக்கொண்ட கணியத்தைப் பிற்காலத்தில் சங்கத (சமஸ்கிருத) மொழியில் மொழியாக்கம் செய்துகொண்டு அதை நன்கு பழகிய பின்னர் ‘ஆரியக் கணியம்’ என்றும் பெயரில் புதிய நூல்களை யாத்துக்கொண்டனர். (வள்ளுவர்களிடமிருந்து அறிவுக் களவாடல் செய்ததால் வந்த) ஆரியக் கணியமே மூலமுதல் கணியம் என்று திரித்துப் புரட்டியதோடு நில்லாமல் பின்னர் அதை மீண்டும் தமிழ்ப்படுத்தவும் செய்தனர்”[40] என, குணா குறிப்பிடுவது மறு ஆய்வுக்குரியதாகக் காணப்படுகிறது.

“கி.பி.11ஆம் நூற்றாண்டை அடுத்து நம்பிதிருப்பாத பிராமணர்களின் ஆதிக்கத்துக்குக் கட்டுப்பட்டு அரசாண்ட சாமந்த அரசர்களின் எழுச்சியால் வள்ளுவர் சமூகத்தவரின் பங்கேற்பு முற்றிலும் நின்று போயிற்று. சித்திரை விஷு (புத்தாண்டு) பிறப்பு அன்று நில உடைமைச் சாதியினர் அந்த ஆண்டுக்குரிய பஞ்சாங்கப் பலன்களை அறிந்து வருவதற்காக கணிகாணுதல்

[38]. குணா, வள்ளுவத்தின் வீழ்ச்சி, ப.153.

[39]. Gustav Oppert, The Dravidians, P.69.

[40]. குணா, வள்ளுவத்தின் வீழ்ச்சி, பக்.153-154.

என்ற பெயரில் சென்று சந்தித்து வருகின்ற சாதியினராக வள்ளுவர்கள் குறுகிப் போயினர்''[41].

''பெருங்கணிப் பதவியைப் பறித்துக் கொண்ட பார்ப்பார்கள் வள்ளுவர்களை முதலில் வேத்தியல் விளம்பர அதிகாரிகள் என்ற மட்டத்திற்குத் தாழ்த்தினர்''[42] என்று குணா அவர்கள் குறிப்பிடுகின்றார். இது சங்காலத்திற்குப் பிறகு தோன்றிய காப்பியங்களில் வள்ளுவர்கள் முரசறைவோராக விளங்கியதனைக் காட்டுகிறது.

### 2.7.4. காப்பியங்களில் வள்ளுவர்கள்

சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய சிலப்பதிகாரத்தில் மன்னர் பின்னோரான வணிக மரபில் தோன்றிய கோவலன், கண்ணகி ஆகியோரின் திருமண நிகழ்ச்சியினைப் பறையறைவோர் பல்வேறு அணிகலச் சிறப்போடு யானைமீது வலம்வந்து சோழநாட்டின் தலைநகரான காவிரிப்பூம்பட்டினத்து மக்களுக்கு அறிவித்தனர். இது,

*''யானை எருத்தத் தணியிழையார் மேலிரிஇ*
*மாநகர்க் கீந்தார் மணம்''*[43]

எனச் சிலம்பில் குறிப்பிடப்பட்டுள்ளது. சிலப்பதிகாரத்திற்குப் பின்னர் வந்த மணிமேகலையில், விழாவறை காதையில் இந்திரவிழா செய்யத் துணிந்து அதனை முரசறையும் 'தொல்குடியில் பிறந்த வள்ளுவனுக்கு' அறிவித்தனர். அவன் வச்சிரக் கோட்டத்து முரசறை யானையின் பிடரிலேறி நகரையும், மழையையும், அரசனையும் வாழ்த்தி இந்திரவிழாச் செய்தியை விழாவறைந்தான் என்பது,

*''வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசம்*
*கச்சை யானைப் பிடர்தலை யேற்றி*
*ஏற்றுரி போர்த்த இடியுறு முழக்கின்*
*கூற்றுக்கண் விளிக்குங் குருதி வேட்கை*
*முரசு கடிப்பிடுஉம் முதுகுடிப் பிறந்தோன்*

---

[41]. வி.சரவணன், தமிழினி (செப்டம்பர் 2009), ப.80.

[42]. குணா, வள்ளுவத்தின் வீழ்ச்சி, ப.257.

[43]. சிலப்பதிகாரம் (ந.மு.வேங்கடசாமி நாட்டார் உரை), 1-143-44.

*திருவிழை மூதூர் வாழ்கென் றேத்தி*

*வான மும்மாரி பொழிக மன்னவன்*

*கோள்நிலை திரியாக் கோலோ னாகுக''*[44]

இப்பாடல் வரிகளுக்கு ந.மு. வேங்கடசாமி நாட்டார் தரும் உரையாகும்.

சீவகசிந்தாமணியின் மண்மகளிலம்பத்தில் வள்ளுவன் முரசறைபவனாகவே காணப்படுகின்றான் என்பதனை,

*''கள்ளத்தா னம்மைக் கொல்லக் கருதினா னாமுந்தன்னைக்*

*கள்ளத்தா லுயிரை யுண்ணைக் கருதினே மிதனையாரும்*

*உள்ளத்தா லுமிழ வேண்டா வுறுபடை வந்துகூட*

*வள்ளுவர் முரசமூதூ ரறைகென வருளினானே''*[45]

என்ற பாடல் வரிகள் காட்டுகின்றன. ஆனால் கோவிந்தையார் இலம்பகத்தில் வருங்காரியம் உரைப்பவனாகவும், தப்பாத நிமித்தம் கூறும் நிமித்தகனாகவும் வள்ளுவன் காணப்படுகின்றான் என்பதனை,

*''பூத்த கோங்குபோற் பொன்சு மந்துளார்*

*ஆய்திதி யர்நலக் கரசெ நுணனான்*

*கோத்த நித்திலக் கோதை மார்பினான்*

*வாய்த்த வந்நிரை வள்ளு வன்சொனான்''*[46]

எனும் பாடல் கூறுகிறது.

கம்பராமாயணத்தில் பாலகாண்டத் திரு அவதாரப் படலத்தில் தயரதனுக்குக் குழந்தை பிறந்துள்ளது. குழந்தைக்குப்(இராமனுக்கு) பெயர்சூட்டு விழாவினை வள்ளுவன் முரசறைந்து அறிவிக்கின்ற செய்தி காணப்படுகிறது.

*''என்புழி வள்ளுவர் யானை மீமிசை*

*நன் பறை அறைந்தனர்; நகர மாந்தரும்,*

---

[44]. மணிமேகலை(ந.மு.வேங்கடசாமி நாட்டார் உரை), விழாவறை காதை, 27-34.

[45]. சீவகசிந்தாமணி (நச்சினார்க்கினியர் உரை), மண்மகளிலம்பகம், பாடல்-2149.

[46]. மேலது, கோவிந்தையர் இலம்பகம், பாடல்-419.

*மின் பிறழ் நுசுப்பினார் தாமும் விம்மலால்,*

*இன்பம் என்ற அளக்க அரும் அளக்கர் எய்தினார்''*[47]

மேலும் எழுச்சிப் படலத்தில் இராமனின் திருமண நிகழ்வினை முன்னிட்டுத் தயரதனின் ஆணைப்படி வள்ளுவன் ''மணமுரசு'' அறைந்து தெரிவித்திருக்கிறான்.

*''வாம் பரி விரி திரைக் கடலை, வள்ளுவன்,*

*தேம் பொழி துழாய் முடிச் செங்கண் மாலவன்,*

*ஆம் பரிசு, உலகு எலாம் அளந்துகொண்ட நாள்,*

*சாம்புவன் திரிந்தென, திரிந்து சாற்றினான்''*[48]

அயோத்தியா காண்டத்தில், மந்தரை சூழ்ச்சிப் படலத்தில் இராமன் முடிசூட்டிக் கொள்ளவிருக்கும் அரசாணையை வள்ளுவன் பறைசாற்றியதாகக் கம்பர் விளக்கிக் காட்டுகிறார்.

*''ஏவி வள்ளுவர், இராமன் நாளையே*

*பூமகள் கொழுநனாய்ப் புனையும் மௌலிஇக்*

*கோ நகர் அணிக! என கொட்டும் பேரிஅத்*

*தேவரும் களி கொளத் திரிந்து சாற்றினார்''*[49]

பெருங்கதையில் வரும் வள்ளுவன் ஒரு யானையும் செல்வச்சேனை என்னும் வீரர் குழுவும் கொண்டிருந்தான். அரசக் குடும்பத்துத் திருமணங்கள், போர் முன்னறிவிப்புகள், விழா ஏற்பாடுகள் ஆகிய மூன்று இன்றியமையாத அறிவிப்புகளை மட்டும் பறைசாற்றுதற்குரிய தனித்தன்மையைப் பெற்றிருந்தான். அவன் பறையறிவிக்கும் போது யானை மேல் அமர்ந்து தூய வெண்மையான நுண்ணாடை உடுத்தி, கழுத்தில் மாலை அணிந்து நெற்றியில் சந்தனம் பூசி வருவான். சிறு கூட்டமாக வீரர்கள் பின் தொடர்வர்.

யானை மேல் ஏறும் முன் வெற்றிக்கும், போருக்கும் உரிய பெண் தெய்வமாகிய கொற்றவைக்கும் பூசையிடுவான் என்று விளக்கபபடுகிறான்.

---

[47]. கம்பராமாயணம், பாலகாண்டம், திரு அவதாரப்படலம், பாடல்-113.

[48]. கம்பராமாயணம், எழுச்சிப் படலம், பாடல்-8.

[49]. கம்பராமாயணம், அயோத்தியா காண்டம், மந்தரை சூழ்ச்சிப் படலம், பாடல்-33.

*''திருநாள் படைநாள் கடிநா ளொன்றில்*

*பெருநாட் கல்லது பிறநாட் கறையாச்*

*செல்வச் சேகை வள்ளுவ முதுமகன்''*[50]

### 2.7.5. வள்ளுவர் பற்றிய பிற இலக்கியச் செய்திகள்

அரசர்க்குக் கருமத் தலைவராய் உயர்பதவி வகித்தவர்க்கு வள்ளுவன், சாக்கை என்ற சிறப்புப் பெயர்கள் முன்பு வழங்கி வந்துள்ளன என்பதனை,

*''வள்ளுவன் சாக்கை யெனும்பெயர் மன்னர்க்கு*

*உட்படு கருமத் தலைவர்க் கொன்றும்''*[51]

என்னும் திவாகரச் சூத்திரத்தால் அறிய முடிகிறது (உட்படு கருமத் தலைவர் அரசர்க்கீழ் காரியத் தலைமை வகிக்கும் அதிகாரி). இதனால் ''அரசியல் துறையில்(இராச காரிய) வல்லவராய் விளங்கியவர்களுக்கு வள்ளுவப் பட்டம் வழங்கி வந்த செய்தி தெளியப்படும்''[52] என்று பேராசிரியர் மு.இராகவையங்கார் விளக்கம் கூறுகிறார்.

''வள்ளுவன் அரசன் கட்டளையையே முரசறிவிப்பவன்; சாக்கையன் அரசர்க்கே நாடகம் நடிப்பவன். ஆதலால் இவ்விருவரும் அரசர் தொடர்பே கொண்ட பணியாளராவர். சிலர் கருதுகின்றவாறு வள்ளுவன் அரசனின் பள்ளியறைக் கண்காணிப்பாளனான மாளிகை நாயகம் (Chamberlain) அல்லன்''[53] எனத் தேவநேயப் பாவாணர் விளக்குகிறார்.

நல்ல காரியங்களைச் செய்ய வேண்டுமெனில் புலையர்(வள்ளுவர்)வாயினால் அதற்குரிய நல்ல நாள் கேட்டுச் செய்யாதவர்கள், அருகினில் இருக்கும் அறச் செயல்களையுடைய அந்தணரின் வாய்ச் சொற்கேட்டு செய்க என ஆசாரக்கோவை அறிவுறுத்துகிறது. இதில் புலையர் என்பது சேரிவாழ் மக்களில் நாள்கோள் பார்த்துச் சோதிடம் கூறும் வள்ளுவ மக்களையே என்று துணியலாம்.

---

[50]. பெருங்கதை, 2 : 2 32-33.

[51]. திவாகர நிகண்டு, பாடல்-189.

[52]. மு.இராகவையங்கார், ஆராய்ச்சித் தொகுதி, ப.207.

[53]. பாவாணர், திருக்குறள் தமிழ் மரபுரை, ப.5.

(புலையர் என்பதற்கு வள்ளுவர் என அற இலக்கியக் களஞ்சியம் உரை வகுத்துள்ளது).

*“தலைஇய நற்கருமம் செய்யுங்கால் என்றும்*

*புலையர் வாய் நாள் கேட்டுச் செய்யார்*

*தொலைவில்லா அந்தணர் வாய்ச்சொற் கேட்டுச் செய்க”*[54]

ஆரியப் பிராமணர்கள் தெற்கில் வந்தேறியதால் வள்ளுவர்களின் கணியத் தொழில் மெல்லக் குன்றத் தொடங்கியது. இந்நிலையில் வள்ளுவர்களிடம் போய்க் கணியம் பார்க்கலாகாதென ஒரு தடை விதித்திருக்க வேண்டும். நல்லது எதையும் செய்வதற்கு முன்னர் வள்ளுவனிடம் (புலையனிடம்) கணியம் கேட்டறியும் வழக்கத்தை விட்டொழித்து, அம்தழலாக வேள்வியை வளர்க்கும் பிராமணனிடம் கேட்டறிக என்றும் பொருளில் பெருவாயின் முள்ளியார் இப்பாடலைப் பாடியிருக்க வேண்டும் எனக் கருதலாம். இதிலிருந்து வள்ளுவர்கள் தொன்றுதொட்டுக் கணியத் தொழில் செய்து வந்துள்ளமை புலனாகிறது.

*“திருக்கையுள்ள வள்ளுவனைப்*

*பெருக்க முரசடியு மென்பார்”*[55]

எனப் புதுவூர் சக்கரவர்த்தி அம்மானை வள்ளுவன் பறையறிந்ததைக் காட்டுகிறது.

முத்துப்பட்டன் கதையில் கல்லறையிலிருந்து தப்பிவந்த பிராமணனான முத்துப்பட்டன் குடுமி, பூணூலைக் களைந்துவிட்டு, சக்கிலியப் பெண்களான திம்மக்கா, பொம்மக்கா ஆகியோரை மணக்கிறான். அத்திருமணத்தைப் புலைச் சாதிகளுக்கெல்லாம் (ஐயர்) புரோகிதராக இருக்கும் வள்ளுவன் புரோகிதம் செய்து நடத்தி வைக்கிறான். வள்ளுவர்கள் புரோகிதர்களாகவும் இருந்திருக்கின்றனர் என்பதனை “இன சாதிக்காரர் வள்ளுவனும், வந்து ஏற்ற முகூர்த்தமிட்டு”[56] என்ற முத்துப்பட்டன் கதைப்பாடல் வரி காட்டுகிறது.

---

[54]. ஆசாரக்கோவை, பாடல்-92.

[55]. புதுவூர் சக்கரவர்த்தி அம்மானை, ப.122.

[56]. நா.வானமாமலை, முத்துப்பட்டன் கதைப்பாடல், ப.5.

### 2.7.6. வரலாற்றுச் செய்திகள்

“சேர நாட்டு அரசியலில் வள்ளுவர் குலத்தவரின் செவ்வாக்கு கி.பி.9-10 ஆம் நூற்றாண்டுகள் வரை நீடித்து வந்ததெனத் தெரிகிறது. வள்ளுவ குலத்தவரின் செல்வாக்குச் சேரநாட்டில் மட்டும் நீடித்து வந்ததற்குப் பௌத்த சங்கங்களின் ஜனநாயக நடைமுறைகளின் தாக்கமே காரணமாகும்”[57].

“கி.பி.ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த இரண்டாம் சேரமான் பெருமாள் என்ற அரசர் ஓர் இஸ்லாம் அடியார் ஆவார். இவர் நாட்டைப் பன்னிருவருக்குப் பகிர்ந்து அளித்து விட்டு மெக்கா சென்றுவிட்டார். அப்பன்னிரண்டு நாடுகளுள் ஒன்று ‘வள்ளுவநாடு’ என்பதாகும்”[58]. எனவே வள்ளுவர்களும் குறுநில மன்னர்களாக நாடாண்டு இருந்திருக்க வேண்டும் என அறியமுடிகிறது.

“கி.பி.ஏழாம் நூற்றாண்டு தொட்டுப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை நம்பூரிப் பிராமணர்களின் மாநாடு கூட்டப்பட்டது. அம்மாநாட்டில் அவர்கள் (சேரமன்னனின் ஆளுநனான) சேரமான் பெருமாளைத் தேர்ந்தெடுத்துக் கொண்டனர். அச்சேரமான் பெருமாளைத் தேர்ந்தெடுப்பதற்கெனக் கூட்டப்பட்ட அப்பிராமணர்களின் மாநாடுகளை ‘வள்ளுவக்கோன்’ என்னும் வள்ளுவனே தலைமை தாங்கி நடத்துவது ஒரு மரபானது”[59]. வள்ளுவக்கோன் என்பதற்கு வள்ளுவநாட்டு அரசன் என்றும் பொருள் கூறுவர். வள்ளுவநாடு என்ற ஒரு நாடும் சேரநாட்டில் இருந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

“ஸ்டுவர்ட் என்னும் ஆங்கில அறிஞர் 1895 ஆம் ஆண்டின் மக்கள் தொகைக் கணிப்பு அறிக்கையில் பிராமணர்கள் சிறப்புறும் முன் வள்ளுவர்கள் பல்லவ மன்னர்களின் அரச குருக்களாக விளங்கினர்”[60] என்று வள்ளுவர்களைப் பற்றிக் குறிப்பிடுகிறார். இவ்வாறு அரச குருக்களாகவும், அரசவைப் பெருங்கணிகளாகவும் மிக உயர்ந்த நிலையில் வள்ளுவச் சமூகத்தினர் இருந்திருக்கின்றனர்.

---

[57]. வி.சரவணன், தமிழினி (செப்டம்பர் 2009), ப.80.

[58]. தேவநேயப் பாவாணர், தமிழர் வரலாறு, ப.262.

[59]. Gustav Oppert, The Dravidians, P.69.

[60]. எட்கர் தர்ஸ்டன், தென்னிந்தியக் குலங்களும் குடிகளும், தொகுதி-6, ப.82.

‘‘கணியத் தொழில் செய்துவந்த வள்ளுவன் இனம் சமுதாயத்தில் பெரிதும் மதிக்கப்பட்டும் சிறந்தும் விளங்கியது. பிற்காலத்தில் திராவிட தேசத்தில் குடிபுகுந்த வடமொழியாளர்கள் (பிராமணர்கள்) இவ்வள்ளுவர்களின் கலைத்தொழிலைத் தம்முடையதாக்கிக் கொண்டு வள்ளுவர்களைத் தாழ்வடையச் செய்தனர்’’[61]. நாளடைவில் வள்ளுவர் தம் சிறப்பு குன்றித் தம் சோதிடத்தொழிலைப் பேண இயலாதவராயினர்.

‘‘கொச்சி மாநிலத்தில் அறுவடை முடிந்த பின் சில சாதியர்களுக்கு ஒரு பெரிய கட்டு நெல் கூலியாகத் தருவார்கள். அதில் விதைப்பு, அறுப்பு, நடவு இவற்றுக்கு நாள்பார்த்துக் கூறியதற்காகக் கணியான்களுக்கும் வழங்கப்படுகிறது’’[62]. ஆய்வெல்லைக்குட்பட்ட கிராமங்களில் அறுவடைக் காலங்களில் ஒரு பெரிய கட்டு நெல் வயல்களுக்குத் தண்ணீர் கட்டும் (கம்பக்காரன்) ஒருவனுக்கு மட்டுமே வழங்கப்படுகிறது. தொழில்களடிப்படையில் அம்பட்டர், வண்ணார், வள்ளுவர் (ஐயர்) ஆகியவர்களுக்கு அடித்த நெல்மணிகளையே அளந்து கொடுக்கின்றனர். அவ்வாறு கொடுக்கும்போது வள்ளுவர்களுக்கு முன்னுரிமை அளித்து அவர்களுக்கு முதலில் கொடுத்த பின்னரே மற்றவர்களுக்குக் கொடுக்கின்றனர். அவர்களின் வாழ்த்துப் பெற்றால் வரும் போகங்களில் (எதிர்வரும் விவசாயக் காலங்களில்) நன்கு விளையும் என நம்புகின்றனர். இது பெரும்பான்மையாகப் பிற தாழ்த்தப்பட்ட சமூகத்தவர்களிடையே காணப்படுகிறது.

வள்ளுவர் சமூகத்தினர் பழங்காலத்தில் வலங்கைப் பிரிவினராக இருந்துள்ளனர் எனத் தெரிகிறது. ‘‘சோழராட்சிக் காலத்தில் குலப்பட்டம் பற்றிய குலங்களுக்கிடையே ஏற்பட்ட பிணக்கு, மற்றும் பல சச்சரவுகளைக் கரிகாலன் என்னும் பெயர் கொண்டிருந்த வீரராஜேந்திரச் சோழன் தீர்த்துவைத்ததாகத் தெரிகிறது. இதில் சோழனுக்கு வலக்கைப் பக்கம் அமர்ந்திருந்த குலத்தார் வலங்கையர் என்றும், இடக்கைப் பக்கம் அமர்ந்திருந்த குலத்தார் இடங்கையர் என்றும் தெரிகிறது. சோழராட்சிக் காலத்தில் மீண்டும் வலங்கை, இடங்கைப் பிரச்சனைகள் தோன்றின. 1809 ஆம் ஆண்டு சூலைத் திங்கள் 25 ஆம் நாள் அப்போதைய செங்கழுநீர்ப்பட்டு நயன்மைத் தீர்ப்பாளர் சார்சு கோல்மன் துரை (GEORGE

[61]. புலவர்.செந்துரை முத்து, ஆயகலைகள் அறுபத்து நான்கு, ப.178.

[62]. எட்கர் தர்ஸ்டன், தென்னிந்தியக் குலங்களும் குடிகளும், தொகுதி-2, ப.77.

COLMAN) அவ்வழக்கைத் தீர்த்துவைத்து ஒவ்வொரு குலத்தார்க்கும் உரியவற்றைத் திட்டஞ்செய்தார். அதில் வலங்கைப்பிரிவில் வேளாளண், அகம்படியான், இடையன், சாலியன், பட்டணவன், குறவன், குறும்பன், வள்ளுவன், பறையன் முதலிய குலங்கள் இடம்பெற்றுள்ளன எனத் தெரிகிறது''[63].

''பின்னாளில் கோயில் அறங்காவலர்களாயிருந்த பிற்காலத்து வள்ளுவர்கள், அந்த உரிமையையும் கூடப் படிப்படியாக இழந்தனர். அன்றாடக் கோயில் பணிகளை வள்ளுவர்கள் அறுவரை வைத்தே நடத்த வேண்டும் என்பது இடைக்கால மரபு''[64] என அபிதான சிந்தாமணி குறிப்பிடுகிறது.

''கேரள மாநிலம் திருவாங்கூர் புலையர்களின் சாதி நிர்வாகத்தில் உள்ளூர்ப் பூசாரியாக 'வள்ளுவன்' நியமிக்கப் படுகிறான். இவ்வள்ளுவனுக்கெனச் சில சலுகைகள் நியமிக்கப் பெறுகின்றன. இவ்வள்ளுவனை நியமிப்பவர் தம்மவரே. இவரால் நியமிக்கப்படும் வள்ளுவன் தன்னைத் 'தலைமை வள்ளுவன்' எனக் கூறிக்கொள்வான். இவ்வாறு அவன் கூறிக்கொள்வது கோயில் அதிகாரிகளாலும், பிராமணர்களாலும் நியமிக்கப்படுகின்ற வள்ளுவர்களிலிருந்து தன்னை வேறுபடுத்திக் கொள்வதற்காகவே ஆகும். இவனுக்குத் தன் ஆட்சி உரிமை உடைய புலையர்களைப் பொதுவாக மேற்பார்க்கும் அதிகாரம் உண்டு. ஒவ்வொரு வள்ளுவனும் ஐந்து சிறப்புத் தகுதிகளைப் பெறும் உரிமை உடையவன். அவைகளாவன:

1. நீண்ட மூங்கில் பிடி உடைய குடை
2. ஐந்து வண்ணக் குடை
3. தன் தகுதியை உணர்த்தும் காப்பு
4. நீண்ட தங்கக் கடுக்கன்
5. வெற்றிலை வைத்துக்கொள்ளப் பெட்டி

[63]. தேவநேயப் பாவாணர், தமிழர் வரலாறு, பக்.309-310.

[64]. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, பக்.1062-1063.

இவற்றினை வைத்துக்கொள்ளும் உரிமையே அந்த ஐந்து சிறப்புகளாகும். மேலும் நாற்காலியில் அமரவும், விரிப்பினை பயன்படுத்தவும், திருமணங்களில் பித்தளைக் குடமுழா வைத்துக் கொள்ளவும் ஆகிய தனி உரிமைகளையும் இவ்வள்ளுவர்கள் பெற்றிருந்தனர்''[65].

கடலூர் மாவட்டக் கிராமங்களிலும் கூட வள்ளுவ மக்களில் பெரும்பான்மையோர் (ஆண்களில்) கடந்த இருபது ஆண்டுகளுக்கு முன்னரும் கூட வெய்யிலோ, மழையோ எக்காலத்திலும் நீண்ட மூங்கில் பிடி உடைய குடை வைத்திருப்பர். நாயனாராக இருப்பின் நெற்றியில் திருநீற்றுப் பூசையும், ஆழ்வாராக இருப்பின் திருநாமமும் காணப்படும். வலக் கையில் தங்கக்காப்பு அணிந்து காணப்படுவர். இவர்களின் வீட்டைக் குறிப்பிடும்போது கூடக் 'காப்புகாரன் வீடு' என்றே குறிப்பிடுவது வழக்கம். இரு காதுகளிலும் தங்கக் கடுக்கன் (கல் பதித்தது) அணிந்திருப்பர். வெற்றிலைப் பாக்கு வைத்துக்கொள்ளப் பித்தளை அல்லது வெண்கலத்தில் வெத்தலப்பெட்டி வைத்திருப்பர். இன்றைய நிலையில் மிகக் குறைந்த அளவில் ஒரு சில வயதான வள்ளுவர்களே இவ்வாறு காணப்படுகின்றனர்.

மேற்குறிப்பிட்ட கேரளத்து வள்ளுவர்களின் கீழ்ச் சிலர் பணிபுரிந்திருக்கின்றனர். அவர்கள்,

1. கருப்பன் அல்லது கணக்கன்.(வள்ளுவன் தன் பணியைச் செய்ய இவனே உதவுவான்)
2. குமராட்டன் எனப்படும் பேய் ஓட்டுபவன்
3. கைக்காரன் அல்லது ஊர் உறுப்பினன்
4. வண்டிக்காரன்(காவலன்) அல்லது தண்டல்காரன்.

ஆகியோராவர். மேலும் மணமான பெண் ஒருத்தி தன் கணவனுக்குப் பணிய மறுப்பாளாகில் இவ்வள்ளுவனும் மற்ற அலுவலர்களும் அவளை விசாரிப்பார்கள்''[66] என்ற செய்தியினை எட்கர் தர்ஸ்டன் கூறுகிறார்.

---

[65]. எட்கர் தர்ஸ்டன், தென்னிந்தியக் குலங்களும் குடிகளும், தொகுதி-2, பக்.112-113.

[66]. மேலது, பக்.113-114.

### 2.7.7. வள்ளுவர்கள் பற்றிய கல்வெட்டுச் சான்றுகள்

“மேல்மலையாள நாட்டுப் பொன்னானி வட்டத்துச் சுகபுரம் என்னும் ஊரிலுள்ள கல்வெட்டொன்று “சொகிரத்துப் பருடையாரும் இராய சேகராயின வள்ளுவரும் கூடிச் செய்த கச்சமாவது(S.I.I.VOL.V.NO.775) என்று வள்ளுவர்களைப் பற்றிக் கூறுகிறது”[67]. இக்கல்வெட்டினைப் பற்றிக் கூறும்போது “இராய சேகர வள்ளுவரில் ஒருசிலர் மேலை நாட்டில் அரசுரிமை நீங்கிலும் தொன்மைச் சிறப்புறத் தோன்றக் கோயில் காரியம் பார்த்து வந்தாரென அறிகின்றோம்”[68] என மு. இராகவையங்கார் குறிப்பிடுகிறார்.

“இதே கல்வெட்டினைப் பற்றி ஔவை.சு.துரைசாமிப்பிள்ளையவர்கள் நாஞ்சில் மலைத் தலைவனாகிய வள்ளுவனும், திருக்குறள் ஆசிரியராகிய திருவள்ளுவனாரும் வள்ளுவன் என்ற சிறப்புப்பெயர் கொண்டு விளங்கியவராவார். இவர்கள் வழிவந்தோர் வள்ளுவர்களாய் இடைக்காலத்தே அரசகாரியம் பார்த்துவந்த மேலோராவர்”[69] எனக் குறிப்பிடுகிறார்.

“சொகிரத்துப் பருடையார் என்பது சொகிரம் என்ற ஊரைச் சேர்ந்த பரிஷத் என்ற அமைப்பைக் குறிக்கும். இராயசேகராயின வள்ளுவர் (நியாய சேகரர்) நீதித்தலைவர் என்று குறிப்பிடப்படுகிறது. கச்சம் என்பதற்குச் சட்டம் என்று பொருள் கூறப்படுகிறது”[70]. சொகிரம் என்ற ஊரைச் சேர்ந்த பரிஷத் என்ற அமைப்பும் நீதித்தலைவரான வள்ளுவரும் கூடிச்செய்த சட்டம் என்று பொருள்படுமாறு இக்கல்வெட்டு அமைந்துள்ளது என்ற கருத்தினை எஸ்.இராமச்சந்திரன் அவர்கள் விளக்குகின்றார்.

இக்கல்வெட்டினைப் போலவே “பொன்னானி வட்டத்துப் புக்காட்டூரில் உள்ள கல்வெட்டொன்று(A.R.N.349OF1924) புக்காட்டூர்ச் சபையோரும், பிராமணரும், கோயிலதிகாரிகளும், வள்ளுவர்களும் கோயில் விளக்கெரிக்க

---

[67]. மு.இராகவையங்கார், ஆராய்ச்சித் தொகுதி, ப.208.

[68] . மேலது,

[69]. புறநானூறு, தொகுதி-2, (ஔவை.சு.துரைசாமிப் பிள்ளை உரை), ப.390.

[70]. வி.சரவணன், தமிழினி (செப்டம்பர் 2009), ப.80.

உடன்பட்ட செய்தியைக் கூறுகிறது. இக்கல்வெட்டு 12 ஆம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டது''[71].

''புதுக்கோட்டை சித்தன்ன வாசலில் அமைந்த மலைக்குகைச் சாசனமொன்று, பாண்டியன் அவனில் சேகரன் காலத்ததாக உள்ளது. இப்பாண்டியன் 9 ஆம் நூற்றாண்டில் ஆண்ட ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபனாவான். இச்சாசனம் அமைத்தவர் மதுரையாசிரியன் இளங்கௌதமன் என்ற புலவர். அதனில் இப்பாண்டியன் சீரிவல்லுவன் எனக் குறிப்பிடப்பட்டுள்ளான். ['ஆர்கெழு வைவே லவனிய சேகரன், சீர்கெழு செங்கோற் சீரி வல்லுவன்' (EP.Rep.368 Of 1994;I.M.P.Pd.267]''[72].

ஸ்ரீவல்லபன் என்ற பெயரைப் பாண்டியர் பலர் பெற்றிருந்தனர் என்பதைச் சரித்திர அறிஞர் நன்கு அறிவர். ஆகவே இச்சாசனத்திலுள்ள சீரிவல்லுவன் என்ற பெயரின் மூல உருவம் ஸ்ரீவல்லபன் என்பதேயாகும்.

''சோணாட்டுத் திருவிசலூரிலுள்ள சிவன் கோயில் வடக்குத் திருமதிலில் அமைந்த பரகேசரிவர்மன் இராஜேந்திர சோழனது(1011-43) மூன்றாம் ஆட்சி வருடத்தில் அமைந்த சாசனமொன்றும், பாண்டியர் ஸ்ரீவல்லவர் மனைவி ஷ கோயிலுக்குச் சில திருவாபரணங்கள் அளித்தனள் என்று கூறுகிறது. பாண்டியன் ஸ்ரீவல்லுவர் தேவியார்… குற்றப் பாவையார்(EP.Rep.46Of1907;M.P.Tj.416) என்பது அச்சாசனத் தொடர். அச்சோழன் காலத்துப் பாண்டியன் ஸ்ரீவல்லபன் என்பது சாசனங்களால் தெளிய அறிந்த செய்தியாகும்''[73].

மேற்கண்ட கல்வெட்டுகளில் சீரிவல்லுவன் என்று பொறிக்கப்பட்டிருப்பது 'சீரிவள்ளுவன், என்ற சொல்லைக் குறிப்பதாகவும் அமையலாம். ஏனெனில் கல்வெட்டுகள், செப்பேடுகள், ஏடுகள் (பனையோலை) முதலியவற்றில் கீழ்நோக்கு 'ள'கரத்திற்குப் பதில் மேல்நோக்கு 'ல'கரத்தைப் பயன்படுத்தியிருக்கவும் வாய்ப்பு உண்டு.

---

[71]. தி.மகாலட்சுமி, இலக்கியத்தில் சோதிடம், ப.126.

[72]. மு.இராகவையங்கார், ஆராய்ச்சித் தொகுதி, ப.207.

[73]. மேலது, பக்.207-208.

‘‘ஏடுகளில் இது கொம்பு, இது சுழி என்று வேறுபிறித்து அறியமுடியாது. மெய்யெழுத்துக்களுக்குப் புள்ளியே இராது. ‘ரகரத்திற்கும், காலுக்கும் வேற்றுமை தெரியாது. சரபம் சாபமாகத் தோன்றும். ஓரிடத்தில் ‘சரடு’ என்று வந்திருந்த வார்த்தையைச் ‘சாடு’ என்றே பலகாலம் எண்ணி இருந்தேன். ‘தரன்’ என்பதை ‘தான்’ என்று நினைத்திருந்தேன்’’[74] என உ.வே. சாமிநாத ஐயர் குறிப்பிடுகிறார்.

### 2.7.8. வள்ளுவம்

‘‘பண்டைய தமிழர் வாழ்வியலில் நாள்கோள் பார்க்கும் கணியர்களாகவும், காலக் கணியர்களாகவும் (ஐந்திரமாம் பஞ்சாங்கம் பார்ப்பவராகவும்), கல்வி புகட்டும் ஆசான்களாகவும் விளங்கி வந்தவர்கள் வள்ளுவர்களேயாவர். அரசியல் வாழ்விலும் அவர்கள் மிக உயரிய நிலையில் இருந்தனர். வள்ளுவமே ஒருகால் ஆட்சிக் கொள்கையாகவும், வாழ்வியல் நெறியாகவும் இருந்தது’’[75] என்று தெரிகிறது. ‘‘வள்ளுவக் கணியர்கள் உலகுக்குப் படைத்தளித்த மூலமுதல் அணுக்கொள்கையும் அறிவியல் மெய்யியலும் என்பதைக் கருதி அதை ‘வள்ளுவ அறிவியல்’ என்று அழைப்பதே சாலப்பொருந்தும்’’[76]. அணுக்கொள்கையையும், மருத்துவத்தின் அடிப்படைகளையும், மெய்யியலையும், பொருண்மையியத்தையும், அறிவர்களாயிருந்த வள்ளுவர்களே படைத்தளித்தனர் என்பது வரலாற்று உண்மை’’[77]. இவையே பழைய வள்ளுவம் எனக் கொள்ளலாம்.

‘‘வள்ளுவம் என்று இந்நூற்றாண்டில் குறிப்பிடப்படுவது அணுக்கொள்கையோ, கணக்கியலோ, மருத்துவமோ ஆகிய அறிவியல்களும், மெய்யியல்களும் அடங்கிய அறிவுப் பள்ளியன்று. திருக்குறள் கற்பித்த நன்னெறிகள் மட்டுமே இன்று வள்ளுவம் என்று நம்மிடம் கற்பிக்கப்படுகின்றன. அ஀து அகமை வடிவிலாகிய புதிய வள்ளுவம், உலகம் போற்றுகின்ற திருக்குறளைத் தழுவியதே அவ்வள்ளுவம். வாழ்க்கைக்கு

---

[74]. உ.வே.சாமிநாத ஐயர், என் சரித்திரம், ப.559.

[75]. குணா, வள்ளுவத்தின் வீழ்ச்சி, ப.122.

[76]. மேலது, ப. 268.

[77]. மேலது, பக்.267, 268.

நல்ல நல்ல வழிகாட்டியாகவும், அறநெறியாகவும், இலக்கியமாகவும் அமைந்த அந்த நூலைச் சார்ந்த புதிய விளக்கமே இவ்வள்ளுவம்''[78].

''பழைய வள்ளுவம் ஒரு வாழ்வியில் எச்சமாகும். தொன்மையில் அகப்புற வாழ்வியல்களின் நெறியிருந்த வள்ளுவமே அ.்.தாகும். பார்ப்பாரியத்திற்கும். பிராமணியத்திற்கும் முந்தைய வாழ்வியல் அமைப்பாகவும், அரசியல் யாப்பாகவும் இலக்கணமாகவும் விளங்கியதே முற்கால வள்ளுவம். இப்பழைய வள்ளுவத்தின் மிச்ச மீதிகளும் செத்துவிட்டன''[79].

''பரசுராமனின் காலத்திற்குச் சற்று முன்பே வள்ளுவம் நலிந்து வீழ்ச்சியுறத் தொடங்கியது. ஆயினும் அறிவர்களான வள்ளுவர்களுக்கு இருந்துவந்த குமுக மதிப்பு, ஒரு வரலாற்று எச்சமாக மிக நெடுங்காலம் நீடிக்கவே செய்தது. அரசியல், குமுகவியல் தலைமையையும், அதிகாரத்தையும் வள்ளுவர்கள் இழந்துவிட்ட பின்பும் கூட அவர்களுக்கென்று தனிச்சிறப்பும், தனிமதிப்பும் தொடர்ந்து இருந்து வந்தன''[80] என்பது தெரியவருகிறது.

''வள்ளுவர்கள் படைத்த அறிவியல், மெய்யியல் நூல்களைக் களவாடிச் சங்கதம் (சமஸ்கிருதம்) என்னும் செயற்கை மொழியில் மொழிபெயர்த்துக்கொண்டு தமிழ் மூலநூல்களை அழித்தொழித்தபின் அவையெல்லாமே தம் சொந்த மரபிற்கு உரியனவெனச் சொந்தம் பாராட்டி வரும் பிராணர்களே அவ்வள்ளுவ மரபை எத்திர்மறையில் நின்று பேணிக்காத்து வருகின்றனர். இது ஒன்று மற்றொன்றான தலைகீழ்க் கோலம்''[81] என்று குணா அவர்கள் குறிப்படுவதிலிருந்து பழைய வள்ளுவம் உயர்ந்த நிலையில் ஆட்சிக்கொள்கையாக இருந்து இன்று தலைகீழாக மாறியுள்ளது என்பதை உணரமுகிறது.

---

[78]. குணா, வள்ளுவத்தின் வீழ்ச்சி, பக்.387, 388.

[79]. மேலது, ப.383.

[80]. மேலது, பக்.375-376.

[81]. மேலது, ப.386.

### 2.7.9. வள்ளுவர் சமூகம் தாழ்நிலை அடைந்தமை

வள்ளுவர் சமூகம் தாழ்நிலை அடைந்தற்கான காரணங்கள் குறித்துப் பல்வேறு ஆய்வாளர்களும், அறிஞர்களும் பல்வேறு கருத்துகளைக் கூறியுள்ளனர். ‘‘பழங்குடிப் பேதைமை, மதப்பித்தம், கொடைமடம் என்றும் முக்குற்றமும் ஒருங்கு கொண்ட மூவேந்தரும், பகுத்தறிவைப் பயன்படுத்தாது பிராமணரை முற்றும் பின்பற்றியதால், கடைக்கழகக் காலத்தில் மதவியல், குமுகாயவியல், மொழியியல் என்னும் முத்துறையிலும் ஆரியம் மிக வேரூன்றிவிட்டது’’[82] எனத் தேவநேயப் பாவாணர் குறிப்பிடுகிறார்.

‘‘அறிவுசார்ந்த வள்ளுவ மரபு ஆரியர் வருகைக்குப் பின் சீர்குலைந்தது. ஆரியம் தமிழகம் வந்தபோது, வள்ளுவர்களுக்கு மக்களிடையே இருந்த செல்வாக்கும், மன்னனிடம் இருந்த மதிப்பும் ஆரியர்களைச் சிந்திக்க வைத்தன. தங்கள் வாழ்வியல் முறைகளை வகுத்துக் கொள்ளவும், நிலைநிறுத்திக் கொள்ளவும், வள்ளுவர்கள் ஆற்றிய பணிகளைத் தாம் ஆற்றினாலொழிய, தமிழகத்தில் தம் இனம் நிலைபெறாது என்றுணர்ந்த ஆரியர், வள்ளுவர்களைப் பலகாலும் பின்னுக்குத் தள்ளி, அவ்விடத்தைப் பிடித்துக் கொண்டனர். ஆரியர்களின் சூழ்ச்சிக்கும், புகழ்மொழிகளுக்கும் ஈடுகொடுக்க முடியாத வள்ளுவர் இனம் இரண்டாம் இடத்திற்குத் தள்ளப்பட்டுக் காலப்போக்கில் கவனிப்பார் அற்றுப் போனது. தங்கள் வாழ்க்கையைச் செம்மைப் படுத்திக் கொள்ள, நாள்கோள் பார்த்துச் சொல்லும் பணிகளில் ஈடுபடலாயினர். ஒரு காலத்தில் மன்னனுக்கு அடுத்த வரிசையில் வைத்து மதிக்கப்பட்ட வள்ளுவ இனம், தீண்டப்படாதவர்களாகவும், தாழ்த்தப்பட்டவர்களாகவும் மாற்றப்பட்டது வரலாற்றில் நடைபெற்ற மிகப்பெருங் கொடுமையாகும். திருக்குறள் தந்த வள்ளுவனைப் போற்றும் மக்கள், வள்ளுவ மரபினரைத் தாழ்த்தப்பட்டோராக இன்றும் சொல்லிக் கொண்டிருப்பது திருவள்ளுவர்க்கே செய்யும் இழுக்காகும்’’[83] என மா.சோ. விக்டர் அவர்கள் குறிப்பிடுகின்றார்.

‘‘மறை ஓதுவதையும் வேள்வி இயற்றுவதையும் தொழிலாகக் கொண்டிருந்த பார்ப்பானின் தேயம் என்று தனியாகவும், பெருங்கணி (அரசக்கணியன் அல்லது அரசகுரு) என்ற மிகப்பெரும் பதவியை

---

[82]. தேவநேயப் பாவாணர், தமிழர் வரலாறு, ப.248.

[83]. ம.சோ.விக்டர், தமிழரும் வானியலும், ப.32.

வகித்துவந்த வள்ளுவக் கணியனின் தேயம் என்று தனியாகவும் இருவேறு தேயங்கள் இருந்ததையே தொல்காப்பியம் காட்டும். பார்ப்பானுக்கும் பெருங்கணிக்கும் இடையிலான தொழிலியில் முரண்பாடும், அதிகாரப் போட்டியும் காலத்தால் மெல்ல மெல்ல முற்றின. அவ்விரண்டு அதிகாரங்களும் ஒன்று மற்றொன்றை விஞ்சப் பார்த்தன. இந்த இயற்பாட்டில் பார்ப்பானின் (மறையோனின்) கையே ஓங்கியது. வள்ளுவரின் கை தாழ்ந்தது. தொல்காப்பியர் காலத்தில் மறையோனும், வள்ளுவனும் ஆகிய இருவருமே தமிழர்களாகவே இருந்தனர். தொல்காப்பியருக்குப் பின்னர் ஓராயிரம் ஆண்டுகள் கழித்துச் சேரலத்தில் வந்தேறிய வடுகன் பரசுராமன், தமிழ்ப் பார்ப்பானுக்கும் வள்ளுவனுக்கும் இடையிலான முரண்பாட்டை ஊதிப் பெரிதாக்கியிருக்க வேண்டும். இந்தச் சூழலிலேயே தமிழ்ப்பார்ப்பாரியம் வடுக பிராமணியமாகத் திரிந்தது''[84] என்று குறிப்பிடுகின்றார் குணா.

''இறைப்பற்று (பக்தி) இயக்கத்தின் இறுதிநிலையில் விளங்கிய கொள்கைகளை ஆறு அகச் சமயங்களாகவும், ஆறு புறச்சமயங்களாகவும் சிவனியர்கள் வகுத்தனர். அத்தகு சூழலில் வள்ளுவர்களின் வாழ்வியல் தகுதி மேலும் தாழ்ந்தது. கி.பி. ஏழாம் நூற்றாண்டில் தோன்றிய இத்தகு பகுப்பினைகளால், வள்ளுவக் கணியர்களெல்லாம் அருகர்கள் என்று அடையாளப்படுத்தப்பட்டுத் தங்களின் அறிவுத் தலைமையையும், தனித்தன்மையையும் இழந்து விட்டனர். ஆசீவகர் என்றும் பெயரால் இழித்துரைக்கப்பட்ட வள்ளுவக் கணியர்கள் பின்பு முற்றிலுமாய்ப் புறக்கணிக்கப்பட்டனர். வடுகச் சோழர்கள்தாம் தமிழர்களை வலங்கையர், இடங்கையர் என்னும் பிறப்புவழிச் சாதியினராகக் கூறாடினர். வடுக நாயக்க வந்தேறிகளின் கொடுங்கோன்மையின் கீழ் இம்மண்ணின் மைந்தர்களான வள்ளுவர்கள் கீழ்ச்சாதியினராக்கப்பட்டும், தீண்டத்தகாதவராக்கப்பட்டும் பழைய பீடும் பெருமையும் இழந்தனர்''[85].

''வள்ளுவர்களுக்கும் தமிழ்ப் பார்ப்பார்களுக்கும் (மறையோர்) இடையில் எழுந்த மீப்பெரும் வேதியக் கணக்கியல், வேதிய அறிவியல், வேதிய மருத்துவம், வேதிய மெய்யியல் முதலிய அறிவுச் சரக்குகளையெல்லாம், பிராமணர்களே செய்தது என்னும் பெயரொட்டியுடன் கடைவிரித்த பிராமணர்கள் வள்ளுவ அறிவு மரபையே களவாடி

[84]. குணா, வள்ளுவத்தின் வீழ்ச்சி, ப.256.

[85]. மேலது, பக்.376-377.

வைத்துக்கொண்டு, அது தாங்களாக எட்டிய ஒரு அறிவு முகடு என்று கூறிக்கொள்கின்றனர்''[86].

''வள்ளுவர்களில் சிலர் தங்களை மறையோர்களாகப் போலிகை செய்து கொண்ட பார்ப்பாரியத்திலேயே கரைந்துவிட்ட இயற்பாட்டையும் தமிழன் வரலாறு கண்டது. பின்னர் வந்த வடுக பிராமணியத்திடமும் அவர்கள் அடங்கிப்போக நேர்ந்தது. பண்டாரங்களாகத் திரிந்த வள்ளுவர்கள் அங்கும் நிலைக்க முடியாது கெட்டொழிந்தனர். எஞ்சியுள்ள வள்ளுவர்களும் சுடுகாட்டிற்கும், இடுகாட்டிற்கும் தள்ளப்பட்டு வருகின்றனர்''[87].

''வடுக (ஆரிய)ப் பிராமணியத்திடம் அடிபணிந்த வள்ளுவப் பிறங்கடைகளே முற்காலக் கணியர்களின் அறிவியலை வீழ்த்தியவர்கள் என்ற வரலாற்றுப் புதிரும் விளங்காமல் போகாது''[88].

''கணியத்தையும் மருத்துவத்தையும் ஒரு சேரப் பழகி வந்தவர்களில் சிலர், தங்களின் முன்னோர்கள் சேர்த்து வைத்திருந்த மருத்துவ நூல்களையும், ஓலைச் சுவடிகளையும் கொண்டுபோய் ஆறுகளிலும், ஏரிகளிலும் எறிந்துவிட்ட அவல நிகழ்வுகளும் பலவாம். தம் முன்னோர்கள் வளர்த்தெடுத்த அறிவியலைத் தங்களின் அறியாமையால் தூக்கியெறிந்துவிட்டு, பிழைப்புக்குக் கணியத்தையும் புள்குறியையும் மட்டுமே பற்றிக்கொண்ட வள்ளுவப் பிறங்கடைகளும்கூட முற்காலத்து வள்ளுவ அறிவர்கள் ஆக்கித்தந்த வளமான அறிவியலும், மெய்யியலும் அழிவதற்கான காரணமாயினர்''[89].

''வள்ளுவர்களை அவர்களின் மேனிலையிலிருந்து வீழ்த்தியதுடன் அமையாமல், வடுகப் பிராமணர்கள் வள்ளுவர்களைத் தீண்டத்தகாதோராகவும் செய்தனர். தொன்றுதொட்டு வள்ளுவம் புகட்டிவந்த நல்ல வாழ்வியல் நெறிகளை ஒழித்துக் கட்டிவிட்டு, அதே வள்ளுவர்களின் கணியம், கணக்கியல், அறிவியல் புலமையை மட்டும் தம்வயமாக்கிக் கொண்ட வடுக(ஆரிய)ப் பிராமணியம், அவ்வள்ளுவ அறிவு மரபின்

---

[86]. குணா, வள்ளுவத்தின் வீழ்ச்சி , ப.377.

[87]. மேலது, ப.384.

[88]. மேலது, ப.386.

[89]. மேலது, ப.386.

அடிச்சுவடுகளையே தெரியாதவாறு வரலாற்றைத் திரித்து இருட்டடிப்புச் செய்தனர்''[90] என வெங்காலூர் குணா அவர்கள் வள்ளுவர்கள் தாழ்நிலை அடைந்தமைக்கான காரணங்களைக் குறிப்பிடுகிறார். இக்கூற்றிலிருந்து ஆரியப் பிராமணர்கள் வள்ளுவர்களைத் தாழ்நிலை அடையச் செய்திருக்கின்றனர். அவர்களிடம் அடிபணிந்த வள்ளுவர்களும் தங்களின் அறியாமையால் தாழ்ந்தனர்; தங்களைப் பிராமணர்களாகப் போலிகை செய்துகொண்டு வள்ளுவம் அழிவதற்குக் காரணமாயினர் என்னும் கருத்துகளை அறிய முடிகிறது.

''வள்ளுவச் சாதியினரின் வீழ்ச்சி என்பது வேளாண் மாந்தர்களின் எழுச்சியோடு நேரடியாகத் தொடர்புடையதாகும். நில பிரபுத்துவம் இவர்களின் அதிகார வரம்பினைக் குறுக்கிவிட்டதால் வானநூல் அறிவு(அதாவது பஞ்சாங்கம் கணித்தல், சோதிடப்பலன் கூறுதல்) தவிர்த்து இந்திய தேசிய அளவிலான நீதி – நிர்வாக அறிவுத்துறைக் கல்வியாகிய அறநூல் - பொருள் நூல் கல்வி என்பது இவர்களால் அடையமுடியாத எட்டாக் கனியாகிவிட்டது. வள்ளுவச் சாதியினர் தாம் வாழ்கின்ற ஊர்களின் நிலபிரபுத்துவ நலன்களுக்கு உகந்த வகையில் பணிபுரிகின்ற பணிமக்களாயினர். அதாவது விதைத்தல், அறுவடை செய்தல் போன்றவற்றை மேற்கொள்வதற்குரிய நல்ல நாள்களைக் குறித்துக் கொடுப்பதும், நிலவுடைமைச் சாதியரின் குடும்பங்களில் பிறக்கின்ற குழந்தைகளுக்கு ஜாதகம் கணித்தல், திருணத்திற்கு நாள் குறித்தல், சோதிடப் பலன் கூறுதல் போன்ற பணிகள் செய்வதுமே இவர்களின் முதன்மையான தொழில்களாயின''[91].

''மிகச்சிறந்த அறநூல், பொருள்நூல், இன்பநூல்(தர்ம சாஸ்திர, அர்த்த சாஸ்திர, காமசாஸ்திர) அறிவும், வானநூல் அறிவும் படைத்திருந்த, அரசனின் உட்படு கருமத் தலைவர்களாக இருந்த வள்ளுவர் குலத்தவர்கள் தாழ்த்தப்பட்ட சமூகப் பிரிவினராக மாறிய நிகழ்வுப் போக்கு நிலபிரபுத்துவத்தின் வளர்ச்சி விரிவாக்கம் ஆகியவற்றுடன் தொடர்புடையதாகும்''[92].

---

[90]. குணா, வள்ளுவத்தின் வீழ்ச்சி, ப.267.

[91]. வி.சரவணன், தமிழினி(செப்டம்பர் 2009), ப.80.

[92]. மேலது, ப.80.

“தர்மசாஸ்திரப் பயிற்சி என்பது பெருமளவில் வைதிக சமயம் சார்ந்த பிராமண சாதிக்குரிய ஏக போகமாக மாறியதன் விளைவாக வள்ளுவச் சாதியினர் அரசர்களின் உட்படு கருமத் தலைவர்களாக இருந்த நிலைமையில் இருந்து வீழ்ச்சியடைந்தனர். வள்ளுவர் சாதியைச் சேர்ந்த சிலர் தம்கல்வித் தகுதி, பதவி அந்தஸ்து ஆகியவற்றின் அடிப்படையில் மண உறவுகள் மூலமாகவும் வைதிக பிராணர்களாகவோ, சிவ பிராமணர்களாகவோ அங்கீகரிக்கப்பட்டிருக்கவும் வாய்ப்புண்டு. இத்தகைய நிகழ்வுப் போக்குகளுக்கு இந்திய வரலாற்றில் பல எடுத்துக்காட்டுகள் உண்டு”[93] என வள்ளுவச் சமூகத்தின் தாழ்நிலைக்கான காரணங்களை எஸ்.இராமச்சந்திரன் அவர்கள் குறிப்பிடுகின்றார். இதன்மூலம் வள்ளுவர்களின் அதிகாரங்களை நிலப்பிரபுத்துவம் குறுக்கிவிட்டது; வள்ளுவச் சாதியைச் சேர்ந்த சிலர் தம் கல்வி, பதவி, மண உறவு இவற்றின் மூலம் சிவ, வைதிகப் பிராமணர்களாக மாறியிருக்கலாம்; எஞ்சியவர்கள் நிலபிரபுக்களுக்கு நாள்கோள் பார்த்துச் சொல்வது, அவர்களுக்குப் பிறப்பியம் தொடர்பான சோதிடப் பலன்களைக் கூறுவது என்ற தாழ்நிலையினை அடைந்திருக்கலாம் என்பதை அறிய முடிகிறது.

“சங்கதம் என்ற குழூஉக்குறி மொழியைத் தோற்றுவிக்க வள்ளுவர்களும் பாடாற்றியுள்ளதைச் சித்தர் பாடல் இலக்கியங்களில் வரும் குறிப்புகள் காட்டுகின்றன”[94]. “பார்ப்பான் பாட்டுத்தொழிலை மேற்கொண்டதால் பாணர் பிழைப்பும், கணியத் தொழிலை மேற்கொண்டதால் வள்ளுவன் பிழைப்பும், வடமொழியைத் தலைமையாக்கியதால் தமிழ்ப் புலவர் பிழைப்பும் கெட்டன எனப் பாவாணர் சுருங்கச் சொல்லுவார்”[95].

மேற்கண்ட கருத்துக்களை ஆழ்ந்து நோக்கினால் வள்ளுவச் சமூகத்தினர் தாழ்நிலை அடைந்தமைக்கு ஆரியப் பிராமணர்கள் வள்ளுவர்களின் கலைத்தொழில்களைத் தம்முடையதாக்கிக் கொண்டு வள்ளுவர்களைத் தாழ்த்தியதும், உயர்நிலையில் இருந்த வள்ளுவர்களில் சிலர் பிராமணர்களாக மாறியதும், பல வள்ளுவர்கள் தங்கள் அறியாமையால் தாழ்த்திக் கொண்டதும் காரணங்களாக அமைகின்றன.

---

[93]. வி.சரவணன், தமிழினி(செப்டம்பர் 2009), ப.80.

[94]. Gustav Oppert, The Dravidians, P.69.

[95]. பாவாணர், ஒப்பியல் மொழிநூல், ப.58.

## 2.8. தொகுப்புரை

மேற்கண்ட தரவுகளின் அடிப்படையில் பின்வரும் செய்திகளைத் தொகுக்கலாம்.

- ❖ வள்ளுவச் சமூகத்தின் குலப்பிரிவுகள் மற்றும் அவற்றின் வகைப்பாடுகள் பல்காலமாக நிலவிவந்துள்ளன. இன்றைய நிலையில் அப்பிரிவுகள் அனைத்தும் வள்ளுவ நாயனார். வள்ளுவ ஆழ்வார் என்ற இரு உள்ளினப் பிரிவுகளாகவே காணப்படுகின்றன. இதனை வைணவ, சைவப் பிரிவுகளாகவும் கொள்ளலாம். வள்ளுவச் சமூகத்து மக்கள் தங்களை 'நாயனார்', 'ஆழ்வார்' என்று கூறிக்கொள்வதை விரும்புகின்றவர்களாகவும், பிற சமூகத்து மக்கள் 'ஐயர்' என்று அழைப்பதனைப் பெருமையாகக் கருதுபவர்களாகவும் காணப்படுகின்றனர்.

- ❖ வள்ளுவர்கள் பிற தாழ்த்தப்பட்ட சமூகத்து மக்களுக்குப் புரோகிதர்களாக இருந்து வருகின்றனர். இவ்வள்ளுவர்களைக் குருவாகக் கருதும் வழக்காற்றையும் ஆய்வெல்லைக்குட்பட்ட பகுதிகளில் காணமுடிகிறது.

- ❖ வள்ளுவர்கள் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள். இருப்பினும் தங்கள் சமூகத்திற்குள் குழூஉக்குறி போன்ற தனிமொழியைத் தொன்றுதொட்டுப் பேசிவருகின்றனர். காலத்தாலும், தலைமுறை மாற்றங்களாலும் இது அழிந்து வருகின்ற நிலையில் உள்ளது. நூற்றுக்கும் குறைவான சொற்களே இன்று நடைமுறையில் காணப்படுகின்றன. இந்தச் சொற்களுக்கான பொருள்களைப் பறையருள் ஒரு பிரிவினரான சாணாரும் (பறச் சாணார்) அறிந்து வைத்துள்ள நிலையும் காணப்படுகிறது.

- ❖ வள்ளுவச் சமூகத்து மக்கள் ஆய்வெல்லைக்குட்பட்ட கிராமங்களில், ஒருசில கிராமங்களில் இரண்டிற்கும் மேற்பட்ட குடும்பங்களும், ஒருசில கிராமங்களில் இருபத்தைந்திற்கும் மேற்பட்ட குடும்பங்களுமாக வசித்து வருகின்றனர். இவர்கள் தனியாக வசித்துவரும் வீதிகள், அனைத்துக் கிராமங்களிலும் 'வள்ளுவர் வீதி', 'வள்ளுவர் தெரு' என்ற பெயர்களிலேயே

அமைந்துள்ளன. இவர்களின் குடியிருப்புகள் எல்லா ஊர்களிலும் பிற தாழ்த்தப்பட்ட மக்களின் குடியிருப்புகளுக்கு (பறைச் சேரிகளுக்கு)ச் சற்றுத் தொலைவிலோ அல்லது அவற்றின் அருகிலோ காணப்படுகின்றன.

- ஒவ்வோர் ஊரிலும் ஊருக்குக் கிழக்கே அமைந்துள்ள தாழ்த்தப்பட்ட மக்களுக்கான சுடுகாட்டில் மேற்குத் திசையில் (மேல் பகுதி) வள்ளுவர்களுக்கான சுடுகாடு அமைந்துள்ளது. இவர்களுக்கென்று ஒதுக்கப்பட்ட பகுதியில் பிற சமூகத்து மக்களின் பிணங்கள் எரிக்கப்படுவதும், புதைக்கப்படுவதும் இல்லை.

- வள்ளுவர்கள் நெற்றியில் திருநாமமிட்டுக் கொண்டும் அல்லது திருநீறு பூசிக்கொண்டும், பூணூல் அணிந்தும் காணப்படுகின்றனர். இவர்கள் மாட்டிறைச்சியினை உண்பதில்லை. பிற தாழ்த்தப்பட்ட மக்களின் வீடுகளிலும் உண்பதில்லை; பிற தாழ்த்தப்பட்ட மக்களிடம் பெண் கொள்வதும், கொடுப்பதும் இல்லை. அவர்களுடன் காதல் திருமணம் செய்து கொள்கிற ஆண் மகனைக் கடுமையாக எதிர்க்கும் நிலை இவர்களிடம் காணப்படுகிறது. அகமண முறையை (தம் இனத்திற்குள்ளேயே திருமணம் செய்து கொள்வது) விரும்புகின்றவர்களாக இவர்கள் உள்ளனர். பிற தாழ்த்தப்பட்ட மக்களிடமிருந்து பல்வேறு வகைகளில் விலகி வாழும் இவ்வள்ளுவர்களிடம் மேலவர் மயமான போக்குக் (Sanskritisation) காணப்படுகிறது.

- வள்ளுவ ஆழ்வார்களும், நாயனார்களும் தங்களுக்குள் உயர்வு தாழ்வு கற்பித்து வந்துள்ளனர். இக்காலத்தில் அந்நிலை முற்றிலும் மாறிவிட்டது எனலாம். வள்ளுவச் சமூகம் இந்திய அரசியல் அமைப்புச் சட்டத்தின்வழித் தாழ்த்தப்பட்ட சாதி (Scheduled Caste) என்று அடையாளப்படுத்தப்பட்டுள்ளது. உயர்சாதியினராகக் கருதப்படும் மக்கள் வள்ளுவர்களைத் தாழ்ந்த சாதியினராகவும், தீண்டத்தகாதவராகவும், வள்ளுவர்கள் பிற தாழ்த்தப்பட்ட சமூகத்து மக்களைத் தீண்டத்தகாதவராகவும் கருதும் நிலை காணப்படுகிறது. தற்போது அனைத்துச் சாதியினருக்கும் இந்திய அடிப்படைக் குடியுரிமைச் சட்டம்

ஓரளவிற்குத் தெரிந்துள்ளதால் இந்தத் தீண்டாமைப் பாகுபாடு வெளிப்படையாகக் காணப்படவில்லை எனக் கருதலாம்.

- ❖ வள்ளுவச் சமூகத்து மக்கள் தொன்றுதொட்டுக் கணியத் தொழிலை மேற்கொண்டு வருவதால் கல்வி அறிவு சார்ந்த பிரிவினராகவே காணப்படுகின்றனர். இன்றைய நிலையில் பெண்கள் உயர்நிலைக் கல்வியும், ஆண்கள் மேல்நிலைக் கல்வியும் கற்றவர்களாகக் காணப்படுகின்றனர். இதுவே வள்ளுவச் சமூகத்தின் இன்றைய நிலையின் குறைந்த அளவுக் கல்வி நிலையாகக் கொள்ளலாம்.

- ❖ இந்தச் சமூகத்தில் சொத்துரிமை என்பது ஆண்களுக்கு உரியதாக காணப்படுகிறது. பெண்களுக்குச் சம உரிமை வழங்கப்படுவதில்லை. அங்கொன்றும், இங்கொன்றுமாகப் பெண்களுக்கு வழங்கப்பட்டாலும், சொத்தில் மிகக் குறைந்த பகுதியை வழங்கும் நிலையே காணப்படுகிறது. பெண்களுக்குத் தாய்வீட்டுச் சீதனம், அவர்களின் பிள்ளைகளுக்கு அம்மான் வரிசை செய்தல் என்ற அளவிலேயே நின்றுவிடுகிறது. சொத்தில் பாகம் என்பது பெருமளவில் இல்லை எனலாம்.

- ❖ வள்ளுவச் சமூத்தின் பின்புலத்தை நோக்கும்போது தமிழின் தொன்மைப் பகுதியான சங்க இலக்கியங்களில் ‘வள்ளுவச் சமூகம்’ என்ற தனியொரு அமைப்பு இருந்ததாகக் காணப்படவில்லை. ஆனால் ‘வள்ளுவன்’ என்ற பெயர்களை அறிய முடிகிறது. தொல்காப்பியர் குறிப்பிடும் ‘அறிவன்’ என்பது வள்ளுவக் கணியர்களையே என்று எண்ணத் துணியலாம்.

- ❖ வள்ளுவர்கள் அரசியல் வாழ்வில் மிக உயர்ந்த நிலையில் இருந்துள்ளனர் எனத் தெரிகிறது. இவர்கள் அணுக் கொள்கையையும், மருத்துவத்தின் அடிப்படைகளையும், பொருண்மையியத்தையும், இயங்கியலையும் உலகுக்கு ஆக்கியளித்த பெருமை உடையவர்கள். இந்த வள்ளுவ அறிவியலே ஒரு காலத்தில் ஆட்சிக் கொள்கையாகவும் விளங்கியது எனத் தெரிகிறது. இதனைப் பழைய வள்ளுவம் எனக் கொள்ளலாம்.

❖ பெருங்கணிப் பதவி வகிப்பவர்களாகவும் வகித்தும், மன்னர்க்குட்பட்ட கருமத் தலைவர்களாகவும் விளங்கிவந்த வள்ளுவர்கள் முதலில் வேத்தியல் விளம்பர அதிகாரிகள் என்ற மட்டத்திற்குத் தாழ்த்தப்பட்டனர். அரசக் குடும்பத்துத் திருமணங்கள், போர் முன்னறிவிப்புகள், விழா ஏற்பாடுகள் ஆகிய மூன்று இன்றியமையாத அறிவிப்புகளைப் பறைசாற்றுபவர்களாகக் (விளம்பர அதிகாரிகளாக) காப்பியங்களில் வள்ளுவர்கள் சித்திரிக்கப்படுவதிலிருந்து இதனை அறியலாம்.

❖ வள்ளுவர்கள் பல்லவ மன்னர்களின் அரச குருக்களாக விளங்கி வந்துள்ளனர். பிற்காலத்தில் நீதித் தலைவர்களாகவும்(சட்டமியற்றும் குழுவிற்குத் தலைவர்களாகவும்) விளங்கி வந்துள்ளனர். சோழராட்சிக் காலத்தில் இடங்கை, வலங்கைச் சச்சரவுகளில் சிக்கி, கோயில் காரியம் பார்ப்பது, புரோகிதம் செய்வது, பிறப்பியம்(சாதகம்) பார்ப்பது என்னும் தொழில்களை மட்டும் செய்யும் நிலைக்குத் தள்ளப்பட்டனர் என அறியமுடிகிறது.

❖ தமிழ்க் கணியர்களான வள்ளுவர்கள் பிற்காலத்தில் ஒதுக்கப்பட்டு, கீழ்ச்சாதியினராகக்கப்பட்ட பிறகும், இவர்களைப் பிராமணர்கள் மதித்து வந்துள்ளனர். பிறப்பியம்(சாதகம்) எழுதுவதற்குச் சென்ற நூற்றாண்டுவரை எல்லாரும் வள்ளுவர்களையே நாடியுள்ளனர். குறிப்பாகப் பிராமணப் பெண்களும் வள்ளுவர்களை நாடி வந்துள்ளனர். சேரலத்தில் நம்பூதிரிப் பிராமணர்களும்கூடத் தங்களின் பிள்ளைகளை வள்ளுவக் கணியரிடமே அனுப்பிவைத்து வானியலையும், கணியத்தையும் கற்கச் செய்துள்ளனர் எனத் தெரிகிறது.

❖ ஆரியப் பிராமணர்கள் தமிழகம் வந்தபோது வள்ளுவர்கள் ஆற்றிய பணிகளைத் தாம் ஆற்றினாலொழிய, தமிழகத்தில் தம் இனம் நிலைபெறாது என்றுணர்ந்து, வள்ளுவர்களின் கலைத் தொழில்களைத் தம்முடையதாக்கிக் கொண்டு, வள்ளுவர்களைப் பலகாலும் பின்னுக்குத் தள்ளி, தாழ்வடையச் செய்துள்ளனர் என்பதை அறிஞர்களின் கருத்துகள் அடிப்படையில் உணரமுடிகிறது.

# 3. வள்ளுவ மக்களின் தொழில்கள்

## 3.1. முன்னுரை

தொழில்கள் நிகழும் வகைகள் விளைவிப்பு, வளர்ப்பு, பிறப்பு, தொகுப்பு, புணர்ப்பு, செய்வு, பிரித்தெடுப்பு, பண்டமாற்று, நிலைமாற்று, காப்பு (மாந்தக்காப்பு, தெய்வக்காப்பு), ஆய்வு, செப்பனீடு, விலக்கு, வாழ்வியல்பு, இன்புறுத்தம், ஆய்வு, அறிவிப்பு, உய்ப்பு, உடலுழைப்பு, அழிப்பு ஆகிய பிரிவுகளைக் கொண்டே அமைகின்றன. "பழந்தமிழ்ச் சமுதாயத்தில் அமைந்த பிரிவுகளெல்லாம் தொழில் காரணமாகத்தான் அமைந்துள்ளன. இச்செய்தொழில் பிரிவுமுறை அச்சமுதாயத்தின் உயர்ந்த நிலையை, நாகரிகத்தின் மேன்மையை வெளிப்படுத்துகிறது"[1]. இச்செய்தொழில் பிரிவுமுறைகள் அனைத்தும் உழைப்பு என்பதை மூலமாகக் கொண்டே அமைகின்றன. உழைப்பு என்பது மூளையையோ, உடலையோ முழுவதுமாகவோ பகுதியாகவோ வருத்தி ஏதோ ஒன்றைப் படைப்பதற்காகச் செய்கின்ற செயலைக் குறிக்கும். ஆனால், அந்தச் செயலிலிருந்து கிடைக்கும் மகிழ்ச்சியை உழைப்பு உள்ளடக்காது"[2] எனப் பொருளியல் பேரறிஞரான மார்சல் உழைப்பிற்கு இலக்கணம் கூறுகிறார். இவ்விலக்கணத்தின்படி உழைப்பு எல்லா வகையான தொழில் திறமைகளையும் உள்ளடக்கும். பழங்காலந்தொட்டே உடலுழைப்பினைச் சார்ந்த தொழிலைச் செய்பவர்கள் தாழ்ந்தோர் என்றும் அறிவுசார்ந்த தொழிலைச் செய்பவர்கள் உயர்ந்தோர் என்றும் கருதும் நிலை காணப்பட்டுவருகிறது. வள்ளுவச் சமூகத்து மக்கள் தொன்றுதொட்டுச் சோதிடம், புரோகிதம், மருத்துவம் ஆகிய அறிவுசார்ந்த தொழில்களைச் செய்து வந்துள்ளனர். கடைக்கழகக் காலம் வரை மிக உயர்ந்த நிலையில் இருந்துவந்த வள்ளுவச் சமூகம் பின்னாளில் தாழ்த்தப்பட்டோராக்கப்பட்ட பின்னர் உடலுழைப்பைச் சார்ந்த தொழில்களையும் செய்து பிழைப்பு நடத்திவரும் நிலை இன்று காணப்படுகிறது.

"மக்களின் வளமான வாழ்விற்கும் வசதிக்கும் பயன்படும் தொழில்கள் அனைத்தும் வாழ்வியல் தொழில்கள் என்னும் பிரிவில் அடங்குவன. எனினும் அவற்றை, 1. கைத்தொழில்கள், 2. நிலஞ்சார் தொழில்கள், 3. கைவினைத்

---

[1]. சி.சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப. 165.

[2]. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி ஐந்து, ப. 342.

தொழில்கள், 4. பிற தொழில்கள், 5. அறிவுசார் தொழில்கள் எனப் பிரித்துக்காணின் தெளிவு பெறும்"[3] என வி.சி. சசிவல்லி குறிப்பிடுகின்றார். இந்த வகையில் வள்ளுவர் சமூகத்து மக்களின் முதன்மைத் தொழில்களான சோதிடம், புரோகிதம், மருத்துவம் ஆகியவற்றை அறிவுசார் தொழிலிலும், உழவுத்தொழில், கால்நடை வளர்ப்பு ஆகியவற்றை நிலஞ்சார் தொழிலிலும், தச்சுத் தொழிலைக் கைத்தொழிலும், தெருக்கூத்தைப் பிறதொழிலும் அடக்கலாம்.

### 3.2. சோதிடமும் சோதிடரும்

வள்ளுவ மக்களின் முதன்மைத் தொழிலாகவும் குலத்தொழிலாகவும் இருந்து வருவது சோதிடக் கலையாகும். இந்தச் சோதிடத்தைப் பற்றிய சிந்தனை மிகப்பழங்காலம் தொட்டே தமிழ்நாட்டில் இருந்து வருகிறது. தமிழ் மன்னர்களால் போற்றிப் பாதுகாத்து வந்த சோதிடக்கலை பனை ஓலைகளில் எழுதப்பட்ட நிலையிலிருந்து இன்று கணிப்பொறி மூலம் கணித்துச் சொல்லுகின்ற அளவிற்கு வளர்ந்துள்ளது.

### 3.2.1. சோதிடம் - சொல்லும் பொருளும்

"சோதி என்பது ஒளி, கிரகணம், தீபம், தீ, சூரியன், நட்சத்திரம் என்னும் பொருள்களையுடையது. சோதிடம் என்பதற்கு நாள், ஓரை, நிமித்தம், பஞ்சாங்கம், சாதகம்"[4] என்னும் பொருள்களைத் தமிழ் லெக்ஸிகன் தருகிறது. சோதிடம் என்பது "வானத்தில் சோதியாய் நமக்குப் புலப்படுகின்ற அண்டங்களால் உண்டாகின்ற நன்மை, தீமைகளைப் பற்றி முன்கூட்டித் தெரிவிப்பது. சோதித்திடப்படுவது, நட்சத்திரங்களின் தூது, நேத்திரமென்னும் கண்ணொளி, அறிவைத் தரும் ஒளி என்ற பல்பொருள்களும் சோதிடம் என்பதற்குச் சுட்டப்பெறுகின்றன"[5] என்று தி. மகாலட்சுமி கருத்துகளை எடுத்துக்காட்டுகின்றார். மேலும், நாராயணீயம் என்பதற்கு வேதங்கள் ஆறனுள் ஒன்றாகிய சோதிட நூலைக் குறிக்கிறது என்பது அவர்தம் கருத்து.

---

[3]. சி. சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப. 38.

[4]. தமிழ் லெக்ஸிகன், தொகுதி மூன்று, பக். 1667 – 1668.

[5]. தி. மகாலட்சுமி, இலக்கியத்தில் சோதிடம், ப. 113.

சோதிடம் என்பது நாள்கோள் நிலைகளை அடிப்படையாகக் கொண்டு அவற்றால் ஏற்படக்கூடிய இன்ப துன்பங்களை முற்படக் கணித்துக் கூறுவதாகும். இது ஒரு கலைத் தொழிலாகப் பழங்காலந் தொட்டு வளர்ந்து வந்திருக்கின்றது. ''சோதிடத்தைப் பண்டைத் தமிழர் கணியம் என்றும், சோதிடத் தொழில் புரிந்தாரைக் கணியர் என்றும் அழைத்தனர். கணியன் என்றால் நாள்கோள் நிலைகளைக் கொண்டு வருங்கால நன்மை, தீமைகளைக் கணிப்பவன் என்பது பொருள்''[6].

தமிழிலக்கியங்களில் சோதிடம் என்ற சொல்லாட்சி முதலில் நாலடியாரில் காணப்படுகின்றது.

*''சத்தமும் சோதிடமும் என்று ஆங்கு இவைபிதற்றும்*
*பித்தரின் பேதையார் இல்''*[7]

என்ற தொடருள் இச்சொல் காணப்படுகிறது.

''சோதனஞ் சோதிட நிமித்தஞ் சொல்லே''[8] என்ற பிங்கல நூற்பா நிமித்தத்திற்குச் சோதனம், சோதிடம் என்னும் பெயர்கள் இருத்தலை உணர்த்துகின்றது. சிலப்பதிகாரத்தில் ஐம்பெருங் குழுவில் ஒருவராய் உள்ள நிமித்தகரைச் சோதிடர் என்று அரும்பத உரைகாரர் குறித்துள்ளார். நிமித்தம் அறிந்து பலன் கூறுபவர் நிமித்தகராவர். அந்நிமித்தகரே சோதிடராகவும் கருதப்பட்டுள்ளார். பிங்கல நிகண்டு நூற்பாவின் கருத்துப்படி நிமித்தங்களைச் சோதித்துப் பலன் கூறுபவர் சோதிடராவர் என்கிற கருத்துப் பெறப்படுகிறது. இக்கருத்தின்வழி, சோதிடம் என்ற சொல்லிற்குச் சோதித்து அறிதல் என்ற பொருளும் இருப்பதாகக் கருதலாம். பல்வேறு வகையில் காலங்களையும், கோள்களையும், நட்சத்திரங்களையும் சோதித்து அறியும் துறைக்குச் 'சோதிடம்' என்ற பெயர் ஏற்பட்டிருக்க வேண்டுமென்று கொள்ளலாம்.

---

[6]. சி. சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப. 191.

[7]. நாலடியார். 6, துறவு. 2.

[8]. பிங்கல நிகண்டு, ஏழாவது பண்பிற் செயலின் பகுதி வகை, நூ. 85.

### 3.2.2. சோதிடர்

சோதிடரைக் குறிக்கின்ற பல சொற்கள் பிற்கால இலக்கியங்களில் வழங்கப்பட்டு வந்தாலும் அறிவன், கணி எனும் சொற்களே காலத்தால் முற்பட்டவையாகும். தொல்காப்பியத்தில் அறிவன் என்ற சொல்லே சோதிடரைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டுள்ளது. அறிவன் என்பது கணியனை என்பது இளம்பூரணர் உரையிலிருந்துப் பெறப்படுகிறது. ‘‘ஐந்திரத்தை (பஞ்சாங்கத்தை)ப் பார்த்து அன்றைய நாள், கோள் நிலைகளைக் கணித்துச் சொல்பவர் என்று பொருள்படும் பார்ப்பார் என்ற பெயர் முதலில் வள்ளுவக் கணியரை மட்டுமே குறித்தது. காலப் போக்கில் அப்பொருள் திரிந்து அது சாதி வருண ஒழுகலாறுகளையும், சாங்கியங்களையும் சூட்டிக்கொண்ட ஒரு வகுப்புப் பெயராகியது’’[9] என்று வெங்காலூர் குணா அவர்கள் குறிப்பிடுவதிலிருந்து சோதிடத் தொழிலைச் செய்து வந்த வள்ளுவர்களுக்குரிய ‘பார்ப்பார்’ என்ற பெயர் இன்று வேறொரு சமூகத்தினைக் குறிப்பதைக் காணமுடிகிறது. ‘‘தொன்று தொட்டு கணியத் தொழிலைச் செய்து வரும் தமிழ் வகுப்பான் வள்ளுவன். வள் - கூர்மை, வள்ளுவன் கூர்மதியன். ஆரியக்குலப் பிரிவால் அவன் தாழ்த்தப்பட்டு பேரிடங்களிற் பிழைப்பிழந்தான்’’[10] எனத் தேவநேயப் பாவாணர் குறிப்பிடுவது இக்கருத்திற்குத் துணை செய்தமைகிறது.

### 3.2.3. சோதிடத்திற்கு வழங்கப்பெறும் பெயர்கள்

பழந்தமிழ் இலக்கியங்களில் அறிவன், கணியன், பெருங்கணி, ஐந்து கேள்வி அமைந்தோன், நிமித்தகர், காலக்கணிதர், விருச்சிகன், சோதிடர், உய்த்துணர்வோர், புரிநூல் உத்தமர், வள்ளுவர், பஞ்சாங்கக்காரர், தந்திரி என்னும் பெயர்களனைத்தும் சோதிடர்களைக் குறிப்பனவாகவே காணப்படுகின்றன. நிமித்தகன் என்ற சொல்லுக்கு வள்ளுவன், கணக்கன், காவிதியார் என்றெல்லாம் சூடாமணி நிகண்டு பொருள் தருகிறது. சோதிடரைக் குறிக்கின்ற இப்பெயர்களனைத்தும் சோதிடர்களாக விளங்கிய வள்ளுவச் சமூகத்தவர்களுக்குரியவை என்றும் கொள்ளலாம். ‘‘கணியத் தொழிலை மேற்கொண்ட வள்ளுவ மக்கள் வள்ளுவக் கணியான்

---

[9]. குணா, வள்ளுவத்தின் வீழ்ச்சி, ப. 273.

[10]. ஞா. தேவநேயப் பாவாணர், தமிழர் வரலாறு, ப. 269.

என்றழைக்கப்பட்டிருக்கின்றனர். பின்னர் வள்ளுவர் என்று சொன்னாலே சோதிடர் என்னும் பொருளுணர்த்தும் சிறப்புத் தகுதியைப் பெற்றிருக்கின்றனர். எனவே, வள்ளுவக் கணியான் என்பதில் கணியான் மறைந்து வள்ளுவர் என்பவர் சோதிடர் என மாறியுள்ளது''[11] என்று முனைவர் தி. மகாலட்சுமி அவர்கள் குறிப்பிடுவது மேற்கண்ட கருத்திற்குத் துணையாகிறது.

### 3.2.4. சோதிடருக்குரிய சிறப்புகள்

சங்ககால அரசவையில் இன்றியமையாத அலுவலர்களில் சோதிடரும் ஒருவராவர். நல்லோரைகளிலும், நற்சகுணங்களிலும் ஆழ்ந்த நம்பிக்கை இருந்தமையால் அரசர்கள் சோதிடர்களைத் தங்களது அவையில் நிரந்தரமாக வைத்திருந்தனர். சோதிடரைக் 'கணி' என்றும் தலைமைச் சோதிடரைப் 'பெருங்கணி' என்றும் கூறினர். அரச காரியங்களைச் செய்வதற்குப் பொருத்தமான காலத்தைக் கணித்துக் கூறுதல் இவர்களது பணியாக இருந்தது. இக்கணியர்கள் குறித்த நாளும் நல்லோரைகளும் அரசர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டன. அதற்கேற்ப அரசர்கள் செயலாற்றினர்.

*''ஆசான் பெருங்கணி அறக்களத்தந்தணர்*
*காவிதி மந்திரக் கணக்கர் தம்மொடு''*[12]

எனும் சிலப்பதிகார வரிகள் அரசனைச் சுற்றியிருக்கும் ஐவரைக் குறிக்கின்றது. இந்த ஐவரின் ஆலோசனைப்படி அரசன் இயங்குவான். இதில் சோதிடரும் ஒருவராவர் என்ற வழி அவரின் சிறப்பு அறியப்படுகிறது.

பெருங்கணி அரசருக்கு நிகராகக் கருதப்பட்டார். அவருக்கு குடை, சேனை, யானை போன்ற பிற சிறப்புகளும் வழங்கப்பட்டன. அவர் அரசவையில் செருப்புடன் செல்ல அனுமதிக்கப்பட்டார் என்று பெருங்கதை குறிப்பிடுகின்றது.

''………… …………… ……………
*யலகை வேந்தர் குலகங் கொண்ட*
*வொழுக்க நுனித்த வழுக்கா மரபிற்*
*புணர்பியல் காட்சியன் புரையோர் புகழ*

[11]. தி. மகாலட்சுமி, இலக்கியத்தில் சோதிடம், ப. 129.

[12]. சிலப்பதிகாரம். 22, அழற்படுகாதை. 8-9.

*நிழற்பெருங் குடையுநேரா சனமுஞ்*

*செருப்பொடு புகுதலுஞ் சேனை யெழுச்சியும்*

*யானையுந் தானையு மேனையு பிறவு*

*………. …………… …………. ……..*

*………. …………… …………. ……..*

*தரும்பரி சாரத்துப் பெருங்கணி வகுத்த''*[13]

இவை சோதிடருக்குரிய சிறப்புகளை உணர்த்துபவையாக அமைந்துள்ளன.

### 3.2.5. சோதிடருக்குரிய இலக்கணம்

பவணந்தி முனிவர் நன்னூலில் ஆசிரியர், மாணாக்கர் இலக்கணம் குறிப்பிட்டுள்ளதைப் போன்று தமிழிலக்கண இலக்கியங்களில் சோதிடர்களுக்குரிய இலக்கணம் இருப்பதாக அறிய இயலவில்லை. ஒரு சில சோதிட நூல்களில் மட்டும் அவர்களுக்குரிய இலக்கணங்கள் இருப்பதாக அறியமுடிகிறது. 'ஜாதக சாகசம்' என்ற சோதிட நூல் 'சோதிடன் இலக்கணம்' என்ற ஒன்றைக் குறித்துள்ளது.

*''சத்தியமுந் தயையடக்க மன்பீகை யாதியென தழைத்தி லங்குஞ்*

*சாந்தகுண முடன்தெய்வ பக்திமிகுந் திளமைமுதற் சார்ந்து நன்கு*

*சித்தாந்தஞ் சாதகநன் முகூர்த்தமெனு முப்பிரிவாய்த் திகழா நின்ற*

*செய்சோ திடக்கலைகள் பலவோதி யுணர்ந்தறிவிற் றேந்து*

*மேலாம்*

*இயல்கிரக புடத்துடனே பாவபுடங் கிரகபெல மிவய னைத்துஞ்*

*சித்தமலை விலாதியற்றுந் திறனுடையோன் எவனவனே சிறப்பின்*

*மிக்கச்*

*சீரிய சோதிடப் புலவனென வுரைத்தார் பெரியோர்கள்*

*செகத்திலம்மா''*[14]

---

[13]. பெருங்கதை. 2, இலாவாண காண்டம். 2, கடிக்கலம்பலை. 15 – 24.

[14]. வ.கு. வேலு நாயக்கர், சாதக சாகரம் (மூலமும் உரையும்), பாயிரம், பா.12.

### 3.2.6. கணிதச் சோதிடம்

வள்ளுவச் சமூகத்து மக்கள் கணிதச் சோதிடத்தையே தங்களின் குலத்தொழிலாகக் கொண்டுள்ளனர். இதனைத் தங்கள் சமூகத்தின் முதன்மைத் தொழிலாகவும் கருதுகின்றனர். பழங்காலம் முதற்கொண்டே பல தலைமுறைகளாக வழிவழிச் சோதிடத் தொழிலைச் செய்து வருவதால் 'பாரம்பரியச் சோதிடர்' என்று தங்களைக் கூறிக்கொள்வதில் பெருமிதம் கொள்பவர்களாகக் காணப்படுகின்றனர். கணிதச் சோதிடம் என்பது ஒருவருடைய பிறந்த நேரத்தை, கணிதச் சோதிடம் கூறும் கணித விதிகளின் அடிப்படையில் கணக்கீடு செய்து அவருக்குரிய இராசி, இலக்கினம், நட்சத்திரம் இவற்றைக் கணித்துக் கண்டறிந்து அவற்றுக்குரிய கிரகப் பலன்களை ஆராய்ந்து பலன் கூறுவதாகும். இதனை ஆய்வெல்லைக்குட்பட்ட பகுதிகளில் மக்கள் 'சாதகம் பார்த்தல்', 'குறிப்புப் (குறுப்பு) பார்த்தல்', 'சாதகக் குறிப்புப் பார்த்தல்' என்னும் சொல்லாடல்களால் குறிப்பிடுகின்றனர். பிறந்த காலக் குறிப்பைக் கொண்டு சாதகம் கூறுவதால் இச்சொல் வழக்கு வந்திருக்கலாம் என்று கருதலாம். சோதிடத் துறையுள் சாதகம் என்பது ஒரு குறிப்பிட்ட நாளில், குறிப்பிட்ட காலத்தில் குழந்தை பிறந்தபோது வானில் உள்ள கோள்களைக் காட்டும் விதத்தில் எழுதப்படும் ஒரு வரைபடம் எனக் கொள்ளலாம். இவ்வரைபடத்தை ஆங்கிலத்தில் 'Horoscope' என்றழைப்பர். "Horoscope என்பதற்கு A chart showing the planetary positions at the time of Birth of a person - ஜாதகம்"[15] என ஆங்கில அகராதி பொருள் கூறுகிறது.

#### 3.2.6.1. சாதகம் : சொல்லும் பொருளும்

சாதகம், ஜாதகம், சாதி ஆகியவை வடமொழிச் சொற்களாகும். இச்சொற்கள் 'ஜாத்' என்ற சொல்லின் அடியாகப் பிறந்தவையாகக் கருதலாம். ஜாத் என்பதற்கு வடமொழியாளர் 'பிறப்பு' என்று பொருள் கொள்வர். 'ஜாதிஸ் சாமான்ய ஜென்மநொ' என்ற வடமொழிச் சுலோகம் சாதி என்கிற சொல் பசு முதலான சாமான்ய சாதிகளுக்கும் பிறப்புக்கும் பெயராக வருமென்கிற கருத்தைக் குறிப்பால் உணர்த்துகின்றது. ஆகையால் ஜாத் என்ற சொல்லிலிருந்து சாதகம், ஜாதகம், சாதி முதலான சொற்கள் தோன்றி

[15]. Mega Lifco Dictionary, Eng – Eng – Tamil, p.546.

இருக்கலாம் எனக் கருதமுடிகிறது. காலப்போக்கில் இச்சொற்கள் ‘பிறப்பு’ என்ற பொருளை உணர்த்தத் தொடங்கின.

*“பூதமும் வானம் பாடிப் புள்ளுஞ்*
*சாதகமென்பர் சனனமு மதற்கே”*[16]

என்னும் பிங்கல நூற்பா சாதகம் என்பதற்குப் ‘பிறப்பு’ என்னும் பொருளைக் குறித்துள்ளது. சாதகம் என்னும் சொல் பழைய இலக்கண இலக்கியங்களில் காணப்படவில்லை. இச்சொல்லிற்குப் பதிலாகப் பிறப்பு, ஈனுதல், பயத்தல் ஆகிய சொற்கள் காணப்படுகின்றன.

### 3.2.6.2. வள்ளுவர்கள் சாதகம் கணிக்கும் முறை

வள்ளுவக் கணியர்கள் சாதகங்களைக் கணிக்கக் காலத்தை நாழிகை, விநாடி என்ற முறையிலேயே கணக்கிடுகின்றனர். இவர்கள் ஒரு நிமிடத்திற்கு இரண்டரை விநாடி என்றும் அறுபது விநாடிகளைக் கொண்டது ஒரு நாழிகை என்றும், ஒரு மணி நேரத்திற்கு இரண்டரை நாழிகைகள் என்றும் கால வரையறை செய்யப்பட்ட முறையைப் பயன்படுத்திக் கணக்கிடுகின்றனர்.

### 3.2.6.3. வள்ளுவர்கள் பயன்படுத்தும் பஞ்சாங்கம்

வள்ளுவக் கணியர்கள் சாதகம் கணிப்பதற்கு மூலநூலான பஞ்சாங்கத்தை பயன்படுத்துகின்றனர். பஞ்சாங்கம் இல்லையென்றால் சாதகம் கணிக்க இயலாது. வானில் விளங்கும் சூரியன், சந்திரன் முதலான கோள்களின் நிலைகளை வானியல் கணித விதிகளின்படிக் கணித்துத் தரும் நூலிற்குப் ‘பஞ்சாங்கம்’ என்று பெயர். பஞ்சாங்கங்களில் திருக்கணிதப் பஞ்சாங்கம், வாக்கியக் கணிதப் பஞ்சாங்கம் என இருவகை உண்டு. இரு பஞ்சாங்கங்களிலும் நட்சத்திரம், கோள்நிலை ஆகியவற்றில் சிறு மாறுதல்கள் காணப்படும். எனினும் அடிப்படையில் மாறுதல்கள் இல்லை. கள ஆய்வுப் பகுதிகளில் வள்ளுவக் கணியர்கள் சோதிடம் கணிப்பதற்கும் பார்ப்பதற்கும் 1.சேலம் ஜோதிஷம் (அசல்) நம்பெருமாளய்யர் சர்வ முகூர்த்த நிர்ணயவாக்கியப் பஞ்சாங்கம், 2. ஆர்க்காடு கா.வெ. சீத்தாராமய்யர் சர்வ முகூர்த்த பஞ்சாங்கம், 3. மனோன்மணி விலாசம் அசல் 28ம் நெம்பர் சுத்த வாக்கிய பஞ்சாங்கம் (அல்லது) பாம்பு பஞ்சாங்கம்

[16]. பிங்கல நிகண்டு, பத்தாவது ஒருசொற் பொருள் வகை, நூ. 462.

ஆகியவற்றையே பயன்படுத்துகின்றனர். பஞ்சாங்கத்தைத் தேர்ந்தெடுப்பதில் வள்ளுவக் கணியர்கள் தத்தமது விருப்பப்படியும், அனுபவங்களின்படியும் செயல்படுகின்றனர்.

சாதகர் பிறந்த நேரத்தையும் அன்றைய சூரிய உதயாதி நேரத்தையும் (நாழிகையையும்) கணக்கிட்டுச் சாதகரின் செனன நாழியைக் கணிக்கின்றனர். செனன நாழிகையை வைத்தும், பன்னிரெண்டு இராசிகளுக்குரிய நாழிகைகளை வைத்தும் கணக்கிட்டுச் சாதகரின் சென்ம இலக்கினத்தை கணிக்கின்றனர். பின்னர் சென்ம இலக்கினத்தின் அடிப்படையில் கருவினில் சென்றது, நின்றதைச் கணிக்கின்றனர். இதனைச் 'சென்றது', 'நின்றது' என்று கூறுவர். அதன்பின் சாதகரின் ஆதியந்தம், பரமநாழிகை கணக்கிடப்பட்டு அதிலும் சென்றது, நின்றது கணிக்கப்படுகின்றன. அதனடிப்படையில் திசா புத்தியும், சென்ம நட்சத்திரமும் கண்டறியப்பட்டுச் சாதகரின் கிரகநிலையின் உச்சம், நீச்சம், பகை, ஆட்சி இவற்றைக் கணித்துக் கிரகத்தின் பலனைக் கூறுகின்றனர். இதனைப் 'பலன் கூறுதல்' என்று குறிப்பிடுகின்றனர். இந்த கிரகப் பலன்களில்தான் ஒரு சாதகரின் முக்காலத்தையும் பலன்களையும் அறியமுடிகிறது. இதுவே சோதிடத் துறையுள் சாதகம் அல்லது பிறப்பியம் பார்ப்பதாகும்.

### 3.2.6.4. சோதிட நூல்கள்

சாதகப் பலன்களைக் கூறும் பல்வேறு சோதிட நூல்கள் இருந்துள்ளன. அவை:

1. உத்திர காலாமிர்தம்
2. காலச் சக்கரம்
3. சந்திர காவியம்
4. சாதக சிந்தாமணி
5. சாதக சாகரம்
6. சாதக அலங்காரம்
7. சாராவளி

8. சினேந்திர மாலை

9. சூடாமணி உள்ளமுடையான்

10. சோதிட கிரக சிந்தாமணி என்னும் பெரிய வருசாதி நூல்

11. சோதிட பூபால சாத்திரம்

12. சோதிடக் களஞ்சியம்

13. சோதிட தரங்கினி

14. தாண்டவ மாலை

15. பஞ்சபட்சி சாத்திரம்

16. பாலதீபிகை

17. வராகர் ஓரா சாத்திரம்

18. வீமேசுர உள்ளமுடையான்

19. ஹோரா சாத்திரம்

ஆய்வெல்லைக்குட்பட்ட பகுதிகளில் சோதிடம் பார்க்கும் வள்ளுவச் சோதிடர்களின் பயன்பாட்டில் சாதக சாகரம், சாதக அலங்காரம், சோதிட கிரக சிந்தாமணி என்னும் பெரிய வருசாதி நூல், பஞ்சபட்சி சாத்திரம் ஆகிய சோதிட நூல்களே காணப்படுகின்றன. அதிகமாக வள்ளுவ மக்கள் படித்துப் பயன்பாட்டில் இருப்பவை சாதக அலங்காரம். பெரிய வருசாதி நூல் ஆகியனவாகும். இவை இரண்டினையும் சோதிடம் கற்றுத்தரும், கற்றுக்கொள்ளும் வள்ளுவ மக்கள் இன்றளவும் பயன்படுத்துகின்றனர். சாதக அலங்காரத்தைக் கற்றுணர்ந்த வள்ளுவச் சோதிடர்களே அதிகம் காணப்படுகின்றனர்.

### 3.2.6.5. வள்ளுவர்கள் பார்க்கும் சாதக வகைப்பாடுகள்

வள்ளுவக் கணியர்களிடம் பழங்காலம் முதற்கொண்டே மனிதர்கள் நீங்கலாக உள்ள ஏனையவற்றிற்காகவும் சாதகம் பார்த்து வந்துள்ளனர். பிறந்த குழந்தைக்குச் சாதகம் பார்ப்பதைப் போல் ஈன்ற கன்றிற்கும் சாதகம் பார்க்கும் வழக்காறு ஆய்வெல்லைக்குட்பட்ட பகுதிகளில் இருந்துள்ளது. மனிதர்களுக்குப்

பார்க்கும் சாதகம் ‘யோனி சாதகம்’ என்றும் மனிதர்கள் நீங்கலாக உள்ளவற்றிற்குப் பார்க்கும் சாதகம் ‘வியோனி சாதகம்’ என்றும் அறியமுடிகிறது. தற்போது மனிதர்களுக்கு மட்டுமே சாதகம் பார்ப்பதென்பது நடைமுறையில் காணப்படுகிறது.

வள்ளுவச் சோதிடர்கள் நான்கு வகையான சாதகங்களைப் பார்க்கின்றனர். அவை, 1. பிறப்புச் சாதகம் அல்லது செனன சாதகம், 2. இருது சாதகம், 3. கல்யாண சாதகம் அல்லது திருமணப் பொருத்தம், 4. பெயர் இராசிச் சாதகம் என்பனவாகும்.

### 3.2.6.6. பிறப்புச் சாதகம்

ஆண், பெண் குழந்தைகள் பிறந்த காலத்தைக் கொண்டு கணக்கிட்டுக் கணித்துப் பலன் கூறப்படும் சாதகம் பிறப்புச் சாதகம் எனப்படும். ஆண்களுக்கு இறுதி வரையிலும் பிறப்புச் சாதகம் மட்டுமே பார்க்கப்படுகிறது. இது அன்று முதல் இன்று வரையில் உள்ள நடைமுறை வழக்கமாகக் கள ஆய்வின்போது அறியப்படுகிறது.

### 3.2.6.7. ருது சாதகம்

இது பெண்களுக்கு மட்டுமே உரியதாகும். பெண்களுக்குப் பிறப்பைக் கொண்டு சாதகம் கணிக்கப்படுவதைப் போன்று பெண் இருதுவான நாள், நேரம் கொண்டு கணித்து அவற்றிற்குரிய நட்சத்திரம், திதி, யோகம், கரணம், இலக்கினம் இவற்றைக் கொண்டு பலன் கூறுகின்றனர். பெண்களுக்குச் (பிறப்புச் சாதகம்) செனன சாதகத்தைவிட இருது சாதகமே மிக முக்கியம் என்பதில் அதிக நம்பிக்கை உடையவர்களாகக் கடலூர் மாவட்ட மக்கள் காணப்படுகின்றனர்.

### 3.2.6.8. கல்யாணச் சாதகம் அல்லது திருமணப் பொருத்தம்

ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் திருமணம் செய்ய வேண்டுமெனின் கல்யாணச் சாதகம் பார்க்கப்படுகிறது. இதனைக் ‘கல்யாண ஜோசியம்’, ‘திருமணப் பொருத்தம்’ என்றும் அழைக்கின்றனர். இது ஆணுக்கும் பெண்ணிற்கும் உள்ள பத்துப் பொருத்தங்களைப் பார்ப்பதாகும். அவைகளாவன:

1. தினப் பொருத்தம்
2. கணப் பொருத்தம்
3. மகேந்திரப் பொருத்தம்
4. ஸ்திரீ தீர்க்கப் பொருத்தம்
5. யோனிப் பொருத்தம்
6. இராசிப் பொருத்தம்
7. இராசி அதிபதிப் பொருத்தம்
8. வசியப் பொருத்தம்
9. ரஜ்ஜூப் பொருத்தம்
10. நாடிப் பொருத்தம்

இந்தப் பத்துப் பொருத்தங்களையும் வள்ளுவச் சோதிடர்கள் ஆணின் செனன சாதகத்தையும், பெண்ணின் இருது சாதகத்தையும் அடிப்படையாகக் கொண்டு பார்க்கின்றனர். பெண்ணிற்கு இருது சாதகம் இல்லா நிலையில் செனன சாதகம் கொண்டு பார்க்கப்படுகிறது. பத்துப் பொருத்தங்களில் ஆறு பொருத்தம் இருந்தாலே திருமணம் செய்யலாம் என நம்புகின்றனர். ஒருவருக்குச் சாதகம் இருந்து மற்றொருவருக்குச் சாதகம் இல்லா நிலையில் திருமணப் பொருத்தம் பார்ப்பதில்லை.

வள்ளுவச் சமூகத்தில் உள்ள சிலர் சோதிட மேதைகள் பெண்ணின் இருது சாதகத்திற்கும், ஆணின் செனன சாதகத்திற்கும் திருமணப் பொருத்தம் பார்ப்பது சரியானதல்ல; இருவரின் செனன சாதகத்தின் அடிப்படையில் பார்க்கும் திருமணப் பொருத்தமே சரியானது என்றும் கூறுகின்றனர்.

### 3.2.6.9. பெயர், இராசி பார்த்தல்

செனன சாதகம் எழுதி வைக்காதவர்கள் அல்லது பிறந்த குறிப்பினை எழுதிவைக்காதவர்கள் வள்ளுவச் சோதிடர்களிடம் வந்து சாதகம் பார்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டால் அவர்களின் பெயர், இராசியை வைத்துப் பலன் கூறுகின்றனர். இவர்களுக்குச் சோதிடத்துறையுள் தோய்ந்த அனுபவம்

உள்ளதால் ஒரு பெயரின் முதல் எழுத்தினை வைத்து அவ்வெழுத்திற்குரிய இராசி, இலக்கினம், நட்சத்திரம் இவற்றை மனப்பாடமாக விரல் நுனியில் வைத்துள்ள இவர்கள் இவற்றினடிப்படையில் சாதகப் பலன் கூறுகின்றனர். இதற்கு, 'பெயர் இராசி பார்த்தல்' என்று பெயர். சாதகக் குறிப்பு இல்லாதவர்களுக்கும் பெயர் இராசியை வைத்தே திருமணப் பொருத்தம் பார்ப்பதுண்டு. இந்தப் பெயர் இராசி பார்த்தல் மூலம் கூறப்படும் சாதகப் பலன் சரியாக இருக்கும் என்றாலும் மிகத் துல்லியமாக இருக்காது என வள்ளுவச் சோதிடர்கள் கூறுகின்றனர். இதனை 'நட்ட சாதகம்' என்று கூறும் வழக்காறும் உண்டு. இதற்கான குறிப்பு வராகர் ஓரா சாத்திரம், சாராவளி ஆகிய சோதிட நூல்களில் முறையே இருபத்து நான்காவது, ஐம்பத்தோராவது அத்தியாயங்களில் காணப்படுகிறது.

### 3.2.6.10. வள்ளுவர்கள் சாதகம் எழுதும் முறை

"பிள்ளைத்தமிழ், கலம்பகம், உலா, பரணி, மடல், ஆற்றுப்படை முதலிய இலக்கிய வகைகள் போன்று சாதகத்தையும் ஒருவகை இலக்கியமாகப் பன்னிருபாட்டியல் குறித்துள்ளது"[17]. "ஆண்டு, திங்கள், பக்கம், கோள் ஆகியவற்றின் துணைகொண்டு 'சாதகம்' எழுத வேண்டுமெனப் பெருங்கதை குறிப்பிட்டு அவ்வாறு எழுதும் முறைக்குச் 'சாதகப்பட்டிகை' என்ற பெயரையும் குறித்துள்ளது"[18]. இவற்றைக் கருத்தில் கொண்டால் தமிழர்கள் சாதகம் எழுதுதலை ஓர் இலக்கிய வடிவமாகக் கொண்டிருந்தனர் எனக் கருத முடிகிறது.

வள்ளுவர்கள் தொன்றுதொட்டுச் சாதகம் பார்ப்பது, சாதகம் கணித்து எழுதித் தருவது என்னும் இரண்டினையும் செய்து வருகின்றனர். இவர்கள்

---

[17]. *"மேதகு சாதகம் பிள்ளைப் பாட்டே*

*………. …………. ………. ………*

*………. …………. ……… ……….*

*இடன்அறி புலவர் இயம்பினர் இனமே"* (பன்னிரு பாட்டியல், இனவியல், நூ. 99).

[18]. *"சாதகப் பட்டிகை சாலவை நாப்ப*

*ணரும்பொறி நெறியி னாற்ற வமைத்த*

*பெருங்கணிக் குழுவுக்குப் பெறுதற் கொத்த*

*வீரெண் கிரிசை யியல்புளி நடாஅ"* (பெருங்கதை. 5, நரவாண காண்டம், பா. 82-85).

பழங்காலம் முதற்கொண்டு சாதகம் எழுதுவதற்குப் பனையோலைகளாலான ஓலைச் சுவடிகளையே பயன்படுத்தி வந்தனர். பனையோலைகளில் குருத்தோலைக்கும், முற்றிய ஓலைக்கும் இடைப்பட்ட இளம் ஓலையை வெட்டி அவற்றை இதமான வெய்யிலில் உலர்த்தி ஓர் அடி, முக்கால் அடி, அரையடி எனத் தேவைக்கேற்ப வெட்டிப் பயன்படுத்துவர். நடுவில் எழுத்தாணியால் துளையிட்டு எழுத்தாணி கொண்டு எழுதுவர். எழுதியதும் மஞ்சள் பூசித் துளை வழியே கயிற்றினைக் கொண்டு கட்டி வைப்பர்.

‘‘வள்ளுவர்கள் சோதிடம் பார்ப்பதோடு சாதகம் எழுதிக் கொடுப்பதையும் செய்கின்றனர். ஒருசிலர் இன்றும் பனை ஓலையில் சாதகம் எழுதிக் கொடுக்கின்றனர். பனை ஓலையைத் தேவையான அளவு வெட்டிப் பயன்படுத்தி எழுத்தாணி கொண்டு எழுதி மஞ்சள் பூசி நூல் கொண்டு கோர்த்துக் கட்டிக் கொடுப்பர்’’[19] என்ற செய்தி மேற்கண்ட கருத்திற்குத் துணை செய்கிறது.

‘‘ஏட்டுச் சுவடிகளுக்குக் குறிப்பிட்ட அளவு என ஒன்றும் இல்லை. வெவ்வேறு அளவில் அவை இருக்கும். சுவடிகளில் ஒற்றைத் துவாரம் இருக்கும். ஒருநூல் கயிற்றைக் கிளிமூக்கு என்ற ஒன்றில் முடித்துச் சுவடியின் துவாரத்தின் வழியே செலுத்தி அதைக் கட்டுவார்கள். பனையோலையை நரம்போடு சேர்த்துச் சிறுசிறு துண்டுகளாக நறுக்கிக் கிளிமூக்குகளாக உபயோகப்படுத்துவார்கள்’’[20] என உ.வே.சாமிநாதய்யரின் குறிப்பிலிருந்து வள்ளுவர்களின் ஓலைச் சுவடிகள் தயாரிப்பினை அறிந்துகொள்ள முடிகிறது.

‘‘ஓலை வாரவும், சுவடி சேர்க்கவும், நன்றாக எழுதவும் தெரிந்து கொள்வதற்குப் பல நாளாகும். சுவடியைப் பிரித்து ஒழுங்காகக் கட்டுவதற்குக் கூட பழக்கம் வேண்டும்’’[21] என்று உ.வே.சாமிநாதய்யர் கூறுகின்றார். வள்ளுவர்கள் இதில் மிகுந்த அனுபவமுடையவர்களாகவே காணப்படுகின்றனர்.

### 3.2.6.11. வள்ளுவர்கள் ஏடெழுதும் முறை

---

[19]. சீ. பக்தவத்சல பாரதி (பதி.ஆ), தமிழகத்தில் நாடோடிகள் சங்க காலம் முதல் சமகாலம் வரை, ப. 263.

[20]. உ.வே. சாமிநாதய்யர், என் சரித்திரம், ப. 55.

[21]. மேலது, ப. 55.

வள்ளுவர்கள் இடக்கையில் ஓலையை (ஏட்டினை)ப் பிடித்துக் கொண்டு, அதாவது ஆள்காட்டி விரலின் மீது ஏட்டை வைத்து அதன்மீது இடக்கைப் பெருவிரலை வைத்துப் பிடித்துக் கொண்டு எழுதுவார்கள். எழுதும்பொழுது இடக்கைப் பெருவிரலின் நகத்தின் நுனிப் பகுதியில் பிறை போன்ற பள்ளம் செய்து வைத்திருப்பர். எழுத்தாணியை அப்பள்ளத்தில் வைத்தே எழுதுகின்றனர்.

“எழுதுபவர்கள் எழுத்தாணியை வலக்கையில் பிடித்துக் கொண்டு இடக்கையால் ஏட்டைப் பிடித்திருப்பார்கள். எழுதும்பொழுது இடக்கைப் பெருவிரல் நகத்தில் சிறிதளவு பள்ளஞ் செய்து அந்த இடத்தில் எழுத்தாணியைச் சார்த்திக் கொண்டு எழுதுவார்கள்”[22] என்று உ.வே.சாமிநாதய்யர் கூறுவதிலிருந்தும் வள்ளுவர்கள் ஏடெழுதும் முறையை அறிய முடிகிறது.

### 3.2.6.12. வள்ளுவர்கள் பயன்படுத்தும் எழுத்தாணிகள்

ஏட்டின் ஒரே பக்கத்தில் மிக நுண்ணிய எழுத்துகளாக இருபது, முப்பது வரிகள் வரையில் எழுதுவதற்குரிய எழுத்தாணிகள் இருந்துள்ளதாக வள்ளுவர்கள் கூறுகின்றனர். வள்ளுவர்கள் பனை ஓலையும், தாலிப் பனையோலையும் ஏடெழுதப் பயன்படுத்தியுள்ளனர். இருபது, முப்பது வரிகளை அவர்கள் அகன்று காணப்படும் தாலிப்பனையின் ஓலையிலேயே எழுதி இருக்க முடியும். பனையோலையில் எழுதுவதென்பது இயலாததாகும். குண்டு எழுத்தாணி, வார் எழுத்தாணி, மடக்கு எழுத்தாணி எனப் பல்வேறு எழுத்தாணிகளை வள்ளுவர்கள் பயன்படுத்தியுள்ளனர். வார் எழுத்தாணிக்கு பனை ஓலையினாலே உறை செய்து அதற்குள் செருகி வைப்பார்கள். மடக்கு எழுத்தாணிக்குப் பிடி இருக்கும். அதனை மடக்கிக் கொள்ளலாம். அந்தப் பிடி மரத்தினாலோ அல்லது மான் கொம்பினாலோ செய்யப்பட்டிருக்கும்.

### 3.2.6.13. ஏடுகள் விளங்குதல்

ஏட்டினில் எழுதி வைக்கும் சாதகம் நாளடைவில் கண்களுக்குச் சரிவர தெரியாமல் போகும் நிலையும் உண்டு. ஏடுகளில் உள்ள எழுத்துகள் நன்கு விளக்கமாகத் தெரிய வேண்டி வள்ளுவர்கள் தாங்கள் தயாரித்து வைத்துள்ள

[22]. உ.வே. சாமிநாதய்யர், நல்லுரைக் கோவை, தொகுதி – 1, பக். 143 – 144.

ஒரு மையினை ஏட்டின் மீது தடவிப் பின்னர் வாசிக்கின்றனர். வள்ளுவர்கள் சோதிடர்களாக மட்டுமல்லாமல் நாட்டுப்புற மருத்துவர்களாகவும் தொன்று தொட்டு இருந்து வருவதால் இவர்கள் தயாரிக்கும் இந்த மையானது மருத்துவக் குணம் உடையதாகக் காணப்படுகிறது. இந்த மை மஞ்சள், வசம்பு, மாவிலை, தர்ப்பைப் புல் இவற்றைச் சுட்டுச் செய்த கரியில் மணித்தக்காளி இலைச்சாறு அல்லது ஊமத்தை இலைச்சாறு விட்டு குழைத்துச் செய்வதாகும். இந்த மையினை ஏடுகளில் தடவி வாசித்தால் எழுத்துகள் விளங்குவதுடன் கண்களுக்கும் குளிர்ச்சியினையும் தருகிறது.

### 3.2.6.14. சாதகம் எழுதுதலின்போது தொடங்கும் பாடல்

வள்ளுவர்கள் ஓலைச்சுவடிகளில் எழுதப் பெற்றுள்ள சாதகக் குறிப்புகளை நோக்கினால் முதலில் இந்தப் பாடலே இடம் பெற்றிருப்பதைக் காணமுடிகிறது.

*‘‘ஓம் செனினே சென்ம சௌக்கியானாம்*
*வர்த்தனீ குல சண்பதாம்*
*பதவி பூர்வ புண்ணியானாம்*
*லிக்குதே ஜென்ம பத்திரிக்கா*
*சுய சேத்திர விஜய அர்ப்புத*
*தண்டு மண்டல தரணி குசேந்திர*
*லோக பன்னுக விபூடு ஸ்ரீசாலிவாகனம்’’*[23]

என்ற பாடலை எழுதி முடித்த பின்னரே

| | | |
|---|---|---|
| சாலிவாகனம் சகாப்த வருடம் | - | 1932 |
| கலியுகாதி வருடம் | - | 5111 |
| கொல்லம் ஆண்டு | - | 1185 |
| பசலி வருடம் | - | 1419 |
| ஆங்கில வருடம் | - | 2010 |
| தமிழ் வருடம் | - | விக்ருதி வருடம் |

[23]. வள்ளுவச் சோதிடர்கள் எழுதிக் கொடுத்துள்ள சாதகக் குறிப்பேடுகள், ஓலைச் சுவடிகளில் காணப்படுவன.

என்று அனைத்து வருடங்களையும் எழுதி முன்னரே கரும்பலகையில் சுண்ணக்கட்டியால் கணித்து வைத்துள்ள கணிதத்தின் அடிப்படையில் செனன காலக் கிரக நிலையையும், நவாம்சத்தையும் கட்டத்தில் போடுவர். இதனை 'வீடு அடைதல்' என்றும் கூறுகின்றனர் (இது பின்னிணைப்பில் தெளிவாகப் படத்துடன் இடம்பெறுகிறது). அதன்பிறகு நட்சத்திர பாத சாரம் விரிவாக எழுதப்படுகிறது. சாதகத்தினைப் பற்றி ஒரு தனி ஆய்வு செய்யும்பொழுது இன்னும் மிக விரிவான முறையில் சாதகம் எழுதும் முறை சொல்லப்படலாம். இறுதியில் சாதகரின் சென்ம இலக்கினம், சென்ம இராசி, சென்ம நட்சத்திரம், நடப்புத் திசையின் இருப்பு வருடம், மாதம், நாள் ஆகியன எழுதப்படுகின்றன. சுபம் என்று முடிக்கின்றனர்.

தற்பொழுது பெரும்பாலும் பனையோலைகளில் சாதகம் எழுதப்படுவதில்லை. ஏறத்தாழ இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னரே பனையோலைகளில் சாதகம் எழுதும் நிலை குறைந்து விட்டது. இன்றும் கடலூர் மாவட்டத்தில் சேமக்கோட்டை, ஆண்டிக்குழி, இருளக்குறிச்சி, ஆனத்தூர் என ஒருசில ஊர்களில் பனையோலைகளில் சாதகம் எழுதிய வயதான பெரியோர்கள் உள்ளனர். இவர்களும் இப்பொழுது சாதகத்தை நோட்டில் (காகிதத்தில்) தான் எழுதிக் கொடுக்கின்றனர். யாரேனும் விரும்பிப் பனையோலைகளில் எழுதச் சொல்லிக் கேட்டால் மிக அரிதாகவே எழுதித் தருகின்றனர். பனையோலைகளில் சாதகம் எழுதிய வள்ளுவர்கள் நாளடைவில் காகித நோட்டுகளில் எழுதினர். பின்னர் இதற்காகவே அச்சிடப்பட்டுள்ள சாதக நோட்டுக்களை வாங்கிச் சாதகத்தினை நிரப்பிக் கொடுத்து வருகின்றனர். ஒருசில வள்ளுவச் சோதிடர்கள் இன்று கணினி மூலம் சாதகத்தைப் பிரதி எடுத்துத் தருகின்றனர்.

### 3.2.7. ஆருடம்

கடலூர் மாவட்ட நாட்டுப்புற மக்களில் உயர்சாதி மக்கள், அட்டவணை இன மக்கள் அனைவரும் தங்களின் உடைமைகள் அதாவது வீட்டிலுள்ள பொருட்கள், ஆடு, மாடுகள் தொலைந்து விடுதல், காணாமல் போய்விடுதல் என்ற நிலையில் வள்ளுவர்களிடம் சென்று ஆருடம் கேட்பதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். அதன் பின்னரே அவர்கள் கூறும் ஆருடத்தின் தன்மைகளை மனத்தில் கொண்டு தேடுதல் முயற்சி, காவல் நிலையத்தில் புகார் செய்தல் ஆகிய செயல்களில் ஈடுபடுகின்ற வழக்கம் பெரும்பான்மையாகக் காணப்படுகிறது.

### 3.2.7.1. வள்ளுவர்கள் ஆருடம் கூறும் முறை

ஆருடம் கேட்க வருபவரிடம் ஏதேனும் ஒரு தமிழ் மாதத்தின் பெயர், ஒரு பூவின் பெயர் கேட்கப்படுகின்றன. பின் ஒன்பதற்குள் ஓர் எண், இருபத்தேழுக்குள் ஓர் எண் கேட்கப்படுகின்றன. அவர்கள் கூறியவற்றிற்கு ஏற்ப மனத்திலேயே கணக்கீடு செய்து ஆருடத்திற்கான பலன்களை வள்ளுவர்கள் கூறுகின்றனர். வள்ளுவப் பெண்களிலும் சிலர் ஆருடம் கூறத் தெரிந்தவர்களாக உள்ளனர் என்பதைக் கள ஆய்வின்போது அறியமுடிந்தது.

தொலைந்து போன பொருட்களுக்காக வேண்டி மட்டுமல்லாமல் நாட்டுப்புற மக்களின் பிற பல்வேறு தேவைகளுக்காகவும் வள்ளுவர்களிடம் சென்று ஆருடம் கேட்கும் வழக்கம் காணப்படுகிறது. ஏதேனும் உதவியை நாடிச் செல்லும்பொழுது அவ்வுதவி கிடைக்குமா? கிடைக்காதா? என்பதற்காகவும், திருமணத்திற்குப் பெண் பார்க்கச் செல்லும்பொழுது எத்திசையில் செல்லலாம்? பெண் நல்ல முறையில் அமையுமா? என்பன போன்றவற்றிற்காகவும், ஏதேனும் மிக முக்கியப் பொருட்களை வாங்கச் செல்லும் பொழுதும், ஏற்கெனவே மனத்தில் நினைத்துள்ள காரியம் நடைபெறுமா? நன்மையில் முடியுமா? தீமையில் முடியுமா? நிறைவேறுமெனில் எத்தனை நாட்களுக்குள் நிறைவேறும் என்பவைகளை உறுதிப்பட அறிந்து கொள்வதற்காகவும் நாட்டுப்புற மக்கள் ஆருடம் கேட்கும் வழக்கத்தினைக் கொண்டுள்ளனர்.

### 3.2.8. கைரேகை பார்த்தல்

வள்ளுவச் சோதிடர்களிடம் நாட்டுப்புற மக்கள் தங்களின் கைகளைக் காண்பித்துச் சோதிடப் பலன் கேட்கும் வழக்கம் காணப்படுகிறது. வள்ளுவச் சோதிடர்கள் ஆண்களுக்கு வலக்கையையும், பெண்களுக்கு இடக்கையையும் பார்த்துத் தன ரேகை, ஆயுள் ரேகை எனப் பல்வேறு ரேகைகளையும், புதன்மேடு, குருமேடு, தனமேடு, சூரியமேடு, சந்திரமேடு என்று சில மேட்டுப் பகுதியான இடங்களையும் கருத்தில் கொண்டு சோதிடப் பலன் கூறுகின்றனர். இதற்குக் ‘கைரேகை பார்த்தல்’, ‘கைக்குறி பார்த்தல்’ என்று பெயர்கள் கூறப்படுகின்றன.

### 3.2.9. நம்பிக்கையும் வருமானமும்

தமிழ்நாட்டு வள்ளுவர்களின் நாட்டு மருத்துவத் தொழில் ஆங்கில மருத்துவத்தின் வருகையால் பெரிதும் பாதிக்கப்பட்டதைப் போல் ஆரியப் பிராமணச் சோதிடர்களின் வருகைக்குப் பின்னும் வள்ளுவர்களின் சோதிடத் தொழில் முழுமையாகப் பாதிக்கப்படவில்லை. இதற்குக் காரணங்கள், வள்ளுவர்கள் மிகத் துல்லியமாகக் கணக்கீடு செய்து சோதிடம் கணிக்கும் முறையும், நாட்டுப்புற மக்கள் கொடுக்கும் ஊதியத்தை (தட்சணை) முகம் கோணாமல் பெற்றுக் கொள்ளும் உயர்ந்த பண்பும் என்றே கூறலாம்.

வள்ளுவச் சோதிடர்கள் சாதகம் கணிப்பதில் வல்லவர்களாகக் காணப்படுகின்றனர். இதற்குக் காரணம் தலைமுறை தலைமுறையாக வள்ளுவர்கள் சோதிடத் தொழிலைச் செய்து வருவதால் மிகத் தோய்ந்த அனுபவம் உடையவர்களாகக் காணப்படுவதே ஆகும். இவர்கள் பிராமணர்கள் சோதிடத்துறையுள் சிறப்புறும் முன்பே இத்தொழிலைச் செய்து வந்துள்ளனர். அதனால் தமிழகக் கிராமங்களில் வள்ளுவர்கள் இன்றும் புகழ்பெற்ற கணியர்களாகக் காணப்படுகின்றனர். நாட்டுப்புறங்களில் தாழ்த்தப்பட்ட மக்கள் முதல், உயர்சாதி மக்கள் வரை அனைவரும் இவர்களின் வீடுகளுக்குச் சென்று சாதகம், பொருத்த நிமித்தம் பார்த்துவருகின்றனர். வள்ளுவர்கள் சொல்லும் சாதகப் பலன்களனைத்தும் பெரும்பான்மையாகத் தவறாமல் பலிக்கும் நிலை காணப்படுகிறது. எனவே கிராமத்து மக்கள் ‘வள்ளுவன் வாய்ச்சொல் தப்பாது பலிக்கும்’ என்ற நம்பிக்கையுடையவர்களாகக் காணப்படுகின்றனர்.

*“வள்ளுவன் சொல்லுக்கு வகையேது”*

*“வள்ளுவன் சொல்லே சொல்லு*
*மாணிக்கக் கல்லே கல்லு”*

என்னும் நாட்டுப்புறப் பழமொழிகள் இக்கருத்திற்குத் துணை செய்கின்றன.

வள்ளுவச் சோதிடர்கள் தமிழ்க்கணித அடிப்படையில் வானிலை அறிந்தும், நிமித்தம் கேட்போரின் உளப்போக்கினை அறிந்தும் சோதிடப் பலன் கூறுகின்றனர். மேலும், சாதகக் குறிப்புடன் முகக்குறி, மச்சம், சுழி, உடல் இயக்கம், கனவுகள், சகுனம் ஆகியவற்றையும் ஆராய்ந்து பலன் கூறுகின்றனர். இவர்கள் வேண்டுவோரின் வீடுகளுக்கே சென்று தொழில் பார்ப்பதும், அவர்கள்

வெற்றிலைப் பாக்கு, பழம் இவற்றின் மீது வைத்துக் கொடுக்கும் காணிக்கையை (பணத்தை) முகம் கோணாமல் பெற்றுக் கொள்ளும் நற்பண்பும் இவர்களுக்கென நிலையான வாடிக்கையாளர்களை உருவாக்கிடக் காரணங்களாக அமைந்துள்ளன. வள்ளுவச் சோதிடர்கள் பிறரின் இல்லங்களுக்குச் சென்று சாதகம் பார்க்கும் வழக்கம் படிப்படியாகக் குறைந்து வருகின்ற நிலை உள்ளது. இன்றைய நிலையில் வள்ளுவர்களின் இல்லங்கள், அவர்கள் வைத்துள்ள சோதிட நிலையங்களுக்குச் சென்று சாதகம், ஆருடம், கைரேகை ஆகிய சோதிடப் பலன்களை மக்கள் கேட்டு வருகின்றனர்.

வள்ளுவர்கள் சாதகம் பார்ப்பதற்கு ஐம்பது ரூபாயும், சாதகம் கணித்து எழுதித் தருவதற்கு நூறு ரூபாய் அல்லது நூற்றைம்பது ரூபாயும் பெற்றுக் கொள்கின்றனர். இந்தப் பணத்தைக் கொடுக்க முடியாத வசதி குறைந்தவர்களிடம் அவர்கள் எவ்வளவு குறைவாகக் கொடுத்தாலும் பெற்றுக் கொள்கின்றனர். மனக்கசப்புக் கொள்வதில்லை. அதுபோலவே வசதி படைத்தவர்கள் வள்ளுவச் சோதிடர்களின் வாக்குப் பலித்ததினால் மகிழ்ந்து கொடுக்கும் கணிசமான பணத்தினையும் பரிசுப் பொருட்களையும் பெற்றுக் கொள்கின்றனர். ஒருசில வள்ளுவர்கள் இவ்வளவு கொடு என்று கேட்பதில்லை. கொடுப்பதைப் பெற்றுக் கொள்ளும் மனப்பக்குவம் உடையவர்களாகக் காணப்படுகின்றனர். ஏனெனில் அவ்வள்ளுவர்கள் சோதிடத்தைத் துணைத் தொழிலாகவும், அரசுப் பணியினை முதன்மைத் தொழிலாகவும் கொண்டுள்ளனர்.

### 3.2.10. காண்டச் சோதிடம்

கணிதச் சோதிடத்தில் புகழ்பெற்றவர்களான வள்ளுவ மக்களில் ஒருசிலர் காண்டச் சோதிடம் பார்ப்பவர்களாகவும் உள்ளனர். காண்டச் சோதிடம் பார்ப்பவர்களைக் ‘காண்டக்காரர்’, ‘காண்ட சோதிடர்’ என்று அழைக்கின்றனர். காண்டச் சோதிடம் ஓலைச் சுவடிகளில் எழுதி வைக்கப்பட்டுள்ள குறிப்புகளை அடிப்படையாகக் கொண்டு பார்க்கப்படுகிறது. இக்குறிப்புகள் பன்னிரண்டு கட்டுகளாக உள்ளன. இதனைக் ‘காண்ட கட்டுகளை’ என்று அழைக்கின்றனர். இப்பன்னிரண்டு கட்டினுள் ஏவையேனும் சில பகுதிகள் மட்டுமே ஒரு சாதகருக்குச் சாதகம் கூறப் பயன்படுத்துகின்றனர். சாதகம் பார்க்க வரும் சாதகரின் இராசி, இலக்கினம், நட்சத்திரம் இவற்றுக்குரிய பலன்களுக்கான பகுதிகள் மட்டும் காண்டக் கட்டுகளிலிருந்து படித்துக் காண்பிக்கப்படுகின்றன.

சாதகம் எழுதி வைக்காதவர்களுக்குப் பெயர் இராசியின் அடிப்படையில் பார்க்கப்படுகிறது. காண்டச் சோதிடத்தில் ஒருவருடைய முக்காலமும் கூறப்படுகிறது. அதனுடன் அவருடைய அங்க அடையாளங்கள், பிறந்த இடத்தின் சூழல்கள், முற்பிறவி பற்றிய செய்திகள், எதிர்வரும் காலத்தின் நிகழ்வுகள் முதலியன கூறப்படுகின்றன. சாதகம் பார்க்கும்பொழுது சந்தேகத்துடன் பார்ப்பவரிடம் அல்லது கேட்பவரிடம் எந்த ஓலையைப் படிக்கின்றனரோ அதனை மைபூசியோ அல்லது தண்ணீர் தொட்டோ தெளிவுபட அவ்வோலையில் எழுதப்பட்டுள்ள வாசகத்தினைக் காட்டுகின்றனர். வள்ளுவச் சோதிடர்களில் மிகக் குறைந்த அளவினரே காண்டச் சோதிடம் பார்ப்பவர்களாகக் காணப்படுகின்றனர். இன்றைய நிலையில் கடலூர் மாவட்டத்தில் சேமக்கோட்டையில் ஒருவரும், ஆனத்தூரில் ஒருவரும், பாலூரில் இருவரும், கண்ணாடியில் மூவரும் காண்டச் சோதிடம் பார்த்து வருகின்றனர். கடலூர் மாவட்ட எல்லையில் உள்ள வைத்தீஸ்வரன் கோவிலில் அதிக அளவில் காண்டச் சோதிடம் பார்க்கும் வள்ளுவர்கள் உள்ளனர். கடலூர் மாவட்டத்தில் காண்டச் சோதிடம் பார்த்த பலர் இறந்துவிட்டனர். அவர்களின் வாரிசுகள் இத்தொழிலைப் பின்பற்றாத நிலையில் இம்மாவட்டத்தில் காண்டச் சோதிடம் என்பது ஒருசில இடங்களைத் தவிர இல்லாமல் போயிற்று எனலாம். கணிதச் சோதிடத்தைவிடவும் காண்டச் சோதிடம் பார்ப்பதற்கு வள்ளுவர்கள் அதிகமாகவே பணம் பெறுகின்றனர். 1970 இல் பதினைந்து ரூபாய், 1980 இல் இருபத்தைந்து ரூபாய் என்று பெற்ற காண்டச் சோதிடர்கள் இன்று முந்நூறு ரூபாய் முதல் ஐநூறு ரூபாய் வரை பெறுகின்றனர்.

### 3.2.11. கிளி சோதிடம்

கிளி சோதிடம் பார்ப்பது வள்ளுவ மக்களிடம் ஏறக்குறைய நாற்பதாண்டுகள் காலமாகவே காணப்படுகிறது. கிளி சோதிடம் பார்ப்பதற்குக் கணிதப் பயிற்சி தேவை இல்லை. தமிழைப் பிழையின்றி எழுதவும் படிக்கவும் தெரிந்தால் போதுமானது என வள்ளுவர்கள் கூறுகின்றனர். கிளிக்குப் பயிற்சி கொடுத்தோ அல்லது பயிற்சி பெற்ற கிளியை விலைக்கு வாங்கி வந்தோ சோதிடம் பார்க்கப் பயன்படுத்துகின்றனர். யாரும் இவர்களிடம் வீட்டிற்குத் தேடி வந்து கிளி சோதிடம் பார்ப்பதில்லை. இவர்களாகவே வீதிகளில் நடந்தும், மிதிவண்டியில் சென்றும் சோதிடம் பார்க்கின்றனர். இவர்கள் இருபத்தேழு சீட்டுக்களைப் பயன்படுத்துகின்றனர். அவை ஒவ்வொன்றினுள்ளும் ஒவ்வொரு

சாமியின் திருவுருவம் காணப்படும். சாமிகளின் திருவுருவப் படங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு உறையினுள் இருக்கும். இதனைக் ‘கிளி சீட்டு’ என்பர். இக்கிளி சீட்டுகளைச் சிலர் ஒன்றின்மேல் ஒன்றாக அடுக்கி வைத்தோ அல்லது பக்கவாட்டில் போட்டோ கிளிப் பெட்டியினுள் உள்ள கிளியைப் பெயர் சொல்லி அழைத்துச் சோதிடம் பார்ப்பவரின் “பெயர் இராசிக்கு ஏற்ற சீட்டை எடு” என்று கூறுகின்றனர். கிளி சீட்டை எடுத்துக் கொடுத்ததும், “இதைப் படிக்கலாமா?” என்று கேட்கக் கிளி கத்தியதும் ஒரு நெல் மணியைக் கொடுத்து கூண்டிற்குள் அனுப்புகின்றனர். பின்னர் கிளி எடுத்துக் கொடுத்த சீட்டின் மேலுள்ள எண்ணைப் பார்த்து அந்த எண்ணிற்குரியப் பலனை ‘அகத்தியர் ஆருடம்’ என்னும் புத்தகத்திலுள்ள பாட்டினையும் உரையையும் படித்துக் கூறுகின்றனர். இதுவே கிளி சோதிடம் பார்க்கும் முறையாகும். வள்ளுவர்களில் பல வருடங்களாகக் கிளி சோதிடம் பார்க்கும் சிலரும் உண்டு. இவர்கள் அனுபவத்தின் காரணமாகச் சீட்டிற்குரிய எண்ணைப் பார்த்ததும் புத்தகத்தினைப் பார்க்காமல் மனப்பாடமாகப் பலன் கூறுகின்ற நிலையையும் கள ஆய்வில் காணமுடிந்தது.

கிளி சோதிடம் பார்க்கும் வள்ளுவர்கள் மாந்திரிகம், மருத்துவம் இவற்றை அறிந்த குடும்பத்துப் பின்னணியில் வந்தவர்கள் என்பதால் இக்கிளி சோதிடத்துடன் தாயத்துப் போடுதல், வேப்பிலை அடித்தல் (பாடம் போடுதல்), மருந்து கொடுத்தல் ஆகியவற்றையும் கிராமங்களில் செய்து வருகின்ற நிலை காணப்படுகிறது. இன்று கிராமங்களில் மட்டுமல்லாமல் நகரங்களிலும் கிளி சோதிடம் பார்க்கின்றனர். கிளி சோதிடம் பார்க்கப் பத்துப் பைசா பெற்ற நிலையிலிருந்து இன்று பத்து ரூபாய் பெறுதல் என்ற நிலைக்கு மாறியுள்ளது. கிளி சோதிடம் பலன்களை அறிந்து கொள்வதற்காக மட்டுமல்லாமல் மக்களில் பலரும் பொழுது போக்கிற்காகவும் பார்ப்பதாகத் தெரிகிறது. கடலூர் மாவட்டத்தில் பண்ருட்டி வட்டாரக் கிராமங்களில் கிளி சோதிடம் பார்க்கும் வள்ளுவர்கள் பெரும்பான்மையாகக் காணப்படுகின்றனர். கடலூர் வட்டாரத்தில் அதிக அளவில் கிளி சோதிடம் பார்க்கும் வள்ளுவர்கள் இல்லை. ஒரு சிலரே உள்ளனர்.

வள்ளுவர்களின் குலத்தொழிலான கணிதச் சோதிடம் இளம்பருவம் முதற்கொண்டு பயிற்சி பெற வேண்டிய ஒன்றாகும். இதனைக் கற்றுக்

கொள்ளாத படித்த வள்ளுவ இளைஞர்கள் பிழைப்பிற்காக வேண்டிக் கிளி சோதிடத்தைக் கையில் எடுக்க வேண்டிய சூழ்நிலை உருவாயிற்று. கிளி சோதிடம் பார்த்தவர்களில் பாதிக்கும் மேற்பட்டோர் இன்று அரசுப் பணிகளில் உள்ளனர். மீதமுள்ளோர் கிளி சோதிடம் பார்ப்பதில் பொது மக்களிடமும் வள்ளுவ மக்களிடமும் மதிப்பின்மையை உருவாக்கியதால் கணிதச் சோதிடத்தைக் கற்றுக் கொண்டு இத்தொழிலை விட்டுவிட்டனர். வேறுவழியில்லாத சில வள்ளுவர்களே இத்தொழிலை நெடுங்காலமாகப் பார்த்து வருகின்றனர். பண்ருட்டி வட்டாரத்தில் உள்ள சேமக்கோட்டை கிராமத்தில் பத்து வள்ளுவக் குடும்பத்தினர் பல தலைமுறையாகக் கிளி சோதிடத்தையே வாழ்வியல் தொழிலாகக் கொண்டுள்ளனர்.

### 3.2.11.1. கிளிச் சீட்டு

கிளிச் சீட்டுகளை வள்ளுவர்களே தயாரிக்கின்றனர். கடைகளில் சாமிப் படங்கள் வாங்கி வந்து மென்மையான அட்டையில் (Chart) பசை காய்ச்சி ஒட்டிக் காய வைக்கின்றனர். அதனை மூன்றாகக் குறுக்கு வாக்கில் மடிக்கின்றனர். அதில் இரண்டு மடிப்புகள் விழும். அம்மடிப்புகள் நைந்து விடாமலிருக்க துணிகள் ஒட்டுவர். இந்தச் சீட்டுகள் ஒவ்வொன்றிற்கும் உறை செய்து அதன் மீது ஒன்று முதல் இருபத்தேழு வரையிலான எண்களை ஒவ்வொரு உறையின் மீதும் ஒட்டுவர். இந்தக் கிளிச் சீட்டுகளில் காசுபோடாமல் பார்ப்பவர்களுக்குக் கிளி எடுப்பதற்காக ஒரு திருநாமப் பட்டை ஒன்றும் தயாரிக்கப்படுகிறது.

### 3.2.11.2. கிளிப் பெட்டி

கிளிப் பெட்டி மிக வலுவான மரத்தில் மிக எடை குறைவாகச் செய்யப்படுகிறது. அப்பெட்டியில் கிளி சீட்டு அடுக்க அதன் கீழ்ப்புறம் இரு கூண்டுகளும் அமைந்துள்ளன. கிளிக் கூண்டுகளின் மூன்று புறமும் பித்தளை அல்லது இரும்புக் கம்பிகள் பொருத்தப்பட்டிருக்கும். கிளிப் பெட்டியின் மேற்புறம் ஒரு உலோகத்தினாலான கைப்பிடி ஒன்று இருக்கும். பெட்டியின் எதிர்ப்புறம் சாமிப்படங்கள் ஒட்டப்பட்டிருக்கும் (கிளிப் பெட்டி புகைப்படம் பின்னிணைப்பில் இணைக்கப்பட்டுள்ளன).

## 3.3. புரோகிதம்

நாட்டுப்புற மக்களுக்குச் சோதிடம் பார்ப்பதுடன் அவர்களின் பிறப்பு முதல் இறப்பு வரையிலான அனைத்து வாழ்வியல் சடங்குகளையும் நடத்தி வைப்பது புரோகிதம் எனப்படும். சடங்குகளை நடத்தி வைப்பவர் புரோகிதர் ஆவார். ‘‘புரோகிதன் என்பதற்குச் (family priest) சடங்கு செய்விக்குங் குரு, (Village astroloer) ஊர்ச் சோசியன்’’[24] எனத் தமிழ் லெக்சிகன் பொருள் தருகிறது. ‘‘புரோகிதனை ‘ஆசான்’ அல்லது ‘கரும வினைஞர்’ என்றனர். சேர நாட்டில் புரோகிதர் என்ற சொல் ‘புரோசு’ என்று வழங்கப்பட்டது. அரசவையில் புரோகிதர் என்பார் மதிப்பிற்குரியராய்ப் போற்றப்பட்டிருந்தனர்’’[25].

ஆய்வெல்லைக்குட்பட்ட பகுதிகளில் வள்ளுவச் சமூக மக்கள் பிற அட்டவணை இன மக்களான பறையர், சக்கிலியர், வண்ணார், அம்பட்டர் ஆகியோரின் பிறப்பு முதல் இறப்பு வரையிலான அனைத்து வாழ்க்கை வட்டச் சடங்குகளையும் செய்துவைக்கும் புரோகிதர்களாகக் காணப்படுகின்றனர். எனவே, பிற அட்டவணை இன மக்கள் வள்ளுவர்களை ‘ஐயர்’ என்று அழைக்கும் வழக்கம் நாட்டுப்புறங்களில் காணப்படுகிறது. காது குத்துதல், மஞ்சள் நீர், திருமணம், வளையல் காப்பு, புதுமனை புகுவிழா ஆகிய மங்கலச் சடங்குகளுக்கும் கருமாதி, திதி கொடுத்தல் ஆகிய இறப்புத் தொடர்பான சடங்குகளுக்கும் வள்ளுவப் புரோகிதர்களே நாள் குறித்துக் கொடுப்பதும் அவற்றிற்கான அழைப்போலைகளை (பத்திரிகைகள்) எழுதிக் கொடுப்பதும் ஆகியவற்றைச் செய்து வருகின்றனர்.

‘‘பறையர் இன மக்களுக்குத் திருமணம், திருமண நிச்சயம் (முகூர்த்த ஓலை எழுதுதல்), சாவுச் சடங்கு ஆகியவற்றை அய்யர் எனப்படும் வள்ளுவர் செய்கின்றனர். இவர்களைக் ‘குருக்கள்’ எனப் பறையர் குறிப்பிடுகின்றனர்.

---

[24]. தமிழ் லெக்ஸிகன், தொகுதி ஐந்து, ப. 2779.

[25]. சி. சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், பக். 180 - 181.

இறந்தவர்களுக்குத் திதி கொடுக்கவும் வள்ளுவர்களையே அழைக்கின்றனர்''[26] என பக்தவத்சல பாரதி குறிப்பிடுகிறார்.

### 3.3.1. காணிக்கை

புரோகிதம் செய்வதற்கு இவ்வளவு பணம் கொடுக்க வேண்டும் என்று வள்ளுவப் புரோகிதர்கள் யாரிடமும் கேட்பதோ, கட்டாயப்படுத்துவதோ இல்லை. அவரவர்களின் வசதிக்கேற்ப மணமுவந்து கொடுப்பதைப் பெற்றுக் கொள்கின்றனர். புரோகிதம் செய்யப் பயன்படுத்தும் பச்சரிசி, தேங்காய், காய்கறிகள், பழங்கள் இவை புரோகிதரைச் சேர்ந்தவை. இவற்றைத் தவிர ஒரு பெரிய தாம்பூலத் தட்டில் அரிசி, காய்கறி, பழங்கள், வெற்றிலைப் பாக்கு, பணம் வசதிக்கேற்ப வேட்டி துண்டு வைத்து வள்ளுவப் புரோகிதரின் கையில் கொடுத்து அவரின் காலில் குடும்பத்துடன் வீழ்ந்து வணங்கி ஆசிர்வாதம் பெறுகின்றனர். அவரும் அவற்றைப் பெற்றுக் கொண்டு முழுமனத்துடன் 'ஆல்போல் தழைத்து அருகுபோல் வேரூன்றி' எனத் தொடங்கும் வாழ்த்துப் பாடலைப் பாடி வாழ்த்தி வணங்குபவர்கள் மீது புனிதநீர் தெளித்து எழுப்புவார். இதனைக் 'குரு காணிக்கை', 'குரு தட்சணை' என்ற சொற்களால் குறிப்பிடுகின்றனர். வள்ளுவப் புரோகிதர்கள் அதிகப்படியாகப் பொருள், பணம் காணிக்கையாகத் தருபவர்களை ஒரு மாதிரியும், மிகக் குறைவான பணத்தை வெற்றிலைப் பாக்கில் வைத்துத் தருபவர்களை ஒரு மாதிரியும் வாழ்த்துவதில்லை. நிறைவாகக் கொடுப்பினும், குறைவாகக் கொடுப்பினும் வாழ்த்து என்பது முழுமனத்துடனே காணப்படுகிறது.

வள்ளுவர்கள் புரோகிதம் செய்த பொருட்களையும் அவர்களுக்குக் காணிக்கையாகக் கொடுக்கும் பொருட்களையும் ஒரு கூடையில் வைத்துத் தலையில் தூக்கிச் சென்று வள்ளுவப் புரோகிதரின் (ஐயரின்) வீட்டில் கொடுத்துவிட்டு வரும் வழக்கம் தொன்றுதொட்டு இருந்து வந்தது. இன்றைய நிலையில் வாகன வசதிகள் அதிகரித்துள்ளதால் வள்ளுவர்களே எடுத்துச் சென்றுவிடுகின்றனர்.

---

[26]. சீ. பக்தவத்சல பாரதி (பதி.ஆ), தமிழகத்தில் நாடோடிகள் சங்க காலம் முதல் சமகாலம் வரை, ப. 262.

### 3.3.2. புரோகித கிராமம்

வள்ளுவர்களுக்குப் புரோகிதம் பார்க்கத் தனித்தனிக் கிராமங்கள் உள்ளன. இவர்கள் தலைமுறை தலைமுறையாகப் புரோகிதம் பார்க்கும் கிராமங்களைத் தவிர வேறு கிராமங்களுக்குச் சென்று புரோகிதம் பார்ப்பதில்லை. இவர்கள் புரோகிதம் செய்யும் ஊர்கள் இவர்களின் 'புரோகித கிராமங்கள்' என்று கூறப்படுகின்றன. இவர்கள் புரோகிதம் செய்வதைக் 'கிராமம் பார்த்தல்' என்று குறிப்பிடுகின்றனர். புரோகித கிராமங்களில் ஒருசில கிராமங்களோ அல்லது ஒரு கிராமம் மட்டுமோ அல்லது ஒரு கிராமத்தில் உள்ள பாதி வீடுகளோ அல்லது ஓரிரு வீதிகள் மட்டுமோ அல்லது ஒரு சில பரம்பரையைச் சார்ந்த வகையறாவைச் சேர்ந்தவர்களின் வீடுகள் மட்டுமோ ஒரு வள்ளுவப் புரோகிதருக்குப் புரோகிதம் செய்ய உரிமை உடையவையாக உள்ளன. இதற்கு ஒரு புரோகிதருக்குப் பிறந்த மகன்கள் அனைவரும் புரோகிதம் செய்வதால் ஏற்படும் பங்கீட்டு முறையே காரணமாகும். வள்ளுவர்கள் தாங்கள் புரோகிதம் செய்யும் வீடுகளைச் 'சீழமூடு' (சீடர் வீடு) என்றே குறிப்பிடுகின்றனர். பிற அட்டவணை இன மக்களும் தங்களுக்குப் புரோகிதம் செய்யும் வள்ளுவரின் வீட்டினைக் 'குரு ஊடு' (குரு வீடு) என்றே குறிப்பிடுகின்றனர். வள்ளுவப் புரோகிதர்கள் அவரவர்களுக்குரிய சீடர் வீடுகளைத் தவிர மற்றொருவருக்குரிய சீடரின் வீடுகளுக்குப் புரோகிதம் செய்வதில்லை. மற்றொருவருக்குரிய புரோகிதக் கிராமத்திலும் புரோகிதம் செய்வதில்லை. அட்டவணை இன மக்களும் அவரவர்க்குரிய வள்ளுவப் புரோகிதக் குருவையே புரோகிதம் செய்ய அழைக்கின்றனர். ஒரு புரோகிதரின் உடல்நிலை சரியில்லை என்றாலோ அல்லது புரோகிதம் செய்யமுடியாத சூழல் என்றாலோ அப்புரோகிதரின் வேண்டுகோளின்படி மற்றொரு வள்ளுவப் புரோகிதர் வந்து புரோகிதம் செய்யும் நிலை காணப்படுகிறது. இவ்வாறு ஒரு வள்ளுவப் புரோகிதருக்குப் பதில் புரோகிதம் செய்யும் மற்றொரு வள்ளுவப் புரோகிதர் அவரின் நெருக்கமான உறவினராகவே இருப்பார். ஒரு புரோகிதருக்குரிய புரோகித கிராமத்தில் ஒரே நேரத்தில் பல சடங்குகள் வந்துவிடாமல் நாள், நேரம் குறித்துக் கொடுப்பதில் வள்ளுவப் புரோகிதர்கள் மிகக் கவனமாக இருக்கின்றனர். இருப்பினும், ஒரே நேரத்தில் செய்ய வேண்டிய இறப்புசார் சடங்குகள் பல, சில நேரங்களில் அமைந்து விடுவதுண்டு. மேலும், ஒன்றிற்கும் மேற்பட்ட புரோகிதர்க்கு இரண்டு கிராமங்களிலும் ஒரே நேரத்தில் சடங்குகள்

செய்ய வேண்டிய சூழலும் ஏற்படும். இதுபோன்ற சூழல்களில் வள்ளுவப் புரோகிதர்கள் தங்களின் உறவினர்களில் புரோகிதம் தெரிந்தவர்களை அழைத்து வந்து புரோகிதம் செய்கின்றனர். இவ்வாறு புரோகிதம் செய்வதின் மூலம் பெற்ற பணத்தையும், பொருட்களையும் புரோகித கிராமத்திற்குரிய வள்ளுவரும் புரோகிதம் செய்த வள்ளுவரும் சமமான முறையில் பங்கிட்டுக் கொள்கின்றனர். இவ்வாறு ஒரே நேரத்தில் பல சடங்குகள் நடைபெறுவது ஒருசில தவிர்க்க முடியாத நேரங்களில் மட்டுமே ஆகும்.

### 3.3.3. சிக்கல்

உயர்சாதி மக்கள் தங்களின் சடங்குகளை முன்னிட்டுச் சாதகம் பார்ப்பது, சடங்குகள் செய்வதற்கான நாள் குறிப்பது ஆகியவற்றை மிகச் சரியாகச் செய்கின்றனர் என்ற எண்ணத்தின் அடிப்படையில் வள்ளுவர்களையே நாடுகின்றனர். ஆனால், வள்ளுவர்கள் தாழ்த்தப்பட்ட மக்களுக்குரிய புரோகிதர் என்பதால் உயர்சாதி மக்கள் புரோகிதம் செய்வதற்கு மட்டும் பிராமணரை அமர்த்துகின்றனர். இதனைப் போன்றே அட்டவணை இனத்து மக்களில் வசதி படைத்தவர்கள், உயர் பதவிகள் வகிப்பவர்களில் சிலர் தங்களின் சாதியை வெளிக்காட்டிக் கொள்ள விரும்பாத நிலை காணப்படுகிறது. இவர்கள் வள்ளுவப் புரோகிதர்களிடம் சாதகம் பார்ப்பது, நாள் குறிப்பது இவற்றை மட்டுமே செய்கின்றனர். வள்ளுவப் புரோகிதர்கள் அட்டவணை இனத்து மக்களுக்கு உரியவர்கள். அவர்களைப் புரோகிதம் செய்ய அமர்த்தினால் தங்களுடன் நட்புறவு கொண்டுள்ள உயர்சாதி மக்களுக்குத் தங்களின் சாதி வெளிப்படும் என்ற எண்ணத்தின் காரணமாக வள்ளுவர்களை அமர்த்தாது பிராமணர்களை அமர்த்தும் நிலை களப்பகுதியில் ஒருசில இடங்களில் காணப்படுகிறது. இதனால், வள்ளுவச் சமூகத்து மக்களின் புரோகிதத் தொழில் மேலும் மேலும் ஒடுங்கும் நிலைக்கு உள்ளாகிவருகிறது. இது தங்களின் புரோகிதத் தொழிலில் புதிதாக முளைத்துள்ள சிக்கல் என்று வள்ளுவப் புரோகிதர்கள் கவலை தெரிவிக்கின்ற நிலையும் காணப்படுகிறது.

### 3.3.4. விளக்கு வைத்தல்

தாழ்த்தப்பட்ட சாதியினர் வாழும் சேரிகளில் அமைந்துள்ள சிறுதெய்வங்களுள் ஒன்றான மாரியம்மன் கோயில்களிலும், பிற பெயர்களைக் கொண்ட அம்மன் கோயில்களிலும் வள்ளுவச் சமூகத்து மக்களே பூசாரிகளாக

இருந்து வருகின்றனர். சேரிகளில் பெரும்பான்மையாகக் காணப்படும் மாரியம்மன் கோயில்கள் சேரிவாழ் மக்களான பறையர், சக்கிலியர், அம்பட்டர், வண்ணார், சாணார் ஆகிய இன மக்களுக்கு மட்டுமே சொந்தமானவையாகக் கருதப்படுகின்றன. உயர்சாதி மக்களுக்கு மட்டுமே சொந்தமான சிறுதெய்வ, பெருந்தெய்வக் கோயில்களில் வள்ளுவர்கள் பூசாரிகளாகக் காணப்படுவதில்லை. இவர்கள் சேரிவாழ் மக்கள் கொடுக்கும் பொருட்களைக் கொண்டு அம்மன் கோயில்களில் பொங்கலிடுதல், அம்மனுக்கு அபிஷேக ஆராதனைகள் செய்தல், விளக்கு ஏற்றுதல், படைத்தல் ஆகிய பணிகளைச் செய்து வருகின்றனர். இவர்கள் செய்யும் இந்தப் பூசாரிப் பணியினை ‘விளக்கு வைத்தல்’ என்ற சொல்லால் குறிக்கின்றனர்.

அம்மனை வழிபடும்போது தீபம் காட்டும் தட்டில் (கற்பூரத் தட்டில்) மக்கள் போடும் காசு இவர்களுடைய வருமானம் ஆகும். இது அல்லாமல் கோயில்களில் நடைபெறும் ஆடி மாதத் திருவிழா, தை மாதத்தில் நடைபெறும் ஆற்றுத் திருவிழா, வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளில் நடைபெறும் சிறப்புப் பூசைகள், அம்மன் வீதியுலா ஆகிய காலங்களின் போது வள்ளுவப் பூசாரிகளுக்கு அதிக வருமானம் கிடைப்பதாகக் கூறுகின்றனர். ஊரின் நன்மைக்காக வேண்டிக் கோவிலில் விளக்கு வைக்கும் பூசாரிகளாக உள்ளதால் அறுவடைக் காலங்களில் மக்கள் வள்ளுவர்களைக் களத்து மேட்டிற்கு அழைத்து நெல் தருகின்றனர். தொழில்கள் அடிப்படையில் வண்ணார், அம்பட்டர் ஆகிய தொழிலாளர்களுக்கும் நெல் கொடுக்கும் வழக்கம் காணப்படுகிறது. மேலும் திருவிழாக் காலங்களில் கோயில்களுக்காக மக்கள் சேர்க்கும் வரிப்பணத்தில் சிறு தொகையினை வள்ளுவப் பூசாரிகளுக்கு ஊதியமாகத் தருகின்ற நிலையும் காணப்படுகிறது. தமிழக அரசு சிறுதெய்வக் கோயில்களின் பூசாரிகளுக்கு மாதாமாதம் சிறு தொகையினை ஊதியமாக அளித்து வருவது குறிப்பிடத்தக்கது.

மூன்று அல்லது நான்கு தலைமுறைகளுக்கு முன்னால் கோவில்களில் பூசாரிகளாகப் பணிபுரியும் வள்ளுவப் புரோகிதருக்கு அக்கோயிலுக்குச் சொந்தமான விளைநிலத்தின் ஒருசிறு பகுதியைப் பயிரிட்டுக் கொள்ள இலவசமாக ஊரார் கொடுப்பர். இதற்குப் புரோகித மானியம் என்று பெயர். ‘‘புரோகித மானியம் என்பதற்குப் (Land held free by a prokitan) புரோகிதருக்கு

விடப்படும் மானியம்"[27] என்று தமிழ் லெக்ஸிகன் பொருள் கூறுகிறது. இந்தப் புரோகித மானியம் என்பது இன்றைய நிலையில் எந்தக் கிராமத்திலும் இல்லை என்றே கூறலாம். கோவிலுக்குரிய நிலத்தினைக் குத்தகைக்கோ அல்லது பணம் படைத்தவர்களோ பயிரிடும் நிலையே காணப்படுகிறது.

அட்டவணை இனத்து மக்களின் மாரியம்மன் கோவில்களுக்கு வள்ளுவப் பூசாரிகள் தொன்றுதொட்டு விளக்கு வைத்து வருகின்றனர். இவர்கள் வேதங்கள், ஆகமங்களை அறிந்தவர்களாகக் காணப்படுகின்றனர். தங்கள் கோவில்களின் அனைத்துத் திருவிழாக்களிலும் வள்ளுவர்களைப் பயன்படுத்திக் கொள்ளும் அட்டவணை இன மக்கள் கோவில் குடமுழுக்குச் (கும்பாபிஷேகம்) செய்யும்போது மட்டும் பிராமணர்களை அமர்த்தும் நிலை காணப்படுகிறது. வள்ளுவர்கள் பூசாரிகளாக மட்டுமே இருக்கும் நிலை உள்ளது. அட்டவணை இன மக்களின் சடங்குகளில் புரோகிதம் செய்ய முன்வராத பிராமணர்கள் அவர்களின் கோயில்களில் நடைபெறும் குடமுழுக்கினில் கலந்துகொண்டு வேதம் ஓதுவது வியப்பளிப்பதாக உள்ளது. குடமுழுக்கின்போது கிடைக்கும் அதிக வருமானத்திற்கும், பொருட்களுக்கும் ஆசைப்பட்டே பிராமணர்கள் கலந்துகொண்டு வேதம் ஓதுகின்றனர் என்று கருத இடமுண்டு.

#### 3.3.4.1. ஊர் பாடுதல்

வள்ளுவ ஆழ்வார்கள் அவரவர்களுக்குரியப் புரோகிதக் கிராமங்களில் மார்கழி மாதத்தின் முதல் தேதி முதற்கொண்டு அம்மாதம் முடியும் கடைசி நாள் வரையிலும் இரவு மூன்று மணியளவில் குளித்துவிட்டு நெற்றியில் திருநாமம் இட்டுக்கொண்டு ஊரில் உள்ள பெருமாள் கோவில், பெருமாள் கோவில் இல்லாத ஊரில் வேறு ஏதேனும் கோவிலில் கற்பூர தீபம் ஏற்றி வணங்கித் தப்பு, சேமக்கலம் என்ற இசைக்கருவிகளை இசைப்பர். பின்னர், தப்பு, சேமக்கலத்தை இசைத்துக் கொண்டே திருமால் பெருமைகள், அவதாரங்கள், திருப்பாவை, கருடபத்து, நாலாயிரத் திவ்ய பிரபந்தம் ஆகிய பாடல்களைப் பாடிக் கொண்டே ஊரின் ஒவ்வொரு வீதி வழியாகவும் செல்வார்கள். இதற்கு 'ஊர்ப்பாடுதல்' என்று பெயர். ஆழ்வார்கள் ஊர்ப்பாடுதலின் போது கருட கம்பத்தைப் பயன்படுத்துகின்றனர். இது இரும்பினால் செய்யப்பட்ட குத்து விளக்கிற்கு ஒப்பான பொருளாகும். இது திருமாலுக்கு உரியது. இந்தக் கருட

---

[27]. தமிழ் லெக்ஸிகன், தொகுதி ஐந்து, ப. 2779.

கம்பத்தின் மீது சத்தியம் செய்வது என்றால் வள்ளுவ ஆழ்வார்கள் அஞ்சுவர். ஏதேனும் ஒரு பிரச்சனைக்காக ஒரு வள்ளுவர் கருட கம்பத்தை வைத்து அதன்மீது சத்தியம் செய்துவிட்டால் அவர் கூறுவதே இறுதியான உண்மை என்று அனைவரும் ஏற்றுக் கொள்ளும் வழக்கம் வள்ளுவ ஆழ்வார்களிடம் காணப்படுகிறது. கருட கம்பம் அவ்வளவு சக்தி உள்ளது என இவர்கள் நம்புகின்றனர். உண்மையான கருட கம்பம் என்பது பெருமாள் கோவில்களின் எதிரே அமைக்கப்பட்ட கற்றூண்களாகும். அதன் மாதிரியையே வள்ளுவர்கள் இரும்பினில் செய்து வைத்துள்ளனர் என அறியமுடிகிறது.

வள்ளுவ நாயனார்கள் (பண்டாரங்கள்) சற்றுச் சிறு மாற்றங்களுடன் வள்ளுவ ஆழ்வார்களைப் போன்றே ஊர்ப் பாடுகின்றனர். இவர்கள் சேமக்கலத்தை இசைத்துக் கொண்டே தேவாரம், திருவாசகம், திருவெம்பாவை, கந்தசஷ்டிக் கவசம் ஆகிய பாடல்களைப் பாடுகின்றனர். இடையிடையே சங்கு ஊதுகின்றனர். ‘‘மார்கழி மாதத்தில் சங்கு ஊதுவதற்கான கிராமங்களைப் பண்டார இனத்தவர் ‘கிராமம் பார்த்தல்’ எனக் குறிப்பிடுகின்றனர்’’[28]. இவர்கள் இந்தக் கிராமம் பார்த்தலைச் சிவன், முருகன், பிள்ளையார் கோயில்களில் ஏதேனும் ஒன்றில் இருந்தே தொடங்குகின்றனர்.

### 3.3.4.2. தப்பு, சேமக்கலம்

வள்ளுவ ஆழ்வார்கள் சங்கு ஊதுவதில்லை. வள்ளுவ நாயனார்கள் தப்பை இசைப்பதில்லை. ‘‘தப்பு என்பது தாசரிகள் கையிற் கொள்ளுஞ் சிறு பறை வகை’’[29] எனத் தமிழ் லெக்ஸிகன் குறிப்பிடுகிறது. ‘‘தாசரிகள் அல்லது பண்டாரங்கள் என்ற வகையினரால் உபயோகிக்கப்படும் கருவியே தாசரி தப்பட்டை. சேமக்கலம், சங்கு ஆகிய மற்ற கருவிகளுடன் சேர்ந்து வாசிக்கப்படுகிறது. உலோக வளையத்தின்மீது கன்றின் தோல் போர்த்தப்பட்டிருக்கும். வயிற்றிற்கு இடப்பக்கம் உள்ள முழங்கைக்கு இடையில் வைத்து வலக்கை விரலால் வாசிக்கப்படும். இடக்கை கருவியைப் பிடித்துக்

---

[28]. சீ. பக்தவத்சல பாரதி (பதி.ஆ), தமிழகத்தில் நாடோடிகள் சங்க காலம் முதல் சமகாலம் வரை, ப. 262.

[29]. தமிழ் லெக்ஸிகன், தொகுதி மூன்று, ப. 1750.

கொண்டே சேமக்கலத்தைக் கொட்டிக் கொண்டிருக்கும்”[30] எனத் தமிழரின் தோற்கருவிகளை ஆய்வு செய்த ஆளவந்தார் குறிப்பிடுகிறார். ஆய்வெல்லைக்குட்பட்ட பகுதியில் ‘தாசரி தப்பட்டை’ என்ற பெயர் வழங்கப்படவில்லை. ‘தப்பு’ (Tabret) என்றே அழைக்கப்படுகிறது. இந்த தப்பினில் கன்றின் தோலைப் பயன்படுத்துவது என்பது எக்காலத்திலும் இல்லை. ஆட்டின் தோலை மட்டுமே பயன்படுத்துவதாக அறிய முடிகிறது. சேமக்கலம் வெண்கலத்தினால் ஆனது. அரை அடி முதல் முக்கால் அடி வரையிலான விட்டத்தைக் கொண்ட வட்ட வடிவத்தில் காணப்படும். மையப் பகுதியில் தடித்தும் ஓரப் பகுதிகள் தடிமன் குறைந்தும் காணப்படும். ஓரத்தில் அருகருகே இரண்டு துளைகள் காணப்படும். அவற்றில் நூலினாலான கயிற்றினைக் கட்டிக் கைக் கட்டை விரலில் மாட்டிக்கொண்டு ஏதேனும் காய்ந்த குச்சியினை நன்றாகத் தோல் சீவி அதனைச் சேமக்கலத்தில் தட்டி இசைக்கின்றனர்.

### 3.3.4.3. தொன்மச் செய்தி

பாரதப் போர் மார்கழி மாதத்தில் நடந்ததாக ஐதீகம். அப்போரில் அதிகப் படியானவர்கள் மாண்டனர். அதனால் பல குடும்பங்கள் துயரமடைந்தன என்பது புராணச் செய்தியாகும். இனிவரும் காலங்களில் இதுபோன்று கொடிய போர் நடைபெறக்கூடாது. உலகம் அமைதி பெற வேண்டும் என்று இறைவனை (திருமாலை) வேண்டிப் பாடுவதின் தத்துவமே ஊர் பாடுதல் ஆகும் என வள்ளுவச் சமூகத்து மக்கள் கூறுகின்றனர். “வள்ளுவர் சமூகத்தினர் சங்கு ஊதுவதற்கான காரணம் ஒரு தொன்மத்தின் மூலம் விளக்கப்படுகிறது. சங்கு ஊதுவதைச் ‘சங்க நாதம்’ என்று குறிப்பிடுகின்றனர். சங்கு மகாவிஷ்ணுவின் ஆயுதமாகும். முற்காலத்தில் பெரும் யுத்தம் ஒன்றில் இரத்த வெள்ளம் பெருக்கெடுத்தோட நாடே பீடை பிடித்திருந்ததாகவும், அதைக் கண்ட மகாவிஷ்ணு சங்க நாதம் முழங்க அந்த இரத்தமெல்லாம் தண்ணீராய் மாறிப் பீடை நீங்கியதாகவும். யுத்தம் நடந்தது மார்கழி மாதம். அதனால்தான், ஒவ்வொரு மார்கழி மாதமும் சங்க நாதம் எழுப்பிப் பீடையை நீக்கும் பணியைப் பண்டாரச் சமூகத்தைச் சேர்ந்தவர்கள் செய்து வருகின்றனராம்”[31] எனப்

---

[30]. ஆர். ஆளவந்தார், தமிழர் தோற்கருவிகள், ப. 70.

[31]. சீ. பக்தவத்சல பாரதி (பதி.ஆ), தமிழகத்தில் நாடோடிகள் சங்க காலம் முதல் சமகாலம் வரை, பக். 259 - 260.

பக்தவத்சல பாரதி குறிப்பிடுவதைக் கருத்தில் கொண்டால் மார்கழி மாதத்தில் வள்ளுவர்கள் ஊர் பாடும் காரணித்திற்கான தொன்மச் செய்தி விளங்கும்.

### 3.3.4.4. இசைப் பாடல்கள்

மார்கழி மாதத்தில் ஊர்ப்பாடுதலின்போது வள்ளுவர்கள் இசைப் பாடல்களுடனேயே தப்பு, சேமக்கலம் ஆகிய இசைக்கருவிகளை இசைக்கின்றனர். ‘‘இவர்கள் திருப்புகழ், திருப்பாவை, நடராசர் பத்து, பரமசிவன் தோத்திரம், அவினாசிப் பத்து, அருணாசலீசர் பதிகம், உண்ணாமுலையம்மன் பதிகம், வேமனானந்த சுவாமி பதிகம், ஸ்ரீராமர் தோத்திரம், ஸ்ரீராமர் பதிகம், கருடப்பத்து, கஜேந்திர மோட்சக் கீர்த்தனை, திருநாமப் பதிகம், திருநீற்றுப் பதிகம், சுப்பிரமணியர் விருத்தம், ஆறுமுகசாமி விருத்தம், தணிகாசலர் பஞ்சரத்தினம், காமாட்சியம்மன் விருத்தம், வடிவுடையம்மன் விருத்தம், சூரிய நமஸ்காரப் பதிகம் ஆகிய இசைப் பாடல்களைப் பாடுகின்றனர். இதனைப் படிக்கத் தெரிந்தவர்கள் படித்து மனப்பாடம் செய்தும், படிக்கத் தெரியாதவர்கள் செவி வழியும், நினைவில் கொண்டும் பாடுவர்’’[32] எனக் கூறப்படுகிறது.

இந்த இசைப்பாடல்களில் வள்ளுவ ஆழ்வார்கள் (தாசரிகள்) வைணவ சமயம் சார்ந்த பாடல்களையும், வள்ளுவ நாயனார்கள் (பண்டாரங்கள்) சைவ சமயம் சார்ந்த பாடல்களையும் பாடிவரும் நிலையைக் கள ஆய்வின்போது காணமுடிகிறது.

### 3.3.4.5. வருமுடி வாங்குதல்

ஒவ்வோர் ஆண்டும் மார்கழி மாதத்தில் வள்ளுவர்கள் அவரவர்களுக்குரிய புரோகித கிராமங்களில் ஒருநாள் தவறாமல் ஊர் பாடுகின்றனர். ஒரு புரோகிதருக்குரிய கிராமத்தில் மற்றறொரு புரோகிதர் ஊர் பாடுவதில்லை. மார்கழி மாதம் முடிந்து தைப்பொங்கல், மாட்டுப்பொங்கல் முடிந்த மறுநாளான கரிநாள் அன்று ஊர் பாடிய வள்ளுவர் அவரின் புரோகித கிராமத்திற்குச் செல்வார். அவருக்கு ஒவ்வொரு வீட்டினரும் வெற்றிலைப் பாக்கில் அவர்களால் முடிந்த பணத்தை வைத்துக் கொடுப்பார்கள். அதனைப் பெற்றுக்கொண்டு வள்ளுவர்கள் அவர்களையும் அவர்களின் குடும்பத்தினரையும், மாடு, கன்று,

---

[32]. சீ. பக்தவத்சல பாரதி (பதி.ஆ), தமிழகத்தில் நாடோடிகள் சங்க காலம் முதல் சமகாலம் வரை, பக். 261 – 262.

மனை அனைத்தையும் பாடல்பாடி வாழ்த்துவர். இவ்வாறு ஒவ்வொரு வீட்டிலும் நடைபெறும். ஊர் பாடிய பின் தங்களுக்குரிய வருமானத்தினைப் பெறுவதை வள்ளுவர்கள் ‘வருமுடி வாங்குதல்’ என்று கூறுகின்றனர். இதுபோன்ற “இவர்களது குலத்தொழில்களை வள்ளுவச் சமூகத்தின் இளைய தலைமுறையினர் விரும்பவில்லை. படித்து வேறு வேலைகளுக்குச் செல்லவே விரும்புகின்றனர்”[33].

### 3.3.5. குருத்துவம்

ஆண்டாண்டுக் காலமாக வஞ்சிக்கப்பட்டு, அடங்கி, ஒடுங்கிக் கல்வியறிவற்ற நிலையில் இருந்த தாழ்த்தப்பட்ட மக்கள் அன்றைய திண்ணைப் பள்ளிகளில் பிராமண ஆசிரியர்களால் ஒதுக்கப்பட்டும், புறக்கணிக்கப்பட்டும் இருந்தமையை அறியமுடிகிறது. இந்த மக்களுக்கு அறிவுக் கண்ணைத் திறந்து கல்வியறிவு புகட்டிய திண்ணைப் பள்ளி ஆசிரியர்களாக வள்ளுவர்கள் இருந்துள்ளனர். தாழ்த்தப்பட்ட மக்களிடம் எதையும் எதிர்பார்க்காமல் கல்வி போதித்த வள்ளுவர்கள் உயர்சாதி மக்களின் எதிர்ப்புகளைச் சம்பாதித்ததாகவே கூறப்படுகிறது. “வள்ளுவர்கள் பாடம் கற்பிக்கும் ஆசிரியர்களாகப் பண்டு இருந்தமையாலேயே ஆசான் என்ற பட்டத்துக்கு உரியவர்களாக இருந்தனர்”[34].

“தொல் தமிழகத்தின் ஆசிரியப் பணிகளைச் செய்தவர்கள் வள்ளுவர்களே. இதனால் அவர்களை ஆசான் என்றும் அழைத்தனர்”[35] என்னும் கருத்துகளின் அடிப்படையில் வள்ளுவர்களின் குருத்துவம் விளங்கும்.

தாழ்த்தப்பட்ட மக்களுக்கு வள்ளுவர்கள் குருவாக இருந்து கல்வி போதித்தமையால் இருவருக்கும் குரு, சீடர் என்ற உறவுநிலை ஏற்பட்டிருக்க வேண்டும். தாழ்த்தப்பட்ட சமூகத்தில் வயதான பெரியவர்கள் சிலர் வள்ளுவர்களின் வீடுகளை எங்கள் ‘ஐயர் வீடு’, ‘எங்கள் குரு வீடு’ என்றும் வள்ளுவச் சிறார்களை, ‘குரு வீட்டுப் பிள்ளை’ என்றும் இன்றும்

---

[33]. சீ. பக்தவத்சல பாரதி (பதி.ஆ), தமிழகத்தில் நாடோடிகள் சங்க காலம் முதல் சமகாலம் வரை, ப. 265.

[34]. குணா, வள்ளுவத்தின் வீழ்ச்சி, ப. 152.

[35]. ம.சோ. விக்டர், வானியலும் தமிழரும், ப. 31.

அழைப்பதிலிருந்து இதனை உணர முடிகிறது. மேலும், ‘‘வள்ளுவப் பண்டாரம் என்பவர்கள் பறையரின் குரு’’[36] எனத் தேவநேயப் பாவாணர் குறிப்பிடுகின்றார்.

தாழ்த்தப்பட்ட சமூகத்தின் மூத்த குடிமக்கள் இன்றும் வள்ளுவர்களிடம் ‘குரு’ என்ற முறையில் குரு காணிக்கை கொடுத்தே சில ஆலோசனைகளைக் கேட்டுச் செயல்படுகின்றனர். அவர்கள் செய்யும் எந்த ஒரு புதிய செயலையும், சடங்கையும் வள்ளுவர்களின் வாய்ச் சொல் கேட்காமல் செய்வதில்லை. அதற்காக அவர்கள் வெற்றிலைப் பாக்கின்மீது பணத்தினை வைத்துக் குரு காணிக்கை கொடுக்கத் தவறுவதில்லை. ‘குரு தட்சணை கொடுக்காதது கோடி பாவம்’ என இவர்கள் நம்புகின்றனர். இதனைக்கூடப் பொறுத்துக்கொள்ள முடியாத உயர்சாதி மக்களில் ஒருவரின் குரலாகவே,

*‘‘தலைஇய நற்கருமம் செய்யுங்கால் என்றும்*
*புலையர் வாய் நாள் கேட்டுச் செய்யார்*
*தொலைவில்லா அந்தணர் வாய்ச்சொற் கேட்டு செய்க’’*[37]

என்று ஒலித்திருக்க வேண்டும் எனக் கருதலாம்.

## 3.4. நாட்டு மருத்துவம்

ஒவ்வொரு மனிதச் சமுதாயமும் தனக்கென ஒரு மருத்துவ அமைப்பு முறையைக் கொண்டுள்ளது. இதனைச் சமூக நிறுவனம் என்றே கூறலாம். நோயும் மருத்துவமும் மனித இனப் பண்பாட்டு வரலாற்றில் பிரிக்க முடியாதன ஆகும். நாட்டுப்புற மக்கள் பயன்படுத்தும் மருத்துவ முறைகளை நாட்டுப்புற மருத்துவம் என்பர். இது Folk Medicine, Ethno Medicine, Popular Medicine, Popular Health Culture ethnohistory எனப் பல பெயர்களால் வழங்கப்படுகின்றது. தமிழகக் கிராமங்களில் நாட்டு வைத்தியம், கை மருத்துவம், பாட்டி வைத்தியம், மூலிகை மருத்துவம் என்றெல்லாம் கூறும் வழக்கம் இருந்து வருகிறது. ‘‘நாட்டுப்புற மருத்துவத்தை டான்யோடர் (Don Yoder) இரண்டு வகைகளாகப் பகுக்கின்றார்.

---

[36]. ஞா. தேவநேயப் பாவாணர், தமிழர் வரலாறு, ப. 292.

[37]. ஆசாரக் கோவை, பா. 92.

அவை இயற்கை மருத்துவம் (Natural Medicine), மந்திரச் சமய மருத்துவம் (Magico – Religious Medicine) என்பனவாகும்’’[38].

நாட்டு மருத்துவர்களாக விளங்கிய வள்ளுவர்கள் இவ்விரு முறைகளையுமே கொண்டவர்களாக உள்ளனர். ஏறக்குறைய முப்பது ஆண்டுகளுக்கு முன்புவரை பெரும்பான்மையான வள்ளுவக் குடும்பங்களில் பலரும் நாட்டு வைத்தியர்களாகவே இருந்துள்ளனர் என அறியமுடிகிறது. முன்னோர்களோடு முடிவுற்ற பல வீடுகளில் அவர்கள் பயன்படுத்திய மருந்தரைக்கும் கருங்கல் கலவங்கள் செயலற்றுக் கிடக்கின்றன. ஆங்கில மருத்துவத்தின் வரவால் குலைந்துபோன இந்த நாட்டு வைத்தியத்தை வள்ளுவர்களில் சிலரே இன்றும் செய்து வருகின்றனர்.

### 3.4.1. மருந்து செய்யும் முறை

நாட்டு மருந்துகளின் மூலப் பொருட்களான மூலிகைகளை வள்ளுவ வைத்தியர்கள் தங்களின் வீட்டுத் தோட்டங்களிலும், வயல்வெளிகளிலும் வளர்க்கின்றனர். இங்குக் கிடைக்காத பல மூலிகைகளைக் கொல்லிமலை போன்ற மூலிகைகள் நிறைந்துள்ள பகுதிகளுக்குச் சென்று பறித்தும், விலை கொடுத்து வாங்கியும் வருகின்றனர். அருகில் உள்ள நாட்டு மருந்துக் கடைகளிலும் வாங்குகின்றனர். பண்ருட்டி வட்டாரத்தில் உள்ள வள்ளுவர்கள் பண்ருட்டி சேதுமாதவச் செட்டியார் நாட்டு மருந்துக் கடையிலும், கடலூர் வட்டாரத்து வள்ளுவ வைத்தியர்கள் செம்மண்டலம் வைத்தியச் சாலையிலும் அதிக அளவில் நாட்டு மருந்துகளையும், மூலப் பொருட்களையும் வாங்குகின்றனர். ‘‘தமிழ் நாட்டு மருத்துவர்கள் மூலிகைகள், பூக்கள், மரப் பட்டைகள், இலைகள், வேர்கள், கிழங்குகள் போன்றவற்றின் துணைகொண்டு இயற்கை வழியே மருத்துவத்தைத் தொடங்கினர்’’[39] என்று சி. சசிவல்லி கூறுவது குறிப்பிடத்தக்கது.

இந்த மூலிகைகளை மூலப் பொருட்களாகக் கொண்டு இவற்றை அரைத்தும், பொடி செய்தும், உருண்டைகளாக உருட்டியும், கிண்டியும், புடம் போட்டும், மாத்திரை, பஸ்பம், லேகியம், தைலம், சூரணம் என்ற முறைகளில்

---

[38]. சு. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப. 264.

[39]. சி. சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப. 200.

மருந்துகளைச் செய்கின்றனர். இவ்வாறு செய்த மருந்துகளைப் பாதுகாக்க மரம், பித்தளை, இரும்பு இவற்றினாலான சிறுசிறு பெட்டிகளையும், சிறிய மண் கலயங்களையும் பயன்படுத்துகின்றனர். வள்ளுவ வைத்தியர்களின் வீட்டில் மருந்துகளைப் பாதுகாக்கத் தனி அறைகளும் உண்டு.

### 3.4.2. மருந்து கொடுக்கும் முறை

நோயாளிகளின் நாடியைப் பிடித்துப் பார்த்துப் பித்தம், வாதம், சிலேத்துமம் என்ற மூன்றினுள் நோய் எத்தன்மையை உடையது என்பதனை அறிந்து அதற்கேற்ப மருந்தினைக் கொடுக்கின்றனர். வயிற்றுக்குக் கொடுக்கும் உள் மருந்து, பெரும்பான்மையாக எண்ணெய் தேய்த்துத் தலைமுழுகிய பின்னர் பேதி மருந்து கொடுத்து வயிற்றைச் சுத்தம் செய்த பின்னரே கொடுக்கப்படுகிறது. பேதி மருந்து என்பது வாலப் பருப்பினை அரைத்து செய்த உருண்டையாகும். இதனைப் ‘பேதிகை’ என்று கூறுகின்றனர்.

விபத்துகளாக நேரும் தேள்கடி, பாம்புக்கடி ஆகியவற்றிற்கும் கடியின் தன்மைக்கேற்றபடி ஒரு கடி, இர்ண்டு கடி, மூன்று கடி என்ற அளவிலேயே மருந்து கொடுத்துக் காப்பாற்றுகின்றனர். விபத்துகள் அல்லாமல் இயற்கையாகப் பித்தம், வாதம், சிலேத்துமம் என்ற மூன்று வகைகளிலேயே உடல் தொடர்பான நோய்கள் உருவாவதால் அதற்காகவே உரிய மூலிகை வகைகளை அரைத்துப் புடம்போட்டு உருண்டைகளாக உருட்டிக் காயவைத்து மூன்றுவகை உருண்டைகளாக வைத்துள்ளனர். இவை செம்மண் உருண்டைகளைப் போல் காணப்படுகின்றன. இதனைக் ‘கட்டு மாத்திரைகள்’ என்று கூறுகின்றனர். மிகவும் சுயநினைவிழந்த அவசர நிலையில் உள்ள நோயாளிகளுக்கு நாடியைப் பிடித்துப் பார்த்து நாடி காட்டும் நோயின் தன்மைக்கேற்ப அதற்குரிய கட்டு மாத்திரையைப் புதிய பானை ஓட்டில் தேன்விட்டு இழைத்து நாக்கில் தடவி உட்கொள்ளச் செய்வர். பெரியவர்களெனில் இழைத்த மருந்தைப் பச்சை வெற்றிலையில் தடவி மடித்துக் கொடுத்து மென்று திண்ணச் சொல்வர். இவ்வாறு கொடுத்த அரைமணி நேரத்திற்குள் சுயநினைவு திரும்பியதும் சிகிச்சையினைத் தொடங்குகின்றனர். இந்தக் கட்டு மாத்திரை கொடுப்பதை நாட்டுப்புற மருத்துவத்தின் ‘முதலுதவி’ என்று கூறலாம்.

### 3.4.3. பத்தியம்

வள்ளுவ மருத்துவர்கள் கொடுக்கும் அனைத்து நாட்டு மருந்துகளுக்கும் சில பத்தியங்களையும் விதிக்கின்றனர். பத்தியம் என்பது மருந்து உட்கொள்பவர்கள் நோயுற்ற காலத்தில் கடைபிடிக்க வேண்டிய மனக்கட்டுப்பாடும், உணவுக்கட்டுப்பாடும் ஆகும். மனக்கட்டுப்பாடு என்பது உடலுறவு சார்ந்தது. உணவுக்கட்டுப்பாடு என்பது சில காய்கறிகள், மாமிசங்கள், எண்ணெய்ப் பண்டங்கள் இவற்றைத் தவிர்ப்பதாகும். வள்ளுவ வைத்தியர்கள் ‘உப்பில்லாத பச்சரிசிக் கஞ்சி அல்லது சாதம் இதனை எண்ணெய் இல்லாமல் வறுத்த துவரம் பருப்பு, உப்பு, மிளகாய், சுட்ட புளி இவற்றைக் கொண்டு அரைத்த துவையலைத் தொட்டுக் கொண்டு மூன்று, ஆறு, ஒன்பது வேளைகள் உண்ண வேண்டும்; வேறு எதையும் உண்ணக் கூடாது’ எனப் பத்தியம் கூறுகின்றனர். இவர்கள் கூறும் பத்திய முறையைக் கடைப்பிடிப்பதனால் நோய் விரைவில் குணமடையும் என்றும், கடைபிடிக்காமல் தவிர்க்க வேண்டிய பண்டங்களை உண்டால் பக்க விளைவுகள் ஏற்படும் என்றும் தெரிகின்றது.

### 3.4.4. வள்ளுவர்களின் மருத்துவ அறிவு

வள்ளுவர்கள் வழிவழியாகக் கிடைத்த அனுபவத்தின் மூலம் மூலிகை வைத்தியங்கள் பரவியிருக்க வேண்டும் என்றும் கருதலாம். மேலும், ஆத்த சாரங்கீர்தம், கருப்பட்ட உள்ள மடையான், ஞானவெட்டி, திருமூலரின் வைத்திய மந்திரம், அனுபோக வைத்தியம், வருஷாதி நூல் போன்ற நூல்களினால் பெறப்பட்ட அறிவும், சித்தர்களின் பாடல்கள் வாயிலாகக் கிடைத்த அனுபவ அறிவும், கைராசியும் தங்களின் நாட்டு மருத்துவத் தொழிலுக்கு அடித்தளமாக உள்ளன என இன்றுள்ள வள்ளுவ வைத்தியர்கள் கூறுகின்றனர்.

### 3.4.5. நாட்டு மருத்துவத்தின் வீழ்ச்சி

ஆங்கில அலோபதிமுறை, ஜெர்மன் ஹோமியோபதிமுறை ஆகியவை மக்களுக்கு உடனடிப் பலன் தருவதால் தொன்றுதொட்டு நற்பலன் தரும் தமிழர் நாட்டு மருத்துவமுறை காலப்போக்கில் பாதிக்கப்பட்டுள்ளது என வள்ளுவ நாட்டு மருத்துவர்கள் கூறுகின்றனர். மேலும், நாட்டு மருத்துவ முறையில் வள்ளுவ வைத்தியர்கள் உணவுக் கட்டுப்பாடு (பத்தியம்), மனம் சார்ந்த கட்டுப்பாடு (தாம்பத்தியம்) எனக் கட்டுப்பாடுகளைக் கூறுகின்றனர். இது போன்ற

கட்டுப்பாடுகள் குறைந்த அளவுள்ள, நோய்களுக்கு உடனடிப் பலன் தருகின்ற ஆங்கில மருத்துவ முறையே மக்களின் அதிக விருப்பத்திற்கு உரியதாக்கக் காரணமாகின்றன. இந்தச் சூழலால்தான் நாட்டு மருத்துவம் நாளுக்கு நாள் வீழ்ந்தது என வள்ளுவ வைத்தியர்கள் கூறுகின்றனர்.

### 3.4.6. மருத்துவக் கூலி

வள்ளுவ நாட்டு மருத்துவர்கள் உயர்வு, தாழ்வு பார்க்காமல் அனைத்து மக்களுக்கும் மருத்துவம் செய்கின்றனர். வசதியில்லாத மக்களுக்குக் குறைந்த செலவிலும், இலவசமாகவும் மருத்துவம் செய்கின்றனர். நாட்டு மருத்துவத்தில் அனுபவத்தின் மூலம் ஆழ்ந்த நம்பிக்கையுள்ள வசதிபடைத்த ஆதிதிராவிட மக்களும், வசதிபடைத்த உயர்சாதி மக்களும் நாட்டு மருத்துவத்தையும், நாட்டு மருத்துவர்களையும் வளர்த்தெடுப்பவர்களாகக் காணப்படுகின்றனர். இவர்கள் நாட்டு மருத்துவர்களுக்குத் தகுந்த கூலி கொடுக்கின்றனர். நோய் தீர்ந்த மகிழ்ச்சியில் வைத்தியர்களுக்கு வேட்டி, சட்டை வழங்குவதுடன் தங்கள் நிலத்தில் விளையும் பொருட்களையும் நன்றி மறவாது கொடுக்கின்ற வழக்கமும் அவ்வப்போது காணப்படுகிறது. மேலும், எப்பொழுதும் மருத்துவர்களை மறவாமல் விசுவாசத்துடன் மதிக்கின்றனர். ஆங்கில மருத்துவத்தின் மூலமும் அதிக செலவாகியும் குணமடையாத சில நோய்களையுடைய தங்கள் நட்பு வட்டாரங்களை வள்ளுவ வைத்தியர்களிடம் அழைத்து வந்து குணமடையச் செய்கின்றனர். இதன்மூலம் வள்ளுவர்களின் நாட்டு மருத்துவம் ஒருசில இடங்களில் மறுவாழ்வு பெற்று வருவதாகக் கொள்ளலாம்.

### 3.4.7. பெண் மருத்துவர்கள்

வள்ளுவச் சமூகத்தில் பெண்களும் நாட்டு மருத்துவம் செய்பவர்களாக உள்ளனர். இவர்கள் பெண்கள் தொடர்பான நோய்களுக்கே அதிகம் வைத்தியம் செய்பவர்களாகக் காணப்படுகின்றனர். இவர்கள் மகப்பேறு மருத்துவம் (பிரசவம்) பார்ப்பதில்லை. அரசின் சட்ட திட்டங்களின் மீதுள்ள பயமும், பிறப்புத் தீட்டை நினைத்தும் வள்ளுவப் பெண்கள் இதனை மேற்கொள்வதில்லை எனலாம். ஆனால், குழந்தைப் பிறப்புக்கு முன்னும் பின்னும் சில மருத்துவங்களைச் செய்வதுண்டு. கருவுறாத பெண்களுக்கு மருந்து கொடுத்துக் கருப்பையைச் சுத்தம் செய்து அதிலுள்ள கிருமிகளை அழித்துக் கருவுற வழிவகை செய்கின்றனர். கருவுற்ற காலத்தில் கரு நன்கு வளர மருந்து கொடுக்கின்றனர்.

கரு கலையாமல் இருக்கவும், வயிற்றில் உள்ள குழந்தை கர்ப்பக் குளுமையால் பாதிக்காமல் இருக்கவும் மருந்து கொடுக்கின்றனர். இதற்கான சில நோய்த் தடுப்பு முறைகளும் விலக்குகளும் அறிவுறுத்தப்படுகின்றன.

குழந்தை பிறந்த பின்னர் தாய், சேய் ஆகியோர்க்குப் பித்தம், வாதம், சிலேத்துமம் (வெப்பம், காற்று, நீர்) என்கிற மூன்றின் அடிப்படையில் தாதுக்களின் கூடுதல், குறைதல் ஆகியவற்றைச் சரிபடுத்தி நோய்களைக் குணமாக்குகின்றனர். உரிய வயது வந்ததும் இரத்தச் சோகையால் பூப்படையாத பெண்களுக்குப் பூப்பெய்துமாறு குணப்படுத்துகின்றனர்.

நாட்டு மருத்துவம் செய்யும் வள்ளுவப் பெண்கள் பெரும்பாலும் உள் மருந்து, வெளி மருந்து (இடு மருந்து, தொடு மருந்து) யோகப் பயிற்சிகள், நீவுதல், வழித்தல், ஒத்தடமிடுதல், ஆவிபிடித்தல் போன்றவற்றின் மூலமாகவே நோய்களைக் குணப்படுத்துகின்றனர். நலிவுற்று வரும் நாட்டு மருத்துவத்திற்கு அரசு உகந்த ஆதரவு செய்திட வேண்டும் என்ற விருப்பம் உடையவர்களாகக் காணப்படுகின்றனர். வள்ளுவ ஆண் மருத்துவர்களுக்குக் கிடைக்கும் வருமானத்தைப் போலவும், மரியாதையும், நன்றியும் வள்ளுவப் பெண் மருத்துவர்களுக்கும் கிடைக்கின்றது எனலாம். இவர்கள் குடும்பத்தைக் கவனித்துக் கொண்டே அவ்வப்போது இம்மருத்துவத் தொழிலைச் செய்கின்றனர். நாட்டு மருத்துவம் செய்யும் வள்ளுவப் பெண்கள் அனைவருமே வயதானவர்கள். இளைய தலைமுறைப் பெண்கள் இவற்றையெல்லாம் பொருட்படுத்துவதே இல்லை எனலாம்.

### 3.4.8. மந்திரம் அல்லது மந்திர சமய மருத்துவம்

"தொடக்க காலத்தில் மனிதன் தன்னைச் சுற்றி ஏற்படுகின்ற இயற்கையின் மாற்றங்களையும், சீற்றங்களையும் புரிந்துகொள்ள முடியாமல் தவித்திருக்கிறான். மானிடவியலாரின் கருத்துப்படி இயற்கையின் இயக்க விதிகளைப் புரிந்து கொள்ள முடியாத ஆதிமனிதன் இயற்கையைக் கட்டுப்படுத்தவும் அதனிடமிருந்து சில பயன்களைப் பெற்றுக் கொள்ளவும் உருவாக்கிய ஒன்றே மந்திரமாகும்"[40]. பொருளாதாரப் பலனே தொடக்ககால மந்திரங்களின் நோக்கமாக இருந்துள்ளது. காலப் போக்கில் தொன்மை மக்கள் மந்திர ஆற்றலைப் பலவகைகளில்

---

[40]. அ. இருதயராஜ். சே.ச., வழக்காறுகள் காட்டும் வாழ்வியல், ப. 67.

அவரவர் விருப்பததிற்கேற்பப் பயன்படுத்தத் தொடங்கினர். வள்ளுவச் சமூக மக்களும் மந்திரங்களின் ஆற்றலையும் அவற்றைச் வசப்படுத்தவும் தெரிந்தவர்களாக இருந்திருக்க வேண்டும். இவர்கள் பின்னாளில் மந்திரத்தை மருத்துவத்தில் பயன்படுத்தி நோயை குணப்படுத்தியுள்ளனர்; குணப்படுத்தியும் வருகின்றனர். எனவே, வள்ளுவர்களின் வைத்திய முறைகளில் மந்திரச் சமய மருத்துவமும் ஒன்றாகும் எனலாம்.

தம்பனம், மோகனம், உச்சாடனம், விந்து வேசனம், ஆகர்ஷனம், வசியம், பிரிவு, மாரணம் ஆகிய எட்டுவகைச் சித்திகளும், மனம், மொழி, மெய் என்கிற மூன்றாலும் இயமம், நியமம், ஆசனம், பிரணாயாமம், தொகைநிலை, தாரணை, தியானம், சமாதி ஆகிய யோகப் பயிற்சிகளும் கைவரப் பெற்ற வள்ளுவர்கள் பலர் இருந்துள்ளனர். இன்றும் சிலர் இருக்கின்றனர். இவர்களால் மந்திரத்தின் மூலம் சில நல்ல செயல்களைச் செய்திட இயல்கின்றது. இதனால் இவர்களுக்குக் கணிசமான வருவாயும் கிடைக்கின்றது.

### 3.4.8.1. அஷ்டவர்க்கத் தகடு போடுதல்

வள்ளுவர்கள் தீராத மன நோய்கள், உடல் நோய்களை மந்திரத்தாலும், தங்களின் அனுபவ அறிவைப் பயன்படுத்தியும் குணமடையச் செய்கின்றனர். ‘மந்திரம் கால் மதி முக்கால்’ என்ற பழமொழி இதனை நினைவூட்டுகிறது. இத்தகைய முறையில் தீய கனவுகள், தீய ஆவிகளின் நடமாட்டம் பற்றிய அச்ச உணர்வுகள் ஆகியவற்றை நீக்குகின்றனர். தீய வினைகளின் பயனால் முழுமை பெறாத கட்டிடங்கள், சரிவர விளையாத நிலங்கள், மகப்பேறில்லாத இல்லறத்தார்கள் ஆகியவற்றிற்கு மந்திரம் செய்வதுடன் தாமிரம், செப்பு, பஞ்சலோகம் ஆகிய தகடுகளில் மந்திரங்களை எழுதிக் கொடுத்து அவற்றைப் பூசித்து வழிபடுவதன் மூலம் நற்பலன் பெற வைக்கின்றனர். இதனை ‘அஷ்டவர்க்கத் தகடு போடுதல்’ என்று கூறுகின்றனர். இந்தத் தகடுகளில் பல்வேறு மந்திரச் சொற்களுடன் ‘ஓம், ஐயும், கிலியும், சௌவும், மௌவும், சுவாகா’ என்னும் மந்திரச் சொற்கள் பொதுவாக இடம்பெற்றுள்ளன. இந்த அஷ்டவர்க்கத் தகடுகளில் ‘நமசிவாயம்’, ‘நமோ நாராயணன்’, ‘அஷ்டலஷ்மி’, ‘ஆஞ்சநேயர்’ ஆகிய தெய்வங்களின் எந்திரங்களும் உள்ளடங்கிக் காணப்படுகின்றன.

### 3.4.8.2. புனிதப் போலிப் பொருட்கள்

தீய கனவுகள், கெட்ட ஆவிகளின் சேட்டை, பயந்ததால் உருவாகும் காய்ச்சல், தூக்கத்தில் உளறல், குழந்தைகளுக்கு ஏற்படும் தோஷம் ஆகியவற்றைக் குணப்படுத்த வள்ளுவர்கள் வேப்பிலை அடித்து மந்திரம் சொல்கின்றனர். இதனைப் 'பாடம் அடித்தல்', 'பாடம் போடுதல்' என்ற சொற்களால் குறிப்பிடுகின்றனர். கறுப்பு, சிவப்புக் கயிறுகளில் மந்திரங்கள் கூறிச் சில மந்திர முடிச்சுகளைப் போட்டுக் கொடுக்கின்றனர். இதனை 'முடிகயிறு போடுதல்' என்கின்றனர். செப்பு அல்லது இரும்புத் தகடுகளில் மந்திரங்களை எழுதித் தாயத்துச் செய்து கையிலோ அல்லது இடுப்பிலோ, கழுத்திலோ அணியச் செய்கின்றனர். இதனைத் தாயத்துப் போடுதல் என்கின்றனர். இதுபோன்ற மந்திரப் பொருட்களால் நோய்கள் குணமடைகின்றன. நாட்டுப்புறவியலாளர்கள் இதனைப் 'புனிதப் போலிப் பொருள்கள்' என்று குறிப்பிடுகின்றனர். இதற்குக் காரணம் ''இயல்பிறந்த இயற்கையின் ஆற்றல்கள் (Super Natural Powers) சில பொருட்களில் உறைந்துள்ளன என எண்ணி அவற்றை வழிபடும் முறை பெரும்பாலான பண்பாடுகளில் காணப்படுகிறது. இப்பொருள்கள் மந்திர ஆற்றல்களைக் கொண்டுள்ளன என்றும் மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட செயல்களைச் செய்யவல்லன என்றும், நற்பலன்களை (Good luck) ஏற்படுத்தவல்லன என்றும் மக்கள் நம்புகின்றனர் என்பதாகும்''[41].

### 3.4.8.3. சாங்கியம் செய்தல்

குழந்தைகளுக்குப் பட்சி தோஷம், திருமணம் ஆகாதவர்களுக்கு மாங்கல்ய தோஷம், செவ்வாய் தோஷம், நாகதோஷம் ஆகிய தோஷங்களை முறைப்படி அவற்றிற்குரிய பரிகாரங்களைச் செய்து மந்திரங்களை ஓதி, தோஷ நிவர்த்தி செய்கின்றனர். இதனை வள்ளுவர்கள் 'சாந்தி சுத்துதல்', 'சாங்கியம் செய்தல்' என்ற சொற்களால் குறிப்பிடுகின்றனர். இந்தச் சாந்தி சுத்துதல் ஆற்றில் அமர வைத்தோ அல்லது கடற்கரையில் அமர வைத்தோ வள்ளுவர்களால் பெரும்பான்மையாகச் செய்யப்படுகிறது.

### 3.4.8.4. சீட்டு எழுதிக் கட்டுதல்

---

[41]. சீ. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப. 528.

நாட்டுப்புற மக்கள் தங்களின் பொருட்கள் திருடுபோய் விட்டாலோ, பிறர் அபகரித்துக் கொண்டாலோ தங்களை வீணாக வம்புக்கிழுத்துச் சண்டை செய்தாலோ அடித்து உதைத்துத் துன்பம் தந்தாலோ, தம் மனைவியின் மீது பிறர் இச்சை கொண்டாலோ வள்ளுவர்களை அணுகிச் சீட்டெழுதிக் கட்டுமாறு வேண்டுகின்றனர். வள்ளுவர்களும் தங்களை அணுகுபவர்களிடம் உண்மை நிலையைக் கேட்டறிந்து, அவர்கள் கூறுவது பொய்யானதாக இருப்பின் அதற்கான பின் விளைவுகளையும் எடுத்துக்கூறிய பின்னரே சீட்டு எழுதிக் கட்டுகின்றனர்.

துன்பம் செய்தவர், பொருளை அபகரித்தவர் என்ற எதிர்நிலையில் உள்ளவர்களின் பெயர், முகவரி ஆகியவற்றை ஒரு காகிதத் துண்டில் எழுதுவர். ஆள் இன்னார் எனத் தெரியாத நிலையில் அதையும் குறிப்பிட்டு, தனக்குரிய குறைகளைத் தாங்கிய துண்டுக் காகிதத்தைத் துஷ்டத் தன்மையும் வீரமும் வாய்ந்த ஐயனாரப்பன் (சிறுதெய்வம்) கோயிலுக்குச் சென்று, பூசாரியின் அனுமதியுடன், சில அபிடேகங்களைச் செய்து ஐயனாரப்பன் சிலையின் கையில் உள்ள கத்தியில் கட்டுவர். உடன் மந்திரங்கள் சிலவற்றை உச்சரிப்பர். இதுவே ‘சீட்டு எழுதிக் கட்டுதல்’ எனப்படும். இவ்வாறு மூன்று வாரங்கள் வாரத்திற்கொருநாள் என மூன்று முறை ஐயனாரப்பனுக்குக் காணிக்கை செலுத்துகின்றனர். இதற்குப் ‘படிகட்டுதல்’ என்று பெயர். இவ்வாறு சீட்டு எழுதிக் கட்டுவதால் ஐயனாரப்பன் கனவில் சென்று தவறு செய்தவர்களை மிரட்டுவதாகவும், தண்டிப்பதாகவும் நம்பிக்கைகள் நிலவுகின்றன. சீட்டெழுதிக் கட்டுவதற்குப் பண்ருட்டி வட்டாரத்தில் கொஞ்சிகுப்பம் ஐயனாரப்பன் கோவிலும், கடலூர் வட்டாரத்தில் குமராபுரம் வில்லுகட்டி ஐயனார் கோவிலும் சிறப்பு வாய்ந்தவையாக உள்ளன.

### 3.4.8.5. முட்டை ஓதி வைத்தல்

நாட்டுப்புறங்களில் வீட்டு உபயோகப் பொருட்கள் எவையேனும் திருடு போய்விட்டால் அவற்றைக் கண்டுபிடித்துக் கொடுக்குமாறு வள்ளுவர்களையே அணுகுகின்றனர். அதற்குக் காரணம் காவல்துறையினருக்கே பயம் கொள்ளாத சிலர் மந்திரத்திற்குப் பயப்படுவதேயாகும். வள்ளுவர்கள் ஒரு கோழி முட்டையின் மீது சில மந்திரங்களை எழுதித் திருநீறு மந்திரித்துத் தாம்பாளத்தில் உள்ள திருநீற்றின் மீது மந்திரிக்கப்பட்ட முட்டையினை வைத்து அக்கம் பக்கத்தில்

உள்ளவர்கள் அல்லது சந்தேகத்திற்குரியவர்களிடம் அந்த முட்டையைத் தொட்டுவிட்டுத் திருநீற்றை எடுத்து நெற்றியில் பூசிக்கொள்ளச் செய்வர். அவ்வாறு செய்தபின் உண்மையில் திருடியவர் இறைவனால் தண்டிக்கப்படுவார் என்பது நம்பிக்கை. இதற்கு முட்டை ஓதி வைத்தல் என்று பெயர். ஓதி வைத்த முட்டையின் மீது உள்ள பயத்தின் காரணமாகப் பொருட்களைக் களவு செய்தவர் பொருளை எடுத்த இடத்திலேயே போட்டு விடுவதும் உண்டு. பொருள் கிடைக்காத பட்சத்தில் மூன்று நாள்வரை காத்திருந்து மூன்றாம் நாள் அன்று அருகில் உள்ள ஐயனாரப்பன் கோவில் குதிரையின் காலுக்கருகில் சில மந்திரங்களை ஓதி மந்திரித்த முட்டையினைப் புதைத்து அதன்மீது கற்பூரம் ஏற்றி வணங்கிவிட்டு வருகின்றனர். வள்ளுவர்கள் இவ்வாறு செய்வதால் திருடியவன் தண்டனைக்குள்ளாவான் என்பது நம்பிக்கையாகும்.

### 3.4.8.6. சூனியம் வைத்தல் (witch craft)

வள்ளுவச் சமூகத்து மக்கள் சூனியம் வைப்பதிலும் கைதேர்ந்தவர்களாகவே இருந்துள்ளனர் எனத் தெரிகிறது. இதில் பில்லி, சூனியம் (Soxecery), ஏவல் சூனியம் (Voodo) ஆகியவற்றையும் அறிந்தவர்களாகவே காணப்படுகின்றனர். ‘‘சூனியம், பில்லிசூனியம், ஏவல் சூனியம் என்பவை கெட்ட ஆவி, பேய் ஆகியவற்றைக் குறிப்பிட்ட மனிதனுக்கு அல்லது சமூகத்திற்கு எதிராக ஏவுவது ஆகும்’’[42]. எனவேதான் சூனியம் தெரிந்த வள்ளுவர்களிடம் பலரும் பகைத்துக் கொள்ளாதநிலை இருந்துள்ளது என அறியமுடிகிறது.

ஒருவரின் பெயர், அவருடைய காலடி மண், தலைமுடி, விரல்களின் நகம் இவற்றைக் கொண்டு அவருக்குச் சூனியம் வைத்துவிட்டால் அவர் உடல்நலமில்லாமலோ, பித்துப் பிடித்தோ, பேய்பிடித்தோ துன்பப்படுவார். இவ்வாறு செய்வதனைச் ‘செய்வினை’ என்றும் சூனியம் வைப்பதனால் ‘வைப்பு’ என்றும் குறிப்பிடுகின்றனர்.

சண்டை சச்சரவுகள், தொழிற்போட்டிகள், பொன், பொருள் இவற்றிற்காக இதுபோன்ற தீய மந்திரங்களைத் தவறான முறையில் பயன்படுத்துவதால் மனித குலம் பாழ்படுகிறது என்பதை உணர்ந்த வள்ளுவர்கள் தீய மந்திரங்களான

---

[42]. சீ. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப. 537.

சூனியங்களைச் செய்வதும் இல்லை; பிறருக்குக் கற்றுக்கொடுப்பதும் இல்லை. தங்களின் இனத்தாருக்குள்ளேயே நடைமுறையில் இருந்துவந்த இவை இன்று அழிந்துபோன நிலையில் உள்ளன எனலாம். வேறு சிலரால் சூனியங்களின் மூலம் பாதிக்கப்பட்டவர்கள் வள்ளுவர்களை நாடினால் அவர்களைக் காப்பாற்றும் பணியினைச் செய்கின்றனர். அதற்காகச் சில பரிகாரங்களையும், தூய மந்திரங்களையும் செய்கின்றனர். இதற்குச் 'செய்வினை எடுத்தல்', 'வைப்பு எடுத்தல்' என்று பெயர்கள் கூறப்படுகின்றன. இதுபோன்ற தூய மந்திரச் சடங்குகளைச் செய்வதினால் வள்ளுவர்கள் சமூகத்தில் நற்பெயர் பெறுகின்றனர்; நல்ல வருமானமும் பெறுகின்றனர்.

## 3.5. தெருக்கூத்து

நாடகம், கூத்து, ஆட்டம் என்று இக்காலத்தில் பல பெயர்களில் அழைக்கப்பட்ட போதிலும் தெருக்களில் திறந்த வெளிகளில் இரவு நேரங்களில் இறைவழிபாட்டின் ஒரு பகுதியாகச் சிற்றூர் மக்களால் நடத்தப்படும் நாட்டுப்புறக் கலைதான் தெருக்கூத்தாகும். ''செந்தமிழ் நிலத்தின் மிகப் பழைய கலைகளில் முதன்மையான ஒன்று இந்தத் தெருக்கூத்தாகும். இக்கூத்து பெரும்பாலும் மக்களுக்குத் தெரிந்த காப்பிய, இதிகாச அல்லது புராணக் கதைகளை அடிப்படையாகக் கொண்டிருக்கும். எளிய முறையிலேயே எல்லாம் அமைந்திருக்கும். பொதுமக்களுக்குத் தெருக்கூத்து ஒரு நல்ல பொழுதுபோக்காக அமைந்திருப்பதோடு நீதி புகட்டும் வாயிலாகவும் உள்ளது''[43] என கலைக்களஞ்சியம் கூறுகிறது. ''கிராமியக் கலை மரபாக முழுவதும் அமைகின்ற தெருக்கூத்து என்பதன் இலக்கியப் பொருள் வீதிகளில் நிகழுகின்ற நாடகம் என்பதாகும்''[44] என கிராமியக் கலைகளைப் பேசிய சாம்பெனகல் குறிப்பிடுகின்றார்.

### 3.5.1. தெருக்கூத்துக் கலைஞர்கள்

கள ஆய்வுப் பகுதியில் தெருக்கூத்துக் கலைஞர்களை 'ஆட்டக்காரன்', 'கூத்தாடி' என்ற சொற்களால் குறிப்பிடுகின்றனர். கூத்தாடும் குழுவினரை

---

[43]. கலைக்களஞ்சியம், தொகுதி – 6, ப. 131.

[44]. Som Benegal, A panorama of theatre in India, p. 57.

‘நாடக சபா’, ‘கூத்து சபா’ என்றும் இதன் தலைமையை ‘நாடக ஆசிரியர்’, ‘வாத்தியார்’ என்றும் அழைப்பதுண்டு. கடலூர் மாவட்டத்தில் தெருக்கூத்துக் கலைஞர்களில் தொன்றுதொட்டு வன்னியர் சமூக மக்களே அதிக அளவில் காணப்படுகின்றனர். வள்ளுவர் சமூக மக்களும் கூத்தாடி வருகின்றனர் என்றாலும், அரசுப் பணிகள், தனியார் துறைப் பணிகள், சோதிடம் ஆகியவற்றின் மூலம் கிடைக்கும் அதிக வருமானத்தின் காரணமாக இன்றைய நிலையில் தெருக்கூத்து ஆடுவது குறைந்து காணப்படுகிறது. வள்ளுவக் கூத்தாடிகள் மிகக் குறைந்த அளவிலேயே உள்ளனர்.

பத்திரக்கோட்டை இராஜவேல் சபா, பைத்தாம் பாடி சீனுவாசன் சபா, தாழம்பட்டு தணிகாசலம் சபா, விசூர் இராமலிங்கம் சபா, கொய்யாதோப்பு முத்துலிங்கம் சபா, மேல்பாதி மாணிக்கம் சபா, இருளக்குறிச்சி சாமி சனார்த்தனன் சபா, பூண்டி ஆனந்தன் சபா, எழா கோதண்டம் சபா ஆகிய குழுவினர்கள் கள ஆய்வுப் பகுதிகளில் தெருக்கூத்தாடி வருகின்றனர். இவர்களில் இருளக்குறிச்சி சாமி சனார்த்தனன், பூண்டி ஆனந்தன், எழா கோதண்டம் ஆகியோரின் மூன்று தெருக்கூத்துக் குழுக்களும் வள்ளுவச் சமூகத்தைச் சார்ந்தவர்களின் குழுக்களாகும். இவர்களின் குழுக்களிலும், பிறரின் குழுக்களிலுமாக முப்பதுக்கும் மேற்பட்ட வள்ளுவத் தெருக்கூத்துக் கலைஞர்கள் கடலூர் மாவட்டத்தில் உள்ளனர். இவர்கள் நாடக ஆசிரியர்களாகவும், நடிகர்களாகவும் உள்ளனர். தெருக்கூத்துக் கலையில் பரம்பரை பரம்பரையாக ஈடுபட்டுவந்த வள்ளுவர்கள் பிற தொழில்களில் வருமானம் மிகுதியாகக் கிடைப்பதால் கூத்தாடுவதைத் துணைத்தொழிலாகக் கொண்டுள்ளனர். கூத்தாடுவதை இரண்டாமிடத்தில் வைத்து எண்ணியபோதும் மரபு மீறல்களை இவர்கள் எக்காலத்தும் செய்வதில்லை. ‘‘இன்றைய சூழலில் தெருக்கூத்துக் கலைஞர்களை ‘மரபு முறைக் கூத்தர்கள்’, ‘பயில்முறைக் கூத்தர்கள்’, ‘இனமுறைக் கூத்தர்’ என மூன்று வகையினராகப் பிரிக்கலாம் என்று அ.அறிவுநம்பி குறிப்பிடுகிறார். மரபுமுறைக் கூத்தர்கள் அல்லது பரம்பரைக் கூத்தர்கள் என்போர் பல பரம்பரைகளாகக் கூத்தாடுவதையே தொழிலாகக் கொண்டவர்கள். இவர்கள் மரபு வழிப்பட்ட கூத்துகளை இன்றும் நடத்துபவர்கள். 1. கூத்தையே முதன்மைத் தொழிலாகக் கொண்டோர் 2. கூத்தைத் துணைத் தொழிலாகக் கொண்டோர் என்று இம்மரபினரை இரு வகையினராகப் பிரிக்க

இயலும்''[45]. இக்கருத்தின் அடிப்படையில் வள்ளுவத் தெருக்கூத்துக் கலைஞர்களை கூத்தைத் துணைத் தொழிலாகக் கொண்ட மரபுமுறை அல்லது பரம்பரைக் கூத்தர்கள் எனக் கொள்ளலாம். ''கூத்துக் கலைஞர்கள் கூத்தாடுவதைப் பெருமைக்குரிய ஒன்றாகவே கருதுகின்றனர். கூத்தாடி என்று பிறர் இழிவாகக் கூறினும் அதற்காக அவர்கள் வருந்துவதில்லை. இறைவனையே கூத்தாடி என்றழைக்கின்ற பொழுது தங்களை அவ்வாறு அழைப்பதில் எவ்வித மனக்குறையும் தங்களுக்குக் கிடையாது என்பதாகத் தெருக்கூத்துக் கலைஞர்கள் கருதுகின்றனர்''[46]. 'இறைவன் ஆடியது திருக்கூத்து நாங்கள் ஆடுவது தெருக்கூத்து' என்று கூறிப் பெருமை பேசுகின்றனர்.

### 3.5.2. வள்ளுவர்களின் தெருக்கூத்து ஈடுபாடு

வள்ளுவச் சமூகத்தில் ஆண்கள், பெண்கள், சிறார்கள் என அனைவருமே தெருக்கூத்தில் ஆர்வமும், மிகுந்த ஈடுபாடும் கொண்டவர்களாகக் காணப்படுகின்றனர். வள்ளுவப் பெண்கள் தெருக்கூத்தினை மிகவும் விரும்பிப் பார்ப்பவர்களாக உள்ளனர். தங்கள் குடும்பத்து ஆண்கள் தெருக்கூத்து ஆடியவர்கள், ஆடிக் கொண்டிருப்பவர்கள் என்பதே இதற்குக் காரணமாக இருக்கலாம். வள்ளுவச் சமூகத்து மூத்த குடிமக்கள் குறிப்பாக மூதாட்டிகள் தெருக்கூத்துத் தொடர்புடைய கதைகள், பாடல்கள் அவற்றில் இடம்பெறும் வேடங்கள் அனைத்தையும் மனப்பாடமாகத் தெரிந்து வைத்துள்ளனர். இன்றைய நிலையில் ஆடும் தெருக்கூத்துக் கலைஞர்கள் செய்யும் சிறுசிறு தவறுகளைக்கூடக் கண்டுபிடிக்கும் தெளிவான தெருக்கூத்தறிவினை உடையவர்களாகக் காணப்படுகின்றனர். தங்களின் சுற்றுவட்டாரக் கிராமங்களில் நடக்கும் தெருக்கூத்தினைத் தவறாமல் கண்டுகளிப்பவர்களாகவும் உள்ளனர்.

வள்ளுவச் சிறார்கள் தெருக்கூத்தினை மிகவும் நேசிப்பவர்களாக உள்ளனர். இவர்கள் விளையாட்டுகளில்கூடத் தெருக்கூத்து இடம்பெறுவதுண்டு. இவர்கள் முட்டை சாம்பலில் அரிதாரம் பூசி, அட்டையில் வேஷம் கட்டி ஆடுகின்றனர். பதின்மூன்று வயதிற்கு மேற்பட்ட சிறார்கள் தெருக்கூத்தில் தாளம் தட்டுதல், பின்பாட்டுப் பாடுதல், ஆர்மோனியம் இசைத்தல் (பொட்டி தள்ளுதல்),

---

[45]. அ. அறிவுநம்பி, தமிழரின் கூத்தியல், பக். 216 – 217.

[46]. மேலது, ப. 229.

வேடம் புனைவதற்கு உதவி செய்தல் ஆகிய செயல்களில் காலங்காலமாக ஈடுபட்டு வருகின்றனர். இன்றைய நிலையில் கல்வியின் முக்கியத்துவத்தை உணர்ந்து அதில் முழுநேரக் கவனம் செலுத்த வேண்டியுள்ளதால் வள்ளுவச் சிறார்கள் பெரும்பான்மையாகத் தெருக்கூத்தில் ஈடுபடுவதில்லை. ஒருசிலரே ஈடுபட்டு வருகின்ற நிலை காணப்படுகிறது. இருளக்குறிச்சியைச் சேர்ந்த அஜித்குமார் என்ற மூன்றாம் வகுப்புப் படிக்கும் எட்டு வயதுச் சிறுவன் ஐம்பதிற்கும் மேற்பட்ட பாடல்களைக் கற்றுக் கொண்டு, பல்வேறு நகைச்சுவைகளையும் இணைத்துத் தெருக்கூத்தில் ஈடுபட்டு வருகிறான். இவன் சாமி சனார்த்தனன் என்ற வள்ளுவத் தெருக்கூத்து நாடக ஆசிரியரின் தெருக்கூத்து வாரிசு என்று அறியப்படுகின்றான்.

### 3.5.3. தெருக்கூத்தில் வள்ளுவர்களின் பங்களிப்பு

திரைப்படங்கள் செல்வாக்குப் பெற்று உயர உயரத் தெருக்கூத்துகளின் செல்வாக்குக் குறையத் தொடங்கியது எனலாம். இதனால் தெருக்கூத்தின் மூலம் போதுமான வருமானம் கிடைக்காதச் சூழலில் தெருக்கூத்துக் கலைஞர்களின் மதிப்பும் குறையத் தொடங்கியது. இச்சூழலில் தெருக்கூத்தினைத் துணைமைத் தொழிலாகக் கொண்ட வள்ளுவக் கூத்தர்கள் தங்களின் முதன்மைத் தொழில்களான சோதிடம், புரோகிதம், மருத்துவம் ஆகியவற்றில் முழுக்கவனம் செலுத்தினர். மேலும், பலர் தங்களின் கல்வித் தகுதிக்கேற்ற அரசுப் பணிகள் கிடைத்ததும் தெருக்கூத்துத் தொழிலைக் கைவிட நேர்ந்தது. இதனால் கூத்தாடும் வள்ளுவக் கலைஞர்களின் எண்ணிக்கைக் குறைந்தது. ஆனாலும், தெருக்கூத்தினைப் பார்ப்பதிலும், அழியாமல் பாதுகாக்க ஆதரவு தருவதிலும் குறையாத ஆர்வமுடையவர்களாகவே வள்ளுவர்கள் காணப்படுகின்றனர்.

வள்ளுவர்கள் வழிபடும் சிறுதெய்வங்களுக்கு (குல தெய்வங்களுக்கு) ஒவ்வொரு வருடத்திலும் ஆடி மாதத்தில் வளர்பிறை வெள்ளிக்கிழமையில் திருவிழா நிகழ்த்தி அந்தந்தத் தெய்வத்தின் புராணங்களைக் கூறும் தெருக்கூத்து நாடகங்களை நடத்துகின்றனர். இதுபோலவே வள்ளுவர்கள் தங்களால் உருவாக்கப்பட்ட பெருமாள், முருகன், ஆஞ்சநேயன், அம்மன் கோயில்களின் திருவிழாக்களின் போதும் தெருக்கூத்து நடத்துகின்றனர். ஆலயங்களில் நேர்த்திக் கடன்களைச் செய்யும்பொழுதும் தெருக்கூத்து இடம்பெறுகிறது. தங்களின் குடும்பத்தில் முதியவரின் நன்மரணத்தின்போது

இரவில் கூத்து வைக்கின்றனர். இதற்குச் ‘சாவுக் கூத்து’ என்று பெயர். பதினாறாம் நாள் கருமாதியின் போதும் கூத்து வைக்கின்றனர். இதற்கு ‘மோட்சக்கூத்து’, ‘கருமாதிக் கூத்து’ என்று பெயர்கள். மேலும், திறமையான கூத்துக் கலைஞர்களைப் பணம் கொடுத்துப் பாராட்டுவதற்கும் வள்ளுவர்கள் தவறுவதில்லை. இவ்வாறு அழிந்துவிடாமல் தெருக்கூத்தினைக் காப்பாற்றி ஆதரவு அளித்து வருகின்றனர். அதன் வளர்ச்சிக்கும் தங்களின் பங்களிப்பைச் செய்து வருகின்றனர்.

## 3.6. தச்சுத் தொழில்

இயற்கை தந்த செல்வங்களுள் பலவகையான உரம் வாய்ந்த மரங்கள், தகுதியுள்ள மரங்களை அறுத்து வண்டிகள் செய்வதற்கும், வீடு கட்டுவதற்கும் வழிகண்ட பெருமை ‘தச்சர்’ என்னும் தொழிலாளர்க்கே உரியதாகும். “தச்சு என்பது ஒன்றையும் மற்றொன்றையும் பொருத்தி இணைப்பதாகும். இந்தத் தச்சுத் தொழிலைச் செய்வோர் தச்சர் எனப்பட்டனர். கல் தச்சுத் தொழில் செய்வோர் கல் தச்சர் எனவும், மரத்தச்சுத் தொழில் செய்வோர் மரத்தச்சர் எனவும் வழங்கப்பட்டனர். மரத்தொழில் செய்துவந்த தச்சன் சங்ககால இலக்கிய வழக்கில் ‘மரங்கொல் தச்சன்’ என வழங்கப்பட்டுள்ளான்”[47].

### 3.6.1. வள்ளுவத் தச்சர்கள்

வள்ளுவச் சமூகத்து மக்களுள் சிலர் வழிவழியாக மரத்தச்சுத் தொழிலைச் செய்து வருகின்றனர். இவர்கள் உயர்சாதி மரத்தச்சர்களைப் போல் (விஸ்வகர்மா, ஆசாரி) சாதாரண மர வேலைகளிலிருந்து மிக நுணுக்கமான மரச்சிற்ப வேலைகள் வரை சிறப்பாகச் செய்யும் திறன் படைத்தவர்களாகக் காணப்படுகின்றனர். கடலூர் மாவட்டத்தில் எஸ். குமராபுரம், தோட்டப்பட்டு, உண்ணாமலைச் செட்டிச் சாவடி, மஞ்சகுப்பம், உப்பளவாடி, சுத்துக்குளம், சான்றோர் பாளையம், காரக்காடு, ஆனையம் பேட்டை ஆகிய ஊர்களிலும், கடலூருக்கு அருகிலுள்ள புதுச்சேரியில் வேல்ராம்பேட்டை, முத்திரையர்பாளையம், காலாப்பட்டு ஆகிய ஊர்களிலும் வள்ளுவத் தச்சர்கள் காணப்படுகின்றனர். தோட்டப்பட்டு குமார் என்பவரைத் தவிர மேற்கண்ட

[47]. சி. சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப. 82.

அனைத்து ஊர்களிலும் காணப்படும் வள்ளுவத் தச்சர்கள் அனைவரும் சைவ சமயம் சார்ந்த வள்ளுவ நாயனார்களே ஆவர். இவர்கள் தச்சுத் தொழிலைச் செய்தாலும் அட்டவணை இனத்தவர்களாகவே காணப்படுகின்றனர்.

இன்றைய நிலையில் வள்ளுவத் தச்சர்களுக்கும் உயர்சாதித் தச்சர்களுக்கும் இடையே உள்ள தொழில்முறை உறவு அடிப்படையில் தச்சர் சங்கங்களில் உறுப்பினர் பங்குண்டு. கூலி அடிப்படையில் இருபிரிவினருக்கும் இடையே வேறுபாடு இல்லை. வள்ளுவத் தச்சர்களில் பெரும்பான்மையர் மரத்தச்சுத் தொழிற் கூடங்களிலும் தச்சர்களிடமும் கூலிக்கே வேலை செய்கின்றனர். வள்ளுவத் தச்சர்கள் மரத்தச்சுத் தொழிற்கூடங்கள் வைக்கும் வசதிபடைத்தவர்களாக காணப்படவில்லை. சிலர் மட்டுமே சிறுசிறு வீடுகளுக்கான தச்சு வேலைகளை ஒப்பந்தத்தின் அடிப்படையில் செய்கின்றனர். வழிவழித் தச்சுத் தொழில் செய்யும் வள்ளுவர்கள் அரசுப் பணிகள் கிடைத்ததும் தச்சுத் தொழிலை விடுமுறை நாட்களில் செய்து வருகின்றனர். வீட்டிலேயே கோவில்களுக்குத் தேவையான அன்ன வாகனம், சிம்ம வாகனம், மரச்சிலைகள் ஆகிய மரச்சிற்ப வேலைகளைச் செய்கின்றனர். இவர்களின் தச்சுத் தொழில் கோடை காலங்களிலும், மழைக் காலங்களிலும் தடைபடாமல் நடக்கின்றது. இதன்மூலம் நல்ல வருமானம் பெறுவதாகவும் கூறுகின்றனர்.

## 3.7. வேளாண் தொழில்

மனித வாழ்வுக்கு அடிப்படையானது உணவு. உணவு இல்லையெனில் பண்பாடும் இல்லை; பழம்பெருமையும் இல்லை. ஆதலின், உணவுப் பொருளின் இன்றியமையாமையை உணர்ந்து முன்னோர் அவற்றைப் பெருக்கினர். உழவுத் தொழில் தலைமைத் தொழிலாக, உயிர்த் தொழிலாகப் போற்றப்பட்டது. பயிர்த் தொழில் பன்னெடுங்காலமாகத் தமிழரது தொழிலாக அமைந்தது. இதற்கான முதல் சான்றினைத் தருவது பழந்தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியமாகும். உழவர்கள் வேளாண் மாந்தர் எனப்பட்டனர்.

*''வேளாண் மாந்தர்க் குழுதூண் அல்லது*
*இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி''*[48]

---

[48]. தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல், நூ. 81.

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. வேளாண்மை என்பதை ஒரு கலை என்றும், ஓர் அறிவியல் என்றும் கூறலாம். ''அறிவியல் நோக்கில் வேளாண்மை என்ற சொல்லுக்குப் பொருள் காண்கையில், அச்சொல் பயிர் செய்தல், கல்நடை வளர்த்தல், மரம் வளர்த்தல், மனித சமுதாயத்திற்குப் பயன்படும் ஒவ்வொரு பயிரையும் மற்றும் உயிர்களையும் வளர்த்தல், கோழிப் பண்ணை, பால் பண்ணை எனப் பொருள்படும் அறிவியல் பெருஞ்சொல்லாக விளங்குகிறது''[49].

### 3.7.1. வள்ளுவ விவசாயிகள்

கடலூர் மாவட்ட நாட்டுப்புற மக்கள் அனைவருமே சாதியின் அடிப்படையில் குலத்தொழிலாகப் பல்வேறு தொழில்களைச் செய்து வருகின்றனர். ஆனால், பார்ப்பனரைத் தவிர்த்து அனைவருக்கும் பொதுவானதாக வேளாண் தொழில் காணப்படுகிறது. வள்ளுவச் சமூகத்தவரும் வேளாண் தொழில் செய்யும் விவசாயிகளாகக் காணப்படுகின்றனர். வள்ளுவர்கள் யாரும் அதிக நிலங்களுக்கு உரிமையாளர்களாக இல்லை. ஓரிரு ஏக்கர் நிலங்களுக்குச் சொந்தமான சிறு விவசாயிகளாகவும், நிலங்களற்ற விவசாயக் கூலிகளாகவும், குத்தகைக்குப் பயிர் செய்பவர்களாகவுமே காணப்படுகின்றனர். இவர்கள் வருடத்திற்கு இரண்டு போகம் பயிர் செய்கின்றனர். மழைக் காலங்களில் ஏரிநீர்ப் பாசனத்தையும், வெயில் காலங்களில் பிற இனத்து மக்களிடமுள்ள நீர் மோட்டார் நீர்ப்பாசனத்தையும் செய்கின்றனர். நீர் மோட்டார்ப் பாசனத்திற்கு விளைச்சலில் மூன்றில் ஒரு பங்கு தண்ணீர் வாரமாக குத்தகை பேசிக் கொண்டும் தண்ணீர் விடப்படுகிறது. நிலங்களற்ற வள்ளுவ விவசாயக் கூலிகள் உயர்சாதி மக்களின் நிலங்களில் வேலைசெய்து வந்தனர். இன்றைய நிலையில் விவசாய வேலைகளைவிடக் கட்டட வேலைகளில் அதிகக் கூலியும், வருடம் முழுவதும் வேலையும் கிடைப்பதால் விவசாய வேலைகளைத் தவிர்த்துக் கட்டட வேலைகளுக்கே செல்கின்ற நிலை பெரிதும் காணப்படுகிறது.

''உழுதொழில் என்பது உழுதல், உரமிடுதல், நீர்ப் பாய்ச்சுதல், விதைத்தல், களை கட்டல், காத்தல், அறுவடை, பதப்படுத்துதல் எனப் பல

[49]. சி. சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப. 41.

கூறுகளாய் அமைவதாகும்''[50]. வள்ளுவர்கள் இவை அனைத்தையுமே அறிந்தவர்களாக உள்ளனர். ஆனால், பிற ஆதிதிராவிட இனத்தவர்களைப் போல் உடல் வளைந்து வேலை செய்பவர்களாக இவர்கள் இல்லை. பெரும்பான்மையாகக் கூலி கொடுத்தே இந்த வேலைகளை முடிப்பவர்களாக உள்ளனர்.

### 3.7.2. பயிர் வகைகள்

வள்ளுவ விவசாயிகள் நன்செய், புன்செய் நிலங்களின் தன்மைக்கேற்ப நன்செய்ப் பயிர்கள், புன்செய்ப் பயிர்கள் எனச் செய்கின்றனர். கெடில நதிக்கரையின் தென் பகுதியிலுள்ள செம்மண் வயல்களில் பணப் பயிரான முந்திரி சாகுபடி செய்யப்படுகிறது. ''பண்ருட்டிப் பலா'' என்னும் சிறப்பினையுடைய பலாப் பழங்களும் இப்பகுதியிலேயே விளைகின்றன. கெடில நதிக்குத் தென்பகுதியில் நெல் அதிகம் விளைகிறது. இன்றைய நிலையில் கரும்பு, சவுக்கு, கொய்யா ஆகியவை அதிகம் பயிர் செய்யப்படுகின்றன.

### 3.7.3. அறுவடை விடுமுறை

கடலூர் மாவட்டத்துப் பள்ளிக்கூடங்களுக்கு முன்பெல்லாம் தை மாதத்தில் அறுவடை செய்வதை முன்னிட்டு மாணவர்களுக்குப் பத்து நாட்கள் விடுமுறை அளிக்கப்படும். இதற்கு 'அறுவடை விடுமுறை' என்று பெயர். இந்த விடுமுறையில் மாணவர்கள் தங்களின் தம்பி, தங்கைகளை அழாமல் பார்த்துக் கொள்வது, சூடு பொறுக்குவது, முந்திரி கொட்டை பொறுக்குவது, நிலத்தில் வேலை செய்பவர்களுக்குத் தண்ணீர் தருவது போன்ற உதவிகளைச் செய்வர். விவசாய வேலைகளை உற்றுநோக்கல் மூலம் கற்றுக் கொள்வர். இன்றைய நிலையில் இதுபோன்ற விடுமுறை இல்லை. மாணவர்களும் விவசாய வேலைகளைக் கற்றுக் கொள்வதில்லை என்று அறியமுடிகிறது.

### 3.6.4. கால்நடை வளர்த்தல்

கடலூர் மாவட்டத்து வள்ளுவ மக்கள் ஆடு, மாடு, கோழி ஆகியவற்றை வளர்த்து வருகின்றனர். விவசாய வேலை முடிந்து வரும்பொழுது புல்,

---

[50]. சி. சசிவல்லி, பண்டைத் தமிழர் தொழில்கள், ப. 47.

தழைகளைக் கொண்டு வந்து போட்டும், ஆடு, மாடுகளை மேய்த்தும் கால்நடைகளைப் பெருக்குகின்றனர். கெடில நதியின் தென் பகுதியில் (காட்டுப்புறம்) வள்ளுவர்கள் அதிகப்படியாகப் பன்றிகளை வளர்க்கின்றனர். முந்திரிப் பழங்களைத் தின்று இவை நன்கு வளர்கின்றன. இதன்மூலம் நல்ல வருமானம் கிடைக்கிறது.

## 3.8. அரசுப் பணிகள்

வள்ளுவச் சமூகத்து மக்களில் மிகக் குறைந்த அளவிலேயே அரசுப் பணிகளில் உள்ளனர் என்பதைக் கள ஆய்வின் மூலம் அறிய முடிகிறது. இவர்கள் அனைத்துத் துறைளிலும் பணியாற்றுகின்றனர். எனினும், பெரும்பான்மையர் கடைநிலை ஊழியர்களாகவே உள்ளனர். மிகக் குறைந்த அளவினரே உயர் பதவிகள் வகிக்கும் அதிகாரிகளாக உள்ளனர். வட்டாட்சியர் (தாசில்தார்), நீதிபதி, வங்கி மேலாளர் என்ற நிலைகளிலும் வள்ளுவர்கள் இம்மாவட்டத்தில் காணப்படுகின்றனர். ‘‘வள்ளுவர்களில் பலர் அரசுப் பணிகளிலும், உயர் பதவிகளிலும் உள்ளனர். சென்னை போன்ற பெருநகரங்களில் பண்டாரம் சமூகத்தவர்கள் நீதிபதி போன்ற உயர் பதவிகளிலும் உள்ளதாகக் கள ஆய்வில் தெரியவருகிறது’’[51]. இன்றைய நிலையில் உயர்கல்வியினைப் பெற்றுள்ள வள்ளுவச் சமூகத்து மக்களில் பலரும் அரசுப் பணிகள் கிடைக்காமல் தனியார் துறையில் உயர் பதவிகளையும், நல்ல ஊதியத்தையும் பெற்று வருகின்றனர். இவர்களில் சிலர் அரசுப்பணி வேண்டாம் என்று சொல்லும் அளவிற்கு நல்ல வருமானம் பெற்று வருகின்ற நிலையும் காணப்படுகிறது.

## 3.9. தொகுப்புரை

- வள்ளுவச் சமூகத்து மக்கள் பல்வேறு தொழில்களைச் செய்து வருகின்றனர் என்றாலும், இவர்களின் குலத்தொழில்களாகத் தொன்றுதொட்டுச் சோதிடம், புரோகிதம், மருத்துவம் ஆகிய தொழில்களே இருந்து வருகின்றன. இவற்றில் சோதிடம் வள்ளுவர்களின் முதன்மையானதொரு குலத்தொழிலாக உள்ளது.

[51]. சீ. பக்தவத்சல பாரதி (பதி.ஆ), தமிழகத்தில் நாடோடிகள் சங்க காலம் முதல் சமகாலம் வரை, ப. 263.

- பிறந்த சாதகம் (செனன சாதகம்), பூப்புச் சாதகம் (இருது சாதகம்), திருமணப் பொருத்தம், பெயர் இராசி, கைரேகை ஆகியவற்றைப் பார்க்கும் இவர்கள் குழந்தை பிறந்த நேரத்தைக் கணக்கில் கொண்டு பிறப்பியத்தையும் (செனன சாதகம்), பெண் பூப்பெய்திய நேரத்தைக் கணக்கில் கொண்டு இருது சாதகத்தையும் கணித்து எழுதித் தருகின்றனர். சாதகம் எழுதப் பனை ஓலைகள், காகிதங்களைப் பயன்படுத்திய இவர்கள் இன்று கணினியையும் பயன்படுத்துகின்றனர்.

- கணிதச் சோதிடம் பார்த்துவந்த வள்ளுவக் குடும்பங்களில் சிலர் காண்டச் சோதிடம், கிளி சோதிடம் பார்ப்பவர்களாகவும் உள்ளனர்.

- பிற தாழ்த்தப்பட்ட சமூக மக்களின் பிறப்பு முதல் இறப்பு வரையிலான அனைத்து வாழ்வியல் சடங்குகளையும் நடத்தி வைக்கும் புரோகிதக் குருவாகவும் (Family Priest) வள்ளுவர்கள் இருந்து வருகின்றனர். ஒவ்வொரு வள்ளுவக் குடும்பத்திற்கும் தனித்தனிப் புரோகித கிராமங்கள் உள்ளன. ஒருவருக்குரிய கிராமத்தில் மற்றொருவர் உரியவரின் அனுமதியில்லாமல் புரோகிதம் செய்யும் வழக்கம் இல்லை.

- சேரிகளில் உள்ள மாரியம்மன் உள்ளிட்ட சிறுதெய்வங்களின் கோவில்களில் வள்ளுவர்கள் பூசாரிகளாக இருந்துவருகின்றனர். பீடை மாதமான மார்கழியில் மக்களுக்கு எவ்வகைக் கெடுதலும் வராமலிருக்க இறைவனை வேண்டி இசைப்பாடல்களுடன், தப்பு, சேமக்கலம் இசைத்துக் கொண்டு ஊர் பாடும் வழக்கம் வள்ளுவர்களிடம் காணப்படுகிறது.

- மூலிகைகளைக் கொண்டு மருந்துகளைச் செய்து (Natural Medicine) பித்தம், வாதம், சிலேத்துமம் ஆகியவற்றால் ஏற்படும் நோய்களைக் குணப்படுத்தும் நாட்டுப்புற இயற்கை மருத்துவர்களாகவும், தாயத்துப் போடுதல், முடிகயிறு போடுதல், வேப்பிலைப் பாடம் அடித்தல், திருநீறு மந்திரித்துக் கொடுத்தல், விசக்கடிகளுக்கு மாலை போடுதல் ஆகிய புனிதப் போலிப் பொருட்களைப் பயன்படுத்திச் செய்யும் (Magic Religious Medicine) நாட்டுப்புற மந்திர சமய மருத்துவர்களாகவும் வள்ளுவர்கள் காணப்படுகின்றனர்.

- ❖ தெருக்கூத்து வள்ளுவர்களின் கலைத் தொழிலாகத் தொன்றுதொட்டு இருந்து வருகிறது. தெருக்கூத்துக் கலைஞர்களாகவும், குழுவின் உரிமையாளர்களாகவும், தீவிர இரசிகர்களாகவும் இருந்து வரும் வள்ளுவ சமூகத்து மக்கள் தெருக்கூத்தினை அழியாமல் காப்பாற்றி வளர்த்தெடுப்பவர்களாகவும் உள்ளனர்.

- ❖ உயர்சாதி மரத் தச்சர்களுக்கு இணையாகத் தச்சுத் தொழிலையும், மரச் சிற்பத் தொழிலையும் செய்பவர்களாக வள்ளுவர்கள் காணப்படுகின்றனர். வள்ளுவ ஆழ்வாரில் ஒருவர் மட்டுமே மரத் தச்சுத் தொழில் செய்பவராக உள்ளார். மரத் தச்சுத் தொழில் செய்யும் மற்ற அனைத்து வள்ளுவர்களும் வள்ளுவ நாயனார் பிரிவைச் சார்ந்தவர்களாகவே உள்ளனர்.

- ❖ நாட்டுப்புறங்களில் அனைத்துச் சாதியினரும் செய்யும் வேளாண் தொழிலை வள்ளுவர்களும் செய்து வருகின்றனர். உழுதொழிலின் அனைத்துக் கூறுகளையும் அறிந்தவர்களாக இவர்கள் இருப்பினும் மிகக் குறைந்த அளவு நிலத்தினை உடைய சிறு விவசாயிகளாகவே உள்ளனர். வேளாண்மையின் மற்றொரு பிரிவான ஆடு, மாடு, கோழி, பன்றி ஆகிய கால்நடை வளர்ப்பிலும் ஈடுபட்டு வருகின்றனர்.

- ❖ பழங்காலத்தில் அரசனுக்கு அடுத்த நிலையில் இருந்துள்ள வள்ளுவர் சமூகத்தினருக்கு இன்றைய நிலையில் அரசுப் பணிகள் எட்டாக் கனியாகி விட்டன எனலாம். அங்கொன்றும் இங்கொன்றுமாய் மிகக் குறைந்த அளவிலேயே இவர்கள் அரசுப் பணிகளில் உள்ளனர். அவர்களில் ஒருசிலரே உயரதிகாரிகளாக உள்ளனர். பலரும் கடைநிலை ஊழியர்களாகவே காணப்படுகின்றனர்.

# 4. வள்ளுவர்களின் சமயமும் வழிபாடும்

## 4.1. முன்னுரை

சமயம் என்பதற்குச் ‘சமை’ என்பது பகுதி. உடம்பை வளர்ப்பதற்கு உணவுப் பொருள்களைச் சமைப்பது போல இறைவனை அடைவதற்கு உரிய சாதனங்களைச் சமைப்பது அல்லது பரிபக்குவப்படுத்துவது என்பது இதன் பொருளாகும். ‘‘சமயம் என்பது புனிதமான ஒன்றைப் பற்றிய நம்பிக்கைகளும் செயல்முறைகளும் அடங்கிய ஓர் ஒழுங்கமைந்த முறையாகும் என்பார் எமில் தர்கைம்’’[1]. இக்கருத்தை மேலும், பரந்த பொருளுடையதாக மாற்றி ‘‘ஒடியா என்பவர் பகுத்தறிவிற்கு எட்டாததும் செயலறிவிற்கு உட்படாததுமான ஓர் உலகத்துடன் தொடர்புகொள்ள மக்கள் ஏற்படுத்திக் கொண்ட முறையே ‘சமயம்’ என வரையறை செய்கிறார்’’[2].

## 4.2. தமிழர் சமயம்

மாந்த இனத்தின் நாகரிக வளர்ச்சி குமரிக்கண்டத்தில்தான் முகிழ்த்தது என்பது ஆய்வாளர்களின் கூற்றாகும். இக்குமரிக்கண்டத்தில் தனிப்பெரும் இனமாக வளர்ந்ததே தமிழினம் என அறியப்படுகிறது. தமிழர்கள் கடைபிடித்துவந்த சமயத்திற்கு என்ன பெயர் சூட்டப்பெற்றிருந்தது என்பதை அறிய இயலவில்லை. யாராலும் தோற்றுவிக்கப்படாத இயற்கையோடு இணைந்த இந்தச் சமயத்தைத் ‘தமிழர் சமயம்’ என்ற சொல்லால் குறிப்பிடலாம் என ம.சோ. விக்டர் குறிப்பிடுகிறார். தமிழர் சமயத்தை ஆய்வு செய்யுங்கால் மாந்தன் தோன்றிய இடம் மலையும் மலையைச் சார்ந்த இடமுமாகிய குறிஞ்சி நிலம் என்பதைத் தமிழரின் வழக்காறுகள் தெளிவுபடுத்துகின்றன எனவே, குறிஞ்சியில் தோன்றிய தமிழர் சமயம் முல்லை, மருதம் எனப் பரவியிருக்க வேண்டும் எனக் கருதப்படுகிறது.

‘‘தமிழர் சமயம் பல்வேறு மாற்றங்களைப் பெற்று வளர்ந்த நிலையில் சிவனியமும் மாலியமுமாக அவை திளைத்தன. இவை அனைத்தும் தமிழர் சமயத்தின் மறுபெயர்களே. சிவனியமும் மாலியமும் கால மாற்றங்களால்

---

[1]. சீ. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப. 499.

[2]. மேலது, ப. 499.

தோன்றியவைகளேயன்றிக் கருத்து முரண்பாடுகளால் தோன்றியவையல்ல. சிவனியமும் மாலியமும் இன்று தமிழர் சமயம் என்ற நிலையிலிருந்து மாறிவிட்டன"[3] என ம.சோ. விக்டர் குறிப்பிடுகிறார்.

### 4.3. வள்ளுவர் சமயம்

களப்பகுதியில் வள்ளுவர்கள் சிவனையும், திருமாலையும் முழுமுதற் கடவுளாகக் கொண்டுள்ளனர். சைவ, வைணவ பிரிவுகளைக் கொண்டுள்ள இவர்கள் தங்களை நாயன்மார் என்றும் ஆழ்வார் என்றும் குறிப்பிடுவதைப் பெருமையாகக் கருதுகின்றனர். இவர்களின் வாழ்வியல் சடங்குகள், வழிபாட்டு முறைகளில் சைவ, வைணவ சமயங்களின் வழக்காறுகளைக் காணமுடிகிறது. வள்ளுவ நாயனார்கள் வள்ளுவ ஆழ்வார்களுக்குப் பெண் கொடுப்பதும், வள்ளுவ ஆழ்வார்கள் வள்ளுவ நாயனார்களுக்குப் பெண் கொடுப்பதும் இன்றைய நிலையில் காணப்பட்டாலும், அவரவர்கள் அவரவர்களுக்குரிய சமயஞ்சார்ந்த வழக்காறுகளையே கடைபிடித்து வருகின்றனர். சமயம் மாறுவதென்பது களப்பகுதியில் இவர்களிடம் காணப்படவில்லை. வள்ளுவர்களில் ஒருசிலர் உடல்நிலை சரியில்லை என்றால் தர்காவில் (பள்ளிவாசல்) இரவு தங்கினால் நோய் குணமடையும் என்னும் நம்பிக்கையின் அடிப்படையில் செல்வதுண்டு. ஆனால், எவரும் இஸ்லாமியத்திற்கு மாறியதாகக் காணப்படவில்லை.

ஆலிச்சிகுடி, இலுப்பூர் ஆகிய கிராமங்களிலும் களப்பகுதி அருகிலுள்ள விழுப்புரம் மாவட்டம் உளுந்தூர்பேட்டையிலும் ஒருசில வள்ளுவ ஆழ்வார் குடும்பத்தினர் நான்கைந்து ஆண்டுகளுக்கு முன்னர் கிறித்துவச் சமயத்திற்கு மாறியுள்ளனர். இவர்கள் வழிபடுவதில் மட்டுமே கிறித்துவர்களாக உள்ளனர். இவர்களின் வாழ்வியல் சடங்குகள் அனைத்தும் வைணவ முறைப்படியே நடைபெறுகின்றன.

"வள்ளுவர்கள் புத்த தன்மத்தைத் தழுவிய அரசர்களாகும் சீவகன், முனிவண்ணன் முதலியவர்களுக்கு கன்ம குருக்களாயிருந்து காரியாதிகளை

---

[3]. ம.சோ. விக்டர், தமிழர் சமயம், ப. 14.

நடத்திவந்த அனுபவ சரித்திரங்களைச் சீவக சிந்தாமணி, சூளாமணி ஆகிய காவியங்களால் அறிந்து கொள்ளலாம்"[4].

"புத்த தன்மத்தைத் தழுவிய அரசர், வணிகர், வேளாளர் என்ற மூன்று தொழிலாளர்களுக்குங் கன்ம குருக்களாக விளங்கினவர்கள் வள்ளுவர்களன்றிப் புத்த சங்கஞ் சேர்ந்து துறவறத்துக்காளாகி ஞான குருக்களாக விளங்கியவர்களும் வள்ளுவர்களே"[5] என அயோத்திதாசப் பண்டிதர் குறிப்பிடுகிறார். இதன்மூலம் வள்ளுவர்கள் ஒருகாலத்தில் பௌத்த சமயஞ் சார்ந்தவர்களாக இருந்துள்ளனர் என விளக்குகின்றார்.

இன்றைய நிலையில் களப்பகுதியில் மட்டுமல்லாது தமிழகத்தின் பிற மாவட்டங்களிலும் வள்ளுவர்கள் சைவ சமயஞ் சார்ந்தவர்களாகவும், வைணவ சமயஞ் சார்ந்தவர்களாகவும் (பூசக்காரர்களாக, நாமக்காரர்களாக) வாழ்ந்து வருகின்றனர்.

### 4.4. வழிபாட்டு முறைகள்

"மாந்தனை விஞ்சிய பேராற்றல் ஒன்று இருக்கின்றது என்ற நம்பிக்கையே சமயத்திற்கான முதல்படியாகும். நம்பிய பேராற்றலைத் தன்பக்கம் ஈர்க்கவும் தனக்குத் துணையாகக் கொள்ளவும், அப்பேராற்றலை அழைக்க முயன்ற மாந்தன் அடுத்து அழைக்கும் வழிகளைத் தேடினான். அவ்வழிகளே வழிபாட்டு முறைகளாகும்"[6].

"மாந்தன் விரும்பிய உணவு, உடை, மகிழ்வு அனைத்தையும் அப்பேராற்றலும் விரும்பும் என நம்பி, தனக்கு நிறைவளிக்கும் அனைத்தையும் அவ்வாற்றலுக்குப் படைத்தான். படைக்கும் போதே, தனக்கு உள்ள இடையூறுகளையும் கூறி, அவற்றைக் களைந்தெறியுமாறு கேட்டுக் கொண்டான். இவ்வாறான விண்ணப்பங்களே பிற்காலத்தில் மந்திரங்களாகவும், செபங்களாகவும் உருவெடுத்தன"[7].

---

[4]. அயோத்திதாசப் பண்டிதர், தீண்டாமையின் வரலாறு, ப. 28.

[5]. மேலது, ப. 29.

[6]. ம.சோ. விக்டர், தமிழர் சமயம், ப. 17.

[7]. மேலது, ப. 17.

சைவ, வைணவ சமங்களைத் காலம் காலமாகக் கடைபிடித்து வரும் வள்ளுவர்கள் தங்களின் சமய வழிபாட்டிற்காகச் சில வடமொழி மந்திரங்களையும், தேவாரம், திருவாசகம், நடராசர் பத்து, திருப்புகழ், கந்தசஷ்டி கவசம், நாலாயிர திவ்ய பிரபந்தம், கருட பத்து, விஷ்ணு சகஸ்ரநாமம், விநாயகர் அகவல் ஆகிய ஆகமங்களையும் மனப்பாடமாகப் பாடி வழிபடுபவர்களாக உள்ளனர். இவர்கள் சிவன், திருமால், முருகன், பிள்ளையார் ஆகிய பெருந்தெய்வங்களையும், நாட்டு நெறியான சிறுதெய்வங்களையும் வழிபடுகின்றனர். மேலும், இயற்கை வழிபாடு, இறந்தோர் வழிபாடுகளையும் உடையவர்களாகக் காணப்படுகின்றனர்.

### 4.5. பெருந்தெய்வ வழிபாடு

பெருந்தெய்வ வழிபாட்டினைப் பொறுத்தவரையில் சிவனை வழிபடும் வள்ளுவ நாயனார்கள், திருமாலை வழிபடும் வள்ளுவ ஆழ்வார்கள் என இரு உள்ளினப் பிரிவுகள் காணப்படுகின்றன. இவர்கள் தங்களுக்குள் ஒருவரை ஒருவர் தாழ்த்திப் பேசியும் வந்துள்ளனர். இவர்கள் தங்களுக்குள் கொள்வினை கொடுப்பினை இல்லாமல் இருந்துள்ளனர். கால மாற்றத்தினால் தங்களுக்குள் கொண்டும் கொடுத்தும் ஏற்பட்டுள்ள உறவுகளால் இன்று தடைகளை உடைத்தெறிந்து இரு சமயத்தாரும் கலக்க ஆரம்பித்துள்ளனர். வள்ளுவ ஆழ்வார்கள் சிவன், முருகன், பிள்ளையார் ஆகிய சைவ சமயத் தெய்வங்களின் கோயில்களுக்குச் சென்று வணங்குவதும், விரதங்களைக் கடைபிடிப்பதும் தங்களின் பிள்ளைகளுக்குச் சைவ சமயப் பெயர்களைச் சூட்டுவதும் என்ற நிலைகள் காணப்படுகின்றன. எனினும், இவர்கள் வைணவ சமயத்தையும், திருநாமத்தையும் என்றும் கைவிடவில்லை. வள்ளுவ நாயனார்களில் பெரும்பான்மையினர் வைணவ தெய்வங்களாகிய திருமால், ஆஞ்சநேயன், கருடாழ்வார் ஆகியவற்றை வணங்குவதில்லை. வைணவ ஆலயங்களுக்குள்ளும் செல்வதில்லை. ஒரு சிலர் மட்டுமே வைணவ தெய்வங்களையும் வணங்குபவர்களாக உள்ளனர்.

*''அரியும் சிவனும் ஒன்னு - இதை*
*அறியாதவன் வாயில மண்ணு''*[8]

[8]. சீ. அம்பிகா, வயது. 59, வள்ளுவர் சமூகம், சேமக்கோட்டை, பண்ருட்டி வட்டம்.

என்ற பழமொழியினைச் சிவனையும் திருமாலையும் வணங்கும் வள்ளுவர்கள் கூறிவருகின்றனர்.

இவர்கள் தங்களின் வாழ்நாளில் ஒருமுறையாவது திருப்பதியும் திருவண்ணாமலையும் சென்று தரிசனம் செய்துவிட வேண்டும் என்னும் இறை நம்பிக்கை உடையவர்களாக உள்ளனர்.

> *"திருப்பதி மிதியார் பாதம்*
> *சிவனடி வணங்கா சென்னி*
> *பரத்தினில் வளர்ந்த தொந்தி*
> *இறப்போர்க்கு ஈயாத கை*
> *இனிய சொல் கேளாச் செவி"*[9]

என்னும் அடிகளின்படி, திருப்பதி சென்று நாராயணன் இருக்கும் அந்த மண்ணை மிதிக்காத பாதமும், சிவனடியினை வணங்காத தலையும் மனிதப் பிறவியின் பலனைப் பெறாதவையாகும்; அரியையும் சிவனையும் வணங்குவதே மனிதப் பிறவியின் பயன் எனக் களப்பகுதியில் வள்ளுவர்கள் கூறுகின்றனர்.

தெருக்கூத்தில் ஊறிப்போன வள்ளுவர்கள் சிவனுக்கும், திருமாலுக்கும் மாமன், மைத்துனன் உறவுநிலை உள்ளதாகக் காட்டும் தெருக்கூத்துப் புராணக் கருத்துகளை முழுவதும் நம்புகின்றனர். சிவ ஆலயங்களில் விஷ்ணுவும் உள்ளதை இக்கருத்திற்கு அரணாகக் கொள்கின்றனர்.

### 4.5.1. சிவ வழிபாடு

களப்பகுதியில் உள்ள நடுநாட்டுத் தலங்களான திருவதிகை, திருமாணிக்குழி, திருப்பாதிரிப் புலியூர், சிதம்பரம், திருநாவலூர், களப்பகுதிக்கு அருகில் உள்ள திருவெண்ணெய் நல்லூர் ஆகிய தலங்களையும், தேவார மூவருள் களப்பகுதியில் அடங்கிய திருவாமூர், திருநாவலூரில் பிறந்த அப்பர், சுந்தரர் ஆலயங்களையும், தமிழகத்தின் பிறமாவட்டங்களிலும் பிற மாநிலங்களிலும் உள்ள சிவத் தலங்களையும் சென்று வழிபடுபவர்களாக வள்ளுவ நாயனார்கள் காணப்படுகின்றனர். மேலும், கிராமங்களில் உள்ள சிறுசிறு சிவாலயங்களுக்கும் செல்கின்றனர். தேவாரம், திருவாசகம், திருவெம்பாவை ஆகிய சைவ ஆகமங்களைப் பாடுகின்றனர். சிவ ஆலயங்களில்

---

[9]. எஸ். ராமச்சந்திரன், வயது. 53, வள்ளுவர் சமூகம், களையூர், கடலூர் வட்டம்.

நடைபெறும் பெரியபுராண, சிவபுராணச் சொற்பொழிவுகளைக் கேட்டு மகிழ்கின்றனர். ஒவ்வோர் ஆண்டிலும் சிவனுக்குரிய விரத தினங்களைத் தவறாமல் கடைபிடித்து, விரதமிருந்து வழிபாடு செய்கின்றனர்.

சிவனை வழிபடும் வள்ளுவர்களின் வீட்டுச் சாமி அறைகளில் சிவனின் திருவுருவப்படம் வைத்துள்ளனர். ஆனால், சிவலிங்கம் இடம்பெறுவதில்லை. இதனை இறந்தோரின் சமாதியின்மீது மட்டும் வைத்துள்ளனர். சிவலிங்கம் வீட்டினுள் இருக்கக்கூடாது என்கின்றனர். வள்ளுவ ஆழ்வார்களும்கூடப் பிரதோஷம், மகாசிவராத்திரி, கார்த்திகை தீபம் ஆகியவற்றைத் தவறாமல் வழிபாடு செய்பவர்களாகக் காணப்படுகின்றனர்.

#### 4.5.1.1. பிரதோஷம்

மாதாமாதம் வரும் பிரதோஷத்தன்று விரதமிருந்து (உண்ணா நோன்பு) சிவாலயத்திற்குச் சென்று நெய்தீபம் ஏற்றி வில்வ இலையால் சிவலிங்கத்தினை அர்ச்சனை செய்து வழிபடுகின்றனர். அன்று வீட்டினைச் சுத்தம் செய்து சைவ உணவுகளைச் சமைத்து நடுவீட்டில் (சாமி அறையில்) வைத்துப் படைக்கின்றனர். வள்ளுவச் சமூகத்தில் பெண்களே இந்த நோன்பினை அதிகம் கடைபிடிப்பவர்களாக உள்ளனர்.

#### 4.5.1.2. மகா சிவராத்திரி

மாதம் ஒரு சிவராத்திரி வரும். இதனை மாத சிவராத்திரி என்பர். மாசி மாதத்தில் வரும் சிவராத்திரி மகா சிவராத்திரி ஆகும். வள்ளுவர் சமூகத்தினர் இந்த மகா சிவராத்திரியை வழிபாடு செய்கின்றனர். அன்று அதிகாலை எழுந்து வீட்டினைக் கழுவி அல்லது சாணம் மெழுகிச் சுத்தம் செய்து குளித்துவிட்டு விரதம் இருக்கின்றனர். அன்று மாலை சைவ உணவுகளான சாம்பார், சோறு, பொரியல், வடை, அப்பளம், பாயாசம், சுண்டல், உண்டை, கொழுக்கட்டை செய்து நடுவீட்டில் (சாமி அறை) வைத்துப் படைக்கின்றனர். தேங்காய், பழம், வத்தி, கற்பூரம், நல்விளக்கு ஏற்றுதல் ஆகியவை இவர்களின் வழிபாட்டில் எப்பொழுதும் இடம் பெறுகின்றன. படைக்கும்பொழுது சிவனையும், பார்வதியையும் நினைத்து வணங்கி அவர்களின் புகழ்பாடும் பாடல்களைப் பாடி வழிபடுகின்றனர். பின்னர் குடும்பத்தலைவர், படைத்த பொருட்களைக் குடும்ப உறுப்பினர்களுக்குப் பிரசாதமாகக் கொடுக்கின்றார். சிவராத்திரியன்று இரவு வள்ளுவர்கள் யாரும் உறங்குவதில்லை. ‘‘அன்று கண்ணு முழிச்சா

(கண் விழித்தால்) இறந்தபின் சொர்க்கம் போவோம் (வீடுபேறு)'' என்ற நம்பிக்கை உடையவர்களாகக் காணப்படுகின்றனர். எனவே, அன்று இரவு கண்விழிப்பதற்காக ஒரு குடும்பத்தினரோ அல்லது உறவினர்களோ சேர்ந்து புராணங்களில் இடம் பெற்றுள்ள சிவன், பார்வதி கதைகளை விடிய விடிய ஒருவர் கூற மற்றவர்கள் கேட்டுக் கொண்டிருப்பர். பண்ருட்டி வட்டாரத்தில் சில கிராமங்களில் சிவராத்திரியன்று நடைபெறும் தெருக் கூத்தினைக் கண்டு களிப்பர். பண்ருட்டி, கடலூர் வட்டாரத்துத் திரையரங்குகளில் சிவராத்திரியன்று கணிவிழிப்பதற்காகவே இரவு சிவனது பெருமைகளைக் கூறும் புராணத் திரைப்படங்கள் இரண்டு (இரவு முழுவதும்) காண்பிக்கப்படும். அவற்றை வள்ளுவர்களும் பார்க்கின்றனர். வள்ளுவர்களில் சிலர் சிவ ஆலயங்களில் சென்று இரவு தங்குகின்றனர். பண்ருட்டி வட்டாரத்து மக்கள் திருவதிகை வீரட்டானேஸ்வரர் கோவிலிலும், கடலூர் வட்டாரத்து மக்கள் திருப்பாதிரிப்புலியூர் பாடலேஸ்வரர் கோவிலிலும் தங்குகின்ற நிலை காணப்படுகிறது. இன்றைய நிலையில் தொலைக்காட்சியில் ஒளிபரப்பாகும் புராணப் படங்களையும், ஒலி ஒளிக் கருவி மூலம் புராணப் படங்களைப் போட்டுப் பார்த்தும் சிவராத்திரி அன்று கண்விழிக்கின்றனர். இவ்வாறு சிவராத்திரியை வள்ளுவர் இனத்தின் இரு உள்ளினப் பிரிவினர்களும் தவறாமல் வழிபட்டு வருகின்றனர்.

### 4.5.1.3. கார்த்திகை தீபம்

கார்த்திகை மாதத்தில் கார்த்திகை நட்சத்திரத்தன்று கார்த்திகை தீப விழா கொண்டாடப்படுகிறது. கார்த்திகை மாதத்தில் வருவதால் 'கார்த்திகை தீபம்' என்றும், திருவண்ணாமலையில் இவ்விழா சிறப்பாகக் கொண்டாடப்படுவதாலும், அண்ணாமலையாருக்கு உரிய விழா என்பதாலும் இதனைத் 'திருவண்ணாமலை தீபம்' என்றும் வள்ளுவர்கள் குறிப்பிடுகின்றனர்.

கார்த்திகை தீபத்தன்றும் வீடுவாசலைத் தூய்மை செய்து விரதமிருந்து வழிபாடு செய்கின்றனர். அன்று மாலை சைவ உணவுகள் செய்து நடு வீட்டில் படைக்கின்றனர். அப்போது நல்விளக்கு, குத்து விளக்கு இவற்றுடன் பச்சரிசியால் இடித்த மாவினைப் பிசைந்து நல்லெண்ணெய் ஊற்றி விளக்கு ஏற்றுகின்றனர். இதற்கு 'மாவிளக்கு' என்று பெயர். சிவனை வழிபட்டுப் பின்னர் அனைவரும் உண்பர். இருட்டத் தொடங்கும்போது மண்ணால் செய்யப்பட்ட அகல் விளக்குகளைத் தண்ணீரில் ஊறவைத்துக் காயவைத்து அதில் நல்லெண்ணெய் ஊற்றி வாசலில், வாயிற்படிகளில், அம்மி, குப்பைக்குழி, தோட்டம் என்று

அனைத்து இடங்களிலும் தீபம் ஏற்றுவர். இதனை ‘அண்ணாமலை கார்த்தி’ என்று வழங்குகின்றனர். அன்று சிலர் திருவண்ணாமலை சென்று தீப தரிசனம் செய்து வரும் வழக்கமுடையவர்களாக உள்ளனர்.

### 4.5.1.4. நாட்டுக் கார்த்தி

இரண்டாம் நாள் வழிபடும் கார்த்திகை விழாவினை நாட்டுக் கார்த்தி என்றழைக்கின்றனர். அன்று விரதம் இருப்பதில்லை. மாலையில் சோறு, கத்திரிக்காய், பச்சமொச்சை, கருவாடு ஆகியவற்றை இட்டுக் கருவாட்டுக் குழம்பு வைக்கின்றனர். அதனுடன் சிலர் நாட்டுக் கோழிக் குழம்பும் வைக்கின்றனர். முருங்கைக் கீரை துவட்டுகின்றனர். இவற்றை வைத்தே படைக்கின்றனர். முதல்நாள் சைவ உணவுகள் படைத்தது அண்ணாமலையாருக்கும் உண்ணாமுலை அம்மனுக்கும் என்று கூறுகின்றனர். அண்ணாமலையார் ஒரு வண்ணாரப் பெண்ணை (வண்ணாத்தி) வைத்துக் கொண்டதாகவும் அவ்வாண்ணாரப் பெண்ணைத் திருப்திபடுத்தவே நாட்டுக் கார்த்தி அன்று அசைவ உணவு படைப்பதாகவும் கூறுகின்றனர். இவையெல்லாம் வழிவழியாக நடைபெறும் நம்பிக்கையின் அடிப்படையில் செய்யப்படுபவையாகக் கூறப்படுகின்றன. அன்று இரவு வீட்டின் எல்லாப் பகுதிகளுக்கும் அகல்விளக்கு ஏற்றப்படுகிறது.

### 4.5.1.5. கார்த்தி சுற்றுதல்

வள்ளுவச் சிறார்கள் கார்த்திகை தீபத்தினை ஒட்டிப் பனம் பூ, சவுக்கைப் பூ, புளியமரப் பட்டை இவற்றைத் தேடிச் சேகரிப்பர். இவ்வாறு சேகரித்தவற்றை எரித்துச் சுட்டுக் கரியாக்கி, பச்சைப் பனைமட்டை அல்லது தழைகள் கொண்டு மூடி விடுவர். நெருப்புத் தணிந்து கரி ஆறியபின், மாலை நேரத்தில் எடுத்து நரநரவென்று இருக்கும் வகையில் அவற்றைப் பொடியாக்குவர். பொடியாக்கப்பட்ட கரியைத் துணியில் சுற்றி உருளை வடிவில் பொட்டலம் போலக் கட்டுவர். இந்தப் பொட்டலத்தை முக்கவைகளாகக் கிளைத்திருக்கும் பச்சைக் காட்டாமணக்குக் கழி அல்லது பனைமட்டையில் பொருத்துவர். பின் அதன் முனையில் ஐந்தடி முதல் ஏழடி வரை உள்ள தேங்காய் நார்க் கயிற்றினால் கட்டிவிடுவர். இதுவே ‘கார்த்தி’ எனப்படும். கார்த்திகை தீபத்தன்று இரவில், துணியால் சுற்றப்பட்ட கரிப்பொட்டலத்தின்மீது கட்டை நெருப்புகளை வைத்து, கயிற்றைக் கையில் பிடித்துத் தலைக்கு மேலே சுற்றும்பொழுது, தீப்பொறிகள் வட்ட வடிவில் கொட்டிச் செல்வது காண்பதற்கு அழகு பயப்பதாக

இருக்கும். இந்தக் கார்த்தியை அண்ணாமலை கார்த்தியென்றும், நாட்டுக் கார்த்தியென்றும் கூறுகின்றனர். இந்தக் கார்த்தியை நடுவீட்டில் சாமிக்குப் படைக்கும் பொழுது வைத்துப் படைத்துப் பின்னரே இரவினில் சுற்றுகின்றனர். கார்த்தி சுற்றும் வள்ளுவச் சிறார்கள் பின்வரும் பாடலைப் பாடிக்கொண்டே சுற்றுகின்றனர்.

> *''கார்த்தியோ கார்த்தி கம்மங்கார்த்தி*
> *ஏரிக்கரை மோட்டு மேல*
> *எள்ளுக்கா பொறுக்கப் போன*
> *வள்ளுவ துளுக்கப் பையன்*
> *வளைத்துக் கொண்டான் - நான்*
> *திமிரிக்கொண்டேன், திமிரிக்கொண்டேன்''*[10]

வள்ளுவப் பெரியவர்களும் இந்தக் கார்த்தியை ''ஒரு சுத்தாவது சுத்தனாதான் பீடை தொலையும்'' எனக் கூறி சுற்றுகின்றனர். அப்போது இவர்களும் இந்தப் பாடலைப் பாடியவாறே சுற்றுகின்றனர்.

### 4.5.2. முருக வழிபாடு

வள்ளுவர் சமூக மக்கள் தொன்றுதொட்டு முருகனை வழிபாடு செய்பவர்களாக உள்ளனர். உள்ளினப் பிரிவினராகிய பண்டாரங்கள் என்று அழைக்கப்படும் வள்ளுவ நாயனார்களே முருகன் மீது அதிக பக்தியும், மிகுந்த ஈடுபாடும் கொண்டவர்களாகக் காணப்படுகின்றனர். இவர்களின் வாழ்வில் ஒரு முறையேனும் அறுபடை வீடுகளுக்குச் சென்று வரவேண்டும் என்ற எண்ணம் உடையவர்களாக உள்ளனர். ஆண்டிற்கு ஒருமுறை முருகன் ஆலயங்களில் மொட்டை அடித்துக் கொண்டு வழிபாடு செய்கின்றனர். களப்பகுதியில் இவர்கள் குழுக்களாகச் சுற்றுக்குளம், பாலூர், சான்றோர் பாளையம், சேமக்கோட்டை ஆகிய ஊர்களில் சிறிய அளவிலான முருகன் கோயில்களை அமைத்துள்ளனர். அக்கோயில்களுக்குப் பூசாரிகளாகவும் இவர்களே இருந்து வருகின்றனர்.

#### 4.5.2.1. தைக் கிருத்திகை

வள்ளுவர்கள் கார்த்திகை நட்சத்திரத்தைக் 'கிருத்திகை' என்று குறிப்பிடுகின்றனர். எனவே, தை மாதத்தில் வரும் கார்த்திகை நட்சத்திரம் தைக்

---

[10]. வி. வரதராஜ், வயது. 53, வள்ளுவர் சமூகம், சேமக்கோட்டை, பண்ருட்டி வட்டம்.

கிருத்திகை என்றாயிற்று. தைக் கிருத்திகை அன்று கார்த்திகேயனான முருகன் பிறந்தான் என்ற நம்பிக்கையின்வழி இந்த நாள் முருகனுக்குரியதாகக் கொண்டாடப்படுகிறது. அன்று வள்ளுவர்கள் வீட்டினைச் சுத்தம் செய்து விரதமிருந்து சைவ உணவு, பலகார, பட்சணங்கள் செய்து படைக்கின்றனர். அப்போது திருப்புகழ், கந்தசஷ்டி கவசம் ஆகியவற்றிலிருந்து பாடல்களைப் பாடுகின்றனர். 'அரோகரா! அரோகரா!' என முருகனை அழைக்கின்ற வழக்கம் காணப்படுகிறது. வள்ளுவர்களில் வசதிபடைத்தவர்கள் அன்று பழனிக்குச் சென்று முருகனை வழிபடுகின்றனர். சிலர் மயிலம், தென்மயிலம் எனப்படும் விளங்கல்பட்டுக்குச் சென்று வழிபாடு செய்கின்றனர். பலரும் வீட்டிலேயே வழிபடுகின்றனர். சாதாரண நாட்களில் சமைக்கும் உணவினைவிடக் கிருத்திகை அன்று சிறப்பாக உணவு சமைத்துப் படைக்கின்றனர். ''வெறு (வெற்று) நாட்களில் கீரை, ஒரு குழம்பு, ஒரு ரசம், மோர் இவற்றுள் ஒன்றிரண்டைச் சேர்த்துக் கொள்பவர்கள் கிருத்திகை போன்ற சிறப்பு நாட்களில் இவற்றுள் ஒரு கீரை அல்லது ஒரு கூட்டு அல்லது இரண்டும், ஒரு பொரியல் அல்லது வறுவல் இரண்டும், ஒரு குழம்பு, ஒரு இரசமும், மோரும் இவற்றுடன் சர்க்கரைப் பொங்கல், வடை, அப்பளம், பாயாசம் முதலியனவும் சேர்த்துக் கொள்வர்''[11].

### 4.5.2.2. பங்குனி உத்திரம்

களப்பகுதியில் பங்குனி உத்திரத் திருவிழா முருக வழிபாட்டில் மிகவும் சிறப்புக்குரிய ஒன்றாகக் கொண்டாடப்படுகிறது. வள்ளுவர் சமூகத்தில் உள்ளினப் பிரிவான வள்ளுவ நாயனார்கள் இதில் மிகுந்த ஈடுபாடும், பக்தியும் உடையவர்களாகக் காணப்படுகின்றனர். பங்குனி உத்திரத்திற்கு மூன்று நாட்களுக்கு முன்னரே அருகில் உள்ள முருகன் கோயிலில் காப்புக் கட்டிக் கொண்டு மது, மாது, மாமிசம் இவற்றைத் தவிர்த்து நோன்பிருக்கின்றனர். பங்குனி உத்திரத்தன்று ஈரமான காவி உடையுடன், காவடி எடுத்து வீதி வீதியாக ஆடி வருகின்றனர். அப்போது சங்கு, சேமக்கலம் முழங்க முருகனுக்குரிய பக்திப் பாடல்கள் பாடப்படுகின்றன. சிலர் நாக்கில் சிறிய வேல் குத்திக் கொண்டும் வருகின்றனர். இவ்வாறாக மூன்று கிராமங்களுக்கும் சென்று ஆடி வருகின்றனர். இது 'ஊர் சுற்றுதல்', 'மூன்று எல்லை மிதித்தல்' என்று கூறப்படுகிறது. காவடி எடுத்து ஆடிவரும் பக்தர்களுக்கு வள்ளுவப் பெண்கள்

---

[11]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 435.

அவர்களின் காலில் நீர் ஊற்றி மஞ்சள், குங்குமம் வைத்துப் பாதபூசை செய்து கற்பூர தீபம் ஏற்றி வணங்குகின்றனர். காவடி எடுத்து ஆடி வருபவர்கள் ஆசி கூறித் திருநீறு பூசிவிடுகிறார். கற்பூரத் தட்டில் காசு போடுகின்றனர். முன்பெல்லாம் தானியங்கள் கொடுப்பர். அதற்காகவே காவடிகளுடன் பெண்கள் கூடைகளும் கொண்டுவருவர்.

இவ்வாறாக மூன்று எல்லைகளை மிதித்ததும் மாலையில் அனைத்துக் காவடிகளும் திருவிழா ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் முருகன் கோயிலுக்குச் சென்றடைகின்றன. அங்கு மேளதாளங்களுடன் காவடி ஆட்டம் ஆடப்படுகிறது. பின்னர் கோவிலை மூன்றுமுறை சுற்றிவந்து தீ மிதிக்கின்றனர். அப்போது காவடி எடுக்காதவர்களும் விரதமிருந்து தீ மிதிக்கும் வழக்கம் காணப்படுகிறது. அப்போது "அரோகரா! அரோகரா!" என்று முருகனை அழைக்கின்றனர்.

தீ மிதிப்பதால் பங்குனி உத்திரம் 'நெருப்புத் திருவிழா' என்றும் 'தீமிதி திருவிழா' என்றும் கூறப்படுகிறது. தீ மிதித்த பின்னர் நீர் ஊற்றி நெருப்பினை அணைக்கின்றனர். நனைந்த கரித்துண்டுகளை அனைவரும் வீட்டிற்குக் கொண்டு செல்கின்றனர். வள்ளுவர்களும் எடுத்துச் சென்று தானியங்கள் கொட்டி வைக்கும் பானைகள், தொம்பைகள், பணப் பெட்டிகள் ஆகியவற்றில் சிறுசிறு துண்டுகளைப் போட்டு வைக்கின்றனர். இதற்குத் தானியங்களும் பணம், பொருட்களும் வீட்டில் வற்றாமல் இருக்கும் நம்பிக்கையின் வெளிப்பாடுதான் காரணம் என்று கூறப்படுகிறது.

களப்பகுதியில் முருகனுக்குத் தீமிதிக்கும் திருவிழாவிற்குத் திருநாவலூர், வையாபுரிப்பட்டினம், வேலுடையான்பட்டு (நெய்வேலி), விலங்கல்பட்டு ஆகிய முருகன் கோயில்கள் சிறப்புக்குரியனவாகக் காணப்படுகின்றன. இங்கெல்லாம் வள்ளுவ நாயனார்கள் காவடி எடுத்துத் தீமிதிக்க வேண்டுதல் செய்துகொண்டு வழிபாடு செய்கின்றனர்.

### 4.5.3. பிள்ளையார் வழிபாடு

வள்ளுவர் சமூகத்தில் இரண்டு உள்ளினப் பிரிவுகள் இருந்தாலும் இவர்கள் இருவரும் முழுமனத்துடன் முழுமுதற்கடவுளாக எண்ணி வழிபடும் கடவுள் 'பிள்ளையார்' ஆகும். இவர்களின் பிறப்பு முதல் இறப்பு வரையிலான வாழ்வியற் சடங்குகளனைத்தும் பசுவின் சாணம் அல்லது மஞ்சள் தூளினால் பிள்ளையார் பிடிக்கப்பட்டு அருகம்புல் செருகி வடமொழியிலும், தமிழிலும் சில

மந்திரங்களையும், பாடல்களையும் பாடி வழிபாடு செய்த பின்னரே தொடங்கப்படுகின்றன. வள்ளுவர்களின் கலைத் தொழிலான தெருக்கூத்தில்கூடப் பிள்ளையார் வழிபாடு முதன்மை பெறுகிறது. பிள்ளையார் தெய்வம் வள்ளுவர்களின் வாழ்வில் இருந்து பிரித்துப்பார்க்க முடியாத அளவிற்கு நிலையான இடத்தினைப் பிடித்துள்ளது.

வள்ளுவர் சமூகத்தில் எந்தச் சடங்கிற்கும் புரோகிதராகப் பிராமணர்களை அழைப்பதில்லை. ஒருவரின் வீட்டுச் சடங்கிற்கு அவரின் மாமன் மைத்துனர் முறையினரே புரோகிதராக இருப்பர். ஏதேனும் ஒரு சிறு சடங்கில் மாமன், மைத்துனர்களில் புரோகிதம் தெரிந்தவர் இல்லையெனில் சடங்கிற்கு உரியவரே புரோகிதம் தெரியாத மாமன், மைத்துனரை மனைப்பலகையில் புரோகிதராக அமர வைத்து விட்டு மந்திரங்களைக் கூறிச் சடங்கினைச் செய்து முடிப்பார். இதனை, ''புள்ளையாரா புடிச்சி வச்சிட்டு காரியத்த பாரு'' என்ற வள்ளுவர்களின் வழக்குச் சொற்கள் காட்டுகின்றன. பசுவின் சாணம் கூம்பாக உருட்டப்பட்டு அருகம்புல் செருகிக் குங்குமம் வைத்து மனைப் பலகையில் வைத்தால் அது பிள்ளையாராக மதிக்கப்படுவது போல், மந்திரங்கள் தெரியாத ஒருவர் பொட்டு வைத்துக் கொண்டு மனைப்பலகையில் அமர்ந்தால் அவரும் புரோகிதராக மதிக்கப்படும் நிலை காணப்படுகிறது.

#### 4.5.3.1. பிள்ளையார் சதுர்த்தி

விநாயகர் சதுர்த்தி என்பது வட்டார வழக்கில் 'புள்ளையார் சவுத்தி' என்றும் வழங்கப்படுகிறது. ''ஆவணி வளர்பிறையில் சதுர்த்தி அன்று வழக்கமான துப்புரவுகளுடன் இது தொடங்கப்பெறும். களிமண் பிள்ளையார் செய்யப்படும் அல்லது விலைக்கு வாங்கப்படும். சிறுவர்கள் தும்பைப்பூ, வில்வம், வன்னி இலை, நாவல் பழம், விளாம்பழம், கொய்யா, கம்பங்கதிர், சோளக்கதிர் முதலியன கொய்து வருவர்; இலவசமாகக் கிடைக்காத இடங்களில் இவை விலைக்கு வாங்கப்படும். பிள்ளையாரை முறைப்படித் திருமுழுக்காட்டி அணி செய்து, பல்வகைப் பழவகைகள், காய்கறி வகைகள், சிற்றுண்டி வகைகள் வைத்துப் படைப்பர். சுண்டலும் கொழுக்கட்டையும் இன்றியமையாதவை. மறுநாளும் அதற்கு மறுநாளும் இவற்றை வைத்துப் படைப்பர். மூன்றாம் நாள் பிள்ளையாரைக் கொண்டுபோய் ஏதேனும் ஒரு நீர்நிலையில் விட்டுவிட்டு வந்து

விடுவர். பிள்ளையாரின் தொப்பையில் பதிக்கப்பட்டிருக்கும் காசு கொண்டுபோய் நீரில் விடும் சிறார்களைச் சேரும்''[12].

வள்ளுவர் சமூகத்து மக்களும் இவ்வாறே பிள்ளையாரை வணங்குகின்றனர். கேழ்வரகுக் கதிர், அவல், பொரிகடலையும் இவர்களின் படையலில் இடம்பெறும். அன்று விநாயகப் பெருமானுக்கு விரதம் இருப்பர். பிள்ளையார் சதுர்த்தியன்று மாவினால் செய்யப்படும் பெரிய விநாயகர் சிலைகளை வாங்கி ஊரார், ஒரு தெருவினர் அல்லது ஒரு சமூகத்து மக்கள் வழிபட்டுக் கடலில் கரைப்பதென்பது தற்போது நிலவிவருகிறது. கடலூர் வட்டாரத்து வள்ளுவர்கள் இவ்வாறு செய்வதில்லை. குமராபுரத்தில் மட்டும் வள்ளுவ ஆழ்வாரான இராமச்சந்திரன் என்பவர் விநாயகருக்குத் தனிக் கோயில் அமைத்துத் திருவிழா செய்துவருகிறார். ஆனால், பண்ருட்டி வட்டத்தில் வையாபுரிப் பட்டினம் என்ற கிராமத்தில் மிகப்பெரிய விநாயகர் சிலைகளெல்லாம் செய்யப்படுவதால் இதனைச் சுற்றியுள்ள கிராமத்து வள்ளுவர்கள் தற்போது பெரிய சிலை வாங்கி அதற்குக் கொட்டகை அமைத்து வழிபாடு செய்து மூன்றாம் நாள் லாரியில் (சரக்குந்து) ஏற்றிச்சென்று ஆரவாரத்துடன் தேவனாம்பட்டினம் கடலில் கரைக்கின்றனர்.

### 4.5.3.2. சங்கடகர சதுர்த்தி

மாதாமாதம் வரும் சங்கடகர சதுர்த்தியை ஒரு சிலரே வழிபடுகின்றனர். புரட்டாசி மாதம் வரும் சங்கடகர சதுர்த்தி மகா சங்கடகர சதுர்த்தியாகும். அன்றைய நாளில் விநாயகரை அருகம்புல் மாலை போட்டு விரதமிருந்து வழிபாடு செய்தால் சிறார்கள் கல்வியில் மேலோங்குவர் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் வள்ளுவர்கள் வழிபாடு செய்கின்றனர். வள்ளுவச் சிறார்களும் அன்று விரதமிருந்து விநாயகரை வழிபடுகின்றனர்.

### 4.5.4. திருமால் வழிபாடு

வள்ளுவர் சமூகத்தில் உள்ளினப் பிரிவான வள்ளுவ ஆழ்வார்கள் திருமாலை முழுமுதற்கடவுளாகக் கொண்டுள்ளனர். வைணவ சமயஞ்சார்ந்த இவர்கள் அனைவரும் தென்கலைப் பிரிவினர் ஆவர். இவர்கள் திருமாலுக்கு அடிமை அதாவது தாசன் என்பதால் இவர்கள் வள்ளுவ தாசரி, ஆழ்வார் தாசரி

---

[12]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 439.

என்று அழைக்கப்படுகின்றனர். இவர்கள் களப்பகுதியில் குழுக்களாக வசிக்கும் இடத்தை 'வள்ளுவர் தெரு', 'ஐயர் தெரு', 'தாதப்பாளையம்', 'தாதத்தெரு' என்றும் இவர்களைத் தாதர், தாதன், ஐயர் என்றும் வழங்குவர். புலாலை விரும்பி உண்ணும் சிலரும் சைவ உணவுகளையே உண்ணும் பலருமாக இச்சமூகத்தில் காணப்படுகின்றனர்.

இவர்களில் முத்திரை தானம் பெற்றவர்கள் என்றுமே அசைவ உணவினைத் தொடுவதில்லை. "வள்ளுவ ஆழ்வார்களில் சிலர் திருப்பதி, திருவரங்கம், திருவந்திபுரம், திருக்கோவிலூர் ஆகிய ஏதேனும் ஒரு வைணவத் தலத்திற்குச் சென்று பகவானை வழிபட்டு உலோகத்தினால் செய்யப்பட்ட சங்கு, சக்கரம், திருநாமம் இவற்றை மை தடவிச் (பச்சைகுத்தும் மை) சூடுபடுத்தித் திருநாமத்தை நெற்றியிலும், சங்கு சக்கரங்களை இரு புஜங்களிலும் (தோள்களிலும்) பகவானின் திருப்பாதங்களில் வைத்துப் போட்டுக் கொள்கின்றனர். இதனை 'முத்திரை தானம் பெறுதல்' அல்லது 'வைணவ தீட்சை பெறுதல்' என்ற சொற்களால் குறிப்பிடுகின்றனர்"[13]. இந்தத் திருநாமம், சங்கு, சக்கரம் பச்சை குத்தியதுபோல் உடலில் என்றும் அழியாமல் காணப்படும். இன்றைய தலைமுறையில் பலரும் முத்திரை போட்டுக் கொள்வதில்லை. ஆனால் முன்னோர்கள் கடைபிடித்த வைணவ நெறிகளைத் தவறாமல் கடைபிடித்து வருகின்ற நிலை காணப்படுகிறது.

இவர்கள் அதிகாலையில் எழுந்து குளித்துவிட்டு நெற்றியில் திருநாமத்தை இட்டுக்கொண்டு நாராயணனை வணங்கிய பிறகே அலுவலகங்களுக்கும் அல்லது சோதிடம் பார்ப்பதற்கும் செல்கின்றனர். சோதிடத்தைக் கணிக்கும் பொழுதுகூட 'ஸ்ரீராமஜெயம்' என்று எழுதிய பின்னரே தொடங்குகின்றனர். நாராயணனுக்கு உரிய தப்பு, சேமக்கலம் என்னும் இசைக் கருவிகளை வள்ளுவ ஆழ்வார்களைத் தவிர வேறு எந்தச் சாதியினரும் இசைப்பதில்லை. இவர்கள் தப்பு, சேமக்கல இசையுடன் திருமாலின் தசாவதாரங்களின் பெருமைகள், கருட பத்து, நாலாயிர திவ்ய பிரபந்தம், இராம நாடகம் ஆகியவற்றைப் பாடி வழிபடுகின்றனர்.

இவர்களில் சிலரின் வீடுகளில் இரண்டடி முதல் மூன்றடி வரையிலான இரும்பினால் செய்யப்பட்ட கருட கம்பம் இன்றும் காணப்படுகிறது. இதுவும்

---

[13]. நித்தியக் கல்யாணி, வயது. 55, வள்ளுவர் சமூகம், மடுகரை, புதுச்சேரி.

நாராயணனுக்கு உரிய பொருள் என்று கூறுகின்றனர். வழிபாட்டின்போது கருட கம்பத்தில் எண்ணெய் ஊற்றி விளக்கேற்றுவர் எனத் தெரிகிறது. வள்ளுவ ஆழ்வார்களிடையே எவையேனும் பிரச்சனைகள் அல்லது வழக்குகள் ஏற்பட்டால் அக்காலத்தில் வழக்கிற்குரியவர் கருடகம்பத்தில் எண்ணெய் ஊற்றி விளக்கேற்றிப் பெருமாள் கோயில் முன்வைத்து அதன்மீது சத்தியம் செய்து விட்டார் எனில் அவர்மீது எந்த விசாரணையும் இன்றி அப்படியே விட்டுவிடுவர். காரணம் கருடகம்பத்தின் மீது பொய்ச் சத்தியம் செய்தவர் மூன்று மாதத்திற்குள் கண்கள் தெரியாமலோ இறந்தோ போய்விடுவர் என்ற ஆணித்தரமான நம்பிக்கையே ஆகும்.

### 4.5.4.1. புரட்டாசி விரதம்

வள்ளுவ ஆழ்வார்கள் புரட்டாசி மாதம் முழுவதும் மது, மாமிசம் தவிர்த்து நாராயணனை வழிபடுகின்றனர். இம்மாதத்தில் வரும் ஐந்து சனிக்கிழமைகளும் விரதமிருந்து (உண்ணா நோன்பிருந்து) வீட்டினைத் தூய்மை செய்து சைவ உணவினைச் சமைத்துப் படைக்கின்றனர். படைக்கும் பொழுது வெல்லம், வாழைப்பழம், துளசி, தயிர் இவற்றால் செய்த பஞ்சாமிர்தம், துளசித் தீர்த்தம், துளசி மாலை இவையனைத்தும் இடம்பெறுகின்றன. பல்வேறு பழவகைகளும் இடம்பெறுகின்றன. வள்ளுவ ஆழ்வார்களில் சிலர் தினமும் திருநாமம் போட்டுக் கொள்வதில்லை. அவர்கள்கூட ஐந்து சனிக் கிழமைகளிலும் அவசியம் திருநாமம் இட்டுக் கொள்வர். களப்பகுதியில் உள்ளவர்கள் தென்கலைப் பிரிவினர் என்பதால் பாதம்வைத்த நாமம் இட்டுக் கொள்கின்றனர். ஐந்து சனிக்கிழமைகளும் விரதமிருந்து நாராயணனை வழிபட்டாலும் களப்பகுதியில் மூன்றாம் சனிக்கிழமை மிகவும் சிறப்புக்குரியதாகக் கருதப்படுகிறது. அன்று திருப்பதி, திருவரங்கம், திருவந்திபுரம் ஆகிய ஏதேனும் ஒரு வைணவத் தலத்திற்குச் சென்று அதிகாலை இறைவனை வணங்கி வீட்டிற்கு வருகின்றனர். பெரும்பான்மையர் திருவரங்கத்திற்கே (ஸ்ரீரங்கம்) சென்று வருகின்றனர். பின்னர் சாயங்காலம் (சாயுங்காலம்) மேற்கண்ட அனைத்துப் பொருட்களையும் வைத்துப் படைத்து விரதத்தை முடிக்கின்றனர். உணவுக் கட்டுப்பாடற்ற சிலர் மூன்று சனிக்கிழமை வரை சைவ உணவினைக் கடைபிடிக்கின்றனர். பிறகு அசைவ உணவு உண்ணுகின்றனர். ஆனால், மீதமுள்ள இரண்டு சனிக்கிழமையும் அசைவ உணவினை உட்கொள்வதில்லை. மூன்றாம் சனிக்கிழமையன்று பச்சரிசியால் சமைத்த பொங்கலை வாழை இலையில் இட்டு அதன்மீது வெல்லம், வாழைப்பழம் வைத்துத் தயிர் ஊற்றிப்

படைக்கின்றனர். இதனைத் தளியல் போடுதல் என்ற சொல்லால் குறிப்பிடுகின்றனர். இதில் மாவிளக்கும் தவறாமல் இடம்பெறுகிறது.

### 4.5.4.2. வைகுண்ட ஏகாதசி

மார்கழி மாதத்தில் வரும் ஏகாதசித் திதியினை வைகுண்ட ஏகாதசி என்றழைக்கின்றனர். அன்று ‘இரவு உறங்காமல் கண் முழிச்சா மோட்சம் கிட்டும்’ என்ற நம்பிக்கை இவர்களிடம் காணப்படுகிறது. இதனைக் ‘கண்ணு முழிக்கிற நாளு’ என்றும் குறிப்பிடுகின்றனர். அன்று இரவு உறங்காமலிருக்கத் தசாவதாரக் கதைகள், விஷ்ணு புராணங்கள் பற்றிப் பேசி மகிழ்கின்றனர். சில கிராமங்களில் தெருக்கூத்து, திரைப்படம் என இவற்றின் மூலம் திருமால் பற்றிய கதைகள் கண்டுகளிக்கப்படுகின்றன. களப்பகுதி வள்ளுவ ஆழ்வார்கள் ‘‘வைகுண்ட ஏகாதசி அன்று மாலை நான்கு முதல் ஐந்து மணியளவில் பச்சரிசி மாவினைத் தேன் அல்லது வெல்லம் சேர்த்துப் பிசைந்து துளசி, தேங்காய், வாழைப்பழம், வெற்றிலைப் பாக்கு இவற்றை வைத்துப் படைத்த பின்னரே கண்விழிக்கின்றனர். இதற்கு ‘மாவுப் படையல்’ என்று பெயர்’’[14]. இவ்வாறு படைத்த பின்னர் வசதி படைத்த சிலர் பிரசித்திபெற்ற வைணவத் தலங்களுக்குச் சென்று அதிகாலை வைகுந்த வாசல் திறப்பதைக் கண்டுகளித்து வணங்கி வருகின்றனர். இந்தக் கண்விழித்தலின் அன்று இரவு யாரும் உணவு உட்கொள்வதில்லை. ‘‘காலையில் பதினெட்டு வகைக் காய்கறிகள் போட்டுச் சாம்பார் வைத்து, சோறு, அப்பளம், வடை, பாயாசம், பொரியல், தயிர், நெய் இவற்றை வைத்துப் படைக்கின்றனர். இதற்கு ‘அன்னப் படையல்’ என்று பெயர்’’[15]. இவ்வாறு படைத்த பின்னரே உணவு உட்கொள்கின்றனர். வைகுந்த வாசல் அல்லது சொர்க்க வாசல் திறப்பன்று இயற்கையாக இறப்பவர்கள் நேரடியாகச் சொர்க்கம் புகுவர் என்ற நம்பிக்கையும் நிலவி வருகிறது.

### 4.5.4.3. சிறு பெருமாள் கோயில்கள்

களப்பகுதியில் வள்ளுவ ஆழ்வார்கள் ஒன்றுகூடியும், தனித்தும் சிறுசிறு பெருமாள் கோயில்களைக் கட்டியுள்ளனர். இக்கோயில்கள் புதிதாகத் தோன்றியவை அல்ல; நான்கு அல்லது ஐந்து தலைமுறைகளுக்கு முன்னரே

---

[14]. இரா. கெஜேந்திரன், வயது. 48, வள்ளுவர் சமூகம், திருமங்கலம், விழுப்புரம் வட்டம்.

[15]. மேலது.

இருந்துள்ளன; காலத்தால் பெரிதாக்கப்பட்டும், புதுப்பிக்கப்பட்டும் வருகின்றன. இவர்கள் அமைத்துள்ள கோயில்களுக்கு இவர்களே பூசாரிகளாக (ஐயர்) இருந்து வருகின்றனர்.

களையூர், மண்டகப்பட்டு, சேமக்கோட்டை, இருளக்குறிச்சி, களப்பகுதிக்கு அருகில் உள்ள புதுவைப் பகுதியான ஏம்பலம், மடுகரை ஆகிய ஊர்களில் வள்ளுவர்கள் உருவாக்கிய பெருமாள் கோயில்கள் காணப்படுகின்றன.

இக்கோயில்களில ஒவ்வொரு சனிக்கிழமையன்றும் விரதமிருந்து பொங்கல் வைத்துப் படைக்கின்றனர். பன்னிரண்டாண்டுகளுக்கு ஒருமுறை கும்பாபிஷேகம் (குடமுழுக்கு) நடத்தப்படுகிறது. அப்போது பிராமண குருக்களும் அழைக்கப்படுகின்றனர். இராம நவமி, கிருஷ்ண ஜெயந்தி போன்ற நாட்களில் சிறப்பு வழிபாடும் செய்யப்படுகிறது. ஆண்டிற்கு ஒருமுறை நரசிம்ம ஜெயந்தி அன்று திருவிழா நடைபெறுகிறது. அதில் வள்ளுவ ஆழ்வார்களில் சிலர் பெண் வீட்டுக்காரர்களாகவும் சிலர் மாப்பிள்ளை வீட்டுக்காரர்களாகவும் இருந்து இறைவனுக்கும் இறைவிக்கும் ஆகம முறைப்படித் திருமணம் செய்து வைக்கின்றனர். யாரேனும் ஒரு வள்ளுவச் சிறுமி இறைவிக்குத் தாலி கட்டுவாள். பின்னர் உணவு பரிமாறப்படுகிறது. அன்று இரவு சாமி வீதியுலா நடைபெறும். மறுநாள் இரவு தெருக்கூத்து; பின்னர் மூன்றாம் நாள் காலை மஞ்சள் நீராட்டு நடைபெறுகிறது. இதில் பெண் வீட்டுக்காரர்கள், பிள்ளை வீட்டுக்காரர்கள் இருவரும் மாமன் மைத்துனர் முறையில் உள்ளவர்களென்பதால் ஆண்களும் பெண்களுமாக ஒருவர்மீது ஒருவர் மஞ்சள்நீர் ஊற்றி மகிழ்வர். மேலும், மார்கழி மாதத்தின் ஒவ்வொரு சனிக்கிழமையின்போதும் இக்கோயில்களில் வள்ளுவ ஆழ்வார்கள் தெருக்கூத்திற்குப் பயன்படுத்தும் மத்தளம், தாளம் இவற்றைக் கொண்டு பஜனை பாடுகின்றனர். இப்பஜனை வள்ளுவ ஆழ்வார்கள் குழுக்களாக வசிக்கும் சில கிராமங்களில் மட்டுமே நடைபெறுகிறது.

### 4.5.5. பெண் தெய்வ வழிபாடு

வள்ளுவர் சமூகத்து மக்கள் சிவன், திருமால், முருகன் ஆகிய தெய்வங்களையும் வழிபடுகின்றனர். சில நாட்களில் பெண் தெய்வங்களை மட்டும் தனித்து வழிபாடு செய்கின்றனர்.

### 4.5.5.1. வரலட்சுமி நோன்பு

வரலட்சுமி நோன்பு என்பது ‘வரலட்சுமி விரதம்’ என்றும், தீபாவளிப் பண்டிகைக்கு மறுநாள் மேற்கொள்வதால் ‘தீபாவளி நோம்பு’ என்றும் அழைக்கப்படுகின்றது. ஸ்ரீ என்று சொல்லப்படும் லஷ்மியின் வடிவான திருமகளை வழிபாடு செய்வதே இந்த நோன்பாகும். வரலட்சுமி நோன்பு அன்று அதிகாலை வீடு வாசலைத் தூய்மை செய்து குடும்பத்தினர் அனைவரும் குளித்துவிட்டு வாசப்படியில் (வாயிற்படி) மாவிலைத் தோரணம் கட்டி, கூரை வீடாக இருந்தால் வீட்டைச் சுற்றிலும் மாவிலை, வேப்பிலை செருகி அழகுபடுத்துகின்றனர்.

ஒரு வீட்டில் (சாமியறையில்) குறுக்கும் நெடுக்குமாக ஒரு வரிசைக்கு இருபத்தியொன்று பொட்டுகள் எனக் குங்குமத்தால் இருபத்தோரு வரிசைகள் (நானூற்று நாற்பத்து ஒன்று) வைக்கின்றனர். புதிதாக வாங்கிவந்த நோன்புச் சட்டியைக் (பெரிய மண்சட்டி) கழுவி அதன்மீது திருநாமமிட்டு அதனுள் நோன்புக் கயிறுகள், மாவிலை, வேப்பிலை, பின்ன இலை (பின்னை இலை) இவற்றை வைத்து, கண்ணாடி வளையல், தாலிக்கயிறு, குளிமஞ்சள், வெற்றிலைப் பாக்கு, வாழைப்பழம், காதோலை கருவமணி, விபூதி உண்டை (திருநீற்று உருண்டை), குங்கும உண்டை, பலகாரம் (அதிரசத்தை இவர்கள் பலகாரம் என்றழைக்கினர்) இவை அனைத்திலும் காதோலை கருவமணி, குளிமஞ்சள், தாலிக்கயிறு தவிர ஒவ்வொன்றிலும் இருபத்து ஒன்று என எண்ணி போடுகின்றனர்.

வாழை இலையில் பச்சரிசி பரப்பிச் செம்பினில் நூல் சுற்றிக் கலசம் வைத்து அதனுள் பசுவின் கோமியம் ஊற்றிக் கலசத்திற்குப் புதுத் துண்டு சார்த்தி (கட்டுதல்), பொட்டு வைத்து, பழ வகைகள், பலகாரப் பட்சணங்கள் வைத்துப் படைத்துக் குடும்பத்துடன் விழுந்து வணங்கித் தூபதீபம் ஏற்றி வழிபாடு செய்கின்றனர். பின்னர் குடும்பத் தலைவன், இல்லையெனில் தலைவி குடும்பத்தாருக்குப் படைத்த நோன்புக் கயிற்றினை வலக் கரத்தில் கட்டிவிட்டு ஒரு வெற்றிலை, ஒரு பாக்கு, ஒரு பழம், ஒரு பலகாரம் (அதிரசம்) கொடுப்பர். அவரின் காலில் விழுந்து வணங்கியவாறு ஒவ்வொருவராகப் பெற்றுச் செல்வர். நோன்பில் படைத்த பண்டங்களைப் பிற குடும்பத்தாருக்குக் (பிற கொத்தைச் சார்ந்தவர்களுக்கு) கொடுப்பதில்லை. கொடுத்தால் நோன்பு பலனளிக்காது என்கின்றனர்.

படைத்த கலசத்திற்குக் காலை, மாலை விளக்கேற்றி தூபதீபம் காட்டி மூன்று நாட்கள் வழிபடுகின்றனர். மூன்றாம் நாளன்று அதிகாலை யார் கண்ணிலும் படாமல் குடும்பத்தார் அனைவர் கைகளிலும் கட்டியுள்ள நோன்புக் கயிறுகளை அவிழ்த்து, நோன்புச் சட்டியில் உள்ள பொருட்கள் அனைத்தையும் ஒரு பித்தளைத் தாம்பாளத் தட்டில் வைத்து எடுத்துச் சென்று ஏதேனும் ஏரி, குளம், ஆறு ஆகிய நீர்நிலைகளில் வெற்றிலையின் மீது கற்பூரம் ஏற்றித் தண்ணீரில் விட்டுவிட்டு, தாம்பாளத்தில் உள்ளவற்றை நீரில் கொட்டி விடுகின்றனர். கையில் நோன்புக் கயிறு கட்டியுள்ள போதும், தண்ணீரில் விடுவதற்கு எடுத்துச் செல்லும் பொழுதும் மிகக் கவனமாகத் தொலைந்து விடாமல் பார்த்துக் கொள்வர். ஏனெனில் கீழே கிடக்கும் கயிற்றை வேறு எவரேனும் எடுத்தால் அவ்வாறு எடுத்தவர் அக்கயிறு கொண்டு புதிய நோன்பு எடுக்கக்கூடும். அவ்வாறு எடுத்தால் கயிற்றைத் தொலைத்தவரின் செல்வம் குறைபடும் என்று நம்புகின்றனர்.

இவ்வாறு வரலட்சுமி நோன்பு எடுப்பதனால் குடும்பத்தில் செல்வம் கொழிக்கும், ஆயுள் கூடும், பெண்களுக்குத் தாலி பாக்கியம் நன்றாக இருக்கும் என்ற நம்பிக்கை வள்ளுவர் சமூகத்தவரிடம் காணப்படுகிறது. இந்த மூன்று நாட்கள் நோன்புக் காலங்களில் அசைவ உணவுகள், கணவன் - மனைவி தாம்பத்திய உறவு, மது வகைகள் ஆகியவற்றிற்கு இடமில்லை. வள்ளுவ ஆழ்வார்களே இந்த நோன்பினை அதிகம் கடைபிடிப்பவர்களாகக் களப்பகுதியில் காணப்படுகின்றனர். இதனைக் ‘கௌரி நோன்பு’, ‘கௌரி விரதம்’ என்றும் கூறுகின்றனர்.

### 4.5.5.2. ஆயுத பூசை, சரஸ்வதி பூசை

வள்ளுவர் சமூகத்தின் உள்ளினப் பிரிவினர் இருவருமே இவ்விழாவினைக் கொண்டாடுகின்றனர். ‘ஆயித பூசை’ (ஆயுத பூசை), ‘சரஸ்வதி பூசை’ இரண்டையும் ஒரே நாளில் வழிபாடு செய்கின்றனர். அன்று வீட்டினைச் சுத்தம் செய்து வீட்டில் உள்ள படி, கத்தி, அரிவாள், அருவாமனை, ஏர்க்கலப்பை, எருதுகள், பசுக்கள், சாமிப் படங்கள் இன்னும் உள்ள அவர்களின் பல்வேறு தொழிற்கருவிகள் அனைத்தையும் கழுவித் துடைத்து திருநீற்றால் பூசை போட்டு, சந்தனம், குங்குமத்தால் பொட்டிட்டு நடுவீட்டில் வைக்கின்றனர். வாசற்படியில் மாவிலைத் தோரணம் கட்டப்படுகிறது.

வள்ளுவர்களில் பெரும்பான்மையர் தங்கள் குலத்தொழிலான சோதிடம் பார்ப்பவர்கள் என்பதால் பஞ்சாங்கம், சோதிடப் புத்தகங்கள், எழுத்தாணிகள், ஓலைச் சுவடிகள், படிக்கும் சிறார்களின் புத்தகங்கள் அனைத்திலும் பூசையிட்டு நடுவீட்டில் வைக்கின்றனர்.

சரஸ்வதி, ஈஸ்வரி ஆகிய பெண் தெய்வங்களின் உருவச் சிலைகள் அல்லது படங்கள் அலங்காரம் செய்யப்பட்டு அவற்றின் முன்னர்ப் பழ வகைகள், அவல், பொரி கடலை, சுண்டல், சைவ உணவு வகைகள், இனிப்புகள் வைத்துப் படைக்கின்றனர். அன்று பெரியவர் முதல் சிறியவர் வரை விரதம் (உண்ணா நோன்பு) இருந்து மாலை படைத்த பின்னரே உணவு உண்கின்றனர். இந்த வழிபாட்டின்போது விரதமிருந்தால் சோதிடம் பார்ப்பவரின் நாவில் குடியிருந்து சரஸ்வதி வாக்குப் பலிதம் செய்வாள் என்றும், சிறார்களுக்குக் கல்வியில் நல்ல முன்னேற்றம் கிடைக்கும் என்றும் நம்புகின்றனர்.

“கலைமகள் விழா புரட்டாசியில் வளர்பிறை நவமியில் மட்டுமே கொண்டாடப்படுகிறது. எல்லா வகைக் கருவிகளையும் தூய்மை செய்து பூசை போட்டுப் பொட்டும் இடுவர். மாணாக்கர்கள் தங்கள் நூல்கள், எழுதுகோல்கள் முதலியவற்றிற்கும் பூசையிடுவர். எல்லாவற்றையும் நடுவீட்டில் இறையுருவத்தின் முன் கொலுவாக வைப்பர். அவல், பொரி, கடலை, சுண்டல், சிற்றுண்டி வகைகள் வைத்துப் படைப்பர். இவற்றில் அவல், பொரி, கடலை ஆகியன இன்றியமையாத பொருள்களாகும்.

இவ்விழா எங்கு நடைபெறினும் தென்னையின் குருத்தோலை, மாவிலை முதலியவற்றாலான இலைக் கொடிகள் அணிசெய்து கொண்டிருக்கும். இந்தப் பெருநாட்காலத்தில் சிறார்களைப் புதிதாய்ப் பள்ளிக்கூடத்தில் சேர்ப்பதும் உண்டு”[16].

### 4.6. சிறுதெய்வ வழிபாடு

வள்ளுவர் சமூகத்தில் இரு உள்ளினப் பிரிவினரும் பெருந் தெய்வங்களை வழிபடுவதுடன் சிறுதெய்வ வழிபாட்டினையும் கடைபிடிப்பவர்களாகக் காணப்படுகின்றனர். இவர்களின் வாழ்வுசார் சடங்குகளுக்கான அழைப்பிதழ்களில் ‘ஸ்ரீராமஜெயம்’, ‘சிவசிவ’, ‘முருகன் துணை’ என்று போட்ட பின்னர் அதன்கீழ்

---

[16]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 440.

இவர்கள் வழிபடும் சிறுதெய்வங்களின் பெயரினைப் போட்டு, துணை என்று குறிப்பிட்டுப் பின்னரே அழைப்பு வாசகங்கள் இடம்பெறுகின்றன.

இது இவர்களின் பெருந்தெய்வ நம்பிக்கையுடன் சிறுதெய்வ நம்பிக்கையினையும் காட்டுகின்றது. இவ்வள்ளுவர்கள் தாங்கள் வழிபடும் பெருந்தெய்வங்களை இஷ்ட தெய்வங்களாகவும் சிறுதெய்வங்களைக் குல தெய்வங்களாகவும் கொண்டுள்ளனர். இவர்களின் குலதெய்வங்களாகக் கருப்பழகியம்மன், ஊத்துக்காட்டம்மன், தீப்பாஞ்சம்மன், அங்காளம்மன், காட்டேரி, நாகாத்தம்மன், ஆனந்தாயி, பெரியநாயகி ஆகிய பெண் தெய்வங்களும், மஞ்சினிக் கூத்தாண்டவர், ஐயனாரப்பன், முனீஸ்வரன் ஆகிய ஆண் தெய்வங்களும் களப்பகுதியில் காணப்படுகின்றன.

வள்ளுவர்களின் பிறப்பு முதல் நடைபெறும் அனைத்து நற்காரியங்களும் குலதெய்வங்களை வணங்கிப் பொங்கலிட்டு, வழிபாடு செய்த பின்னரே துவங்கப்படுகின்றன. குடும்பத்தில் எந்த நற்காரியங்களும் நடைபெறவில்லை என்றாலும்கூட ஆண்டிற்கு ஒரு முறையாவது பங்காளிகள், உற்றார் உறவினர்கள் ஒன்றுகூடிக் குலதெய்வங்களுக்குப் பொங்கலிட்டு, பம்பை, உடுக்கை ஒலிக்க வழிபாடு செய்கின்றனர்.

‘‘குருவை மறந்தாலும் குல தெய்வத்தை மறவாதே’’[17] என்ற பழமொழியினை வள்ளுவப் பெரியோர்கள் நகரங்களில் வாழும் தங்களின் இளைய தலைமுறையினர்க்குக் கூறி அவர்களைத் தவறாமல் ஆண்டிற்கொருமுறை குலதெய்வ வழிபாட்டிற்குக் குடும்பத்துடன் வருமாறு அழைக்கின்ற நிலை களப்பகுதியில் காணப்படுகிறது. இளைய தலைமுறையினரும் அவ்வாறே தவறாமல் குலதெய்வத்தை வணங்கும் வழக்காறு காணப்படுகிறது.

### 4.6.1 குல தெய்வப் படையல்

வள்ளுவர் சமூகத்தினர் தங்களின் வீட்டில் எவையேனும் காரியங்கள் நடைபெற இருந்தால் அவற்றை முன்னிட்டுக் குல தெய்வத்தை வழிபடுவர். ஆனால், ஆடி மாதத்தில் அந்தந்தக் கொத்து (பங்காளிகள்) மக்கள்

---

[17]. சின்னசாமி ஆழ்வார், வயது. 65, வள்ளுவர் சமூகம், ஆண்டிக்குழி, உளுந்தூர்பேட்டை வட்டம்.

அனைவரும் ஒன்று சேர்ந்து அவர்களின் குல தெய்வத்தினை வழிபடுகின்றனர். இதனைச் சாமி கும்பிடல், குல தெய்வப் படையல் என்று குறிப்பிடுகின்றனர்.

### 4.6.2. பொங்கலிடுதல்

ஆடி மாதத்தில் வரும் ஐந்து வெள்ளிக் கிழமைகளில் வளர்பிறையில் மரணயோகம் இல்லாத நாளில் வரும், வெள்ளிக்கிழமையில் ஒரே குல தெய்வத்திற்குரியவர்கள் அனைவரும் மாலை மூன்று மணியளவில் தெருவின் மையத்தில் பொங்கல் கூடைகளைக் கொண்டு வருகின்றனர். ஆண்கள் பொங்கல் கூடைகளைத் தூக்கி வருவதில்லை. பெண்கள் மட்டுமே தூக்குகின்றனர். அப்போது பம்பை, உடுக்கை அடிக்க அமர்த்தப்பட்டிருக்கும் வன்னியர் சமூகத்தவர் கற்பூரம் ஏற்றிப் பாடல் பாடிப் பம்பை உடுக்கை முழங்கப் பொங்கல் கூடைகளைக் குலதெய்வக் கோயிலுக்கு எடுத்துச் செல்வர். சில ஊர்களில் மிகச்சிறு கோவில்கள் கட்டப்பட்டுள்ளன. பல ஊர்களில் இன்னும் கற்களை நட்டே வழிபடுகின்றனர். அங்காளம்மன், நாகாத்தம்மன் ஆகிய தெய்வங்களைக் குல தெய்வங்களாகக் கொண்டவர்கள் கார் வைத்துக் கொண்டு மேல்மலையனூர், தும்பூர் கோவில்களுக்குச் சென்று பொங்கல் வைத்துத் திரும்புகின்றனர்.

கோவிலுக்கு எடுத்துச் செல்லப்பட்ட பொங்கல் கூடைகளைச் சாமியின் முன்னர் இறக்கி வைத்து, கோவிலுக்கு எதிரில் வரிசையாகப் பெண்கள் பொங்கல் வைக்கின்றனர். தொன்றுதொட்டுப் புதுமண் பானைகளில் மட்டுமே பொங்கல் வைக்கப்படுகின்றன. பொங்கல் பொங்கும்பொழுது ‘‘பொங்கலோ! பொங்கல்!’’ என்று ஒலியெழுப்புகின்றனர்.

அதன்பின்னர் பலிகொடுத்த கோழியினை மண் சட்டியில் குழம்பு வைக்கின்றனர். குலதெய்வம் பெண்தெய்வம் எனில் பெட்டைக் கோழிகளே பலியிடப்படுகின்றன. முட்டையிட்டுக் கொண்டிருக்கும் பெட்டையினைப் பலியிட்டு அக்கோழி இட்டு வைத்துள்ள முட்டைகளையும், வயிற்றில் உள்ள முட்டைகளையும் ஆக்கிப் படைக்கின்றனர். இதனை, ‘‘முட்டையும் பொட்டையும் படைத்தல்’’ என்று கூறுகின்றனர்.

குலதெய்வம் ஆண் தெய்வமெனில் சேவல்களே பலியிடப்படுகின்றன. களப்பகுதியில் வள்ளுவர்கள் பெரும்பான்மையாக ஆடுகளைப் பலியிடுவதில்லை. ஒரு சிலரே ஆடுகளைப் பலியிடுகின்றனர். பெண்கள் பொங்கல் வைத்து

முட்டையும் பொட்டையும் ஆக்கிச் சாமியின் முன்னர் பக்கவாட்டில் வரிசையாக வைக்கின்றனர். அதற்குள் வள்ளுவப் பெரியோர்களில் அனுபவம் மிகுந்த ஆண்கள் சாமிக்கு ஒன்பது வகையான அபிஷேகங்களைச் செய்து புத்தாடை உடுத்தி மாலைபோட்டு அலங்காரம் செய்கின்றனர். எதிரே உள்ள பரிவாரத் தெய்வத்திற்கும் அவ்வாறே செய்கின்றனர்.

### 4.6.3. சாமிக்குப் படைத்தல்

சாமியின் எதிரில் மூன்று அல்லது ஐந்து வாழை இலைகளும் எதிரே பரிவாரத் தெய்வத்திடம் ஓர் இலையும் போடப்படுகின்றன. அவ்விலைகளில் அனைத்துக் குடும்பத்தினரும் வைத்துள்ள பொங்கலில் இருந்து சிறிதும், கறிக் குழம்புகளில் இருந்து எடுத்தும் படையல் போடுகின்றனர். அவர்கள் கொண்டு வந்துள்ள பழங்கள், சுண்டல், வெல்லம் கலந்த அரிசி மாவு, மது பாட்டில்கள் அனைத்தும் வைக்கப்படுகின்றன. பெண் தெய்வமெனில் அதன் மடியில் காதோலை கருவமணி, தாலிக்கயிறு, குளி மஞ்சள், குங்குமம் ஆகியனவும் வைக்கப்படுகின்றன. பத்திகள் ஏற்றி, சாம்பிராணிப் புகை போடுகின்றனர். அனைவரும் சாமியின் இரு புறங்களிலும் வரிசையாக நிற்கின்றனர். பம்பை, உடுக்கைக்காரர்கள் சாமியினை வர்ணித்துப் பாடல்கள் பாடிக்கொண்டு அரை மணி நேரம் முதல் ஒரு மணி நேரம் வரை பம்பை, உடுக்கையை அடிக்கின்றனர். முன்பெல்லாம் பெண் தெய்வங்களிடம் இவ்வாறு படையல் போடும்போது பெண்கள், சிறுமிகளுக்குச் சாமி வருவதுண்டு. இன்றைய நிலையில் யார்மீதும் சாமி வருவதில்லை.

சாமியை வர்ணித்துப் பாடி முடித்ததும் வள்ளுவப் பெரியவர் (பூசாரி) கற்பூர தீபம் ஏற்றிச் சாமியினைப் போற்றிப் பாடல்கள் பாடுவார். அனைவருக்கும் கற்பூர தீபம் காட்டப்படும். அனைவரும் வணங்குவர். பின்னர் திருநீறு, குங்குமம் கொடுக்கப்படும். படைத்த உணவுகள், பழங்கள் அனைவருக்கும் பிரசாதமாகக் கொடுக்கப்படுகின்றன. முன்பெல்லாம் வள்ளுவப் பெரியவர்கள் மது வகைகளை அருந்துவர். இன்றைய நிலையில் பம்பை, உடுக்கைக்காரர்களே எடுத்துக் கொள்கின்றனர். இவ்வாறு படைத்து முடித்ததும் கோயிலில் பூசாரியாகப் படைத்த வள்ளுவப் பெரியோரால் அவரவர்களின் பொங்கல் கூடைகள் அவரவரின் தலையில் தூக்கி வைக்கப்படுகின்றன. அக்கூடைகளில் மாவிளக்கு எரிந்தவாறே இருக்கும். பம்பை, உடுக்கை அடித்தவாறே பாடல்களுடன் பொங்கல் கூடைகளைச் சுமக்கும் பெண்கள் பொதுவான இடத்திற்குச் சென்று (வீதியின்

மையத்திற்கு) அங்கிருந்து அவரவர்களின் வீட்டிற்குச் செல்கின்றனர். பொங்கல் கூடைகளைத் தலையில் வைக்கும்போதும், இறக்கும்போதும் வள்ளுவ ஆழ்வார்கள் ‘‘கோவிந்தா! கோவிந்தா!’’ என்றும், வள்ளுவ நாயனார்கள் ‘‘அரோகரா! அரோகரா!’’ என்றும் கோஷமிடுகின்றனர்.

### 4.6.4. கூழ் ஊற்றுதல்

வள்ளுவர்கள் கூழ் குடிக்கும் பழக்கம் உள்ளவர்கள். இன்றும் செல்வந்தர்களாக இருப்பவர்கள்கூட ஆசைப்பட்டும் பழமையினை நினைத்தும் ஒருசில நாட்களில் கூழ் குடிக்கின்றனர். ஆடிமாத வெள்ளி மாலையில் குல தெய்வங்களுக்குப் பொங்கல் வைத்துப் படைக்கும் முன்னர், காலையில் வீட்டில் கூழ் ஊற்றுகின்றனர். இவர்கள் கம்மங்கூழ், கேவுரு கூழ் (கேழ்வரகு கூழ்), சோளக்கூழ் ஆகியவற்றைக் குடிப்பவர்கள் என்றாலும் சாமிக்குக் கேழ்வரகுக் கூழினையே ஊற்றுகின்றனர்.

கூழ் ஊற்றும் முதல் நாளே மாலையில் பெரிய பெரிய பாத்திரங்களில் கரைத்துப் புளிக்க வைத்துள்ள மாவினைக் கூழாகக் காய்ச்சுகின்றனர். இவ்வாறு காய்ச்சிய கூழினைத் தயிர், உப்பு, தண்ணீர் சேர்த்துக் கரைக்கின்றனர். கூழினைக் கரைத்துப் பெரிய அண்டாவில் ஊற்றுகின்றனர். இவ்வாறு மூன்று அல்லது ஐந்து அண்டாக்களில் கூழ் நிரப்பப்பட்டு அண்டாவிற்குப் பூசை போட்டு அல்லது திருநாமமிட்டு வேப்பிலைத் தோரணம் கட்டி நடுவாசலில் வைக்கின்றனர். மூன்று தோண்டிகளில் (சிறு மண்பானைகளில்) தோரணம் கட்டிக் கூழ் ஊற்றி நடுவீட்டில் சாமிக்கு, பச்சரிசி மாவுடன் வெல்லம் பிசைந்து வைத்துப் படைக்கின்றனர்.

மூன்று விதவைத் தாய்மார்களை அழைத்துவந்து அவர்களைக் கிழக்கு நோக்கி நிற்க வைத்து அவர்களின் பாதங்களை நீரினால் கழுவிக் கற்பூர தீபம் காட்டி வணங்கி வழிபடுகின்றனர். அவர்களுக்கு வெற்றிலைப் பாக்கில் பணம் வைத்துக் கொடுத்து, கூழ் ஊற்றிக் குடிக்கச் செய்து, தொட்டுக் கொள்ளப் பச்ச மொச்சை, கத்திரிக்காய் போட்ட கருவாட்டுக் குழம்பும், முருங்கைக் கீரையும் கொடுக்கப்படுகின்றன. இவ்வாறு மூவரும் கூழ் குடித்துவிட்டு அவர்களை ஆசீர்வாதம் (வாழ்த்துதல்) செய்த பின்னரே அனைவருக்கும் கூழ் ஊற்றப்படுகிறது. களப்பகுதியில் இவர்கள் ஊற்றும் கூழை வன்னியர், வள்ளுவர், பிற தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் குடிக்கின்றனர். இவர்கள் ஊற்றும் கூழில் வேப்பிலை உருவிப் போடப்படுகிறது. வெங்காயம், பச்சைமிளகாய், மாங்காய்,

கருவாட்டுக்குழம்பு, முருங்கக்கீரை ஆகியவை கொடுக்கப்படுகின்றன. வள்ளுவர்களுக்கு ஓரிரு ஆண் தெய்வங்களைத் தவிரப் பெரும்பான்மையாகப் பெண் தெய்வங்களே குல தெய்வங்களாக உள்ளன. “பண்டாரங்களின் குல தெய்வமாகத் தாய்த் தெய்வங்களே உள்ளன என்பதும் கள ஆய்வில் கண்டறிய முடிந்தது”[18] என இரத்தின. புகழேந்தி அவர்கள் குறிப்பிடுவதன் மூலமும் வள்ளுவர்கள் கூழ் ஊற்றும்போது தாய்மார்களை அம்மன்களாக எண்ணி வழிபட்டு, கூழ் ஊற்றுவதையும் கருத்தில் கொண்டால் இவர்கள் தாய்வழிச் சமூகப் பின்புலம் உடையவர்கள் என்பதை உறுதிசெய்யலாம்.

### 4.6.5. உதிரவாய் துடைத்தல்

ஆடி மாதத்தில் பொங்கல் வைத்த நாளிலிருந்து எட்டாம் நாள் அதாவது மறு வெள்ளிக்கிழமை அன்று மாலை சூரியன் மறையும் வேளையில் பொங்கல் வைத்த அனைவரும் உண்டை, கொழுக்கட்டை, சுண்டல், கறிக்குழம்பு, கருவாட்டுக்குழம்பு, முட்டை, சோறு, முருங்கைக் கீரை, ஏதேனும் ஒரு மதுவகை எனக் கொண்டு வருவர். கோவில் பூசாரியாக இருக்கும் வள்ளுவப் பெரியவர் சாமிக்கு மாலை போட்டு, விளக்கேற்றிக் கொண்டு வந்துள்ள பொருட்களுக்கேற்ப வாழை இலைகளைப் போட்டு அனைத்தையும் வைத்துப் படைப்பார். பரிவாரத் தெய்வத்திற்கும், எதிரில் ஓர் இலையில் சிறிதளவு அனைத்துப் பொருட்களும் வைக்கப்படும். இன்று சாமிக்கு எவ்வித அபிஷேகங்களும் நடைபெறுவதில்லை. படைத்த பொருட்கள் அனைவருக்கும் பிரசாதமாக வழங்கப்படும். “பொங்கல் வைத்த அன்று உயிர்ப்பலி கொடுத்ததை ஏற்று உண்ட சாமியின் வாயில் இரத்தக் கறைகள் இருப்பதாகவும், அதனை எட்டாம் நாள் இப்படையல்கள் மூலம் துடைப்பதாகவும் கூறுகின்றனர். இதனை ‘உதரவா தொடைத்தல்’ (உதிரவாய் துடைத்தல்) என்றும் குறிப்பிடுகின்றனர்”[19]. இது போன்று எட்டாம் நாள் படைக்கும் படையலை வன்னியர்கள் ‘கும்பங் கூட்டுதல்’ என்றும் அப்போது படைத்துத் தரும் உணவினைக் ‘கும்பஞ்சோறு’ என்றும் குறிப்பிடுகின்றனர்.

---

[18]. சீ. பக்தவத்சல பாரதி, தமிழகத்தில் நாடோடிகள் சங்ககாலம் முதல் சமகாலம் வரை, ப. 264.

[19]. இர. தேவராஜ், ஜோதிடர், வயது. 65, வி. சாலை, விழுப்புரம் வட்டம்.

### 4.6.6. மாரியம்மன் வழிபாடு

வள்ளுவர் சமூகத்தினர் களப்பகுதியில் தங்கள் புரோகிதக் கிராமங்களில் சேரிகளில் உள்ள மாரியம்மன் கோவில்களுக்குப் பூசாரிகளாக உள்ளனர். இவர்கள் மாரியம்மன் வழிபாட்டில் நடைபெறும் அனைத்து நிகழ்வுகளிலும் பங்கு கொள்பவர்களாக இருப்பினும், களப்பகுதிகளில் வள்ளுவர்களுக்கு மாரியம்மன் குலதெய்வமாக அமைந்திருக்கவில்லை.

### 4.6.7. அம்மை நோய்

வள்ளுவர் சமூகத்தவர்க்கு அம்மை வார்த்துவிட்டால் மருத்துவ அறிவியல் வளர்ந்துவிட்ட இன்றைய நிலையிலும், அம்மை வெம்மையின் காரணமாக வருகிறது என்பதை உணர்ந்திருந்த போதிலும், மருத்துவர்களிடம் செல்வதில்லை. அம்மை வார்த்தவரைத் துணிபோட்டு அதன்மீது வேப்பிலையைப் பரப்பிப் படுக்க வைக்கின்றனர். உண்பதற்குக் குளுமை தரும் பொருட்களைக் கொடுக்கின்றனர். ஏழாம் நாள் அல்லது ஒன்பதாம் நாள் குளிர்ந்த நீரில் மஞ்சள் கரைத்து வேப்பிலை உருவிப் போட்டு காலையில் சூரிய வெளிச்சத்தில் வைத்து மாரியம்மனை வழிபட்டுக் குளிப்பாட்டுகின்றனர். இதனைத் ‘தண்ணி ஊத்துதல்’ என்று குறிப்பிடுகின்றனர்.

அம்மை குணமாகாவிட்டால் அம்மை வார்த்தவரின் தாய்மாமன் அல்லது கொண்டான், கொடுத்தான் வீட்டில் சோறு பொங்கிவந்து கொடுத்தால் சரியாகிவிடும் என்கின்றனர். இதனை, ‘குளுஞ்சோறு’ என்கின்றனர். குளுஞ்சோறு கொடுத்தும் அம்மை தீரவில்லையெனில் அம்மை வார்த்தவரின் தாயோ அல்லது மனைவியோ ஈரத்துணியுடன் மாரியம்மன் கோயிலை வலம்வந்து வணங்கி அவ்வூரில் இருக்கும் வண்ணாரின் வீட்டில் மடிப்பிச்சையாகக் கஞ்சியோ, கூழோ பெற்றுவந்து தருகின்றனர். வண்ணாரின் வீட்டை மாரியம்மனின் தாய்வீடாகக் கருதும் வழக்கம் வள்ளுவர்களிடமும் காணப்படுகிறது. வள்ளுவர்கள், ‘‘மாரியம்மனிடம் வேண்டியதை நிறைவேற்றியாக வேண்டும். இல்லையெனில் தண்டனைக்குள்ளாவோம்’’ என்கின்றனர்.

*“யாரு கடன் வந்தாலும்*

*மாரி கடன் கூடாது”*[20]

என இவர்கள் கூறுவதிலிருந்து இதனை அறியமுடிகிறது.

### 4.6.8. கூத்தாண்டவர் வழிபாடு

களப்பகுதியில் பண்ருட்டி வட்டார வள்ளுவர்கள் கூத்தாண்டவர் வழிபாடு உடையவர்களாகக் காணப்படுகின்றனர். வள்ளுவர் சமூகத்தினர் குடும்பத்தினருடன் மாட்டு வண்டியைக் கட்டிக்கொண்டு களப்பகுதிக்கு அருகில் விழுப்புரம் மாவட்டத்தில் உள்ள கூவாகம் கூத்தாண்டவர் கோயிலுக்குச் செல்கின்றனர். சித்திரை மாதம் வளர்பிறையில் இத்திருவிழா வருகிறது. “மகாபாரதப் போரில் பலிகொடுக்கப்படுவதற்காக அரவான் நியமிக்கப்படுகிறான். அவன் இறுதி ஆசையாய் அவனைத் திருமணம் செய்துகொள்ள யாரும் முன்வராததால் கண்ணனே பெண்ணாக மாறித் (அரவாணியாக) தாலிகட்டிக் கொள்கிறான். அரவான் பலியானதும் தாலியறுக்கப்படுகிறது”[21]. இந்தப் புராண நிகழ்வினைக் காட்டுவது இந்தத் திருவிழாவாகும்.

உடல்நிலை சரியில்லாத வள்ளுவச் சிறார்களுக்கு இவ்வாறு தாலிகட்டி அறுத்தால் அவர்களின் நோய் குணமடையும்; அரவான் அருள் செய்வான் என்னும் நம்பிக்கையில் இவ்வாறு செய்வதாக வேண்டிக் கொள்கின்றனர். இவ்வேண்டுதலை நிறைவேற்ற, திருவிழா அன்று இரவு கூவாகம் சென்று அரவானை (கூத்தாண்டவர்) வணங்கிப் பூசாரியின் கையால் தாலி கட்டிக் கொண்டு கோயிலில் தங்கிவிடுகின்றனர். அதிகாலையில் தாலியை அறுத்துவிட்டு மீண்டும் கூத்தாண்டவரை வணங்கி வீடு திரும்புகின்றனர். இதனை, ‘அன்றே கட்டி அன்றே அறுத்தல்’ என்ற சொற்களால் குறிப்பிடுகின்றனர். பண்ருட்டி வட்டாரத்து வள்ளுவர்களில் பெரும்பான்மையர் ஒவ்வோர் ஆண்டும் குடும்பத்தாருடன் சென்று தவறாமல் கூத்தாண்டவரை வழிபாடு செய்வதைக் களப்பகுதியில் காணமுடிகிறது.

---

[20]. திருமதி. கிருஷ்ணம்மாள், வயது. 70, வள்ளுவர் சமூகம், திருவதிகை, பண்ருட்டி வட்டம்.

[21]. எஸ்.என். இராமச்சந்திரன், வயது. 85, வள்ளுவர் சமூகம், சேமக்கோட்டை, பண்ருட்டி வட்டம்.

### 4.6.9. பஞ்சாங்கம் படைத்தல்

“தமிழ்ப் புத்தாண்டு, சித்திரைத் திங்கள் முதல்நாளில் கொண்டாடப்பெறும். வைகறையில் எழுந்து இல்லம் முழுவதும் தூய்மை செய்து, மஞ்சள் குங்குமத்தாலும், மாவிலைத் தோரணத்தாலும் வாயிற்படிகளை அணி செய்வர். நண்பகலில் பல்வகைக் காய்கறி உணவுகளையும், சிற்றுண்டி வகைகளையும் இறைவனுக்குப் படைத்து உண்பர். புத்தாண்டு நாளில் மகிழ்ச்சியுடன் இருந்தால் ஆண்டு முழுவதும் மகிழ்ச்சி நிலவுமாம். இந்நாளில் துன்புற்றால் ஆண்டு முழுவதும் துன்பந்தானாம். ஆகவே, இந்நாளில் ஒருவருக்கொருவர் சண்டை இட்டுக்கொள்ளார். சிறுவர்களை வைதலோ, அடித்தலோ செய்யார். எதுவாயிருந்தாலும் ‘நாளைக்குப் பார்த்துக் கொள்கிறேன் என்பர்”[22]. இது களப்பகுதியில் அனைத்துச் சாதியினரும் கடைபிடிக்கும் பொதுவான வழக்காறாகும்.

சித்திரை முதல்நாளை வள்ளுவர்கள் ‘மாச பொறப்பு, வருஷ பொறப்பு’ என்று கூறுகின்றனர். அன்று தலையில் எண்ணெய் தேய்க்காமல் சாதாரணமாகக் குளிக்கின்றனர். புத்தாடை அணிகின்றனர். இவர்களின் குலத்தொழில் சோதிடம் பார்ப்பது என்பதால், சித்திரை ஒன்று முதல் இவர்களுக்குப் புதிய பஞ்சாங்கம் தேவைப்படும். புதுப்பஞ்சாங்கத்தை வாங்கிவந்து நான்கு மூலைகளிலும் மஞ்சள் பூசி நடுவீட்டில் வைத்து மேற்சொன்ன பொருட்களையும் வைத்துப் படைத்து வழிபடுகின்றனர்.

இந்தப் புதிய ஆண்டில் எவ்வகைத் துன்பங்களும் வறுமையும் இல்லாமல் செழிப்புடனும், மன நிம்மதியுடனும் வாழ வேண்டும் எனப் புத்தாண்டை அவ்வாண்டிற்குரிய பஞ்சாங்கத்தை வைத்துப் படைத்து வழிபடுகின்றனர். இதனைப் ‘பஞ்சாங்கம் படைத்தல்’ என்று குறிப்பிடுகின்றனர். வள்ளுவர் சமூகத்தில் சோதிடம் பார்க்காதவர்கள்கூட நல்லநாள் பார்க்க வேண்டிப் பஞ்சாங்கம் வாங்கிப் படைப்பது வழக்கமாகக் காணப்படுகிறது.

## 4.7. இயற்கை வழிபாடு

ஆதி மனிதன் இயற்கையோடியைந்த வாழ்வு நடத்தினான். இயற்கையின் சீற்றத்தால் பாதிக்கப்பட்டான். எனவே, இயற்கையை வழிபட்டான். நாட்டுப்புற

---

[22]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 439.

மக்களிடையே இன்றும் இயற்கையை வழிபடும் பண்பைக் காணலாம். களப்பகுதியில் வள்ளுவர் சமூகத்து மக்களிடம் காணப்படும் இயற்கை வழிபாட்டு முறைகளும் ஆதிமனிதனிடமிருந்து பரவியவையாகவே கொள்ளலாம். ‘‘கடவுளுக்கு அடுத்த நிலையில், இயற்கையின் படைப்புகளில் பல வணக்கத்திற்குரியவையாயின. இவற்றை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம்.

1. மாந்தனுக்கு உதவிய நட்பு உயிரினங்கள்
2. மாந்தனை அச்சுறுத்திய உயிரினங்கள்

நாடோடிகளாய் வாழ்ந்திருந்த மக்களுக்குப் பசு, காளை, ஆடு, கோழி, நாய், பூனை ஆகியன நட்பு விலங்குகளாயிருந்தன. தமக்கு உதவி செய்த அவ்விலங்குகள் தங்களின் கடவுளுக்கும் உதவியாளர்களாக இருப்பதான நம்பிக்கையை வளர்த்துக் கொண்டனர். கடவுளுக்கு அருகிலேயே இவைகளும் வைக்கப்பட்டன’’[23]. வள்ளுவர் சமூகத்து மக்களும் சில விலங்குகளை இன்றும் வழிபடும் வழக்காறு காணப்படுகிறது.

### 4.7.1. கோமாதா வழிபாடு

இவர்கள் பசுவினைக் கோமாதாவாக வணங்குகின்றனர். வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளில் பசுக்களைக் குளிப்பாட்டி, மஞ்சள் பூசிக் குங்குமம் இட்டுக் கற்பூர தீபம் காட்டி வழிபாடு செய்கின்றனர். பசுவினை மகாலட்சுமியின் அம்சமாகக் கருதுகின்றனர். இன்றும் இவர்களின் புதிய வீடுகளில் ‘புதுமனை புகுவிழாவினில்’ பசுவினை வீட்டிற்குள்ளேயே அழைத்துச் செல்வது, ‘லட்சுமியை அழைத்துச் செல்கிறோம்’ என்ற எண்ணத்தின் வெளிப்பாடேயாகும். வள்ளுவர்கள் பசுவின் மூத்திரத்தைக் கோமியம் என்ற சொல்லால் குறிப்பிடுகின்றனர். இவர்கள் பசுவின் கோமியத்தையும் சாணத்தையும் புனிதப் பொருட்களாகக் (வேள்விப் பொருட்களாக) கருதி அவற்றை வேள்விகளில் பயன்படுத்தி வருகின்றனர். இவர்களின் அனைத்துச் சடங்குகளிலும் வைக்கும் கலசத்தினுள் பசுவின் கோமியமே உள்ளது. இவர்கள் மாட்டிறைச்சி உண்பதில்லை. பசுவினைக் கொல்வது மகாபாவம் எனக் கருதுகின்றனர்.

வள்ளுவர்கள் மீது ஏதேனும் குற்றம் சாட்டப்பட்டாலோ அல்லது அவர்களின் கூற்று பொய்யானது என்று கூறினாலோ இவர்கள் ‘‘ஏழு காராம்

---

[23]. ம.சோ. விக்டர், தமிழர் சமயம், ப. 19.

பசுவு தன்னானா நான் தவறு செய்யவில்லை. ஏழு காராம் பசுவு தன்னானே நான் சொல்வது உண்மை என்று சத்தியம் செய்கின்றனர்”[24]. காராம் பசு என்பது கன்று ஈன்று பால் கொடுத்துக் கொண்டிருக்கும் பசுவாகும். ஒரு காராம் பசுவினைக் கொல்வது இரண்டு உயிர்களைக் கொன்ற கொடிய பாவம் ஆகும். ஏழு காராம் பசுக்களைக் கொல்வதென்பது மன்னிப்பற்ற மிகக் கொடிய பாவம். ஒரு பொருளின்மீது சத்தியம் செய்து பொய் சொன்னால் அது இறந்துவிடும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் வள்ளுவர்கள் பசுவினை உயர்ந்ததாகக் கருதியே இவ்வாறு சத்தியம் செய்கின்றனர்.

### 4.7.2. ஆஞ்சநேயர் வழிபாடு

குரங்கினை வள்ளுவர்கள் ‘ஆஞ்சநேயர்’ என்று கூறி வழிபடுகின்றனர். இவர்கள் குரங்குளை அடித்து விரட்டுவதில்லை. அவற்றுக்கு உணவு கொடுத்து அனுப்புகின்றனர். வள்ளுவர்கள் வாழும் பகுதிகளுக்கருகில் ஏதேனும் சூழலில் குரங்கு இறந்துவிட்டால் அதைப் புதைத்துப் பால் ஊற்றி, தலைமாட்டில துளசிச் செடியை நடுகின்றனர். அதற்குக் கற்பூர தீபம் காட்டி வழிபாடு செய்கின்றனர். களப்பகுதியில் வள்ளுவர்களால் புதைக்கப்பட்ட குரங்குச் சமாதிகள் சிறுசிறு ஆஞ்சநேயர் கோயில்களாக மாறியுள்ளன. சேமக்கோட்டை, தோட்டப்பட்டு, புதுவைப் பகுதியான மடுகரை ஆகிய ஊர்களில் இதுபோன்ற கோயில்கள் காணப்படுகின்றன. இவை அனைத்தும் வள்ளுவ ஆழ்வார்கள் உருவாக்கியவையாகும்.

### 4.7.3. கருடாழ்வார் வழிபாடு

வள்ளுவ ஆழ்வார்கள் கருடனை ‘கருடாழ்வார்’ என்று கூறுகின்றனர். கருடப் பெருமானின் வாகனம் என்ற புராணக் கருத்தே இவர்களின் நம்பிக்கைக்குக் காரணமாகும். வள்ளுவ ஆழ்வார்கள் காலையில் எந்த நீர்நிலையில் குளித்தாலும் சூரியனை வணங்கிவிட்டுப் பின்னர் கருடனைப் பார்த்து வணங்குகின்றனர். சிலர் கருடனைப் பார்த்து வணங்காமல் வீட்டிற்குள் செல்வதில்லை. ‘கருட தரிசனம்’ பெறாமல் காலை உணவு உண்ணாத பல பெரியவர்களும் களப்பகுதியில் உள்ளனர்.

---

[24]. அழகப்பன் (ஆசிரியர்), வயது. 70, வள்ளுவர் சமூகம், ஏம்பலம், புதுச்சேரி.

### 4.7.4. சூரிய வழிபாடு

''இயற்கைத் தோற்றங்களாகிய கதிரவன், மதி, மழை, மின்னல் முதலான பொருள்களைக் கண்டு ஏற்பட்ட வியப்பு, அதிர்ச்சி, அச்சம், எண்ணம், உள்ளத்து உணர்வுகளே சமயம் தோன்றக் காரணமாயின என்பது மாக்ஸ் முல்லரின் கருத்தாகும். மனிதன் நலன் பெருக்கவும் நன்றிக்கடன் செலுத்தவும் இயற்கையை வணங்க ஆரம்பித்தான். கதிர் வழிபாடு, மாரி வழிபாடு, விண் வழிபாடு, மண் வழிபாடு இப்படித்தான் தோற்றம் பெற்றிருக்க வேண்டும்''[25] என சு. சக்திவேல் அவர்கள் குறிப்பிடுகின்றார்.

இக்கருத்திற்கிணங்க வள்ளுவச் சமூகத்தவர்கள் காலையில் குளித்ததும் சூரியனை வணங்கிவிடுகின்றனர். பழங்காலந்தொட்டு ஆறு, ஏரி, குளம் ஆகிய நீர்நிலைகளில் குளித்து வள்ளுவர் சமூகத்து ஆண்களும் பெண்களும் ''சூரிய பகவானே, சூரிய நாராயணா' எல்லாரும் ஆடு, மாடு, புள்ள, பெண்டு எல்லாத்தையும் காக்கணும்''[26] என வேண்டுதலுடன் இருகரங்களையும் தலைக்கு மேல் உயர்த்திக் கிழக்குப் பார்த்துச் சூரியனைக் கும்பிட்டு வந்துள்ளனர். இன்றைய நிலையிலும் வள்ளுவ மக்களில் பலர் குறிப்பாக வயதான பெரியவர்கள் குளிக்க முடியாத சூழலிலும் பல்துலக்கி, கைகால்களைத் தூய்மை செய்து சூரியனை வழிபாடு செய்தபின்னரே காலை உணவினை உண்ணுகின்ற நிலையைக் களப்பகுதியில் காணமுடிகிறது.

வள்ளுவச் சமூகத்து மக்களைப் பிறர் துன்புறுத்தினாலோ அல்லது அவர்களுக்குள் ஏதேனும் பிரச்சனைகள் வந்தாலோ சூரிய பகவானிடம் முறையிடும் வழக்காறு காணப்படுகிறது. இவர்கள் தலையோடு குளித்துவிட்டு, ஈரத்துணியுடன் ஏழு எருக்க இலைகளைக் கிழக்குப் பார்த்தவாறு (சூரியனைப் பார்தவாறு) வைத்து, ஏழு இலைகளிலும் சிறிதளவு மண்ணை வைத்து அவற்றின் மீது ஏழு கற்பூரங்களை வைத்து ஏற்றி ''எரிஞ்சிகினு வரியே, சூரிய நாராயணா! சூரிய பகவானே! உனக்குக் கண்ணில்லையா! நீதான் கேக்கணும்'' என முறையிடுகின்றனர்.

---

[25]. டாக்டர் சு. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப. 223.

[26]. கு. கல்யாணி, வயது. 59, வள்ளுவர் சமூகம், களையூர், கடலூர் வட்டம்.

“உலகில் மக்களும் உயிரினங்களும் வாழ்வதற்கு மூலமும் அடிப்படையாகவுமிருந்த கதிரவன் போற்றுதலுக்குரிய கடவுளானான். பல்வேறு நிலைகளிலும் கண்ணுக்குப் புலப்படாத கடவுளை, கதிரவன் உருவத்தில் மக்கள் கண்டனர். கதிரவனை வணங்கும் நிலைகளில் உலகின் பல்வேறு சமயங்களையும் காணலாம்”[27]. இவ்வாறே வள்ளுவர் சமூகத்தினர் கதிரவனைப் பல்வேறு நிலைகளில் வணங்குபவர்களாகக் காணப்படுகின்றனர். இவர்களிடம் எப்பொழுதும் எழுஞாயிற்றை வணங்கும் வழக்கம் காணப்படுகிறது. பொங்கல் திருநாள் அன்று மட்டுமே ஞாயிறு மறையும் சாயுங்காலமும் வழிபடுகின்ற நிலை காணப்படுகிறது.

### 4.7.5. சந்திர வழிபாடு

சந்திரனை வழிபடும் வழக்காறும் வள்ளுவர் சமூகத்தவரிடம் காணப்பட்டுவருகிறது. இவர்கள் சோதிடத்துறையில் ஆழ்ந்த அனுபவம் உடையவர்களாக உள்ளமையால் சந்திரன் நன்மையைத் தரும் கிரகம் என்று கருதி, அதனை வழிபடுகின்றனர். இவர்கள் மூன்றாம் பிறையினை வணங்குகின்றனர். இவர்களின் வாழ்வுசார் சடங்குகள் அனைத்தும் வளர்பிறை நாட்களிலேயே நடைபெறுகின்றன. எனவே, இவர்களின் வாழ்வில் சந்திரனுக்கு முக்கிய இடம் அளிப்பது தெரியவருகிறது. இவர்களின் பிள்ளைகளுக்கு சந்திரன் என்று பெயர்கள் வைத்திருப்பதன் மூலமும் இதனை அறியலாம். இவர்கள் சந்திரனை அலிகிரகமாகக் கருதுகின்றனர். சந்திரனைச் சந்திர பகவான் என்ற சொல்லால் குறிப்பிடுகின்றனர். பகலில் தங்களுக்கு ஏற்படும் துன்பங்களைச் சூரியனிடம் ஒப்படைப்பதுபோல் இரவில் சந்திர பகவான் தவறு செய்தவர்க்கு தண்டனையைக் கொடுப்பான் என்ற நம்பிக்கையைக் கொண்டுள்ளனர். இதனாலேயே இவர்களிடம் சந்திர வழிபாடு செல்வாக்குப் பெற்றுள்ளது.

இது தொடர்பாக வள்ளுவர்களிடம் ஒரு நாட்டுப்புறக் கதை காணப்படுகிறது. “பௌர்ணமியன்று இரவில் ஒருவன் தன் கொல்லிக்கு (வயலுக்கு) ஏரித் தண்ணீரைப் பாய்ச்சிக் கொண்டிருந்தானாம். அது அவன் பாய்ச்ச வேண்டிய முறை நாளாகும். வேறொருவன் நீதிக்குப் புறம்பாகத் தண்ணீரைத் தன் கொல்லிக்குத் திருப்பினான். இருவருக்கும் ஏற்பட்ட வாய்த்தகறாறு முற்றிக் கைகலப்பானது. நீதிக்கு மாறாக வந்தவன் தன்

---

[27]. ம.சோ. விக்டர், தமிழர் சமயம், ப. 20.

மமிட்டியால் (மண்வெட்டி) அவனை அடித்தான். அடிபட்டவன் தலையில் ரத்தம் ஒழுகி மூர்ச்சையுறும் நிலையில், ‘‘அக்கம் பக்கம் யாரும் இல்லையென்ற தைரியத்தில் அநியாயமா என்ன வந்து அடிக்கிற, யாருமில்லன்னாலும் ஏரிஞ்சிகினுவர சந்திர பகவானே உனக்குத் தகுந்த கூலிய கொடுப்பான்’’ என்று கூறி அவன் இறந்தான். இறந்தவனை அடித்தவன் மண்வெட்டியால் வாய்க்காலிலேயே பள்ளம் வெட்டிப் புதைத்துவிட்டு, இரத்தக்கறைகள் போக ஏரியில் குளித்துவிட்டு, ‘‘மேலே இருக்கிற சந்திரன் கீழே வந்து எனக்கு என்ன கூலியைக் கொடுத்துடுவான்’’ என்று கூறியவாறே வீட்டிற்கு வந்தான். பல ஆண்டுகள் ஆயின. ஒருநாள் பௌர்ணமி நிலா வெளிச்சத்தில் மனைவியுடன் சந்தோஷமாகப் பேசிக் கொண்டிருந்தபோது நிலாவைப் பார்த்தான். இறந்தவன் கூறியது இவன் நினைவுக்கு வர நிலாவைப் பார்த்துப் புன்னகைத்தான். மனைவி புன்னகைக்கான காரணம் கேட்க இவன் கூற மறுத்தான். ‘‘நீ சொன்னாதான் உன்கூட இணங்குவேன் (உடலுறவு கொள்வேன்)’’ என மனைவி சொல்ல, அவன் நடந்ததைக் கூறினான். சில நாட்கள் கழித்து கணவன் மனைவிக்குள் சிறு சண்டை வந்தது. அவன் அவளை அடிக்க மமிட்டியை எடுத்தான். ‘ஐயோ! அவன கொன்ன மாறி என்னையும் கொல்ல வாரான்’ என்று அலற, இறந்தவன் குடும்பத்தாருக்குக் குட்டு வெளிப்பட்டது. இராஜ தண்டனையாக இவனுக்கு மரண தண்டனை கிடைத்தது. சந்திர பகவான் கொலையாளியின் மனைவி மூலம் சாட்சிகூறித் தண்டனை பெற்றுத்தந்தான்’’[28] என இக்கதை அமைகிறது. இளைய தலைமுறையினரிடம் இது போன்ற நீதிக் கதைகளைக் கூறிச் சந்திரனைத் தெய்வமாக வழிபடும் வழக்காறு வள்ளுவர்களிடம் களப்பகுதியில் காணப்படுகிறது.

### 4.7.6. அருந்ததி வழிபாடு

அருந்ததி என்பது வானத்தில் உள்ள ஒரு நட்சத்திரம் (விண்மீன்) ஆகும். பத்தினித் தன்மையுடன் வாழ்ந்த பெண் ஒருத்தி உலகத்திற்கு உதாரணமாக விளங்க விண்ணில் நட்சத்திரமாகக்கப்பட்டாள். அவள் பிறந்த குலம் அல்லது சாதி அவளின் பெயரிலேயே ‘அருந்ததியினர்’ என்று அழைக்கப்படுவதாக நாட்டுப்புறங்களில் பேசப்பட்டு வருகிறது. இந்த அருந்ததியைத் திருமணத்தின்போது மட்டும் வள்ளுவர் சமூகத்தினர் வணங்கி வழிபடுகின்றனர்.

---

[28]. சீ. அம்பிகா, வயது. 59, வள்ளுவர் சமூகம், சேமக்கோட்டை, பண்ருட்டி வட்டம்.

இவர்களின் திருமணச் சடங்கின்போது மணமகன், மணமகளை அழைத்து ‘‘அருந்ததியைக் கண்டியா?’’ எனப் புரோகிதர் கூறுகிறார். மணமகன் மேலே பார்த்துவிட்டு ‘‘கண்டேன்’’ எனக் காட்டி அருந்ததியை இருகரங்களாலும் வணங்கி வழிபடுகிறார். ‘‘உன் கற்புநெறியை வணங்குகிறேன். நாங்களும் கற்புத் தன்மையுடன் உன்போல் விளங்க வேண்டும் என்பதற்காகவே அருந்ததியை வணங்கி வழிபடுகிறோம்’’ என்று அருந்ததியைப் பார்த்து வள்ளுவர் சமூகத்து மக்கள் கூறுகின்றனர்.

### 4.7.7. வேம்பினை வழிபடுதல்

வள்ளுவர்களின் இயற்கை வழிபாட்டில் வேம்பு, துளசி, மூங்கில், ஒதியம் ஆகிய தாவரங்களும் இடம்பெற்றுள்ளன. இவர்கள் வேம்பினை அம்மனாகக் கருதுகின்றனர். இவர்களின் குலதெய்வக் கோயில்களில் வேப்ப மரம் காணப்படுகிறது. இதனைச் சாமிக்குரியதாகக் கருதி மஞ்சள் பூசி, குங்குமம் இட்டுத் துணிகட்டி (ஆடை) வழிபாடு செய்கின்றனர். தமிழக நாட்டுப்புற மக்களிடம் வேம்பு வணங்குதலுக்குரிய சிறப்பிடம் பெற்றிருந்தாலும், வள்ளுவர்களிடம் சற்றுக் கூடுதலாக வழிபாட்டிற்கும் பயன்பாட்டிற்கும் உரியதாகக் காணப்படுகிறது.

இவர்களிடம் உடல்நிலை சரியில்லாமல் அதாவது பயத்தினால் காய்ச்சல், தூக்கமின்மை போன்றவற்றிற்காகப் பலரும் பாடம் அடித்துச் செல்வர். இவர்கள் வேப்பிலைக் கொத்துகளை வணங்கி பின்பு, அம்மனை வணங்கி மந்திரங்களைக் கூறிப் பாடம் அடிக்கின்றனர். இவ்வாறு பாடம் அடிப்பதால் நோய் குணமடைகிறது என்ற நம்பிக்கை நாட்டுப்புறங்களில் நிலவுகிறது. மேலும், வள்ளுவர்கள் கொடுக்கும் பல்வேறு நாட்டு மருந்துகளிலும் வேம்பினை மூலப்பொருளாகப் பயன்படுத்துகின்றனர். மந்திரச் சமய மருத்துவத்தில் தாயத்துப்போட வேப்பங்குச்சிகளைப் பயன்படுத்துவதும் உண்டு. வேப்ப மரம் வழிபாட்டிற்குரிய பொருள் என்பதால் அதன்மீது கால் படக்கூடாது என்பதற்காக, இவர்களின் வீட்டு வாசக்கால்களில் வேம்பினைக் கீழ்ப்படியாகப் பயன்படுத்துவதில்லை.

வள்ளுவச் சிறுவர்கள், இளைஞர்கள் அதாவது, மது அருந்துதல், புகைத்தல், சகோதரர்களுக்குள் சண்டையிட்டுக் கொள்ளுதல் போன்ற ஒழுக்கக் கேடான செய்யக்கூடாத தவறுகளில் ஈடுபட்டால் இனி அவ்வாறு செய்யக்கூடாது

என அவர்களிடம் உப்பு, வேப்பிலை கொடுத்து அவற்றின்மீது சத்தியம் செய்யச் சொல்லும் வழக்கம் இருந்தது. அவ்வாறு சத்தியம் செய்தவர்கள் வாழ்நாள் வரை அத்தகைய தவறுகளைச் செய்யார் என்ற நம்பிக்கையே இதற்கும் காரணமாகும்.

### 4.7.8. துளசியை வழிபடுதல்

வள்ளுவர்கள் துளசிச் செடியினையும் வழிபாட்டுப் பொருளாகக் கருதுகின்றனர். வள்ளுவ ஆழ்வார்களின் வழிபாட்டில் துளசித் தீர்த்தம் இடம்பெறுகிறது. இவர்களில் இறந்தவர்களைப் புதைக்கும்பொழுது தலைப்பகுதியில் துளசிச் செடியினை வேருடன் பிடுங்கி நட்டு அதற்குக் கற்பூர தீபம் காட்டி வணங்குகின்றனர். சைவ உணவினை மட்டுமே உட்கொள்கின்ற சில வள்ளுவ ஆழ்வார்கள் தங்களின் வீடுகளில் துளசி மாடம் அமைத்து வழிபாடு செய்கின்றனர்.

அரசாணிக்கால் நடுதல் என்பது தமிழர்களின் திருமணச் சடங்கினுள் ஒன்றாகக் காணப்படுவதாகும். இச்சடங்கினை வள்ளுவர்களும் செய்கின்றனர். இவர்கள் சிறு மூங்கிலுடன் அரசன் அல்லது ஒதியன் மரத்தின் கிளையினைச் சேர்த்து ஒன்றாகக் கட்டி அதனை மணமக்கள் நன்கு கழுவி அதற்கு மஞ்சள் பூசி, குங்குமம் இட்டு, சிறு துண்டினை ஆடையாகக் கட்டுகின்றனர். மேலும், காப்புக் கட்டிக் கற்பூர தீபம் காட்டி அட்சதை போட்டு வணங்கி வழிபடுகின்றனர். இது அரசாணிக்கால் வழிபாடு எனக் கூறப்படுகிறது. இச்சடங்கு வள்ளுவர்களின் திருமணத்தில் மிக அவசியமானதாகக் கருதப்படுகிறது. அரசன் அல்லது ஒதியன் மரம் வளையாத தன்மை கொண்டது. மூங்கில் வளையும் தன்மையுடையது. இல்வாழ்க்கையில் ஒருவர் சில காரணங்களால் ஒருவர் வளைந்து கொடுக்காமலிருந்தாலும் மற்றவர் வளைந்து கொடுக்க அதாவது விட்டுக்கொடுத்து வாழ வேண்டும் என்ற தத்துவத்தின் அடிப்படையில் இந்த அரசாணிக்கால் வழிபாட்டினை வள்ளுவர்கள் கடைபிடித்து வருவதாகத் தெரிகிறது.

## 4.8. இறந்தோர் வழிபாடு

இறந்த தங்களின் முன்னோர்களை வழிபடும் வழக்காற்றினைத் தமிழகமெங்கும் காணலாம். இதனை ‘முன்னோர் வழிபாடு’ (Ancestor worship) என்றும் கூறுவர். தமிழரிடையே இருந்த நடுகல் வழிபாடும் முன்னோர்

வழிபாட்டுடன் தொடர்புடையதாகும். இறந்தோர்க்கு உறவினர்கள் செய்யும் சடங்குகளின் மூலமும் வழிபாட்டின் மூலமும் அவர்களின் ஆத்மா இறைவனடி சேரும். இறந்தோரின் ஆத்மா மகிழ்ந்து தங்களுக்கு நன்மைகளைச் செய்யும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் இறந்தோர் வழிபாடு நடைபெறுவதாகத் தெரிகிறது. தமிழகத்தில் மாதாமாதம் வரும் அமாவாசை, ஆண்டுதோறும் வரும் திவசம் ஆகிய நாட்களில் விரதமிருந்து வழிபாடு செய்வது தொன்றுதொட்டு வரும் வழக்காறாகும். வள்ளுவர் சமூகத்து மக்கள் இறந்தோரை அந்தந்த நாட்களில் தவறாமல் வழிபாடு செய்துவருவது களப்பகுதியில் காணமுடிகிறது.

### 4.8.1. அமாவாசை

மாதாமாதம் வரும் அமாவாசைத் திதியன்று அமாவாசை விரதம் மேற்கொள்ளப்படுகிறது. அமாவாசைத் திதி அறுபது நாழிகையில் முதல் நாளில் கொஞ்சமும் மறுநாள் முக்கால் பங்கும் வரும். சில சமயங்களில் முதல் நாள் முக்கால் பங்கும் மறுநாள் கொஞ்சமும் வரும். இவ்வாறு கொஞ்சம் சொச்சமாக வரும் நாளை வள்ளுவர்கள் வழிபடுவதில்லை. முக்கால்பங்கு பூரண அமாவாசை நாளன்றே அமாவாசை தினமாகக் கொண்டு ஒவ்வொரு மாதமும் வழிபடுகின்றனர். ஆனால், அமாவாசை தொடங்குவதிலிருந்து முடியும்வரை அசைவ உணவுகள் உண்பதில்லை. வள்ளுவர்கள் அமாவாசையன்று காலையில் எழுந்து குளித்து வள்ளுவ ஆழ்வாராக இருப்பின் நெற்றியில் திருநாமமும், வள்ளுவ நாயனாராக இருப்பின் திருநீற்றுப் பட்டையும் போட்டுக் கொண்டு தங்களின் பணிகளுக்குச் சென்று விடுவர். வீட்டில் உள்ளவர்கள் மதியம் சோறு, சாம்பார், உருளைக்கிழங்குப் பொரியல், அப்பளம், முருங்கைக் கீரை, தயிர், இரசம் இவற்றைச் சமைத்து வைப்பர். தங்களின் குலத் தொழில்களைச் செய்யும் ஆண்கள் மதியம் வீடு திரும்பி மீண்டும் குளித்துவிட்டுப் படைப்பர். படைக்கும்பொழுது பூ, பழம், பத்தி, கற்பூரம் இடம்பெறும். தேங்காய் மட்டும் உடைப்பதில்லை. அரசுப்பணிகளில் உள்ள ஆண்கள் வர இயலாத நிலையில் பெண்களே படைத்து விடுவர். தாய், தந்தை உள்ள ஆண்கள் அமாவாசை விரதம் இருப்பதில்லை. கணவன், மாமனார், மாமியார் இவர்களில் யாரேனும் ஒருவர் இறந்தாலும் பெண்கள் அமாவாசை விரதம் மேற்கொள்கின்றனர். மாமனார், மாமியாருக்காக ஆண்கள் விரதமிருப்பதில்லை. சில ஆண்டுகளுக்கு முன்னர் அரிசிச் சோற்றுக்கு வழி இல்லாதவர்கள்கூட அமாவாசையன்று சோறு படைப்பர். ‘‘கூழ் குடிப்பவர்களும் அமாவாசையில் மட்டும் பகலில் சோறு ஆக்கிப் படைத்து உண்பர்.

‘அமாவாசைப் பருக்கை அன்றாடம் கிடைக்குமா?’ என்னும் பழமொழி இதனால்தான் எழுந்தது’’[29].

வள்ளுவர்கள் அமாவாசைக்குப் படைத்த பொருட்கள் அனைத்திலும் சிறிதளவு வாழை இலையில் வைத்து ‘‘கா!கா!’’ எனக் காகத்தை அழைத்து வைப்பர். காகம் வந்து அதை உண்ட பின்னரே இவர்கள் உண்பது வழக்கம். காகங்கள் இறந்த தம் மூதாதையர் என்ற நம்பிக்கையே இதற்குக் காரணமாகும். இவ்வாறு அமாவாசைத் திதியன்று படைத்து வழிபடாவிட்டால் இறந்தோரின் ஆவி தம் வீட்டின் மீது மண்ணை வாரி விடும், சபிக்கும் என்றும் அவ்வாறு வழிபட்டால் வழிபடுவோருக்கு நல்வாழ்வு கிட்டும் என்றும் நம்பிக்கை உடையவர்களாக வள்ளுவர்கள் காணப்படுகின்றனர். இவர்கள் அனைவரும் அமாவாசை கும்பிடுபவர்களாகவே உள்ளனர். அமாவாசையினை ‘அம்மாவாசை’ என்று கூறுவது இவர்களின் வழக்காகக் காணப்படுகிறது. வள்ளுவர்களின் அனைத்து வழிபாடுகளின்போதும் படைக்கும் இலையை நாய்கள் தொடாதவாறு ஏதேனும் வேலியில் செருகி வைக்கின்றனர். இறைவனுக்குப் படைத்த இலையினை நாய் எச்சில் செய்தால் விரதம் பலன் அளிக்காது என்று கருதுகின்றனர்.

### 4.8.2. மஹாளய அமாவாசை

ஒவ்வோர் ஆண்டும் புரட்டாசி மாதத்தில் வரும் அமாவாசையை மிகவும் சிறப்புக்குரியதாகக் கொண்டாடுகின்றனர். இது ‘மஹாளய அமாவாசை’ என்றழைக்கப்படுகிறது. இதனை வள்ளுவர்கள் ‘மாளி அம்மாவாச’ என்றே குறிப்பிடுகின்றனர். இந்த அமாவாசைத் திதி ஒரு வருடத்தில் வரும் பன்னிரண்டு அமாவாசைத் திதிகளிலும் தலைசிறந்தது என வள்ளுவர் சமூகத்தவர் கருதுவதால் மாளி அம்மாவாசையை சற்றுச் சிறப்பாக வழிபாடு செய்கின்றனர்.

### 4.8.3. தை அமாவாசை

தை மாதத்தில் வரும் அமாவாசையென்பதால் இதனைத் ‘தை அமாவாசை’ என்றழைக்கின்றனர். இதனையும் வள்ளுவர்கள் சிறப்புக்குரியதாகக் கருதுகின்றனர். சித்திரை முதற்கொண்டு வரும் ஒன்பது அமாவாசைகளையும்கூட

[29]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 434.

வழிபடாதவர்கள் தை அமாவாசையை மட்டும் வழிபட்டால் போதும்; பத்து அமாவாசைகளையும் மொத்தமாக வழிபட்ட பலன் கிடைக்கும் என்ற நம்பிக்கையே இதன் சிறப்பிற்குக் காரணம்.

*''தை அம்மாவாசய தப்பாத கும்புட்டா*

*பத்தம்மாவாசப் பலனும் மொத்தமா கிட்டும்''*[30]

என்ற பழமொழி வள்ளுவர்களின் வழக்கில் காணப்படுகிறது.

### 4.8.4. மாசி மகம்

மாசி மாதத்தில் வரும் 'மக நட்சத்திரத்தன்று' இறந்தோரை வழிபடும் வழக்கமுடையவர்களாகக் களப்பகுதியில் உள்ள அனைத்துச் சமூகத்தினரும் காணப்படுகின்றனர். இதனை, 'மாசிமகம்', 'மகம் கும்பிடல்' என்னும் சொற்களால் குறிப்பிடுகின்றனர். வள்ளுவச் சமூகத்தினரும் மாசிமக வழிபாடு உடையவர்களாகக் காணப்படுகின்றனர்.

மகத்திற்கு முதல்நாள் இரவே புனிதமாகக் கருதப்படும் ஆறுகள், கடல் உள்ள இடங்களுக்குச் சென்று தங்கிவிடுகின்றனர். களப்பகுதி மக்கள் விருத்தாசலம், திருக்காஞ்சி, சங்கராபரணி ஆறு, தேவனாம்பட்டினம் (வங்கக்கடல்) ஆகிய இடங்களுக்குச் செல்கின்றனர். இந்த மூன்று இடங்களில் எந்தெந்த ஊர் மக்களுக்கு எது அருகில் உள்ளதோ அங்குச் சென்று வழிபாடு செய்கின்றனர்.

வள்ளுவர்கள் அதிகாலை மூன்று மணியளவில் ஆறு அல்லது கடலில் தலைமுழுகி, ஈரத்துணியுடன் ஆண்களும் பெண்களுமாக வள்ளுவப் புரோகிதர்களிடமே திருநாமம் அல்லது திருநீற்றுப் பட்டை போட்டுக்கொண்டு வெற்றிலை, பாக்கு, தேங்காய், வாழைப்பழம், பச்சரிசி, தட்சணையாகப் பணம் இவற்றைக் கொடுத்து, இறந்தவரின் குலம், கோத்திரம், பெயர் இவற்றினைக் கூறுவர். வள்ளுவப் புரோகிதர்கள் சில மந்திரங்களைக் கூறுவர். இறந்தோரின் ஆத்மாவைக் கைலாயம் அல்லது வைகுண்டம் சேர்ப்பர். அதற்காகச் சில மந்திரங்களைக்கூறி வழிபாடு செய்பவர்களின் கைகளில் வெற்றிலையின்மீது எள், பணம் வைத்து தண்ணீ விடுவர். அப்போது 'அரகர' அல்லது 'அரிஅரி' என்று சொல்லப்படும். இறந்தோர்க்காக அவரது குடும்பத்தார் காசி,

---

[30]. எஸ். இராமச்சந்திரன், வயது. 63, வள்ளுவர் சமூகம், களையூர், கடலூர் வட்டம்.

இராமேஸ்வரம் ஆகிய புண்ணிய தலங்களில் மூழ்கி எள்ளும் தண்ணீரும் இறைத்ததற்கு இணையாக இது கூறப்படும். இது ‘தர்ப்பணம் கொடுத்தல்’, ‘எள்ளுந் தண்ணீரும் இறைத்தல்’ என்றும் பச்சரிசியினைத் தானமாகக் கொடுப்பதால் ‘அரிசி கொடுத்தல்’ என்றும் கூறப்படுகிறது.

மாசிமக வழிபாட்டினை வள்ளுவர்கள் தங்களுக்குள் மட்டுமே செய்து கொள்ளாமல், பிற தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் அனைவருக்குமே புரோகிதம் செய்யும் குருவாக இருந்து செய்து வைக்கின்றனர். இந்த மாசிமக வழிபாட்டினால் இறந்தோரின் ஆத்மா மகிழ்ச்சியடைகிறது என்றும் அதனால் வழிபடுபவர்களுக்கு நன்மை விளையும் என்றும் நம்பிக்கை நிலவுகிறது.

### 4.8.5. திவசம் கொடுத்தல்

ஒருவர் இறந்த பின்னர் ஒவ்வோர் ஆண்டும் அவர் இறந்த அதே திதியன்று அவரது ஆத்மா சாந்தியடைய வேண்டி நான்காம் பதவி (சொர்க்கம்) சேர்க்கச் சில சடங்குகளை முறைப்படிச் செய்வது, ‘திதி கொடுத்தல்’ அல்லது ‘திவசம்’ ஆகும். இதனை, ‘தெவஷம் கும்பிடல்’, ‘தெவஷம் குடுத்தல்’ என்ற சொற்களால் வள்ளுவர்கள் குறிப்பிடுகின்றனர். இறந்தபின் முதல் ஆண்டில் வரும் இறந்த திதி தலை தெவஷமாகச் சற்றுச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது. இதற்கு உறவினர்கள் அழைக்கப்படுகின்றனர். உணவுகள் சிறப்பாகச் செய்யப்படுகின்றன. உறவினர்கள் பொன், பொருட்கள், பணம் அன்பளிப்பாகக் கொடுப்பதும் உண்டு.

தெவஷத்தின் அன்று அதிகாலையில் வீட்டினைச் சுத்தம் செய்து அனைவரும் தலைகுளித்து, மாவிலை, காய்ந்த பால்மரச் சுள்ளிகள், தெர்ப்பைப்புல், தேங்காய், பழம், வெற்றிலைப் பாக்கு, எள், ஓமம், நவதானியம், நெய், கற்பூரம், பத்தி, பச்சரிசி, கோமியம், வாழை இலை ஆகிய வேள்விப் பொருட்களை ஆயத்தம் செய்து கொண்டு மாமன், மைத்துனன் முறையினரில் புரோகிதம் செய்யத் தெரிந்த ஒருவரைப் புரோகித குருவாக அழைத்துவந்து, தெவஷம் கொடுக்கத் தொடங்குகின்றனர்.

#### 4.8.5.1. கலசம் வைத்தல்

வள்ளுவப் புரோகிதரிடம் காலில் விழுந்து வணங்கி, திருமணமாகாதவராக இருப்பின் ஆண் மட்டும் திருமணமாகிருப்பின் கணவன், மனைவி இருவரும்

(தெவஷம் கொடுப்பவர்) திருநாமமோ அல்லது திருநீற்றுப் பட்டையோ போட்டுக் கொள்கின்றனர். புதுச் செம்பில் குறுக்கும் நெடுக்குமாக நூல் சுற்றி மஞ்சள் குங்குமம் வைத்து அதனுள் கோமியம் ஊற்றி, மஞ்சள் கரைத்து, மாவிலை வைத்து, அதன்மீது தேங்காய் வைத்து, தேங்காய்க்கும் மஞ்சள், குங்குமம் வைத்துப் பூச்சரத்தினைச் சுற்றி, அக்கலசத்திற்குச் சிறு துண்டு (ஆடை) சாத்துகின்றனர். முகமுள்ள வாழையிலையில் பச்சரியைப் பரப்பி அதன்மீது கிழக்குப் பார்த்தவாறு கலசம் வைக்கப்படுகிறது. இக்கலசத்தின் அருகில் மஞ்சள் தூளினால் இரட்டைப் பிள்ளையார் பிடிக்கப்பட்டு, ஒரு வெற்றிலையின் மீது கிழக்கு முகமாக வைக்கப்படுகிறது. அதற்கு அருகம்புல் சூட்டப்படுகிறது. இந்தக் கலசத்திற்கும், பிள்ளையாருக்கும் தேங்காய், பழம், வெற்றிலை, பாக்கு, பணம் வைத்துப் படைத்துக் கற்பூர தீபம் காட்டி, பத்தி ஏற்றி வழிபடுகின்றனர். வழிபடும்பொழுது சில வடமொழி மந்திரங்கள் புரோகிதரால் கூறப்பட்ட அம்மந்திரங்களைத் திதி கொடுப்பவர்கள் திரும்பக் கூறுகின்றனர்.

### 4.8.5.2. எக்கியம் வளர்த்தல்

ஒன்று அல்லது ஒன்றரை அடி நீளமுள்ள ஒரு பிடி அளவு தெர்ப்பையை நுனியில் முடிச்சுப் போட்டு அத்தெர்ப்பையை நான்காகப் பகிர்ந்து கலசத்தின் நான்கு பக்கமும் கால்போல் வைக்கின்றனர். பின்னர் நல்விளக்கேற்றி (காமாட்சியம்மன் விளக்கு) அதன் எதிரில் பால்மரச் சுள்ளிகளை (சம்பத்துக்கட்டு) அடுக்கி நெய் வார்த்துக் கற்பூர தீபம் ஏற்றித் தீமூட்டுகின்றனர். அப்போது புரோகிதர் சில மந்திரங்களைச் சொல்லத் திதி கொடுப்பவர்களும் உடன் சொல்கின்றனர். ஆண்களுக்குப் பூணூலும் கையில் நூலும் வலக்கை மோதிர விரலில் தெர்ப்பைப் புல் மோதிரமும் அணிவிக்கப்படுகின்றன. பெண்களுக்குக் கையில் நூலும், தெர்ப்பைப் புல் மோதிரமும் அணிவிக்கப்படுகின்றன. புரோகிதரால் எள், ஓமம், நவதானியம் ஆகியவை அங்குள்ள பங்கும் பங்காளிகள் உற்றார் உறவினர்கள் அனைவருக்கும் கொடுக்கப்படும். அவர்கள் அவற்றைத் தலையை மூன்றுமுறை சுற்றித் தீயில் போடுகின்றனர். இவ்வாறு நெய்விட்டு ஏற்றும் தீயினை ‘எக்கியம் வளர்த்துதல்’ என்ற சொல்லால் குறிப்பிடுகின்றனர். இந்த எக்கியத்தில் பசுவின் கோமியமும் தண்ணீரும் நெய்யும் விடப்படுகின்றன. எருமைக் கோமியத்தைப் பயன்படுத்துவதில்லை.

*‘‘எருமைக் கோமியம் எக்கியத்துக்கு உதவாது’’*[31]

என்ற பழமொழி இவர்களிடம் காணப்படுகிறது.

### 4.8.5.3. எள்ளுந் தண்ணியும் இறைத்துத் திதி கொடுத்தல்

எக்கியத்தில் தண்ணீர் விழுமாறு ஒரு வெற்றிலையை இருகரங்களால் திதி கொடுப்பவர் பிடித்துக்கொள்ள மற்ற பங்கும் பங்காளிகள் அனைவரும் அவரைத் தொட்டுக் கொள்வர். புரோகிதர் அந்த வெற்றிலையின்மீது எள், நாணயம் இவற்றை வைத்துத் திதி கொடுப்பார். அப்போது மாவிலையால் தண்ணீரை வாரி வெற்றிலையில் விடுவார். தண்ணீரும் எள்ளும் எக்கியத்தில் விழும். இதனை ‘எள்ளுந் தண்ணியும் எறைக்கிறது’ என்று கூறுகின்றனர்.

திதி கொடுப்பதில் வள்ளுவச் சமூகத்தவர்கள் மிகவும் கவனமாக இருக்கின்றனர். திதியை மாற்றித் தவறாகக் கொடுத்தால் அது ஏற்றுக் கொள்ளப்படாது என்கின்றனர். இவர்கள் இறந்த நாளைக் கணக்கிடுவதில்லை. இறந்த திதியையே கணக்கில் வைத்துத் திதி கொடுக்கின்றனர். திதியைத் தவறாமல் கொடுப்பதே முன்னோர்களுக்குச் செய்யும் கடமை என்று கருதுகின்றனர். பரபரப்பாக உள்ள ஒருவனைப் பார்த்துப் ‘‘பொறுமையா செயல்படுப்பா! உங்க அப்பன் ஊட்டுத் திதியா தவறிடுது’’ என்று கேட்கும் வழக்காறு இவர்களிடம் காணப்படுகிறது.

புரோகிதர் இறந்தவரின் ஊர், வம்சம், முப்பாட்டன், பூட்டன், பாட்டன் ஆகியோரின் பெயர்களை முதலில் கூறுவார். பின்னர், இறந்தவரின் தாய், தந்தை பெயர்களைக் கூறுவார். அவ்வாறு கூறும்பொழுது இன்னாரது குமாரர் அல்லது குமாரத்தி இன்னார் என இறந்தவரின் பெயரைக் குறிப்பிடுவார். இறந்தவர் திருமணமான பெண்ணாக இருப்பின் அவருடைய கணவரின் வம்சம், பெயர் ஆகியவற்றைக் கூறி இன்னாரது பரியாள் (மனைவி) இன்னார் எனப் பெயரைக் குறிப்பிடுவர். அதன் பின்னர் இறப்பு நிகழ்ந்த ஆண்டு, மாதம், தேதி, திதி (வளர்பிறை எனில் சுக்ல பட்சத் திதி என்றும் தேய்பிறை எனில் கிருஷ்ணபட்சத் திதி என்றும் குறிப்பிடப்படும்) ஆகியவை கூறப்படும். இந்தத் திதியில் இன்னார் வைகுந்த பதவி அல்லது சிவலோக பதவி அடைந்ததை முன்னிட்டு இவருடன் சேர்த்துத் ‘‘தாயில பத்தும், தந்தையில பதினொன்றும் ஆக

---

[31]. எஸ். இராமச்சந்திரன், வயது. 63, வள்ளுவர் சமூகம், களையூர், கடலூர் வட்டம்.

மூவேழு இருபத்தோறு தலைமுறையினரது ஆத்மாவும் சாந்தியடைய வேண்டி, உற்றார், உறவினர் பங்கும் பங்காளிகள் அனைவருமாகச் சேர்ந்து கங்கா, யமுனா, கோதாவரி, பிரம்மபுத்திரா, கிருஷ்ணா ஆகிய புண்ணிய நதிகளில் மூழ்கி நீராடி, அன்னதானம், சொர்ணதானம், பூதானம், கோதானம் என்று சொல்லக்கூடிய முப்பத்திரெண்டு தானங்களையும் கொடுத்து, மாய்ந்தவர்கள் ஆவியது முத்து மோட்சம் பெற ஜாலோக, ஜாமிப, ஜாரூப, ஜாயுச்சம் நான்காம் பதவி அடையக்கடவது. கோவிந்தா! கோவிந்தா!'' என்று திதி கொடுத்து முடிப்பார். இவ்வாறு புரோகிதர் திதி கொடுக்கும்பொழுது 'அரிஅரி' அல்லது 'அரகர' என்று திதி கொடுக்கும் உறவினர்கள் உடன் கூறிக் கொண்டே இருப்பார்கள்.

திதி கொடுத்து முடித்ததும் புரோகிதர் சில மந்திரங்களைக் கூறியவாறு, அனைவரின் கைகளிலும் கட்டப்பட்டுள்ள நூல், தெர்ப்பைப்புல் மோதிரம், பூணூல் ஆகியவற்றைக் கழற்றி எக்கியத்தில் போட்டு விடுவார். எக்கியம் எரிந்து முடிந்ததும் அதில் தண்ணீர் தெளித்து அணைத்துச் சாம்பலுடன் அதில் கிடக்கும் பொருட்கள் அனைத்தையும் ஒரு பெரிய தாம்பாளத்தில் சேகரிப்பார். பின் தாம்பாளத் தட்டை மூடி, திதி கொடுத்தவரை, வடக்கு முகமாக இருத்தி, அவருடைய ஒருகால் ஊன்றி, மறுகால் மண்டியிட்டு இருக்குமாறு செய்து, வலப்பக்கத் தோளில் வைப்பார். அப்படி வைத்துத் திரும்பிப் பார்க்காமல் ''காசிக்கு போறேன்! இராமேஸ்வரம் போறேன்'' என்று கூறியவாறு ஏதேனும் நீர்நிலையில் விட்டுவிட்டு வரச்செய்வர். இதனை, 'திதி கொடுத்தல்' என்றும் 'தர்ப்பணம் கொடுத்தல்' என்றும் வழங்குகின்றனர்.

### 4.8.5.4. தானம் கொடுத்தல்

ஒரு பெரிய தாம்பாளத்தில் உப்பு, புளி, மிளகாய், காய்கறிகள், புழுங்கல் அரிசி, பச்சரிசி, பழம், வெற்றிலைப் பாக்கு, பணம், வேட்டி, துண்டு இவற்றை வைத்துப் புரோகிதரிடம் கொடுத்துக் குடும்பத்துடன் காலில் விழுந்து வணங்குவர். புரோகிதர் அட்சதை போட்டு, வாழ்த்திக் கலசத்தில் உள்ள கோமியத்தை மாவிலையால் வாரித் தலையில் தெளிப்பார். பின்னர், வீடு முழுவதும் கோமியம் தெளிக்கப்படும். கலசம் வைத்த செம்பு திதி கொடுக்கும்போது பயன்படுத்திய அரிசி, பழம், காய்கறிகள் அனைத்தும் புரோகிதரையே சேரும்.

#### 4.8.5.5. படைத்தல்

இவ்வாறு தெவஷம் கொடுத்து முடித்ததும், குடும்பத்தார் அனைவரும் உண்ணாமல் விரதமிருந்து, சாம்பார், ரசம், மோர், சோறு, பொரியல், வடை, அப்பளம் பாயாசம் எனச் சிறப்புச் சைவ உணவு வகைகளைச் சமைத்து மதியம் பன்னிரண்டு மணி முதல் இரண்டு மணிக்குள்ளாக இறந்தவரின் படத்தை வைத்துப் படைக்கின்றனர். இறந்தவர் ஆணாக இருப்பின் புது வேட்டி துண்டும், பெண்ணாக இருப்பின் புடவை, இரவிக்கையும் வைத்துப் படைக்கின்றனர். படைத்த பின்னர், படைத்த அனைத்துப் பொருட்களிலும் சிறிதளவு எடுத்துச் சிறு வாழையிலையில் வைத்துக் காகத்தை அழைத்து உண்ணச் செய்கின்றனர். காகம் உண்டபின்னர் ஊர் மக்கள், தெரு மக்கள், உறவினர் அனைவரையும் அழைத்து மதிய உணவு அளிக்கின்றனர். பின்னரே, இவர்கள் உணவு உண்கின்றனர்.

இவ்வாறு தெவஷம் செய்ய வசதியில்லாதவர்கள் மிக எளிமையான முறையில் திதி கொடுத்துவிட்டு, பசுவிற்கு அகத்திக்கீரையும், பச்சரிசியும் கொடுத்து விடுவதும் உண்டு. இவர்களால் முடிந்தவர்களுக்கு மட்டும் எளிய முறையில் உணவு வழங்குவர். இவ்வாறு வள்ளுவர் சமூகத்து மக்கள் இறந்தோர் வழிபாடுகளைச் செய்து வருகின்ற நிலைகளைக் களப்பகுதியில் காணமுடிகிறது.

### 4.9. தொகுப்புரை

❖ தொன்றுதொட்டுத் தமிழர்கள் கடைபிடித்துவந்த சமயத்தின் பெயரை இன்னதென அறியமுடியவில்லை. பெயர் அறியமுடியாத தமிழர் சமயமே காலமாற்றத்தால் சிவனியமாகவும், மாலியமாகவும் மாறின எனலாம். காலங்காலமாகச் சைவ, வைணவ சமயங்களைச் சார்ந்தவர்களாகக் காணப்படும் வள்ளுவர் சமூகத்தினர் ஒரு காலத்தில் பௌத்தச் சமயத்தைப் பின்பற்றிப் பின் மீண்டும் சைவ, வைணவ சமயங்களுக்கு மாறியிருக்க வேண்டும். களப்பகுதியில் ஒருசில குடும்பங்கள் கிறித்துவச் சமயத்திற்கு மாறியுள்ளன. பெரும்பான்மையினர் சைவ, வைணவப் பிரிவினர்களாகவே இன்றும் காணப்படுகின்றனர்.

- ❖ வள்ளுவர்களிடம் பெருந்தெய்வ வழிபாட்டு முறையும், சிறுதெய்வ வழிபாட்டு முறையும் காணப்படுகின்றன. சிவனையும் திருமாலையும் முழுமுதற் கடவுளாகக் கருதும் இவர்கள் சிறுதெய்வங்களைத் தங்களின் குலதெய்வங்களாகக் கருதுகின்றனர். இவர்களின் குலதெய்வங்கள் பெரும்பாலும் அம்மன்களாகவே உள்ளன.

- ❖ பெருந்தெய்வ வழிபாட்டின்போது பாடப்படும் தேவாரம், திருவாசகம், நடராசர் பத்து, திருப்புகழ், நாலாயிர திவ்விய பிரபந்தம் ஆகிய பாடல்களை வள்ளுவர்கள் சிறுதெய்வ வழிபாடுகளின் போதும் பாடுகின்ற வழக்காறு காணப்படுகிறது. இவர்களின் குலதெய்வங்களாகிய பெண் தெய்வங்கள் சிவன், திருமால் ஆகியோரின் தங்கையர், மனைவியர் என்னும் உறவுமுறையினர் என்னும் நம்பிக்கையும் இவர்களிடம் காணப்படுகிறது. இதன் வெளிப்பாடே சிறுதெய்வப் படையலின்போது ‘கோவிந்தா! கோவிந்தா!’ ‘அரோகரா! அரோகரா!’ என்று ஒலியெழுப்புவதாகும்.

- ❖ வள்ளுவர் சமூத்தினர் அரியும் சிவனும் ஒன்று என்ற கருத்தினை உடையவர்களாக உள்ளனர். அவ்வகையில் சைவ சமயத் தெய்வங்களை வள்ளுவ ஆழ்வார்கள் வணங்கியும் வழிபாடு செய்தும் வருகின்றனர். ஆனால், வள்ளுவ நாயனார்கள் வைணவத் தெய்வங்களை வணங்கியும் வழிபாடு செய்தும் வருகிற நிலை பெரும்பான்மையாகக் காணப்படுவதில்லை; ஒரு சிலரே கடைபிடிக்கின்றனர்.

- ❖ ஒருசில வழிபாட்டு நாட்களை அதாவது சரஸ்வதி பூசை, ஆயுத பூசை, பிள்ளையார் சதுர்த்தி, கார்த்திகை தீபம், மகா சிவராத்திரி ஆகியவற்றை வள்ளுவச் சமூகத்தில் உள்ள இரு சமயப் பிரிவினருமே களப்பகுதியில் வழிபாடு செய்து வருகின்றனர்.

- ❖ வள்ளுவர்கள் தங்களின் குலதெய்வங்களான சிறுதெய்வங்களுக்குத் தங்கள் ஊரில் சிறு கோவில்கள் அமைத்துள்ளதைப்போல் தாங்கள் வசிக்கும் வீதிகளில் (வள்ளுவர் வீதிகளில்) பெருமாள், முருகன், பிள்ளையார் ஆகிய

பெருந்தெய்வங்களுக்கும் சிறு கோயில்களை அமைத்து இவர்களே பூசாரிகளாகவும் இருந்து வருகின்ற நிலை காணப்படுகிறது.

- ❖ வள்ளுவர்களின் வாழ்வுசார் சடங்குகளான காது குத்துதல், திருமணம், புதுமனை புகுதல் ஆகிய சடங்குகளை முன்னிட்டுக் குலதெய்வங்களை வழிபாடு செய்யும் வழக்காறு காணப்படுகிறது.

- ❖ பெருந்தெய்வங்களுக்கு விரதமிருந்து சைவ உணவுகளைப் படைக்கும் வள்ளுவர்கள் சிறுதெய்வங்களுக்கு விரதம் இருப்பதில்லை. அசைவ உணவுகள், மது வகைகள் ஆகியவற்றையே படைக்கின்றனர். ஆடு, கோழி இவற்றைப் பலி கொடுப்பதும் உண்டு. எட்டாம் நாள் ‘உதிரவாய் துடைத்தல்’ என்னும் சடங்கு நிகழ்வு இவர்களின் சிறுதெய்வ வழிபாட்டில் காணப்படுகிறது. சிறுதெய்வங்களில் ஒன்றான ‘மாரியம்மன்’ களப்பகுதியில் வள்ளுவர்களின் குலதெய்வமாகக் காணப்படவில்லை. எனினும் இத்தெய்வத்தை வணங்கும் வழக்காறு காணப்படுகிறது.

- ❖ சித்திரைத் திங்கள் முதல்நாளில் பிற சமூக மக்களைப் போன்றே புத்தாடைகளுடன் புத்தாண்டைக் கொண்டாடும் வள்ளுவர்கள் தங்களின் குலத்தொழிலான சோதிடத்திற்குப் பயன்படும் அவ்வாண்டிற்குரிய ‘பஞ்சாங்கத்தை’ வைத்துச் சைவ உணவுகள், பலகாரங்களை வைத்துப் படைத்து வழிபடுகின்றனர்.

- ❖ வள்ளுவர்கள் இயற்கை வழிபாடு உடையவர்களாகக் காணப்படுகின்றனர். இயற்கைப் பொருட்களைத் தெய்வங்களாகவும், தெய்வங்களுக்கு உரியவையாகவும் கருதுகின்றனர். வானியலில் அறிவுடையவர்களான வள்ளுவர்கள் பழங்காலம் முதல் சூரியன், சந்திரனைக் கடவுளர்களாகவும், கண்ணுக்குப் புலப்படாத ‘அருந்ததி’ என்ற விண்மீனைப் பத்தினித் தெய்வமாகவும் வழிபடுகின்ற நிலைகள் களப்பகுதியில் காணப்படுகின்றன.

- ❖ பசுவினைக் கொல்வது கொடிய பாவம். பசு லட்சுமி, கோமாதா என்னும் நம்பிக்கைகளை உடையவர்களாக இவர்கள் உள்ளனர்.

பசுவினை வணங்குவதுடன், குரங்கு, கருடன் ஆகியவற்றையும் வள்ளுவ ஆழ்வார்கள் வழிபடுபவர்காளக உள்ளனர். தாவரங்களில் துளசி, வேம்பு, ஒதியன், அரசு, மூங்கில் ஆகியவற்றையும் பல்வேறு சடங்குகளின்போது அபிஷேக ஆராதனைகள் செய்து வழிபாடு நடத்துகின்றனர்.

- இறந்தோர் வழிபாட்டு முறைகளை வள்ளுவர்கள் காலம் தவறாமல் செய்கின்றனர். பிற தாழ்த்தப்பட்ட சமூக மக்களுக்கும் செய்து வைக்கின்றனர். மாதாமாதம் வரும் அமாவாசை வழிபாடு, ஆண்டுக்கொருமுறை திதி கொடுத்தல், மாசி மகம் கும்பிடுதல் போன்ற இறந்தோர்க்குச் செய்யும் வழிபாட்டு முறைகளைத் தவறாமல் செய்வதால், இறந்த தம் முன்னோர்கள் வீடுபேறு அடைவதுடன் தங்களின் குடும்பத்தையும் ஆசிர்வதிப்பர் என்று நம்புகின்றனர். இவ்வாறு வழிபடவில்லையெனின் இறந்தோர் சாபம் கொடுப்பார்கள் என்ற நம்பிக்கையும் வள்ளுவர்களிடம் காணப்படுகிறது. இறந்தோர் வழிபாட்டுச் சடங்குகளுக்குக்கூட இவர்கள் குருவாகப் பிராமணர்களை அழைப்பதில்லை.

# 5. வள்ளுவர்களின் வாழ்வுசார் சடங்குகள்

## 5.1. முன்னுரை

மக்கள் வாழ்வில் சடங்குகள் பெரும் பங்காற்றுகின்றன. சடங்குகள் பங்குபெறுவோரை ஒன்றுபட வைக்கின்றன. சடங்குகள் புனிதத் தன்மையைப் பாதுகாக்கவும், அதற்கு களங்கம் ஏற்படாமலிருக்கவும், தீயவற்றிலிருந்து தனிமைப்படுத்தித் தூய்மையாக வைக்கவும் மேற்கொள்ளப்படுகின்றன. சமயங்களின் கருப்பொருளாகக் கருதப்படும் சடங்குகள் சமயச்சார்புடைய சடங்குகளாகவும் வாழ்வியல் சடங்குகளாகவும் மக்களிடம் நிறைந்து காணப்படுகின்றன. வள்ளுவர் சமூகத்து மக்களின் வாழ்வியல் சடங்குகளிலும் இறப்புச் சடங்குகளிலும் இவர்களின் உள்ளினப் பிரிவிற்கேற்பச் சைவ, வைணவ சமயஞ்சார்ந்த முறைகள் காணப்படுகின்றன. மேலும் நாட்டுப்புறச் சிறு தெய்வங்களைச் சார்ந்த நாட்டுப்புறச் சடங்கு முறைகளும் காணப்படுகின்றன.

## 5.2. சடங்கு

மக்களின் நம்பிக்கைகளையும் குறிக்கோள்களையும் மிகத் தெளிவாக வெளிப்படுத்தும் பண்பாட்டுக் கூறுகளில் ஒன்றான 'சடங்கு' நாட்டுப்புறவியலில் முக்கிய இடம் வகிக்கின்றது. நாட்டுப்புற மக்களின் வாழ்வோடு சடங்குகள் பின்னிப் பிணைந்து கிடப்பதே இதற்குக் காரணமாகும். "சடங்கென்பது நிர்ணயிக்கப்பட்ட விரிவான நடத்தைகளின் வடிவமாகும். இது தனிமனிதனின் சுயமான ஆக்கமாகவோ பண்பாட்டின் தனிச்சிறப்புக் கூறாகவோ அமையும்"[1] என்கிறார் ரூத் பெனிடிக். "புனிதப் பொருள்களின் முன்னால் மனிதன் எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும் எனக் கூறும் ஒழுக்க விதிகளே சடங்குகள்"[2] என்கிறார் தர்கைம்.

சமயச் சார்புடைய சடங்குகள் தவிர வாழ்வியல் சடங்குகளும் மக்கள் வாழ்வில் நிறைந்துள்ளன. மானிடவியல் அறிஞர்களும், நாட்டுப்புறவியல் அறிஞர்களும் சடங்குகளைப் பல்வேறு நிலைகளில் வகைப்படுத்தினர். எனினும், மக்களின் வாழ்வியற் சடங்குகள் அனைத்திலுமே சமயச் சடங்குகள் பின்னிப்

---

[1]. சு. சக்திவேல், நாட்டுப்புறவியல், ப. 190.

[2]. மேலது, ப. 190.

பிணைந்தும், முதன்மைபடுத்தப்பட்டும் காணப்படுகின்றன. "அர்னால்டு வான் கென்னப் என்னும் மானிடவியல் அறிஞர் மக்களின் வாழ்வியற் சடங்குகளை மிகவும் நுணுக்கமாக ஆராய்ந்து அவற்றைத் தகுதிப் பெயர்ச்சிச் சடங்குகள் (Rites of Passage) என வரையறை செய்துள்ளார். ஒவ்வொரு தகுதிப் பெயர்ச்சிச் சடங்கும் மக்களை ஒருநிலையிலிருந்து பிரித்து மற்றொரு நிலைக்கு அறிமுகப்படுத்துகிறது"[3] எனக் குறிப்பிடுகிறார். தமிழர்களின் பண்பாட்டில் பெயர் சூட்டு, வளைகாப்பு, அறுபதாம் கல்யாணம், இறப்போரைப் புதைத்தல், எரித்தல், பால் ஊற்றுதல், காரியம் செய்தல் எனப் பல தகுதிப் பெயர்வுகள் இடம்பெற்றுள்ளன. இவ்வாறே வள்ளுவர்களின் தகுதிப் பெயர்ச்சிச் சடங்குகளை ஆராயும்போது இவர்களின் சடங்கு முறைகள் அதிக அளவில் காணப்படுவதால் ஆய்வேட்டின் வசதிக்கேற்ப, இவை 'வாழ்வுசார் சடங்குகள்', 'இறப்புசார் சடங்குகள்' எனப் பிரித்து இரு இயல்களாகக் கொடுக்கப்படுகின்றன.

### 5.2.1. பிறப்பு

பிற சமூகத்துப் பெண்களைப் போன்றே வள்ளுவப் பெண்களும் தங்கள் முதல் குழந்தையைத் தாய்வீட்டிலேயே பெற்றெடுக்கின்றனர். முதல் மகப்பேற்றிற்கான அனைத்துச் செலவுகளும் தாய்வீட்டையே சாரும். வள்ளுவர்கள் நாட்டுப்புற மருத்துவத்துறையில் அறிவார்ந்த சமூகமத்தினராதலால் மகப்பேற்றிற்கு முன்னும் பின்னும் சரியான மருத்துவத்தைச் செய்துவந்தனர். எனவே, முன்பெல்லாம் குழந்தைகள் அதிக அளவில் வீட்டிலேயே பிறந்தன. இன்றைய நிலையில் ஆங்கில மருத்துவத்தின் ஆதிக்கமும் அவசியமும் இருப்பதால் குழந்தைகளனைத்தும் மருத்துவமனைகளிலேயே பிறக்கின்றன. களப்பகுதியில் வசதியான ஒருசில வள்ளுவக் குழந்தைகள் தனியார் மருத்துவமனைகளிலும், பிற வள்ளுவக் குழந்தைகள் கடலூர் அரசு பொது மருத்துவமனை, பண்ருட்டி அரசு மருத்துவமனையிலும் பிறக்கின்றன. களப்பகுதியில் ஒட்டுமொத்தக் குழந்தைகளில் பெரும்பகுதி பக்கத்து மாநிலமான புதுச்சேரி அரசு மகப்பேறு மருத்துவமனையில் பிறக்கின்றன. பேறுகாலத்தில் ஏற்படும் பல்வேறு நோய்களுக்குத் தேவைப்படும் இரத்தம், அறுவைச் சிகிச்சை முதலியவற்றைப் புதுவை மகப்பேறு மருத்துவமனை இலவசமாகக் கொடுத்துச் சிறப்புடனும், பொறுப்புடனும் மருத்துவம் செய்வதாலும் களப்பகுதி மக்கள்

---

[3]. சீ. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப. 542.

இம்மருத்துவமனையை அதிக அளவில் நாடுகின்றனர் எனத் தெரிகிறது. குழந்தை பெறுவதை வள்ளுவ மக்கள் 'போறு' (பேறு), 'பிரசவம்' என்ற சொற்களால் குறிப்பிடுகின்றனர். முதல் பிரசவத்தைத் 'தலப்பிரசவம்', 'ஒன்னாம்போறு' என்றும், முதல் குழந்தையைத் 'தலசன்', இரண்டாம் குழந்தையை 'எடசன்' என்றும் குறிப்பிடுகின்றனர். களப்பகுதியில் "முதல் பிள்ளைக்குத் தலைச்சன் என்றும், இரண்டாம் பிள்ளைக்கு இடைச்சன் என்றும், கடைசிப் பிள்ளைக்குக் 'கடைக்குட்டி' என்றும் பெயர்கள் வழங்கப்படுகின்றன. தலைச்சனைத் தலைப்பிள்ளை என்றும் சீமந்த புத்திரன் என்றும் சொல்வதுண்டு"[4]. 'சீமந்த புத்திரன்' என்பதனை வள்ளுவர்களின் திருமண அழைப்போலைகளில் காணமுடிகிறது.

### 5.2.2. சேனை வைத்தல்

குழந்தை மருத்துவமனையில் பிறந்தாலும் வீட்டில் பிறந்தாலும் வெதுவெதுப்பான வெந்நீரில் கரைத்த 'சர்க்கரைத் தண்ணீரைத்' தொட்டுக் குழந்தையின் நாவில் வைப்பார்கள். இதற்குச் 'சேனை வைத்தல்', 'சேனை ஊட்டுதல்' என்று பெயர். இதனை வள்ளுவர்கள் 'செவ்வெண்ணெய் வைத்தல்' என்றே குறிப்பிடுகின்றனர். தாய், தந்தை, முக்கிய உறவினர், முக்கியப் பிரமுகர், நன்றாக வாழ்ந்த கைராசிக்காரர், சிறந்த கல்வியாளர் யாரேனும் ஒருவரால் குழந்தை பிறந்து குளிப்பாட்டியதும் செவ்வெண்ணெய் வைக்கப்படுகிறது. தங்களுடன் நெருங்கிப் பழகும் மேட்டுக்குடிகளைச் செவ்வெண்ணெய் வைக்க அனுமதிக்கும் வள்ளுவர்கள் பிற ஆதிதிராவிட இனத்தவரை அனுமதிப்பதில்லை. களப்பகுதியில் பிராமணர்களைத் தவிரப் பிற சமூக மக்கள் அனைவருமே கதிர் அறுக்கும் அரிவாளின் நுனியால் செவ்வெண்ணெய் வைக்கும் மரபு காணப்படுகிறது. வள்ளுவர் சமூகத்து மக்களிடம் தொன்றுதொட்டுப் பனையோலைகளில் சாதகம் எழுதப் பயன்படுத்தும் எழுத்தாணியின் நுனியால் தொட்டு வைக்கும் மரபு காணப்படுகிறது. இன்றைய நிலையில் எழுத்தாணியின் பயன்பாடு குறைந்துவிட்டதால் எழுதுகோலின் (பேனா) நுனியால் தொட்டு வைக்கின்றனர். இவ்வாறு செவ்வெண்ணெய் வைத்தால் வைப்பவர்களைப் போல் செல்வத்துடனும், புகழுடனும், அறிவுடனும் குழந்தை திகழும் என்ற

---

[4]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 421.

நம்பிக்கையே இந்நிகழ்வின் காரணமாகும். இக்காலத்தில் பெரும்பான்மையான குழந்தைகள் மருத்துவமனைகளில் பிறப்பதால் மருத்துவர்களையே குழந்தைகளுக்குச் செவ்வெண்ணெய் வைக்க வேண்டிக்கொள்ளும் வழக்கம் வள்ளுவர்களிடம் காணப்படுகிறது.

### 5.2.3. செலவுத்தூள் கொடுத்தல்

செலவுத்தூள் என்பது நாட்டுமருந்துக் கடைகளில் கிடைக்கும் மருத்துவக் குணமுடைய வசம்பு, சித்தரத்தை, வால்மிளகு, வெள்ளை மிளகு, சுக்கு, கண்டந்திப்பிலி, ஓமம், கருஞ்சீரகம், கடுகு ரோகினி, கொம்பு மஞ்சள், சாதிக்காய், மாசிக்காய், கடுக்காய், நிலப் பனங்கிழங்கு, கொடிசெலவு ஆகியவற்றைச் சரியான அளவு வாங்கி வந்து நன்கு காயவைத்து உரலில் இடித்துத் திப்பிகளில்லாமல் நன்கு சலித்துத் தயாரிக்கும் தூள் ஆகும். இதனை வள்ளுவப் பெண்களே தயாரிக்கின்றனர். இது செலவுத்தூள், காயத்தூள், மருந்துத்தூள் என்றெல்லாம் அழைக்கப்படுகிறது.

செலவுத்தூளை ஒரு கையளவு எடுத்துப் பனைவெல்லத்துடன் சேர்த்துப் பிசைந்து குழந்தை பெற்ற மூன்றாம் நாளிலிருந்து தீட்டுக் கழிக்கும்வரை தினமும் அல்லது உடல்நலத்திற்கேற்பத் தாய்க்கு உள்மருந்தாகக் கொடுக்கப்படுகிறது. இவ்வாறு கொடுப்பதால் பிரசவத்தின்போது வெளிவராமல் கர்ப்பப்பையில் தங்கியுள்ள அசுத்த இரத்தம், அழுக்கு ஆகியன வெளியேறி உடலினைத் தூய்மைப்படுத்தும் எனத் தெரிகிறது.

இந்தச் செலவுத் தூளிற்கான மேற்கண்ட மூலப் பொருட்களை வள்ளுவர்கள் ‘மருந்து செலவு’, ‘புள்ள பெத்த செலவு’ என்று குறிப்பிடுகின்றனர். கடலூர் வட்டத்தில் முதுநகர் (O.T), மஞ்சகுப்பம், திருப்பாதிரிப்புலியூர் ஆகிய இடங்களில் ஒருசில நாட்டுமருந்துக் கடைகளில் மட்டுமே இந்த மருந்துச் செலவுகள் கிடைக்கின்றன. பண்ருட்டி வட்டத்தில், பண்ருட்டி ‘சேதுமாதவச் செட்டியார் நாட்டுமருந்துக் கடை’ இம்மருந்துச் செலவு வாங்குவதற்குப் பேர்பெற்றது எனக் களப்பகுதியில் தெரிகிறது.

### 5.2.4. காயக் குழம்பு

பூண்டு, பிஞ்சாக உள்ள நாட்டுக் கத்திரிக்காய், தோல் உரித்த காரைக் கருவாடு, இவற்றுடன் செலவுத்தூள் சேர்த்துக் குழம்பு வைக்கின்றனர். இதனைச் ‘செலவுக்கொழம்பு’, ‘மருந்துக் கொழம்பு’, காயக் கொழம்பு என்றெல்லாம்

அழைக்கின்றனர். இதில் பால் அதிகம் சுரக்கும் என்பதற்காகப் பூண்டு அதிக அளவில் சேர்க்கப்படுகிறது. குழந்தை பெற்ற தாய்க்கு மூன்றாம் நாள் முதல் தீட்டுக் கழிக்கும் நாள் வரையில் ஒன்றுவிட்டு ஒருநாள் மதிய உணவின்போது இக்குழம்பினைச் சோற்றுடன் உண்ணக் கொடுக்கின்றனர். களப்பகுதியில் தேவனாம்பட்டினம், கடலூர் முதுநகர், ஆலப்பாக்கம் போன்ற கடலோர கிராமங்களில் காரைக் கருவாட்டிற்குப் பதில் காரைமீன் காயக்குழம்பில் சேர்க்கப்படுகிறது. குழந்தை பிறந்த ஏழு மற்றும் ஒன்பதாம் நாட்களில் தங்கள் தெருவில் உள்ள உறவினர்கள், சுற்றத்தார் ஆகியோருக்கு வீடு வீடாகச் சென்று காயக்குழம்புச் சோறு கொடுக்கும் வழக்கம் வள்ளுவர்களிடம் காணப்படுகிறது. கிராமங்களில் உள்ள வள்ளுவர் சமூக ஆண், பெண் இருபாலாரும் இந்தக் காயக்குழம்புச் சோற்றினை ஆசையுடன் விரும்பி உண்பவர்களாக உள்ளனர். இது உடலுக்கு நல்லது என்றும் ஆனால், தொடர்ந்து உட்கொண்டால் உடல் சூடாகிவிடும் என்றும் கூறுகின்றனர். சைவ உணவினை உட்கொள்ளும் வள்ளுவர்களின் வீடுகளில் இதனை விரும்புவதில்லை என்றாலும், குழந்தை பெற்ற பெண்களுக்கு இது அவசியம் கொடுக்கப்படுகிறது.

வீடு மற்றும் மருத்துவமனைகளில் சுகப் பிரசவமான பெண்களுக்கு மட்டுமே இந்தச் செலவுத்தூள், காயக்குழம்புச் சோறு ஆகியன கொடுக்கப்படுகின்றன. அறுவைச் சிகிச்சையின் மூலம் பிரசவமானவர்களுக்கும், குடும்பக் கட்டுப்பாட்டு அறுவைச் சிகிச்சை செய்து கொண்டவர்களுக்கும் இந்தச் செலவுத்தூள், காயக்குழம்பு ஆகியன கொடுக்கப்படுவதில்லை. இவர்கள் ஆங்கில மருந்துகளை உட்கொள்வதாலும், தையல் போட்ட இடத்தில் அரிப்பு ஏற்படும் என்பதாலும் கொடுப்பதில்லை எனத் தெரிகிறது.

### 5.2.5. குழந்தையைக் குளிப்பாட்டுதல்

கிராமத்தில் தாழ்த்தப்பட்ட சமூகத்துக்குரிய மருத்தூசியோ (மருத்துவச்சி) அல்லது வள்ளுவச் சமூகத்தைச் சேர்ந்த குழந்தை பெற்ற குளிப்பாட்டும் அனுபவமுள்ள பெண்ணோ காலையில் சூரிய ஒளி நன்கு வந்த பின்னர் குழந்தையைக் குளிப்பாட்டுகின்றனர். நன்கு சுடவச்ச (கொதிக்க வைத்த) தண்ணீரை ஆற வைத்து மிதமான சூட்டில் கைதாங்கும் பக்குவத்தில் தண்ணீரை வெளாவிக் கொண்டு (கலந்து கொண்டு), சிறு பள்ளம் வெட்டி அதன் அருகில் மனைப் பலகையில் அமர்ந்து கால்களை நீட்டிக் கொண்டு குழந்தையை கால்கள் மீது படுக்க வைத்துத் தண்ணீரை ஊற்றி, தலை,

கைகள், கால்கள், உடல் என ஒவ்வோர் உறுப்பாக உருவி விட்டு, நன்கு பிடித்து விடுகின்றனர். நல்லெண்ணெய் தேய்த்து, சீக்காய் தேய்த்து ஊற்றுதல், குழந்தையின் நாக்கினில் நல்லெண்ணெய் ஊற்றிக் 'கொழக்கட்டை' (நாவில் படிந்துள்ள ஒருவித மாவும் சளியும் கலந்த கலவை) எடுத்தல் ஆகியன இன்றைய நிலையில் காணப்படவில்லை. மிகவும் குறைந்த வசதி படைத்தவர்கள்கூட ஜான்சன் & ஜான்சன் நிறுவனம் தயாரிக்கும் சோப்பு, பவுடர், எண்ணெய், ஒடுக் கொளஞ்சி (கொளாந்தண்ணி) ஆகியவற்றைப் பயன்படுத்துகின்றனர். இப்போது குழந்தைக்குச் சாம்பிராணிப் புகை போடுவதில்லை. வள்ளுவர்கள் "சோறு சமைக்கப் பயன்படுத்தும் அரிசியைக் கழுவிய தண்ணீரைச் சுடத்தண்ணியில் வௌாவி குழந்தையைக் குளுப்பாட்டினால் உடல் வலிமையுடனும், ஆரோக்கியமாகவும் இருக்கும் எனக் கூறுகின்றனர்"[5]. இன்றைய அரிசிகளில் இரசாயனம் அதிக அளவில் கலந்துள்ளதால் அரிசி கழுவிய தண்ணீரைக் குளிப்பாட்டப் பயன்படுத்துவதில்லை எனத் தெரிகிறது.

குழந்தையைக் குளிப்பாட்டிய பின்னர் மருத்துவச்சிக்குச் சோறு, குழம்பு, வெற்றிலைப் பாக்கு, அவரவர் வசதிக்கேற்பப் பணம் போன்றவை கூலியாகத் தரப்படுகின்றன. அதிக வசதி படைத்தவர்கள் இறுதியாகப் புதுப் புடைவையும் இரவிக்கையும் வாங்கிக் கொடுப்பதுண்டு. குளிப்பாட்டிய குழந்தைக்கு மெல்லிய துணியால் ஒத்திப் (துவட்டி) பவுடர் போட்டு, வசம்புத் துண்டை நன்கு தீயில் சுட்டுக் கரியாக்கிச் சிறுமண் அகலில் தாய்ப்பால் கறந்துவிட்டு அதில் கரியாக்கிய வசம்பினை இழைத்து நெற்றியிலும், கன்னத்திலும் பொட்டு வைக்கின்றனர். நாக்கு, உச்சந்தலை, உள்ளங்கைகள், உள்ளங்கால்கள் ஆகியவற்றிலும் வசம்பினைத் தடவுகின்றனர்.

### 5.2.6. ஓமம் எரித்து ஊற்றுதல்

குழந்தை பிறந்த பதினாறு நாட்கள் தாய் வெளியில் தனியாகச் செல்வதில்லை. காத்து, கருப்பு அண்டும் எனக் கூறி மற்றொரு பெண்ணைத் தன்னுடன் அழைத்துச் செல்கிறாள். கூடவே, அரிவாள் அல்லது ஏதேனும் ஒரு சிறு இரும்புக் கருவி, வேப்பிலை ஆகியவற்றைக் கொண்டு செல்லும் வழக்கம் காணப்படுகிறது. பதினாறு நாட்கள் பின்பற்றப்படும் 'பிறப்புத் தீட்டு' பதினாறாம்

---

[5]. சீ. அம்பிகா, வயது. 60, சேமக்கோட்டை, பண்ருட்டி வட்டம்.

நாளன்றே கழிக்கப்படுகிறது. காலையில் நன்கு வெயில் வந்ததும் ஒரு கரண்டியில் நல்லெண்ணெய் விட்டு நன்கு காய்ச்சி அதில் ஓமம் போட்டுப் பொரித்து எண்ணெய் ஆறியதும் மிதமான சூட்டில் தாயின் தலையில் தேய்த்துக் குளிக்க வைக்கின்றனர். இதனைத் 'தீட்டுக் கழித்தல்', 'வீட்டுக்கு அழைத்தல்', 'ஓமம் எரித்து ஊத்துதல்' என வள்ளுவர்கள் கூறுகின்றனர். இன்றும் காயக்குழம்புச் சோற்றினை வீடு வீடாகக் கொடுக்கும் வழக்கம் காணப்படுகிறது. தாயின் தீட்டுக் குருதி ஒரு வாரத்திற்குள் நின்று விட்டால் ஒன்பதாம் நாளன்றே ஓமம் எரித்து ஊற்றும் வழக்கமும் இவ்வள்ளுவர்களிடம் உண்டு. ''எத்தனையாவது பிள்ளை பிறந்தாலும் பிறந்த ஒன்பதாம் நாள் 'தீட்டுக் கழித்தல்' என்னும் நிகழ்ச்சி நடைபெறும்''[6] என்பது களப்பகுதியில் அனைத்துச் சமூக மக்களிடமும் காணப்படும் பொதுவான வழக்கமாகத் தெரிகின்றது.

### 5.2.7. அரைஞாண் கயிறு கட்டுதல்

தாய்க்கு ஓமம் எரித்து ஊற்றுதல் அல்லது ''தீட்டுக் கழித்தல் என்னும் நிகழ்ச்சி நடைபெறும் அன்று எருக்கு நாரினால் ஆன அரைஞாண் கயிறு குழந்தைக்குக் கட்டப்படும்''[7] எருக்கஞ் செடியினை வெட்டிவந்து வெயிலில் நன்கு வதங்குமாறு காயவைத்து மேல்தோலை நீக்கி உள்ளிருக்கும் நாரினை எடுக்கின்றனர். எடுத்த நாரை மீண்டும் காயவைத்து, தொடையில் வைத்து மெல்லிய கயிறாகத் திரிக்கின்றனர். குலதெய்வத்தை மனத்தில் நினைத்து எவ்விதக் காத்து கருப்பு, நோய் நொடிகளும் வரக்கூடாது என வேண்டிக் கொண்டு எருக்கங் கயிற்றை இரட்டைப் படையாகக் குழந்தையின் இடுப்பில் கட்டுகின்றனர். இந்த அரைஞாண் கயிற்றை வள்ளுவர்கள் 'அன்னாக்கவுறு' என்று குறிப்பிடுகின்றனர். எருக்க நாரால் செய்த அன்னாக்கவுறு மூன்று மாதங்களே குழந்தையின் இடுப்பில் இருக்கும். அதன் பின்னர் நூலினால் தயாரிக்கப்படும் சிவப்பு, கறுப்பு நிற அன்னாக்கவுறுகளை அவரவர்களின் குல தெய்வங்களுக்கு ஏற்பக் கட்டுகின்றனர். களப்பகுதியில் முதல் பிள்ளைக்குக் கட்டாயம் மூன்றாம் மாதத்தில் தாய்மாமன்களால் வெள்ளியில் அரைஞாண் கயிறு (வெள்ளி அன்னாக்கவுறு) கட்டப்படுகிறது. அடுத்தடுத்த பிள்ளைகளுக்குத்

---

[6]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 423.

[7]. மேலது, ப. 423.

தாய்மாமன்களின் வசதியைப் பொறுத்து அமைகிறது. தங்கத்தில் அன்னாக்கவுறு கட்டியுள்ள வள்ளுவக் குழந்தைகள் களப்பகுதியில் காணப்படவில்லை. இந்த அன்னாக்கவுறு ஆண், பெண் என இரு குழந்தைகளுக்குமே கட்டப்படுகிறது. என்றாலும், பருவமடைந்த பின்னர் பெண் பிள்ளைகள் கட்டிக் கொள்ளும் வழக்கம் இல்லை. வாழ்நாள் வரை ஆண்கள் கட்டிக் கொள்ளும் வழக்குக் காணப்படுகிறது. வள்ளுவப் பெண்கள் ஆண்களை வாசாங்கிடும் போது (சாபமிடும் போது) உன் அன்னாக்கவுறு அறுமா? என்று கூறுவதிலிருந்து இறப்பின்போது அன்னாக்கவுறு அறுக்கப்படும் என்பது தெரிகின்றது.

### 5.2.8. கைக்காப்பு அணிதல்

குழந்தைக்கு எருக்கங் கயிற்றினாலான அன்னாக்கவுறு கட்டும் பொழுதே கைகளில் காப்புக் கட்டும் வழக்கமும் காணப்படுகிறது. வசம்பினைத் தோல் நீக்கி உருளை வடிவில் சீவி வட்ட வடிவில் சிறுசிறு துண்டுகளாக வெட்டுகின்றனர். அவற்றினை ஊசியினால் நூலில் கோர்த்து இருகைகளிலும் காப்பாகக் கட்டுகின்றனர். குழந்தைகள் அடிக்கடிக் கைகளை வாயில் வைக்கும். எனவே, கைகளில் நோய்க் கிருமிகள் அண்டாமலிருக்கவே வசம்பினாலான காப்புக் கட்டப்படுவதாகக் கூறப்படுகிறது. மூன்றாம் மாதத்திற்கு மேல் பெண் குழந்தையாக இருப்பின் பிளாஸ்டிக், கண்ணாடி, அலுமினியம் ஆகியவற்றினாலான வளையல்கள் அணிவிக்கப்படுகின்றன. வசதியானவர்கள், நடுத்தர குடும்பத்தைச் சேர்ந்த வள்ளுவர்கள் தங்களின் பெண் குழந்தைகளுக்குத் தங்கக் காப்பு (பவுன் வளையல்) அணிவிக்கின்றனர்.

### 5.2.9. பெயர் சூட்டல்

களப்பகுதியில் உள்ள வள்ளுவர்களில் ஒரு சிலரைத் தவிர அனைவருமே தங்களின் குழந்தைகளுக்குப் பஞ்சாங்கத்தைப் பார்த்தே பெயர் வைப்பவர்களாக உள்ளனர். இவர்கள் காலை ஆறு மணி முதல் மறுநாள் காலை ஆறு மணி வரையே ஒரு நாளாகக் கணக்கிடுகின்றனர். குழந்தை பிறந்த மணி, நிமிடத்தை நாழிகையாக மாற்றி, சூரிய உதயாதி நாழிகையிலிருந்து கணக்கிட்டுக் குழந்தையின் ஜெனின நாழிகையைக் கண்டுபிடிக்கின்றனர். குழந்தையின் ஜெனின நாழிகை அன்றுள்ள எந்த நட்சத்திரத்தில் அடங்குகிறதோ அதுவே குழந்தையின் ஜென்ம நட்சத்திரமாகும். அந்த நட்சத்திரத்திற்குரிய நட்சத்திர நாம அஷ்ரங்களாக (பெயர் வைப்பதற்குரிய எழுத்துகள்) நான்கு எழுத்துக்கள்

பஞ்சாங்கத்தில் கொடுக்கப்பட்டுள்ளன. அந்த நான்கு எழுத்துகளில் ஏதேனும் ஓர் எழுத்தை முதலாகக் கொண்ட பெயரே குழந்தைக்கு வைக்கப்படுகிறது.

வள்ளுவச் சமூகத்தில் சைவ, வைணவ சமயப் பிரிவுகள் உள்ளதால் பெரும்பான்மையான பெயர்கள் அவரவர்களின் சமயங்களுக்குரிய கடவுள் அவதாரங்களின் பெயர்களாகவே காணப்படுகின்றன. ஒருசிலர் தங்களின் சிறு தெய்வமான குலதெய்வத்தின் பெயர்களை வைப்பதும் உண்டு. இன்றைய நிலையில் தேசத் தலைவர்களின் பெயர்கள், நவீனப் பெயர்கள், தமிழிலக்கியப் பெயர்கள், பல்துறை வல்லுநர்களின் பெயர்கள், சாதனையாளர்களின் பெயர்களையும் வைக்கும் வழக்கம் காணப்படுகிறது. இவையெல்லாம் பஞ்சாங்கத்தின்படி அதனையொட்டி வைக்கும் பெயர்களாகவே உள்ளன என்பதும் கள ஆய்வில் தெரிய வருகிறது.

வள்ளுவர் சமூக மக்களிடம் முன்பெல்லாம் குழந்தை பிறந்த பின்னர் ஒன்பதாம் நாள் அல்லது பதினாறாம் நாள் அன்று ஓமம் எரித்து ஊற்றிய பின்னரே குழந்தைக்குப் பெயர் வைக்கும் வழக்கம் இருந்துள்ளது. இன்றைய நிலையில் களப்பகுதியில் உள்ள மக்களின் அதிகப்படியான பிரசவங்கள் புதுச்சேரி அரசு மகப்பேறு மருத்துவமனையில் நடைபெறுகின்றன. அங்குள்ள மருத்துவ அலுவலர்கள் குழந்தையின் பிறப்பைப் பதிவு செய்ய நகராட்சிக்கு அனுப்ப வேண்டி இரண்டு அல்லது மூன்று நாட்களுக்குள் குழந்தைக்குப் பெயர் வைக்குமாறு கேட்பதால் தீட்டுக் கழிக்கும் முன்னர்க் குழந்தை, பிறந்த இரண்டு மூன்று நாட்களுக்குள் பஞ்சாங்கத்தைப் பார்த்துப் பெயர் வைப்பது வழக்கமாக இன்று மாறியுள்ளது.

### 5.2.10. வடமொழிப் பெயர்கள்

வள்ளுவச் சமூகத்து மக்களிடமும் அவர்களிடம் பஞ்சாங்கம் பார்த்துப் பெயர் வைக்கும் பிற சமூகத்து மக்களிடமும் வடமொழிப் பெயர்கள் சில காணப்படுகின்றன. “பஞ்சாங்கத்தில் அசுவினி முதலாக ரேவதி ஈறாக உள்ள இருபத்தேழு நட்சத்திரங்களுக்கும் ஒரு நட்சத்திரத்திற்கு நான்கு எழுத்துகள் என நூற்றெட்டு எழுத்துகள் கொடுக்கப்பட்டுள்ளன. இவை நட்சத்திர நாம அஷ்ரங்கள் எனப்படுகின்றன”[8]. இந்த நூற்றெட்டு எழுத்துக்களை முதலாகக் கொண்டே பஞ்சாங்கம் பார்த்து வைக்கப்படும் பெயர்கள் அமைகின்றன. இந்த

[8]. விக்ருதி வருடம், ஆர்காடு சா.வே. சீத்தாராமய்யர், சர்வமுகூர்த்த பஞ்சாங்கம் (2010-2011), ப. 98.

நூற்றெட்டு எழுத்துகளில் பதினான்கு எழுத்துகள் வடமொழி எழுத்துகளாக உள்ளன. இதனை வடமொழிப் பெயர்கள் அமைந்துள்ளமைக்கு ஒரு காரணமாகவும் கொள்ளலாம்.

### 5.2.11. காப்பரிசி கொடுத்து அழைத்தல்

களப்பகுதியில் உள்ள வள்ளுவர்களிடம், தாய் வீட்டில் நடக்கும் தலைப் பிரசவத்தின்போது தாயும், சேயும் மூன்றுமாதம் தாய் வீட்டிலேயே தங்கிவிடும் வழக்கம் காணப்படுகிறது. உடல்நலக்குறைவு ஏற்படின் ஐந்து மாதம் வரையிலும் தங்குவதும் உண்டு. ஆனால், இரட்டிப்பு மாதத்தில் கணவன் வீட்டிற்கு வருவதில்லை. ஒற்றைப்படை மாதத்திலேயே கணவன் வீட்டிற்கு அழைத்துவரப்படுகின்றனர். இவ்வாறு தாயையும் சேயையும் அழைத்து வரும்போது கணவன் வீட்டார் பச்சரிசியை வெல்லப்பாகில் கிண்டி அவ்வரிசியைக் கூம்பு வடிவில் பிடித்து மூன்று கூம்புகள் எடுத்துக்கொண்டு அவற்றுடன் பழங்கள், தாய், சேய்க்குப் புத்தாடைகள், அணிகலன்கள் எனத் தட்டு வரிசைகளுடன் அழைத்துவரச் செல்கின்றனர். அழைத்துவரச் செல்பவர்களும் மூன்று, ஐந்து, ஏழு என ஒற்றைப்படையிலேயே செல்லும் வழக்கம் காணப்படுகிறது. பெண் வீட்டினர் அவ்வரிசியினை ஏற்று நடுவீட்டில் (சாமி அறையில்) வைத்துத் தூப தீபம் ஏற்றி வணங்கிய பின்னர் அனைவருக்கும் உணவு பரிமாறிக் குழந்தையையும் தாயையும் அனுப்பி வைக்கின்றனர். களப்பகுதியில் பிற சமூக மக்களிடமும் இவ்வாறு காப்பரிசி கொடுத்தல் வழக்கம் உண்டு. "குழந்தை பிறந்த மூன்றாம் அல்லது ஐந்தாம் திங்களில் பிள்ளை வீட்டார் காப்பரிசியுடனும், அணிகலன்கள் முதலியவற்றுடனும் வந்து சிறப்புச் செய்து தாயையும், சேயையும் தம் வீட்டிற்கு அழைத்துப் போவர்; இந்த நிகழ்ச்சிக்குக் 'காப்பிடுதல்' என்று பெயராம்"[9].

### 5.2.12. தீட்டு முடி எடுத்தல்

குழந்தை பிறந்த ஓராண்டு கழித்துக் குழந்தைக்குத் தலைமுடியை எடுக்கின்றனர் (மொட்டை அடிக்கின்றனர்). இதனைத் தலசன் குழந்தைக்கு மட்டுமல்லாமல் எல்லாக் குழந்தைகளுக்குமே செய்கின்றனர். வள்ளுவர்கள் இதனை வீட்டிலேயே செய்கின்றனர். இம்முடி பிறப்புத் தீட்டுடன் தொடர்புடையது என்பதால் இதனைத் தீட்டு முடி என்கின்றனர். இந்தத் தீட்டு முடி எடுத்த

[9]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 423.

பின்னரே சாமிக்கு முடி எடுப்பதாக வேண்டிக் கொள்வதெல்லாம் நடைபெறும். தீட்டு முடியைக் கோவிலுக்கு விடும் வழக்கம் இல்லை.

### 5.2.13. பிறப்புப் பற்றிய நம்பிக்கை

வள்ளுவர் சமூகத்து மக்கள் குழந்தைப் பிறப்புப் பற்றிய பல்வேறு நம்பிக்கைகளைக் கொண்டுள்ளனர். இந்த நம்பிக்கைகள் களப்பகுதியில் உள்ள பிற சமூக மக்களிடமும் காணப்படுகிறது.

தலசம்புள்ள (முதல் பிள்ளை) பெண்ணின் தாய் வீட்டில் பிறக்க வேண்டும். மூன்றாம் பிள்ளை பெண்ணின் தாய் வீட்டில் பிறந்தால் தாய்வீடு உருப்படாதாம். கணவன் வீட்டில்தான் பிறக்க வேண்டும்.

தலசம்புள்ள சித்திரை மாதத்திலும் புரட்டாசி மாதத்திலும் பிறந்தால் கெடுதி விளையும்.

'மாலை போட்டுக்கொண்டு பிறந்தால் மாமனுக்கு ஆகாது. கொடி சுத்திக் கொண்டு பிறந்தால் கோத்திரத்துக்கு ஆகாது' என்னும் நம்பிக்கைகள் நிலவி வருகின்றன. "குழந்தை குடலாகிய மாலையைக் கழுத்தில் போட்டுக்கொண்டு பிறந்தால் தாய் மாமனுக்கும் அதை உடலில் சுற்றிக்கொண்டு பிறந்தால் தந்தைக்கும் ஆகாது. எனவே, முறையே தாய்மாமனும் தந்தையும் வாயில் தண்ணீர் ஊற்றிக் கொண்டு பிறந்த குழந்தையின் மேல் கொப்பளித்துத் துப்ப வேண்டும்; துப்பினால் துன்பம் விலகி விடுமாம். இன்னும் இதற்குச் சாந்தி செய்வது உண்டு"[10]. இவ்வாறு பிறப்பின் தந்தையும் தாய்மாமனும் வெற்றிலைப் பாக்குப் போட்டு அதன் எச்சிலைக் குழந்தையின் மீது துப்பும் வழக்கம் வள்ளுவச் சமூகத்தவரிடம் காணப்படுகிறது.

ஆண்கள் இரட்டைப்படைப் பேறாகவும் அதாவது, ஒன்றாவது, இரண்டாவது, நான்காவது குழந்தைகளாகவும் பெண்கள் ஒற்றைப் படை பேறாகவும் அதாவது, மூன்றாவது, ஐந்தாவது குழந்தையாகவும் பிறக்க வேண்டும். இவ்வாறு பிறந்தவர்கள் வளமாக வாழ்வார்கள் எனக் களப்பகுதியில் உள்ள வள்ளுவர்கள் நம்புகின்றனர்.

---

[10]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 422.

இது தொடர்பான பழமொழிகள் சில களப்பகுதி வள்ளுவச் சமூக மக்களிடம் காணப்படுகிறது.

‘நாலாம் போறு ஆணுக்கு நாதாங்கி (தாழ்ப்பாள்) எல்லாம் பொன்னு’, ‘நாலாம் போறு பொண்ணு நாய் படாத பாடு’.

‘ஐஞ்சாம் போறு பொண்ணு கெஞ்சனாலும் கெடைக்காது’, ‘ஆறாம் போறு பொண்ணு ஆறாக்கனாலும் ஆக்கும் நீறாக்கனாலும் ஆக்கும்’.

‘ஏழாம் போறு பொண்ணு எறவானமெல்லாம் பொன்னு’, ‘எட்டாம் போறு பொண்ணு எட்டிப் பார்த்த எடம் (இடம்) குட்டிச்சுவரு’, ‘எட்டாம் போறு ஆணு கட்டி அரசாளும்’.

குழந்தைகள் பிறக்கும் நட்சத்திரத்தின் அடிப்படையில் வள்ளுவர்கள் சிலவகை நம்பிக்கைகளைக் கொண்டுள்ளனர். இந்த நம்பிக்கைகள் தொடர்பான சில பழமொழிகளும் இவர்களிடம் காணப்படுகின்றன.

*‘அசுவினியில் பிறந்தவர் அசுவம் (குதிரை) ஏறுவர்’.*

*‘அவிட்டத்தில் பொறந்தவர்க்குத் தவுட்டுப் பானையெல்லாம் காசு’.*

*‘அவிட்டத்தில் பொறந்தது அடங்காப் பிடாரி’.*

*‘பரணியில் பிறந்தவர் தரணி ஆளுவார்’.*

*‘பூரட்டாதியில் பொறந்தவர் போராடுவார்’.*

*‘கேட்டையில் பொறந்தவன் கோட்டை ஆளுவான்’.*

*‘மூல நட்சத்திரம் நிர்மூலமாக்கும்’.*

### 5.3. காதணி விழா

வள்ளுவர் சமூக மக்கள் தங்கள் குழந்தைகளுக்குக் காது குத்த வேண்டுமெனில் நல்ல நாள் பார்த்துப் பத்திரிகை அடித்து உறவினரை அழைக்கின்றனர். முதல் பத்திரிகை அம்மானுக்கே (தாய்மாமன்) வைக்கப்படுகிறது. பிறகே மற்ற உறவினர்களுக்கு வைக்கப்படுகிறது. வள்ளுவக் குழந்தைகளுக்கு ஓராண்டிற்குள் காது குத்துவதில்லை. மூன்று, ஐந்து, ஏழு என ஒற்றைப்படை வயதிலேயே காது குத்துகின்றனர். காது குத்துதல், காதணி விழா, கர்ண பூஷ்ணம் என்ற சொற்களால் இச்சடங்கினைக் குறிப்பிடுகின்றனர். சில வள்ளுவக் குடும்பங்களில் குழந்தைகள் பிறந்து இறந்துவிட்டால்

அவர்களிடம் வெளிப்படையாக உறவினர்களைக் காட்டிக் காது குத்தும் வழக்கம் காணப்படவில்லை. அவ்வாறு செய்தால் குழந்தை இறக்க நேரிடும் என்று நம்புகின்றனர். இவர்கள் உறவினர்களுக்கு தெரிவிக்காமல் குடும்பத்தார் மட்டுமே குலதெய்வக் கோயிலுக்குச் சென்று வழிபாடு செய்து காது குத்துகின்றனர். இதனைத் ‘திருட்டுக் காது குத்துதல்’ என்கின்றனர். “குழந்தை பிறந்த மூன்றாம் ஆண்டு அல்லது ஐந்தாம் ஆண்டு அதாவது, ஒற்றைப்படை ஆண்டில் குழந்தைக்கு முடி எடுக்கின்றனர். பின்னர், காதணி விழா நடைபெறும். விழா நடத்திக் காது குத்தாமல் வீட்டோடு காது குத்திக் கொண்டால் அதற்குத் ‘திருட்டுக் காது குத்துதல்’ என்று பெயர் சொல்லப்படுகிறது”[11].

### 5.3.1. குலதெய்வ வழிபாடு

முன்பெல்லாம் வீட்டிலேயே பந்தல் போட்டுக் குலதெய்வ வழிபாடு நடைபெறும். இப்போதெல்லாம் மண்டபங்களிலேயே நடைபெறுகின்றன. காது குத்தும் நேரம் மாலை என்பதால் அனைத்து உறவினர்களும் அப்போது மண்டபத்தில் கூடுகின்றனர். ஆனால், மிக நெருங்கிய உறவினர்கள் முன்கூட்டியே வீட்டிற்கு வந்துவிடுகின்றனர். காது குத்தும் அன்று காலையில் குலதெய்வக் கோவிலுக்குச் செல்கின்றனர். அங்குப் பொங்கல் வைத்துக் குழந்தைகளுக்கு மொட்டை அடித்து ஆராதனைகள் செய்கின்றனர். அப்போது பம்பை, உடுக்கை முழங்கக் குலதெய்வம் வர்ணிக்கப்படுகிறது. படையல், மாவிளக்குடன் படைத்துக் குழந்தைகளை விழுந்து வணங்கச் செய்கின்றனர். பின்னர், வள்ளுவப் பூசாரியால் குழைத்த சந்தனம் குச்சியினால் தொட்டு இரு காதுகளிலும் காது குத்தப்போகும் இடத்தில் புள்ளியாக வைக்கப்படுகிறது. இதனைக் ‘குறிவைத்தல்’ என்று குறிப்பிடுகின்றனர். காது குத்தும் குடும்பத்தினருடன் அவரது பங்காளிகளும் பொங்கல் வைக்கும் வழக்கம் களப்பகுதியில் காணப்படுகிறது. பொங்கல் வைக்கும்போது ஆடு, கோழி வெட்டுவதும் உண்டு. இன்றைய நிலையில் உயிர்ப்பலி கொடுக்க விரும்பாத பலர் பலியிடுதலைத் தவிர்த்து வருகின்ற நிலையும் காணப்படுகிறது.

---

[11]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 423.

### 5.3.2. அம்மான் வரிசை கொண்டு வருதல்

வள்ளுவர் சமூகத்தின் வாழ்வுசார் சடங்குகள் அனைத்திலும் அம்மானுக்கு முதல் மரியாதையும், உரிமையும் கொடுக்கப்படுகின்றன. அம்மான்கள் ஒன்பது, பதினொன்று, பதின்மூன்று என ஒற்றைப் படையில் வரிசைத் தட்டுகளைக் கொண்டு வருவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். அதில் குழந்தைகளுக்கான புத்தாடைகள், தங்க அணிகலன்கள், பூமாலைகள், இனிப்புகள், பழவகைகள் எனப் பல்வேறு சீர்வரிசைப் பொருட்கள் அடங்கும். குழந்தைகளின் பெற்றோர்களுக்கான புத்தாடைகளும் இடம்பெறும். இந்த அம்மான் வரிசை மேளதாளங்களுடன் காது குத்துவதற்குச் சற்று முன்னர் கொண்டுவரப்படுகிறது. அம்மான் இல்லாத பட்சத்தில் குழந்தைகளின் தாய்வழிப் பாட்டனார் அல்லது தாய்வழி மாமன்கள் அம்மான் வரிசைகளைக் கொண்டுவரும் வழக்கம் காணப்படுகிறது. தாய் மாமன் வரிசைகளைக் கொண்டுவந்து சபையில் வைத்ததும், ஊர்ப் பெரியோர்கள், உறவினர்களில் பெரியோர்கள் கூடி அவற்றை மதிப்பீடு செய்யும் வழக்கம் உண்டு. இன்று பெரும்பான்மையாக இவ்வழக்காறு குறைந்துவரும் நிலை காணப்படுகிறது.

### 5.3.3. காது குத்துதல்

வள்ளுவர் சமூகத்தவர்களிடம் காது குத்துவதற்கெனப் பொற்கொல்லரை (தட்டாரை) அமர்த்தும் வழக்கம் காணப்படவில்லை. புரோகிதம் தெரிந்த, குழந்தைக்கு மாமன் முறையினரே புரோகிதராக இருந்து காது குத்துகின்றார்கள். வாழை இலையில் பச்சரிசி பரப்பி அதன்மீது கலசம் வைத்து, நல்விளக்கு, குத்து விளக்குகளை ஏற்றி மனையில் பிள்ளைகளைச் சபையை வணங்கி அமர வைத்து, இறைவனை வழிபாடு செய்கின்றனர். வைணவ சமயத்தவராக இருப்பின் விஷ்ணு சஹஸ்ரநாமம், கருடபத்து, நாலாயிர திவ்ய பிரபந்தம் ஆகிய பாடல்களும், சைவ சமயத்தவராக இருப்பின் நடராசர் பத்து, தேவாரம், திருவாசகம் ஆகிய பாடல்களும் சில வடமொழி மந்திரங்களும் ஓதப்படுகின்றன. ஆனால், இருவருமே முதலில் மஞ்சளில் பிள்ளையார் பிடித்து, அருகம்புல் செருகி, பூப் போட்டு விநாயகர் அகவல் பாடி, தூப தீபம் காட்டி வணங்கிய பின்னரே அவரவர்களின் சமயஞ்சார்ந்த வழிபாடுகளைத் தொடங்குகின்றனர்.

புரோகிதர் பிள்ளைகளுக்கு அட்சதை போட்டு ஆசீர்வதித்துப் புத்தாடைகளைக் கொடுத்து உடுத்திவரச் சொல்வார். எத்தனை பிள்ளைகள்

இருப்பினும் அத்தனை பிள்ளைகளுக்கும் புத்தாடை அணிகலன்கள் கொண்டு வருவது அம்மானின் கடமை எனத் தெரிகிறது. குழந்தையை அம்மான் மடியில் அமர வைத்து வள்ளுவப் புரோகிதர் மந்திரங்கள் ஓதிக் காதுகளைக் குத்துகின்றார். தாய்மாமன் ஒருவர் எனில் ஒவ்வொரு குழந்தையாக அவர் மடியில் வைத்துக் காதுகுத்துவதும், ஒரே குழந்தை எனில் தாய் மாமன்களில் மூத்தவரின் மடியில் வைத்துக் காது குத்துவதும், அம்மான்கள் இருவர்க் குழந்தைகளும் இருவர் எனில், மூத்த மாமன் மடியில் முதல் குழந்தையையும் இளைய மாமன் மடியில் இரண்டாவது குழந்தையும் அமரவைத்துக் காது குத்தும் வழக்கம் காணப்படுகிறது. தாய்மாமன் இல்லாத நிலையில் தாய்வழியில் ஒன்றுவிட்ட மாமன், அத்தையின் கணவன் அல்லது மாமன் முறையில் உள்ள யாரேனும் ஒருவர் மடியில் அமரவைத்துக் காது குத்தப்படுகிறது. யார் மடியில் குழந்தை அமர்ந்து காது குத்திக்கொள்கிறதோ அவரே மாமன் வரிசை செய்பவராக இருக்கின்றார்.

### 5.3.4. வாழைப்பழம் கொடுத்தல்

காது குத்தும்போது குழந்தை வலியால் அழாமலிருக்க வாழைப்பழத்தை உரித்துக் குழந்தையின் வாயில் வைத்துத் தின்னச் செய்வர். குழந்தை வேகமாக அழும் நிலையில் வாயில் வாழைப்பழத்தை வைத்தால் மூச்சுத் திணறல் ஏற்படுகிறது என்பதுணர்ந்து இன்றைய நிலையில் பெரும்பான்மையாக யாரும் இவ்வாறு செய்வதில்லை.

### 5.3.5. மொய்யெழுதுதல்

குழந்தைகளுக்குக் காது குத்தியதும் அம்மான்கள் குழந்தைகளுக்குத் தங்கத்தால் ஆன சங்கிலி, மோதிரம், பெண் குழந்தையெனில் கம்மல், தோடு ஆகியவற்றைப் பரிசுப் பொருளாக அணிவிக்கின்றனர். அதன் பின்னரே அத்தைகள் பிற மாமன்கள், பாட்டன், பாட்டிகள் என மிக நெருக்கமான உறவினர்கள் மேடைக்கு வந்து குழந்தைகளின் தலைமீது அட்சதை போட்டு, அரிசிக் காப்பிட்டு வாழ்த்தி அவர்களின் நெற்றியில் பணம் வைப்பர். இதனை ‘நெத்திப்பணம் (நெற்றிப்பணம்) வைத்தல்’ என்று அழைக்கின்றனர். மேலும், சில உறவினர்கள் புத்தாடைகள், அணிகலன்கள், பழங்களுடன் தட்டு வரிசைகளைக் கொடுக்கின்றனர். மேலும், பல உற்றார் உறவினர்கள், நண்பர்கள் பணத்தினை மொய்யாக எழுதுகின்றனர். தற்போது பலரும் கவரில் (உறையில்) தங்களின் பெயரையும், தொகையையும் எழுதிக் கொடுக்கின்ற நிலை காணப்படுகின்றது.

### 5.3.6. உணவு பரிமாறுதல்

காது குத்துதல் நிகழ்வு முடிந்தவுடன் அனைவருக்கும் உணவு பரிமாறப்படுகிறது. வள்ளுவச் சமூகத்து மக்களின் அனைத்து விஷேசங்களிலும் (சடங்குகளின்போதும்) சைவ உணவு வகைகளே வழங்கப்பட்டு வருவது வழக்கமாக இருந்து வருகிறது. இன்றைய நிலையில் காது குத்துதலின்போது மட்டும் ஒருசில வள்ளுவக் குடும்பத்தினரால் கோழி, ஆட்டுக்கறிப் பிரியாணிகள் வழங்கப்பட்டுள்ளன. இந்நிலை தொடர்ந்து காது குத்து எனில் பிரியாணி போடுதல் என்னும் வழக்காக மாறி வருகிறது.

நெருக்கமான உறவினர்கள் காது குத்து வீட்டிலேயே தங்குகின்றனர். அவர்களுக்குப் பல்வகை உணவு வகைகளைச் சமைத்து விருந்து வைத்துப் புத்தாடைகள் எடுத்துக் கொடுத்துத் தாம்பூலத்தில் வழிச் செலவிற்கு பணம் வைத்துக் கொடுக்கும் வழக்காறும் உண்டு.

### 5.3.7. குழந்தைக்கு விருந்து வைத்தல்

காது குத்திய குழந்தைகளை அம்மான் வீட்டிற்கு அழைத்துச் சென்று விருந்து வைக்கும் வழக்கம் வள்ளுவர்களிடம் காணப்படுகிறது. அவ்வாறு விருந்திற்கு அழைத்துச் செல்லும்போது அம்மானுக்கு ஒரு பெரிய தாம்பூலத் தட்டில் பூ, பழம், தேங்காய், வெற்றிலைப் பாக்கு, பணம் வசதிக்கேற்ப வைத்து மரியாதை செய்து குழந்தையின் பெற்றோர்கள் வழியனுப்புகின்றனர். அம்மான் வீட்டில் குழந்தைகளுக்கு, மூன்று நாட்கள் சைவ, அசைவ உணவு வகைகள் விருந்தளிக்கப்பட்டுப் பின்னர் பிறந்த வீட்டிற்கு அனுப்பி வைக்கப்படுகின்றனர். ஆண் குழந்தைகளாக இருப்பின் காதில் உள்ள அணிகலன் (காதுகுத்துக் கம்பி) மூன்றாம் நாள் கழற்றப்படுகிறது. பெண் குழந்தைகளுக்குக் கழற்றப்படுவதில்லை. காது குத்துதலைத் தொடர்ந்து வேறு அணிகலன்களையும் அணிவிக்கின்றனர்.

### 5.3.8. நெல்லால் காது குத்துதல்

வள்ளுவர் சமூகத்தில் காது குத்துதல் மிகவும் அவசியமான ஒன்றாகக் கருதப்படுகின்றது. வசதியின்மையால் காதுகுத்த முடியாமல் போனாலும் திருமணத்தின்போது திருமணச் சடங்குகள் ஆரம்பித்தலுக்கு முன் மாப்பிள்ளைக்கு நெல்லினால் காது குத்தப்படுகிறது. இது பெரும்பான்மையாக நடைபெறுவதில்லை. குழந்தைப் பருவத்தில் காது குத்தாமல் விட்ட சிலருக்கு

மட்டுமே இவ்வாறு நெல்லினால் காது குத்துதல் நடந்துள்ளது. வள்ளுவச் சமூகத்தில் குழந்தைகள் முதல் வயதானவர்கள் வரை காது குத்தாமலே இறந்துவிட்ட அனைவரையும் நெல்லினால் காது குத்தும் சடங்கினைச் செய்த பின்னரே அடக்கம் செய்கின்றனர்.

காது குத்துதலை 'கர்ண பூஷணம்', 'கர்ண வேதை' என்ற வடமொழிச் சொற்களாலும் இவர்கள் குறிப்பிடுவதுண்டு. இந்தக் காது குத்தும் நிகழ்வு தொன்மையான வீர ஊழியின் எஞ்சிய பண்பாகலாம். அல்லது குழந்தைக்கு எல்லாருடைய பார்வையும் படும்படியாக ஓர் எச்சம் (குறை) உண்டாக்கிவிட்டால், பார்வை படாது. அதனால், வாழ்நாள் குறையாது என்று நம்புவதாகவும் கொள்ளலாம். ஏனெனில் பேராசிரியர்கள் தாயம்மாள் அறவாணன், வானமாமலை போன்றோர் கூற்றுகளும் இதனை விளக்கி நிற்கின்றன. "குழந்தையே ஆயினும் அது வீர உலகம் செல்ல வேண்டும் என்று போரில்லாது இறக்க நேரிட்ட குழந்தைகளை வாளால் வடு உண்டாக்கிப் புதைத்தனர். இவ்வாறு வடு உண்டாக்கும் நிகழ்ச்சியே (புறம் - குழவி இறப்பினும்) பின்னால் காது குத்தலாக மாறியிருக்க வேண்டும் என்று காதில் ஓட்டை போட்டு அழகுக்கு அழகு சேர்க்கும் அணிகலன்களையும் அணியும் வழக்கம் வந்திருக்க வேண்டும்"[12]. "பிறர் குழந்தையின் அழகைக் கண்டு இரசித்துவிட்டால் அதற்கு நோய் வரும் எனத் தமிழ்த் தாய்மார்கள் நம்புகிறார்கள். அழகான குழந்தைகளைக் கண்டு எமன் ஆசைப்பட்டு விடுவானாம். அதனால் குழந்தைகள் இறந்து போகும். எமனை ஏமாற்ற உடலில் சிறு காயம் ஏற்படுத்திவிட்டால் போதுமாம். இந்த நம்பிக்கை தமிழ்நாட்டில் மட்டுமல்லாமல் மத்திய ஆசியாவிலும், எகிப்திலும் சமீபகாலம் வரை நிலவி வந்தது"[13]. வள்ளுவர் சமூகம் மட்டுமல்லாமல், பிற தமிழ்ச் சமூகத்தினர் அனைவரும் காது குத்தும் சடங்கினை இன்றியமையாததாகவே கொண்டுள்ளனர் எனலாம்.

---

[12]. தாயம்மாள் அறவாணன், குழந்தை ஓர் இலக்கியப் பகுப்பாய்வு, ப. 194.

[13]. நா. வானமாமலை, தமிழக நாட்டுப்பாடல்கள், ப. 194.

## 5.4. பூப்பெய்தல்

ஐம்பொறிகளின் வளர்ச்சியினால் சிறுமியர் பன்னிரண்டு முதல் பதினான்கு வயதளவில் சற்றொப்ப முன் பின்னாகத் தாய்மை அடைவதற்குரிய பூப்பை அடைகின்றனர். இதனையே 'வயசுக்கு வருதல்', 'பருவமடைதல்', 'சமைதல்', 'பெரியவளாதல்', 'புஷ்பவதியாதல்', 'ருதுவாதல்' எனப் பல்வேறு சொற்களால் வள்ளுவர் சமூகத்தில் குறிப்பிடுகின்றனர்.

"பெண்ணின் கருப்பைச் சளிப் படலத்திலிருந்து சளியும், தீட்டுறு நீர்மங்களும் கொண்ட உறைய இயலாத குருதி வெளியேறுவதையே 'பூப்பு' என்பர். இருபத்தெட்டு அல்லது முப்பது நாள் சுற்றில் திங்கள்தோறும் இவ்வெளியேற்றம் நிகழும். சராசரி நான்கு நாட்கள் இவ்வெளியேற்றம் நிகழும். சில நேரங்களில் ஒருவார காலமும் தொடரலாம். பொதுவாக முப்பது மில்லியிலிருந்து இருநூறு மில்லிவரை பூப்புக்குருதியின் வெளிப்பாடு நிகழும். பன்னிரெண்டு அல்லது பதினான்கு வயதிற்குள் தொடங்கும் இவ்வெளியேற்றம் நாற்பத்தைந்து அல்லது ஐம்பது ஆண்டுகள் முடிய நிகழும்"[14] என்பர் அறிஞர் பைகாவ்.

இவ்வாறு பெண்களின் இனவிருத்தி உறுப்பு அதாவது பூப்பகம் முதிர்ச்சியடைந்த நிலை 'பூப்பு' என்று கூறப்படுகிறது. 'ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே' என்ற சமூக மதிப்புடன் பூக்கின்ற பெண்ணிற்குச் சமூகத்தில் மதிப்பும் மரியாதையும் உண்டு. எனவேதான், பெண்ணின் முதல் மாதவிலக்கினை விழாவாகக் கொண்டாடும் நிலை காணப்படுகிறது. இதனடிப்படையில் வள்ளுவர் சமூகத்தினரும் பூப்பினை இன்றியமையாத சடங்காகவே கருதிக் கொண்டாடும் வழக்கத்தினராகக் காணப்படுகின்றனர்.

### 5.4.1. பூப்பெய்திய செய்தி அறிவித்தல்

முதலில் பெண் பூப்பெய்திய நேரம், நாள், ஆண்டு ஆகியன குறித்து வைக்கப்படுகின்றன. ஏனெனில் பெண்ணின் திருமணத்தின்போது ருது சாதகத்தின் மூலமும் திருமணப் பொருத்தம் பார்க்கும் வழக்கம் உள்ளதால் ருது சாதகம் கணித்து எழுத வேண்டிப் பூப்பெய்திய தேதியினைக் குறித்து வைக்கின்றனர்.

---

[14]. பைகாவ். கே.எம்., உடலியங்கியல் (மொழிபெயர்ப்பு), மூன்றாம் தொகுதி, பக்.172 – 173.

ருது சாதகம் இல்லையென்றால் பெண் கெட்ட நேரத்தில் ருதுவாகியிருப்பாள் என மணமகன் வீட்டார்கள் கருதுவர். எனவே, ருது சாதகம் வள்ளுவர் சமூகத்தில் அவசியமானதாகக் கருதப்படுகிறது.

பூப்பெய்திய செய்தி பெண்வீட்டாரால் (பெற்றோர்கள்) முதலில் அம்மானுக்கு (தாய்மாமன்) வெற்றிலைப்பாக்கு, பூ, பழம், குங்குமம் கொடுத்து மரியாதையுடன் தெரிவிக்கப்படுகிறது. அதன்பின்னர் சில நெருக்கமான உறவினர்களுக்கும் நேரில் சென்று குங்குமம் கொடுத்துத் தண்ணீர் ஊற்றும் நல்ல நேரத்தைத் தெரிவிக்கின்றனர். தண்ணீர் ஊற்றும் நேரம் பஞ்சாங்கம் பார்த்தே முடிவு செய்யப்படுகிறது.

### 5.4.2. தண்ணீர் ஊற்றுதல்

தண்ணீர் ஊற்றுவதென்பது பூப்பெய்திய அன்றோ அல்லது மூன்றாம் நாளன்றோ நல்ல நேரம், நெருக்கமான உறவினர்கள் அருகில் இருக்கும் சூழலைப் பொறுத்து மாலை வேளையில் ஆறு மணிக்கு மேல் நடைபெறுகிறது. மூன்று அல்லது ஐந்து நிறைகுடத் தண்ணீரில் மஞ்சள் தூள், வேப்பிலை உருவிப் போட்டு வீட்டிற்குப் பின்புறம் அல்லது குளிக்குமிடத்தைப் பொறுத்து முடிவு செய்கின்றன. பூப்பெய்திய பெண்ணை மணப்பலகையின் மீது கிழக்குமுகம் பார்த்தவாறு அமர வைக்கின்றனர். அம்மானின் மனைவி உள்ளிட்ட ஏழு, ஒன்பது, பதினொன்று என ஒற்றைப் படையில் சுமங்கலிகளால் தண்ணீர் ஊற்றப்படுகிறது. பூப்பெய்திய பெண்ணின் தலைக்கு மேல் மூவர் நெல் சலிக்கும் சல்லடையைப் பிடிக்கக் கைராசியான சுமங்கலி (பிள்ளைகளைப் பெற்றவர்) முதலில் தண்ணீர் ஊற்றப் பின் மற்றவர்கள் ஊற்றுகின்றனர். அப்போது பெண்ணுக்குப் பச்சைப்பயிறு, மஞ்சள் தேய்த்துக் குளிப்பாட்டப்படுகின்றனர்.

### 5.4.3. குடிசை கட்டுதல்

பெண்கள் ஒன்றுகூடித் தண்ணீர் ஊற்றுவதற்குள் அம்மான், அம்மான் இல்லாத பட்சத்தில் ஏதேனும் ஒரு மாமன் முறையினர் பச்சைத் தென்னை மட்டையால் கீற்று முடைகின்றனர். முடைந்த பச்சைக் கீற்றுகளை வைத்துக் குடிசை கட்டுகின்றனர். இக்குடிசை பெரும்பான்மையாக வீட்டின் திண்ணைப் பகுதியிலேயே அமைகிறது. குடிசையில் வேப்பிலை, மாவிலை செருகப்பட்டுக் குடிசை அலங்கரிக்கப்படுகிறது. அனைத்துப் பச்சைக் கீற்றுகளையும் அம்மான் ஒருவரே முடைய முடியாது என்பதால் உறவினர்கள் சிலரும் முடைவதுண்டு.

சடங்கு முறைக்காக அம்மான் ஒரு கீற்றினை முடைந்தாக வேண்டும். குடிசை கட்டுதலில் அம்மானுக்கே முதல் உரிமை வழங்கப்படுகிறது. அம்மானுக்கும் பெண்ணின் தந்தைக்கும் முன்பகை இருப்பின் வேறு யாரேனும் குடிசை கட்டி, அம்மான் சீர் செய்தால் சண்டை வருவதும் உண்டு. அப்போது பஞ்சாயத்தார் தந்தையைச் சமாதானம் செய்து அம்மானுக்கே முன்னுரிமை அளிக்கின்றனர்.

### 5.4.4. அம்மான் சீர்வரிசை

பூப்பெய்திய பெண்ணுக்கு அம்மான் பட்டுப்புடவை, உள்ளாடைகள், இரவிக்கை, பவுடர், சோப்பு, சீப்பு, கண்ணாடி, குங்குமச் சிமிழ், தலைக்கு எண்ணெய், வளையல், ரிப்பன், பூ, மாலை, பழவகைகள், இனிப்பு வகைகள் என ஒன்பதுக்கும் மேற்பட்ட ஒற்றைப்படையில் தட்டு வரிசைகள் சபையில் வைக்கப்படுகின்றன. மேலும், நலங்கு வைப்பவர்களுக்குக் கொடுப்பதற்காக முன்பெல்லாம் வெற்றிலைப் பாக்கு, பழம், பூ, மிட்டாய் இவை அம்மானின் சீர்வரிசையில் இடம்பெற்றிருக்கும் நலங்குச் சாமான்களாகும். இன்றைய நிலையில் எவர்சில்வர் பாத்திரம், புடைவை அல்லது இரவிக்கைத் துணி, தேங்காய், பழம், பூ, மஞ்சள், குங்குமம், சீப்பு, மிட்டாய் என இருபத்தொன்று, இருபத்தேழு, முப்பத்தொன்று என்ற அளவில் நலங்குத் தட்டுகள் வைக்கப்படுகின்றன. இது அம்மானின் பெருமையைக் காட்டுவதாகவே காணப்படுகிறது.

### 5.4.5. குடிசைக்குள் விடுதல்

தண்ணீர் ஊற்றி முடித்து, சபையினர் முன் அம்மான் சீர்வரிசைகள் வைக்கப்படுகின்றன. அதன்பின்னர் சடங்கு செய்யுமிடம் சதுரவடிவில் பசுவின் சாணத்தால் மெழுகப்பட்டு அதன்மீது மாக்கோலம் போடப்படுகிறது. இரண்டு குத்து விளக்குகள் மற்றும் ஒரு நல்விளக்கு (காமாட்சியம்மன் விளக்கு), பூப்போட்டுக் குங்குமம் வைத்து ஏற்றப்படுகிறது. பூப்பெய்திய பெண்ணின் மாமன் முறையினரில் யாரேனும் ஒருவர் புரோகிதராக அமர்ந்து சடங்கினைச் செய்து வைக்கின்றனர்.

### 5.4.6. கலசம் வைத்தல்

வெண்கலச் செம்பின் மீது நூல் சுற்றி, மஞ்சள், குங்குமம் இட்டு, அதனுள் மஞ்சள் தண்ணீர், பசுவின் கோமியம் ஊற்றி, மாவிலைகள் செருகி, அதன்மீது பஞ்சுடன் உள்ள தேங்காயை வைக்கின்றார்கள். அத்தேங்காய்க்குச்

சந்தனம், குங்குமம் வைத்து, பூச்சரம் சுற்றி, புத்தாடை (இரவிக்கைத் துணி அல்லது சிறுதுண்டு) கட்டுகின்றனர். முகமுள்ள வாழையிலையை (நுனி இலை) வைத்து, பச்சரிசியைப் பரப்பி அதன்மீது தேங்காயுள்ள செம்பினை வைக்கின்றனர். இதனைக் 'கலசம் வைத்தல்' என்கின்றனர்.

### 5.4.7. பெண்ணை அமர வைத்தல்

கலசத்திற்கு மூன்றடி தூரத்தில் மேற்கில் நெல் பரப்பி அதன்மீது மனைப்பலகை போடுகின்றனர். மனைப்பலகையின் அடியில் பணம் போடப்படுகிறது. சேரி வண்ணார் (தாழ்த்தப்பட்ட சமூகத்திற்கு உரிய வண்ணார்) அல்லது வண்ணாத்தி கொண்டு வரும் வெண்மையான ஆடை (துண்டு அல்லது வேட்டி) மனைப்பலகையின் மீது போடப்படுகிறது. பூப்பெய்திய பெண் கலசம் உள்ளிட்ட வேள்விப் பொருட்களை ஒருமுறை வலம்வந்து இறைவனையும் சபையினரையும் வணங்கி மனையின் மீது கிழக்கு முகமாக அமர்கிறாள். உடன் அத்தை முறையினரில் யாரேனும் ஒருவர் தோழியாக இருப்பர்.

### 5.4.8. வேள்வி செய்தல்

வள்ளுவப் புரோகிதர் முதலில் மஞ்சளில் பிள்ளையார் பிடித்து, அதற்கு அருகம்புல் செருகி, பொட்டு வைத்து, பிள்ளையாருக்கும் கலசத்திற்கும் வெற்றிலை, பாக்கு, வாழைப்பழம், தட்சணையாகப் பணம் வைக்கின்றனர். பின்னர், பூப்பெய்திய பெண்ணிற்கும் வெற்றிலை, பாக்கு, பழம் கொடுக்கின்றனர். அவள் அதனை வணங்கிப் பெற்றுக்கொண்டு தன் மடியில் வைத்துக் கொள்கிறாள். வள்ளுவப் புரோகிதர் சில வடமொழி மந்திரங்களை (சமஸ்கிருத மந்திரங்கள்) ஓதியவாறே பிள்ளையாருக்கும் கலசத்திற்கும் பூப்போட்டுப் பெண்ணை வணங்கச் செய்கிறார். அதன்பின்னர் பெண்ணின் கைகளாலேயே தூப தீபம் காட்டப்படுகிறது. பின்னர் அட்சதை போட்டு மீண்டும் பிள்ளையாரையும் கலசத்தையும் வணங்குகிறாள். இதன் பின்னரே எக்கியம் வளர்த்தப்படுகிறது.

செங்கற்களால் மேடை அமைத்து அதன் நடுவே மணல் பரப்பி அதனுள் (மணல் மீது) நெல் உமியினைப் பரப்பி அதன்மீது கற்பூரம் ஏற்றுகின்றனர். ஆல், அரசு, மா ஆகியப் பால்மரச் சுள்ளிகளைக் கற்பூரத்தின் மீது அடுக்கி மந்திரங்கள் கூறி நெய் வார்த்துத் தீ மூட்டுகின்றனர். இதுவே 'எக்கியம் வளர்த்தல்' ஆகும். இந்த எக்கியத்தில் பூப்பெய்திய பெண்ணின் கையினால்

நெல், பொரி, நவதானியங்கள், பழங்கள், அட்சதை, நெய், தெர்ப்பைப் புல் ஆகியன தலையைச் சுற்றிப் போடப்படுகின்றன. புரோகிதர் மந்திரங்களை முழங்கியவாறே இச்சடங்கினைச் செய்து முடிக்கின்றார். புரோகிதரின் வடமொழி மந்திரங்களினிடையே பெண் பூப்பெய்திய ஆண்டு, மாதம், நாள், நட்சத்திரம், யோகம் ஆகியவற்றுடன் அவளின் குலம், கோத்திரம் கூறப்பட்டு நிறை புகழ், நிறை ஆயுள், கல்வி, குழந்தை பாக்கியம் அனைத்தும் பெற்றுப் பெருவாழ்வு வாழ இறைவன் அருள்புரியுமாறு புரோகிதரால் வேண்டப்படுகிறது.

### 5.4.9. அம்மான் பொட்டு வைத்தல்

இவ்வாறு வேள்வி செய்து முடிந்ததும் அம்மான் சீர்வரிசை, ஊர்ப் பிரமுகர்களால் மதிப்பீடு செய்யப்படுகிறது. புரோகிதர் அம்மான் கொண்டுவந்த ஆடைகளை மஞ்சள் தடவி, வாழ்த்தி இறைவனை வேண்டி அம்மானிடம் கொடுத்துப் பெண்ணிடம் கொடுக்கச் செய்கிறார். பெண் அம்மான் கால்களில் விழுந்து வணங்கிப் பெற்றுச்செல்கிறாள். சற்று நேரத்திற்குள் அம்மான் புடைவையை உடுத்தி அலங்காரம் செய்துகொண்டு மீண்டும் சபைக்குக் கொண்டு வரப்படுகிறாள். அவளுக்கு அம்மான் மாலை அணிவித்து, நெற்றியில் குங்குமத்தால் பொட்டு வைக்கின்றார். தோழியால் மீண்டும் மனையில் அமர வைக்கப்படுகிறாள். பெண் சபையினரை வணங்கிய பின்னரே அமர்கின்றாள். அம்மான் அட்சதை போட்டுப் பெண்ணை ஆசிர்வதிக்கிறார்.

### 5.4.10. நலங்கு வைத்தல்

மஞ்சள், சந்தனம், குங்குமம் இவை தனித்தனித் கிண்ணங்களில் வைக்கப்படுகின்றன. பன்னீர்ச் செம்பில் பன்னீரும், சருவச் சட்டியில் (அகன்ற ஆழமான வெண்கலப் பாத்திரம்) மஞ்சள், சுண்ணாம்பு கரைத்து அதில் அருகம்புல் போட்டு ஆலம் (ஆரத்தி) கலக்கி வைக்கப்படுகிறது. ஒரு வாழை இலையில் அம்மி அரைக்கும் குழவி வைக்கப்படுகிறது.

வள்ளுவர் சமூகத்தைச் சேர்ந்த சுமங்கலிகள் ஒவ்வொருவராக வந்து முதலில் குங்குமத்தை எடுத்து நல்விளக்கிற்கும், பெண்ணிற்கும் இட்டுவிட்டு, பின்னர் பெண்ணின் இரு கன்னங்களிலும் மஞ்சள், சந்தனம் தடவுகின்றனர். குழவியை எடுத்துக் கைகளில் கொடுக்கின்றனர். பெண்ணிற்குக் குழந்தைப்பேறு கிட்ட வேண்டும் என்பதற்காகக் குழவி குழந்தையாகப் பாவித்துக் கொடுக்கப்படுகிறது. பின்னர் ஆலம் (ஆரத்தி) எடுத்து மூன்றுமுறை

இடப்புறமாகவும், மூன்றுமுறை வலப்புறமாகவும் சுற்றி, அதனைத் தொட்டுப் பெண்ணின் நெற்றியில் பொட்டு வைக்கின்றனர். தலையில் பன்னீர் தெளித்து, அட்சதை போட்டு, இறைவனை வணங்கி, வாழ்த்துகின்றனர். இவ்வாறாக ஏழு, ஒன்பது, பதினொன்று என்ற எண்ணிக்கையில் பெண்கள் முன்பெல்லாம் நலங்கு வைத்தனர். இன்றைய நிலையில் இருபத்தொன்று, இருபத்தேழு, முப்பத்தொன்று என்ற எண்ணிக்கையில் வைக்கின்றனர். தங்களிடம் பழகும் மேட்டுக்குடிப் பெண்களை அழைத்து நலங்கு வைக்கச் சொல்லும் வள்ளுவர் சமூகத்தினரிடம் பிற தாழ்த்தப்பட்ட சமூகப் பெண்களை நலங்கு வைக்க அனுமதிக்கும் வழக்காறு காணப்படவில்லை. நலங்கு வைக்கும் அனைத்துப் பெண்களுக்கும் எவர்சில்வர் தட்டு, தேங்காய், பூ, பழம், சீப்பு, மஞ்சள், குங்குமம், தாலிக்கயிறு, மிட்டாய், இரவிக்கைத்துணி, வசதி அதிகமுள்ள குடும்பத்தினராக இருப்பின் புடைவை ஆகியன வைத்துக் கொடுக்கப்படுகின்றன.

### 5.4.11. ஆலம் எடுத்தல்

இறுதியாக நலங்கு வைக்கும் பெண் நலங்கு வைத்த பின்னர் ஆலத்தை எடுத்து அதில் வெற்றிலையை மிதக்கவிட்டு அதன்மீது கற்பூரம் ஏற்றிப் பெண்ணை நிற்க வைத்துச் சுற்றித் திஷ்டி (கண்ணேறு) கழிக்கின்றனர். ஆலம் எடுத்ததற்காக ஆலம் எடுக்கும் பெண்ணிற்கு அம்மானிடமிருந்து பணம் பெறப்படுகிறது. அதன் பின்னர் ஆலம் வீதியில் ஊற்றப்படுகிறது. பின்னர் பூப்பெய்திய பெண்ணின் கைகளில் நல்விளக்குக் கொடுக்கப்படுகிறது. அவள் விளக்கு அணையாமல் குடிசைக்குள் கொண்டு செல்வாள். கொண்டு செல்லும்போது குடிசை வாயிலில் உலக்கை போடப்பட்டு, அதனைத் தாண்டி வலக்காலை முதலில் வைத்து உள்ளே செல்கிறாள். உடன் கதிரறுக்கும் அரிவாள், வேப்பிலை வைக்கப்படுகின்றன. அதனுடன் அம்மான் கொடுத்த சோப்பு, சீப்பு, பவுடர், கண்ணாடி, குங்குமம் ஆகியனவும் குடிசைக்குள் வைக்கப்படுகின்றன.

### 5.4.12. உணவு கொடுத்தல்

இவ்வாறு குடிசைக்குள் விட்டதும் அனைவருக்கும் தேநீர் அல்லது காப்பி வழங்கப்படும். பின்னர் தாம்பூலம் வழங்கப்படும். இன்றைய நிலையில் தேநீருடன் நிறுத்திவிடாமல் நடுத்தரக் குடும்பத்தினர்கூட அனைவருக்கும் உணவு பரிமாறுகின்றனர். பூப்பெய்திய பெண்ணின் வீட்டில் அவளை வீட்டிற்கு அழைக்கும் வரை அசைவ உணவுகளைச் செய்வதும், பரிமாறுவதும்

கிடையாது. குடிசைக்குள் விட்ட அன்று இரவு பூப்பெய்திய பெண்ணிற்குச் சோறு கொடுப்பதில்லை. பாலும், பழமும் மட்டுமே கொடுக்கப்படுகின்றன. இவ்வாறு பெண் குடிசைக்குள் விடப்படும் அனைத்துச் செலவும் அம்மானையே சேர்ந்ததாகும்.

### 5.4.13. கஞ்சி காய்ச்சி ஊற்றுதல்

குடிசைக்குள் விட்ட நாளிலிருந்து ஏழு, ஒன்பது, பதினோராம் நாள் என சூழலுக்கும் அவரவர்களின் வசதிக்கும் ஏற்பக் குடிசைக்குள் வைத்திருக்கின்றனர். குடிசைக்குள் இருக்கும் நாட்களில் மிக நெருக்கமான உறவினர்கள் ஒரு நாளைக்கு ஒருவராகப் பூப்பெய்திய பெண்ணிற்கு விருந்து வைக்கின்றனர். இதனைக் 'கஞ்சி காய்ச்சி ஊற்றுதல்' என்று அழைக்கின்றனர். இந்தக் கஞ்சி காய்ச்சி ஊற்றுதலிலும் முதலில் அம்மான் செய்த பின்னரே மற்றவர்கள் செய்யும் வழக்கம் காணப்படுகிறது.

காலை உணவாக இட்லி, பொங்கல், உளுத்த (உளுந்து) வடை, கடலைப் பருப்பு வடை, கேசரி ஆகியனவும், மதிய உணவாகச் சோறு, சாம்பார், இரசம், வடை, அப்பளம், பாயாசம், இரவில் இட்லி, உப்புமாவும் கொடுக்கப்படுகின்றன. காலை பதினொரு மணியளவிலும், மாலை நான்கு மணியளவிலும் கேழ்வரகுப் புட்டு (பிட்டு), உளுத்தங்களியினை நல்லெண்ணெய்யில் பிசைந்து கொடுக்கின்றனர். 'தெருவில் உள்ள உறவினர்களுக்கும் அக்கம் பக்கத்து வீட்டினர்க்கும் உணவு வகைகள், பழங்கள் கொடுக்கப்படுகின்றன'. இதனை 'ஊர் வழங்கல்' என்றும் 'வழக்கங் கொடுத்தல்' என்றும் கூறுகின்றனர்.

இவ்வாறு கஞ்சி காய்ச்சி ஊற்றுபவர்கள் காலை, மதியம், இரவு என விருந்துகள் வைப்பதுடன், பூப்பெய்திய பெண்ணிற்குப் புத்தாடை, சோப்பு, சீப்பு, கண்ணாடி, பவுடர், பொட்டு, ரிப்பன் முதலிய அலங்காரப் பொருட்களையும் வாங்கிக் கொடுக்கின்றனர். இக்காலகட்டத்தில் பெண்கள் பள்ளிக்குச் செல்ல வேண்டிய கட்டாயத்தில் உள்ளதால் அவர்களின் கல்வி நிலையைக் கருத்தில் கொண்டு மூன்று அல்லது ஐந்து நாட்களுக்கு மேல் குடிசைக்குள் வைத்திருப்பதில்லை. எனவே, உறவினர்கள் அதிக அளவில் கஞ்சி காய்ச்சி ஊற்றாமல் பணமாகவும் பொருட்களாகவும் கொடுக்கும் நிலை காணப்படுகிறது.

### 5.4.14. வீட்டுக்கு அழைத்தல்

குடிசைக்குள் விட்ட பெண்ணை ஓர் ஒற்றைப்படை நாளில் அதிகாலையில் யார் கண்களிலும் படாதவாறு (மக்கள் நடமாட்டம் இல்லாத பொழுது) குடிசையைக் கட்டிய அம்மானே குடிசையைப் பிரித்துத் தென்னங்கீற்றுகளை ஒரு கட்டாகக் கட்டி ஒதுக்குப்புறமாக ஓர் இடத்திற்குக் கொண்டு சென்று அதனைத் தீயிட்டுக் கொளுத்துகின்றார். அதன் பின்னர் சுமங்கலிப் பெண்கள் ஒன்றுகூடிச் சிறிதளவு நல்லெண்ணெய்யைக் காய்ச்சி அதில் ஓமம் போட்டுப் பொரித்து ஆறவைக்கின்றனர். அந்த எண்ணெய்யை இளஞ்சூட்டுப் பதத்தில் பூப்பெய்திய பெண்ணின் தலையில் தேய்க்கின்றனர். பின்னர் தலைக்குச் சீக்காய் (சிகைக்காய்), உடம்பிற்குப் பச்சைப் பயிறு தேய்த்துப் பூப்பெய்திய பெண் குளிப்பாட்டப்படுகிறாள். இதனை 'ஓமம் எரித்து ஊற்றுதல்' என்றும் 'தீட்டுக் கழித்தல்' என்றும் குறிப்பிடுகின்றனர். அன்று பெண்ணிற்கு விருந்து வைத்து ஊர் வழங்கப்படுதலும் உண்டு. இந்தச் செலவுகள் பெண்ணின் பெற்றோரைச் சேர்ந்தவையாகும். விருந்தில் சோறு, சாம்பார், வடை, பாயாசம், பொரியல், கூட்டு எனச் சைவ சமையலே காணப்படுகிறது. இவ்வாறு பெண்களாக ஒன்றுகூடித் தீட்டுக் கழிக்கும் இந்நிகழ்வினை அல்லது எளிய முறையில் நடத்தும் சடங்கினைப் 'பொம்பள சாங்கியம்' என்று அழைக்கும் வழக்காறு காணப்படுகிறது.

### 5.4.15. மஞ்சள் நீர் சுற்றுதல்

மஞ்சள் நீராட்டு விழாவை, 'பூப்புனித நீராட்டு விழா', 'மஞ்சள் நீர் சுபசடங்கு', 'மஞ்ச தண்ணி சுத்துதல்' என்றெல்லாம் குறிப்பிடுகின்றனர். இவ்விழா பெண் பூப்பெய்திய மூன்றாம் மாதம் அல்லது ஐந்தாம் மாதம் நிகழ்த்தப்படுகிறது. அவரவர்களின் வசதிக்கு ஏற்ப மண்டபம் அல்லது வீட்டில் நடைபெறுகின்றது. மஞ்சள் நீராட்டு விழா செய்வதெனில் முதலில் அம்மானிடம் சென்று தெரிவிக்கின்றனர். அதன் பின்னர் பஞ்சாங்கம் பார்த்து வளர்பிறையில் நாள் குறிக்கப்படுகிறது. முன்பெல்லாம் இதுபோன்ற சுபகாரியங்கள் செய்வதெனில் உறவினர்களை வெற்றிலைப் பாக்கு, பழம் வைத்து அழைப்பார்கள். தேதி மற்றும் நேரத்தை வாயால் கூறுவார்கள். இதற்குப் 'பாக்கு வைத்து அழைத்தல்' என்று பெயர். கடந்த நாற்பதாண்டு காலமாகப் பத்திரிகை அடித்துப் (அழைப்பிதழ்) பூ, பழம், வெற்றிலைப் பாக்கு, தேங்காய், இனிப்பு

வைத்துக் கொடுத்தும் அழைக்கும் நிலை காணப்படுகிறது. எவ்வாறு அழைப்பினும் முதல் அழைப்பு எப்பொழுதும் அம்மானுக்கே உரியதாகக் காணப்படுகிறது. மஞ்சள் நீராட்டு விழா எப்போதும் மாலை 6.00 மணி முதல் 7.30 மணி வரை அல்லது 5.00 மணி முதல் 6.30 மணி வரையே நிகழ்த்தப்படுகிறது.

வள்ளுவர் சமூகத்தில் ஒரே வீட்டில் இரண்டு அல்லது இரண்டிற்கும் மேற்பட்ட பெண்கள் இருப்பின் முதல் பெண்ணிற்குப் பெரிய அளவில் சடங்கு செய்வதுபோல் அடுத்தடுத்த பெண்களுக்குச் செய்யும் நிலை காணப்படவில்லை. ‘பொம்பள சாங்கியமாக’ (எளிய முறையில்) சடங்கினை நடத்திக்கொள்ளும் பொருளாதார நெருக்கடி நிலையே அதிகம் காணப்படுகிறது. இரு பெண்கள் எனில் இரண்டாவது பெண்ணும் பூப்பெய்திய பின்னர் இருவருக்கும் ஒரே நேரத்தில் மஞ்சள் நீராட்டு விழா செய்யும் வழக்காறு அதிகம் உள்ளது. வள்ளுவர் சமூகத்தில் ஒரு சிலர் நல்ல பொருளாதார நிலையை எட்டியும், பெண்கள் மிகச்சிறு வயதில் பூப்பெய்துவதால் அவளின் பள்ளிக் கல்வியைக் கருத்தில் கொண்டும், எதிர்காலக் கல்விச் செலவு, வேலைவாய்ப்பு, திருமணச் செலவு, இவற்றைக் கருத்தில் கொண்டும், சமூகச் சிக்கல்களை எண்ணியும் பூப்பெய்தியதை வெளியில் காட்டிக் கொள்ளாமல் பொம்பள சாங்கியமாகச் சடங்கினை முடித்துக் கொள்வதும் உண்டு.

மஞ்சள் நீர் விழா நடைபெறும் இடத்திற்கு உறவினர்கள் புரோகிதம் செய்ய மாமன் முறையினரில் ஒருவர் அமர்த்தப்படுகிறார். அவர் வேள்விப் பொருட்களைப் பரப்பி, வழக்கமான முறையில் மஞ்சளில் பிள்ளையார் பிடித்து விளக்கேற்றிக் கலசம் வைத்துப் பால்மரச் சுள்ளிகளால் எக்கியம் வளர்த்து இறைவனை வழிபாடு செய்கின்றார். அப்போது பூப்பெய்திய பெண் புரோகிதர் கொடுக்கும் வேள்விப் பொருட்களைத் தலையைச் சுற்றி எக்கியத்தில் போடுகிறாள். புரோகிதர் வடமொழியில் சில மந்திரங்களை ஓதுகின்றார். பூப்பெய்திய பெண்ணிற்குத் தண்ணீர் ஊற்றும்போது செய்யப்படும் சடங்குகளை ஒத்தே இதுவும் காணப்படுகிறது.

### 5.4.15.1. அம்மான் சீர்

அம்மான் சீர் ஏதேனும் ஒரு கோவிலில் இருந்து மேள, தாளத்துடன் கொண்டு வரப்படுகிறது. பட்டுச் சேலை, மாலை, பூ, பழங்கள், இனிப்பு வகைகள், கார வகைகள், வெற்றிலைப் பாக்கு, தேங்காய், தங்க நகைகள் என

ஒன்பது, பதினொன்று, பதின்மூன்று, பதினைந்து என்ற அளவில் தட்டுகள் எடுத்து வரப்படுகின்றன. இவற்றை ஊர்ப் பிரமுகர்கள் மதிப்பீடு செய்வதும் உண்டு. இதனை 'அம்மான் வரிசை' என்றும் கூறுகின்றனர். தட்டு வரிசையில் உள்ள புத்தாடை, நகை இவற்றைப் புரோகிதர் அட்சதை போட்டுக் கொண்டாடி வாழ்த்தி அம்மான் கைகளால் பெண்ணிற்குக் கொடுக்கச் செய்வார். அவள் அம்மான் கால்களில் விழுந்து வணங்கி ஆசிர்வாதம் பெற்றுப் புத்தாடையையும், நகையையும் பெற்றுச் செல்கிறாள். மீதமுள்ள அம்மான் தட்டுவரிசை அவளுடன் கொண்டு செல்லப்படுகிறது.

### 5.4.15.2. நலங்கு வைத்தல்

புத்தாடை அணிந்து (பட்டுப்புடவை), நகைகள், சடைப்பில்லை இவற்றுடன் அலங்காரம் செய்துகொண்ட பெண் மீண்டும் சபைக்கு வந்து சபையினரை வணங்குகிறாள். அம்மான் அப்பெண்ணின் நெற்றியில் குங்குமம் வைத்து, மாலை அணிவித்து, தலையில் அட்சதை போட்டு வாழ்த்துகின்றார். அதன்பின்னர், வழக்கமான முறையில் நலங்கு வைக்கப்படுகிறது. வள்ளுவர் சமூகத்தில் பெண்ணைப் பெரும்பான்மையாக மனைப்பலகையில் அமரவைத்தே நலங்கு வைக்கும் வழக்கம் காணப்படுகிறது. நாற்காலியில் அமர வைக்கப்படுவதில்லை. நலங்கு வைக்கும்பொழுது புட்டு (பிட்டு) சுற்றுவது நலங்கு வைத்தலில் கூடுதலாகக் காணப்படும். நலங்கு வைத்தவர்களில் நெருக்கமானவர்கள் பெண்ணுக்கு நெற்றிப்பணம் வைப்பதுண்டு. நலங்கு வைத்தவர்களுக்கும் மற்றவர்களுக்கும் உடையவரின் வசதிக்கேற்பத் தாம்பூலம். வழங்கப்படுகிறது. பின்னர் அனைவரும் அன்பளிப்பாகப் பணம், பொருட்களைப் பெண்ணிற்கு அளிக்கின்றனர். அனைவருக்கும் சைவ உணவு வகைகள் பரிமாறப்படுகின்றன. இன்றைய நிலையில் மங்கல நிகழ்வுகள் அனைத்தும் புகைப்படம், வீடியோவில் பதிவு செய்யப்படுகின்றன. நெருக்கமான உறவினர்கள் தங்கி விருந்துண்டு செல்வதும் உண்டு. அவர்களை வழியனுப்பும்பொழுது தாம்பூலத்தில் பணம் வைத்துக் கொடுத்தனுப்பும் மரபு இன்றும் காணப்படுகிறது.

## 5.5. திருமணம்

திருமணம் என்பதை விவாகம், சுபமுகூர்த்தம், கல்யாணம் என்ற சொற்களால் வழங்கிவரும் வழக்கம் வள்ளுவர்களிடம் காணப்படுகிறது. அழைப்பிதழ்களில் திருமணம், விவாகம் என்னும் இரு சொற்களே

காணப்படுகின்றன. முகூர்த்தம், கல்யாணம் என்னும் சொற்கள் வாய்மொழியில் மட்டுமே இடம்பெறுகின்றன.

வள்ளுவர் சமூகத்தில் முன்பெல்லாம் வயது நிரம்பிய ஆண் மகனுக்கும், வயதிற்கு வந்த பெண் மகளுக்கும் திருமணம் நடத்தி வைக்கப்பட்டது. இன்றைய நிலையில் மணமக்கள் வயது நிரம்பியவர்களாகவே காணப்படுகின்றனர். இந்தியத் திருமணச் சட்டத்தின்படி ஒருசில மாதங்களோ, வருடங்களோ வயது குறைந்த பெண்ணிற்கும்கூடத் திருமணம் நடைபெறுகிறது. பதிவுத் திருமணங்கள் இச்சமூகத்தவர்களிடம் காணப்படவில்லை. ஓரிரு இடங்களில் காணப்பட்டாலும் அவை கலப்புத் திருமணங்களும், காதல் திருமணங்களுமாகவே உள்ளன. ‘‘காதல் மணம் கற்புகெட்ட செயலாகவே கருதப்பட்டது. எல்லோரும் அதனை ஏற்றுக்கொள்வதில்லை. கலப்புத் திருமணம் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. இப்போது காதல் மணமும், கலப்பு மணமும் தாராளமாகத் தலைகாட்டுகின்றன’’[15].

திருமணத்திற்காகப் பெண், பிள்ளை பார்ப்பதில் குலம், கோத்திரம் பார்ப்பதென்பது வள்ளுவர்களிடம் காணப்படுகிறது. ‘‘அம்மான் மக்கள் - அத்தை மக்களுக்குள் திருமணம் நடைபெறும். மணமகன் தன் தமக்கை (அக்காள்) மகளைக் கட்டிக் கொள்ளும் வழக்கமும் உண்டு; தங்கை மகளைக் கட்டுவதில்லை’’[16]. இதனால் ‘ஒரு கொளத்து நத்தைகள் ஒரே குட்டையில் ஊறிய மட்டைகள்’ என்ற பழமொழி காணப்படுகிறது. இன்றைய நிலையில் உடன்பிறந்த அக்காள் மகளைத் திருமணம் செய்துகொள்வது அதிகம் காணப்படவில்லை. இன்றைய வளர்ந்துவரும் பொருளாதாரக் கண்ணோட்டத்தில் அரசுப்பணி, நல்ல வருமானம், குடும்ப மதிப்பு ஆகியவற்றின் அடிப்படையில் குலம், கோத்திரம் பாராது உள்ளினப் பிரிவிற்குள்ளும் திருமண உறவுகளை மேற்கொண்டு வருகின்றனர். ‘‘உறவினருக்குள் திருமணம் மிகுதியாக நடைபெற்று வந்தது. இப்போது வெளியாருக்குள் மிகுதியாக நடைபெறுகிறது’’[17].

---

[15]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 430.

[16]. மேலது, ப. 426.

[17]. மேலது, ப. 426.

இச்சமூகத்து மக்களிடம் பலதார மணம் மிகமிக அரிதாகவே காணப்படுகிறது. சென்ற தலைமுறையில் பலதாரத் திருமணங்கள் ஒன்றிரண்டு நிகழ்ந்துள்ளன என்றாலும் இந்தத் தலைமுறையில் பலதாரத் திருமணம் இல்லை என்றே கூறலாம். மனைவி இளம் வயதில் இறந்துவிட்டாலோ அல்லது வேறொருவருடன் கள்ளத் தொடர்பினால் சென்றுவிட்டாலோ ஆண் இரண்டாம் திருமணம் செய்துகொள்கின்ற வழக்கம் காணப்படுகிறது. ஆனால், எந்த வகையிலும் கணவனை இழந்த இளம் மனைவி பெரும்பான்மையாக இரண்டாம் திருமணம் செய்து கொள்வதில்லை. செய்துவைக்கும் நிலையும் காணப்படவில்லை. இளம் விதவைத் திருமணத்தை அறிவுசார்ந்த ஒருசிலர் ஆதரிக்கும் நிலை அங்கொன்றும் இங்கொன்றுமாக முகம் காட்டத் தொடங்கியுள்ளது.

‘‘மனைவி இறந்துவிடின் கணவன் மறுமணம் செய்து கொள்ளலாம் என்ற உரிமை தொன்றுதொட்டு இருந்து வருகிறது. கணவன் இறந்தால் இன்னொருவனை மணந்துகொள்ளும் உரிமை பெரும்பாலும் பெண்களுக்கு இருந்ததில்லை. இப்போது சீர்திருத்தம் - மறுமலர்ச்சி என்னும் பெயரால் மறுமணம் என்னும் விதவா விவாகம் சமூகத்தில் நடைபெறுகிறது. இந்தப் பெண் ‘கட்டுப்பெண்’ எனப்படுகிறாள். இத்திருமணம் வீட்டோடு சுருக்கமாகவே நடைபெறும். இதற்கு ‘நடுவீட்டுத் தாலி கட்டுதல்’ (நடு ஊட்டுத்தாலி) என்று பெயராம்’’[18].

### 5.5.1. ஜாதகம் பார்த்தல்

‘‘இப்பகுதியில் தமிழ்ப் பெருங்குடி மக்களுள் மாப்பிள்ளை வீட்டார்தாம் பெண் தேடுவது வழக்கம். பெண் வீட்டார் தாமாகச் சென்று மாப்பிள்ளை தேடுவது இழிவாகக் கருதப்படுகிறது. உறவினர் குடும்பங்களுக்குள்கூட மாப்பிள்ளை வீட்டார்தாம் முதலில் பெண் கேட்பர். எவ்வளவு நெருக்கமான உறவாயிருந்தாலும் ‘‘எங்கள் பெண்ணை உங்கள் பிள்ளைக்குக் கட்டிக் கொள்ளுங்கள்’’ என்று பெண் வீட்டாராகக் கேட்க மாட்டார்கள். முதலில் மாப்பிள்ளை வீட்டார் கேட்டாலும் உடனே பெண் வீட்டார் ஒப்புதல் கொடுத்துவிட மாட்டார்கள்; பொய்யாகவாவது ஒரு ‘பிகுவு’ காட்டிப் பிறகே பெண் தருவதாக

---

[18]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 430.

உடன்படுவார்கள். இந்த நிலைமை கால் நூற்றாண்டுக்கு முன்பு வரையுங்கூட இந்தப் பகுதியில் கட்டுக்குலையாமல் இருந்தது. இப்போதும் பலரிடத்தில் இருக்கிறது"[19]. இவ்வாறு முதலில் பெண் பார்க்கத் தொடங்கும் மாப்பிள்ளை வீட்டார் அதற்கு முன்னர் வள்ளுவச் சோதிடர்களிடமே மாப்பிள்ளையின் ஜாதகத்தைப் பார்க்கின்றனர். பார்க்கும்பொழுது எந்த வயதிற்குள் திருமணம் நடைபெறும், எந்தத் திசையில்? உறவிலா? அசலிலா (அயலார்)? என்பவற்றையெல்லாம் கேட்டறிந்து கொண்டு, அதற்கேற்ற திசையில் உள்ள ஊர்களில் தங்கள் சமூகத்தாரின் வீடுகளில் உள்ள பெண்களைப் பற்றி அறிந்துகொண்டு பெண் பார்க்க முயல்கின்றனர்.

### 5.5.2. ஜாதகப் பொருத்தம் பார்த்தல்

பெண்ணைப் புகைப்படத்திலோ அல்லது நேரடியாகவோ பார்த்த மாப்பிள்ளை வீட்டார் பெண்ணின் ஜெனன ஜாதகம் அல்லது ருது ஜாதகத்தை வாங்கிவந்து மாப்பிள்ளையின் ஜாதகத்துடன் ஜாதகப் பொருத்தம் பார்க்கின்றனர். அவ்வாறு பார்க்கும்பொழுது நெருக்கமான உறவினரானாலும் சோதிடருக்கு வெற்றிலைப் பாக்கு, பழம், பணம் வைக்கும் மரபு காணப்படுகிறது. இது 'பொருத்தம் பார்த்தல்' அல்லது 'பொருத்த நிமித்தம் பார்த்தல்' என்று கூறப்படுகிறது. முதலில் இருவரின் வயதும் கணக்கிடப்பட்டுப் பெண் மாப்பிள்ளையைவிட இளையவள் என்ற பட்சத்திலேயே மற்ற பொருத்தங்கள் பார்க்கப்படுகின்றன. பெண் மூத்தவள் எனில் திருமணம் தவிர்க்கப்படுகிறது.

1. தினப்பொருத்தம், 2. கணப் பொருத்தம், 3. மாஹேந்திரப் பொருத்தம், 4. ஸ்திரீ தீர்க்கப் பொருத்தம், 5. யோனிப் பொருத்தம், 6. ராசிப் பொருத்தம், 7. ராசி அதிபதிப் பொருத்தம், 8. வசியப் பொருத்தம், 9. ரஜ்ஜுப் பொருத்தம், 10. நாடிப் பொருத்தம் எனப் பத்துப் பொருத்தங்கள் ஆணுக்கும் பெண்ணுக்கும் பார்க்கப்படுகின்றன. இதனை, 'திருமணப் பொருத்தம்', 'கல்யாணப் பொருத்தம்', 'ஜாதகப் பொருத்தம்', 'விவாக தசவிதப் பொருத்தம்' என்றெல்லாம் கூறுகின்றனர். இப்பொருத்தங்களில் ஐந்திற்கும் மேற்பட்ட பொருத்தங்கள் இருப்பின் திருமணம் செய்யலாம் என்று அறியப்படுகிறது. சிலர் ஏழு, ஒன்பது என்ற அளவில் பொருத்தங்களைப் பார்த்தே திருமணம் செய்கின்றனர். "இந்த பத்துப் பொருத்தங்களில் தினம், கணம், யோனி, ராசி, ரஜ்ஜு ஆகிய ஐந்து

[19]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், பக். 424 – 425.

பொருத்தங்களும் மிக முக்கியமாக இருக்க வேண்டும். அதில் ரஜ்ஜு பொருத்தம் இல்லை என்றாலும் ஆண், பெண் ஜாதகத்தில் ஒருவருக்காவது குருபலன் இல்லையென்றாலும் திருமணம் செய்வதில்லை. வேறு இடம் பார்க்க வேண்டியது''[20] என்ற நிலை காணப்படுகிறது. எவ்வளவு நெருக்கமான உறவினர்களாக இருப்பினும் வள்ளுவர் சமூகத்தில் பெண் கொள்வது, கொடுப்பதில் ஜாதகப் பொருத்தம் பார்க்காமல் செய்வதில்லை. பொருத்தங்கள் அமையாதவர்களுக்குத் திருமணம் செய்து வைப்பதில்லை. ஒரு சிலருக்கு ஜாதகம் இல்லாத பட்சத்திலும்கூடப் பெயர் ராசியை வைத்தே பொருத்தம் பார்க்கப்படுகிறது. பொருத்தம் பாராமல் நடைபெறும் திருமணம் என்பது இச்சமூகத்தில் சூழல் காரணமாக ஆயிரத்தில் ஒன்று என்ற அளவிலேயே நடைபெறுகிறது எனலாம். சில இடங்களில் பெண் வீட்டார், பிள்ளை வீட்டார் தனித்தனியே பொருத்தம் பார்த்த பின்னர் முறைப்படிப் பெண் வீடு, பிள்ளை வீடு பார்க்கப்படுகின்றன. சில இடங்களில் பெண் வீடு அல்லது பிள்ளை வீடு பார்க்கும்பொழுது இரண்டு வீட்டார்கள் முன்னிலையில் பொருத்தம் பார்ப்பதும் உண்டு.

### 5.5.3. பெண் வீடு, பிள்ளை வீடு பார்த்தல்

சில தலைமுறைகளுக்கு முன்னர் வரையிலும் வள்ளுவர் சமூகத்தில் திருமணத்திற்கு முன்னர் ஆண் பெண்ணையோ, பெண் ஆணையோ நேரடியாகப் பார்த்துக் கொள்ளும் வழக்காறு காணப்படவில்லை. இரு வீட்டினரும் முடிவு செய்தாலே போதுமானதாகக் கருதப்பட்டது. இன்றைய நிலையில் அவ்வாறு இல்லை. ஆண், பெண் ஒருவரை ஒருவர் பார்த்தும், பேசியும் பின்னரே திருமண முடிவு செய்யும் நிலை காணப்படுகிறது.

முறைப்படிப் பொண்ணுவூடு (பெண்வீடு) பார்க்க ஏதேனும் ஒரு வளர்பிறை நன்னாளில் ஆண், பெண் (மாங்கல்யஸ்திரி), குழந்தை, மாப்பிள்ளை என ஏழு, ஒன்பது என்ற அளவில் ஒற்றைப் படையில் செல்கின்றனர். தாங்கள் வருகையினையும் முன்கூட்டியே தெரிவிக்கின்றனர். வள்ளுவர் சமூகத்தின் எந்தச் சடங்குகளிலும் அம்மானுக்கு முதன்மை இடம் உண்டு. பெண் வீட்டிற்குச் செல்லும்போது வாழைப்பழம், வெற்றிலைப் பாக்கு, பூ, தேங்காய், இனிப்பு வகைகள் வாங்கிச் செல்லும் வழக்கம் உண்டு.

---

[20]. ச. குப்புக்கிருஷ்ணன், சோதிடர், வயது. 65, களையூர், கடலூர் மாவட்டம்.

மாப்பிள்ளை வீட்டாரைப் பெண் வீட்டார் குறிப்பாகப் பெற்றோர், அம்மான்கள் ''வாங்க!வாங்க! வணக்கம்'' அல்லது ''நமஸ்காரம்'' என்று கூறியவாறு இரு கரங்களாலும் வணங்கி வரவேற்கின்றனர். மாப்பிள்ளை வீட்டாரும் பெண் வீட்டாரை வணங்கி மகிழ்கின்றனர். மாப்பிள்ளை வீட்டாரை உள்ளே அழைத்து அமரவைத்து முதலில் குடிப்பதற்குத் தண்ணீர் கொடுக்கின்றனர்.

தண்ணீர் கொடுத்துவிட்டு, பிள்ளை வீட்டார் பெரிய தாம்பாளம் ஒன்றைக் கொண்டு வருமாறு பெற்று அதில் கொண்டுவந்துள்ள பூ, பழம், தாம்பூலம் ஆகியவற்றை வைத்துச் சபையின் நடுவே வைக்கின்றனர். பெண் பார்க்க வந்துள்ளனர் எனத் தெரிந்ததும் ஒரு முறைக்காக வேண்டி, ''நீங்கள் யார்? எங்கிருந்து வந்திருக்கிறீர்கள்? என்ன விஷயம் தெரிஞ்சுக்கலாமா?'' என்று பெண் வீட்டாரின் தலைமையானவர் அல்லது அம்மான் எழுந்து நின்று மரியாதையுடன் கேட்பார். பிள்ளை வீட்டாரில் தலைமையானவர் அல்லது அம்மான் ''நாங்கள் இன்ன ஊரிலிருந்து வந்துள்ளோம். இன்னாருடைய பெண்ணை எங்கள் பிள்ளைக்குக் கேட்க வந்துள்ளோம்'' என்று கூறி மாப்பிள்ளையை அறிமுகம் செய்து வைப்பார். மாப்பிள்ளை எழுந்து சபையினரை வணங்குவார். பெண் அலங்காரம் செய்துகொண்டு வரும்வரை உறவினராக இருப்பின் வேறேதாவது பேசி மகிழ்வதுண்டு. அயலாராக இருப்பின் குலம், கோத்திரம், கொடிவழி என்ற உறவுமுறைகளைப் பேசி ஆராய்ந்து எந்த வழியிலாவது கட்டிக்கொள்ளும் முறை வருகிறதா என்பது பற்றிய பேச்சு நிகழும்.

அலங்காரம் செய்யப்பட்ட பெண் சபையினரை வந்து வணங்குவாள். பிறகு, மாப்பிள்ளை உள்ளிட்ட அனைவருக்கும் காலத்திற்கேற்பக் காப்பி, டீ, மோர், குளிர்பானம் என ஏதாவது ஒன்றைக் கொடுக்கின்றாள். அப்போது மணம் செய்து கொள்ள இருக்கும் ஆணும் பெண்ணும் ஒருவருக்கொருவர் இருவரும் பார்த்துக் கொள்கின்றனர். பிறகு, பெண் உள்ளே சென்றுவிடுகிறாள். பெரியோர்கள் சபையில், ''பெண் பிடித்துள்ளதா? பிள்ளை பிடித்துள்ளதா?'' என்று கேட்கும்போது பிடித்திருப்பின் வெளிப்படையாகக் கூறப்படுகிறது. பிடிக்காத பட்சத்தில் பிள்ளை வீட்டார் ''போய் சொல்லியனுப்புகின்றோம்'' என்றும் பெண் வீட்டார் ''சொல்லியனுப்புகின்றோம் போய் வாருங்கள்'' என்றும் கூறுகின்ற வழக்கம் காணப்படுகிறது. 'பிடிக்கவில்லை' என்று நேரடியாகக் கூறும் மரபு காணப்படவில்லை. இரு வீட்டாருக்கும் பிடித்திருக்கும் பட்சத்தில் மாப்பிள்ளை

வீடு பார்க்க அங்கேயே நாள் பார்க்கப்படுகிறது. இதுவும் ஒரு வளர்பிறை நன்னாளிலே நடைபெறுகிறது.

மாப்பிள்ளை வீட்டார் ஒற்றைப் படையில் வந்தது போன்றே பெண் வீட்டாரும் வருகின்றனர். பெண் உடன் வரும் மரபில்லை. பெண் வீட்டாரும் பூ, பழம், தாம்பூலம் என வாங்கி வருகின்றனர். பெண் கொடுப்பது என்பது உறுதி செய்யப்படாதவரை ஒருவர் வீட்டில் ஒருவர் எவ்வளவு நெருங்கிய உறவினராக இருந்தாலும் கை நனைப்பதில்லை (உணவு உண்பதில்லை). ஒப்புத் தாம்பூலம் மாற்றிய பின்னரே கை நனைக்கின்ற வழக்கம் காணப்படுகிறது.

### 5.5.4. வரதட்சணை பேசுதல்

''பெரும் பணம் கொடுத்து மாப்பிள்ளை தேடும் பெருநோய் இன்று இம்மக்களிடத்தும் தலைகாட்டத் தொடங்கியுள்ளது. பெண்ணுக்கோ ஆணுக்கோ பணம் கொடுக்கும் மாட்டுச் சந்தை பேரம் அரசாணைக்கு அஞ்சி மறைமுகமாக நடப்பதாகத் தெரிகிறது''[21]. ''செல்வராக உள்ள ஒருசிலர் படித்த மாப்பிள்ளையைத் தேடித் தாமாகப் பெண் கொடுக்கப் போகும் வழக்கம் இப்போது சில்லாண்டுகளாகத் தோன்றிவிடுகிறது''[22]. இதுபோன்ற நடப்பியல் சூழலில் வள்ளுவர் சமூகத்தில் பெண்வீட்டாரும் பிள்ளைவீட்டாரும் ஒருவருக்கொருவர் தம்மைவிட அதிக வசதி அல்லது இணையான வசதி உள்ள இடங்களில்தான் சம்பந்தம் செய்துகொள்ள விரும்புகின்றவர்களாக உள்ளனர். மாப்பிள்ளை பெண் பிடித்துவிட்ட நிலையில் வரதட்சணை பேசப்படுகிறது. சில மாப்பிள்ளை, வீட்டார்கள் வெளிப்படையாக ''இவ்வளவு பவுன் போடுங்க'' என்று கேட்பதும் காணப்படுகிறது. சிலர் முழுமனத்துடன் 'பவுன் வேண்டாம்' என்று கூறுவதில்லை. பெண் வீட்டார் இவ்வளவு செய்வார்கள் என்று அவர்களது வசதியைக் கருத்தில் கொண்டு 'உங்கள் விருப்பம்', 'பெண் கொடுத்தால் போதும்' என்றும் பேசும் பொய்யான நிலையும் காணப்படுகிறது. பெண்வீட்டாரும் மாப்பிள்ளையின் நிலையையும், அவர் வீட்டு வசதியினையும் கருத்தில் கொண்டே பவுன் போட முன்வருகின்றனர்.

---

[21]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 425.

[22]. மேலது, ப. 425.

“மாப்பிள்ளைக்கு வரதட்சணை கொடுத்துப் பெண்ணை அளிக்கும் ‘கன்னிதான முறை’ இந்நாட்டு மக்களிடம் இல்லை. அதற்கு மாறாகப் பெண்ணுக்குப் பரியப் பணம் கொடுத்துக் கட்டிக் கொள்வதே இந்நாட்டு வழக்கம்”[23]. வயதான வள்ளுவப் பெண்கள் தனக்கு மாப்பிள்ளை வீட்டார் இவ்வளவு பவுன் போட்டுக் கட்டிக்கொண்டு வந்தார் என்று கூறுவதன்மூலம் வள்ளுவர் சமூகத்தில் பெண்களுக்குப் பவுன் போட்டு மாப்பிள்ளை வீட்டார் கட்டி வரும் மரபு இருந்துள்ளது தெரியவருகிறது. இன்று பெண் வீட்டாராகப் பவுன் போட்டுப் பெண்ணைக் கட்டிக்கொடுக்கும் மரபு மாறிய நிலை காணப்படுகிறது.

### 5.5.5. ஒப்புத் தாம்பூலம் மாற்றுதல்

மாப்பிள்ளை – பெண் இருவீட்டாரும் வரதட்சணை உள்ளிட்ட அனைத்திலும் உடன்பாடு ஏற்பட்ட நிலையில் மாப்பிள்ளை வீட்டார் கொள்வதையும், பெண் வீட்டார் கொடுப்பதையும் உறுதி செய்யும் பொருட்டு ஊரார் முன்னிலையில் ஒருவருக்கொருவர் தாம்பூலம் மாற்றிக் கொள்வதால் இதனை ‘ஒப்புத் தாம்பூலம்’ எனக் குறிப்பிடுகின்றனர் எனலாம். இந்நிகழ்வு பெண் வீட்டில் நடைபெறும்.

“பெண் முடிவானதும் பிள்ளை வீட்டாரும், பெண் வீட்டாரும் ஊரார் ஒருசிலரும் சேர்ந்து பெண் வீட்டில் ‘தாம்பூலம் மாற்றுதல்’ என்னும் நிகழ்வினை நடத்துவர். பெண் அமர்த்தியாயிற்று என்பதை அறிவிக்கும் முதல் விழா இது. பின்னர் சிலநாள் கழித்து உற்றார், உறவின் முறையார், ஊரார் பலரும் அறிய விரிவான முறையில் ‘பரியம் போடுதல்’ என்னும் நிகழ்ச்சி பெண் வீட்டில் நடைபெறும். நிச்சயதார்த்தம், திருமண உறுதி என்றெல்லாம் சொல்வது இந்த இரண்டாவது விழாவைத்தான்”[24].

### 5.5.6. நிச்சயச் சேலை எடுத்தல்

நிச்சயதார்த்தம் பெரும்பாலும் வளர்பிறை நன்னாளில் நடைபெறுகிறது. முந்தைய நாட்களில் நிச்சயதார்த்தம் பெண் வீட்டில் நடக்கும். வசதிகள்

---

[23]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 425.

[24]. மேலது, ப. 427.

பெருகிவிட்ட இன்றைய நிலையில் திருமண மண்டபங்களில் நடைபெறுகின்றன. இந்த நிச்சயதார்த்தத்தை முன்னிட்டுப் பெண்ணிற்குப் பட்டுப்புடைவை எடுக்க இருவீட்டாரும் செல்லும் வழக்கம் காணப்படுகிறது. பெண் உடன் செல்லும் வழக்கம் இல்லை. களப்பகுதி மக்கள் புதுச்சேரி, கடலூர், சிறுவந்தாடு, காஞ்சிபுரம் ஆகிய ஏதேனும் ஓர் ஊரில் பட்டுப்புடைவை எடுக்கின்றனர். பிள்ளை வீட்டாரின் வசதிக்கேற்பப் பெண்வீட்டார் நிச்சயச் சேலையைத் தேர்வு செய்கின்றனர். இது மூன்றாயிரம் முதல் பதினைந்தாயிரம் வரையில் எனக் களப்பகுதியில் நடைமுறையில் உள்ளது. உடன் பரியப் புடைவையும் இரண்டாயிரம் முதல் ஐந்தாயிரத்திற்குள் எடுக்கப்படுகிறது. இந்த இரு புடைவைகளுக்கான (இரவிக்கை) ஜாக்கெட், உள்ளாடைகள் அனைத்தும் எடுக்கப்படுகின்றன. எடுத்தபின்னர் பசித்த வயிற்றுடன் செல்லக்கூடாது என்பதற்காக அனைவருக்கும் சாப்பாடு வாங்கித் தரப்படுகிறது. இந்த அனைத்துச் செலவுகளும் மாப்பிள்ளை வீட்டாருடையவை. பெண்வீட்டார் மாப்பிள்ளைக்குக் ‘கோட்டு சூட்’ அல்லது ‘பேன்ட் சட்டை’ வாங்கித் தரும் வழக்கமும் சில ஆண்டுகளாகக் காணப்படுகிறது.

### 5.5.6.1. தட்டு வரிசை வைத்தல்

வள்ளுவச் சமூகத்தில் பெரும்பான்மையான நிச்சயதார்த்தங்கள் மாலை ஆறு மணிக்கு மேல் நடைபெறுகின்றன. பிள்ளை வீட்டார் பெண் வீட்டிற்கோ அல்லது மண்டபத்திற்கோ வருவதற்குமுன் அருகில் உள்ள ஏதேனும் ஒரு கோயிலில் இருந்து புறப்படுவது வழக்கம். பெண்வீட்டினர் அமர்ததிய தவில், நாதஸ்வரம் இசைக்க ஒன்பது, பதினொன்று என ஒற்றைப் படையில் தட்டுக்களில் பூ, மாலை, சடைப்பில்லை, நிச்சயப் புடைவை, தங்க நகை, பழவகைகள், இனிப்புகள், தேங்காய், வெற்றிலைப் பாக்கு என மங்களகரமான பெண்கள் கொண்டுவர ஆண்கள் பின்னே வருகின்றனர். பெண்வீட்டினை அல்லது மண்டபத்தை அடையும்போது பெண்வீட்டார் பிள்ளை வீட்டாரை இரு கைகள் கூப்பி வணங்கி வரவேற்கின்றனர். தட்டு வரிசைகள் அனைத்தும் சபையினர் முன் வைக்கப்படுகின்றன. ஊரார், உறவினர்களில் பெரிய மனிதர்கள் முன்னமர்ந்து நிச்சயதார்த்தத்தை நடத்துகின்றனர். முன்பெல்லாம் தட்டு வரிசைகளை மதிப்பீடு செய்யும் வழக்காறு இருந்தது. இன்றைய நிலையில் காணப்படவில்லை.

### 5.5.6.2. புரோகிதர் பெண்ணிற்குச் சேலை வழங்குதல்

உறவினர்களில் யாரேனும் ஒருவர் புரோகிதராக அமர்த்தப்படுகிறார். அவர் குத்துவிளக்குகள், நல்விளக்கு ஆகியவற்றிற்குப் பூப் போட்டுத் தீபம் ஏற்றி விநாயகர் பாடல்கள் பாடி வழிபடுகின்றார். தட்டு வரிசைகளின் மீதும் அட்சதை போடப்படுகிறது. பட்டுச்சேலையில் மஞ்சள் தடவி, மாலை, சடைப்பில்லை இவற்றை ஒரே தட்டில் வைத்துக்கொண்டு பெண்ணை அழைக்கின்றார். பெண் சபையோரை வணங்கியதும், அத்தட்டை மாப்பிள்ளை வீட்டாரில் மூத்தவர் அல்லது முக்கியஸ்தரை அழைத்து அவரின் கையால் கொடுக்கச் சொல்கின்றார். பெண் அவரிடம் ஆசிர்வாதம் பெற்று வாங்கிச் செல்கிறாள். புரோகிதர் அப்போது தமிழிலும், சமஸ்கிருதத்திலும் சில மந்திரங்களைக் கூறிக்கொண்டே இருப்பார். பெண் அலங்காரம் செய்துகொண்டு மீண்டும் சபையில் வந்தமர்வாள்.

### 5.5.6.3. அம்மானகள் தட்டு மாற்றிக் கொள்ளுதல்

‘‘திருமணம் தொடர்பான நிகழ்ச்சிகளில் அம்மான் மிகவும் இன்றியமையாதவர். தொடக்கத்திலிருந்து இறுதிவரை அம்மானைக் கேட்காமல் எதுவும் செய்யக்கூடாது. பெரிய விழாவிலோ, திருமண விழாவிலோ அம்மான்தான் வரிசை எடுத்து வைக்க வேண்டும். அன்பளிப்பிலும் அம்மானது அன்பளிப்புதான் முதலில் கொடுக்கப்பட வேண்டும். இவ்வாறு முன்பு சர்வாதிகாரிகளாக இருந்த அம்மான்கள் இப்போது சனநாயகவாதிகளாக மாற்றப்பட்டு வருகிறார்கள்’’[25] என்றாலும் வள்ளுவர் சமூகத்தில் இன்றளவும் அம்மான்களுக்கே முதலிடம் தரப்படுகிறது.

மாப்பிள்ளை, பெண்ணின் அம்மான்கள் வடக்கு, தெற்காக ஒருவரை ஒருவர் பார்த்தபடி கைக்கு எட்டும் தூரத்தில் சபையில் அமர்கின்றனர். அம்மான் இல்லாதபட்சத்தில் மாமன் முறையினரில் யாரேனும் ஒருவர் அம்மானாக அமர்வது வழக்கம். மாப்பிள்ளையின் அம்மான் பெண்ணின் அம்மானுக்கு இரு முழங்கைகளிலும் சந்தனம் தடவி நெற்றியிலும் திலகமிட்டுக் கழுத்தில் பூமாலை போட்டு இருகைகள் கூப்பி வணங்குகிறார். பெண்ணின் அம்மானும் மாப்பிள்ளையின் அம்மானுக்கு அவ்வாறே செய்து வணங்குகிறார். மாப்பிள்ளையின் அம்மான் ஒரு பெரிய தாம்பாளத்தில் வெற்றிலைப் பாக்கு, பூ,

[25]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 428.

பழம், தேங்காய், பரியப் பணம், மோதிரம் (பெண்ணிற்கு) ஆகியவற்றை வைத்துக் கொடுக்கின்றார். கொடுக்கும்போது ‘பொன் உங்களுடையது பெண் எங்களுடையது’ என்று மூன்றுமுறை உரக்கக் கூறுகின்றார். பெண்ணின் அம்மானும் தட்டை வாங்கும்பொழுது “பொன் எங்களுடையது பெண் உங்களுடையது” என்று மூன்று முறை கூறியபடியே வாங்கிக் கொள்கிறார்.

இவ்வாறு தட்டு மாற்றிக் கொண்டதும் புரோகிதர் மாப்பிள்ளையின் முகவரி, குலம், கோத்திரம் இவற்றைக்கூறி இன்னாரது பேரனும், இன்னாரது மகனுமாகிய இன்னாருக்கு, பெண்ணின் முகவரி, குலம், கோத்திரம் இவற்றைக்கூறி இன்னாரது பேத்தியும், இன்னாரது மகளுமாகிய இன்னாரைப் பரியாளாக்கிக்கொள்ளப் பெரியோர்களால் நிச்சயிக்கப்படுகிறது. ‘இதுவே நிச்சயம் இதுவே பரியம்’ என்று மூன்றுமுறை சபையில் கூறுகிறார். காலங்காலமாக வள்ளுவச் சமூகத்து மக்களிடம் வாக்கிற்கு முக்கியத்துவம் அளிப்பது காணப்பட்டது. வாக்கு மாறுவது என்பது கிடையாது. எனவே, இவ்வாறு வாய்மொழியாகவே உறவினர் முன்னிலையில் திருமண ஒப்பந்தமாகிய நிச்சயதார்த்த உறுதிமொழி நடைபெறுகிறது. இன்றைய நிலையில் ஒருசில இடங்களில் இந்த நிச்சயதார்த்த உறுதிமொழி இரு பிரதிகள் எழுதப்பட்டு இருவீட்டாரும் கையொப்பம் இட்டு, இருதரப்பிலும் சாட்சிகள் கையொப்பமிட்டுப் படித்துக் காண்பிக்கின்ற நிலை காணப்படுகிறது.

### 5.5.6.4. முலைப்பால் கூலி

பரியப்பணம் பெறுவதுபோல் “முலைப்பால் கூலி என்னும் பெயரில் பெண்வீட்டார் பெண்ணுக்கென ஏதேனும் பணம் வாங்குவது பெருமையாகக் கருதப்படுகிறது”[26]. இந்தச் சிறுதொகை பெண்ணிற்குப் பாலூட்டி வளர்த்தமைக்காக மணமகன் மணமகளின் தாய்க்குக் (மாமியாருக்கு) கூலியாகக் கொடுப்பது மரபாகும். இப்பணம் பெண்ணின் தாய்க்கு உரியதாகிறது.

### 5.5.6.5. மாப்பிள்ளை பெண்ணுக்குக் கணையாழி அணிவித்தல்

வள்ளுவர் சமூகத்தில் முற்காலத்தில் மாப்பிள்ளை தாலிகட்டும் வரை பெண்ணைப் பார்க்கும் வழக்கமில்லை. அதனால் நிச்சயதார்த்தம்

[26]. ச. இராமச்சந்திரன், வயது. 60, களையூர், கடலூர் மாவட்டம்.

செய்வதற்குக்கூட மாப்பிள்ளை செல்வதில்லை. கால மாற்றத்தால் இந்தக் கணையாழி அணிவிப்பதெல்லாம் நடக்கின்றது என்ற செய்தி தெரியவருகிறது. மரபு மாறாமல் பெண்ணிற்கு மாப்பிள்ளையின் அண்ணன் (மூத்தார்) முதலில் பொட்டு வைக்கின்றார். மாப்பிள்ளைக்கு அண்ணன் இல்லாத நிலையில் மாப்பிள்ளை வீட்டார் சார்பாக யாரேனும் ஓர் ஆண் பொட்டு வைப்பது வழக்கம். அதன்பின்னரே மாப்பிள்ளை பெண்ணிற்கு மோதிர விரலால் குங்குமம் வைத்து மோதிரம் (கணையாழி) போடுகின்றார். அதுவரையில் மாப்பிள்ளை, கழுத்தில் பூ மாலை அணிந்து நாற்காலியில் அமர்ந்தே இருப்பது வழக்கம். கழுத்தில் பூமாலை அணிவது மாப்பிள்ளை என்ற அடையாளத்தைக் காண்பிப்பதற்காகவே ஆகும். இன்றைய நிலையில் இந்த நிச்சயதார்த்த நிகழ்வுகள் அனைத்தும் வீடியோவாகவும் புகைப்படமாகவும் பதிவு செய்யப்படுகின்றன. நிச்சயதார்த்தம் முடிந்ததும் அனைவருக்கும் பெண்வீட்டார் சார்பாகச் சைவ சாப்பாடு பரிமாறப்படுகிறது. அதன்பின்னர் அனைவருக்கும் தாம்பூலம் கொடுக்கப்படுகிறது. மாப்பிள்ளை வீட்டாருக்குக் கொடுக்கும் தாம்பூலத்தை ‘வழித் தாம்பூலம்’ என்கின்றனர்.

### 5.5.7. முகூர்த்த நாள் குறித்தல்

திருமணத்திற்கு நாள் குறிப்பதையே ‘முகூர்த்த நாள்’ என்கின்றனர். இதனை இருவீட்டாரும் சேர்ந்தே முடிவுசெய்கின்றனர். முகூர்த்த நாள் குறிக்கும்போது பெண்ணின் மாதவிடாய் நாட்களைக் கருத்தில் கொண்டு குறிப்பது அவசியமாகத் தெரிகிறது. மாதவிடாய்க் காலத்தில் மனையேறுதல் கூடாது என்பது வள்ளுவர்களின் வழக்காறாக உள்ளது. இவர்கள் வளர்பிறையில் சுபமுகூர்த்த தினத்தில் மட்டுமே திருமணத்திற்கு நாள் குறிக்கின்றனர். தேய்பிறையில் திருமணத்திற்கு நாள் குறிப்பதில்லை. ‘‘திருமணம் தை, சித்திரை, வைகாசி, ஆணி, ஆவணி ஆகிய ஐந்து திங்கள்களிலேயே நடைபெறும். இப்போது எல்லா இனத்தவரிலுமே எல்லாத் திங்கள்களிலும் திருமணம் நடத்தத் தொடங்கிவிட்டனர்’’[27]. ஒருசில திருமணங்கள் வளர்பிறையில் சுபமுகூர்த்த நாள் இல்லாத நிலையிலும் யோகம், நேத்திரம், ஜீவன் ஆகியவை சரியாக இருந்தால் அன்றும் நடைபெறுவது உண்டு. இதனை ‘எடுத்து வைத்த முகூர்த்தம்’, ‘கூட்டிய முகூர்த்தம்’ என்று அழைக்கின்றனர். திருமணத்திற்கு நாள்

---

[27]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 427.

குறித்ததும் பத்திரிகை எழுதி அதில் மஞ்சள் பூசி நடுவீட்டில் வைத்துப் படைத்து அதன்பின்னரே அச்சிடப்படுகின்றது. தற்போதெல்லாம் மண்டபம் கிடைப்பது அரிதாகிவிட்டதால் முகூர்த்தம் குறித்த பின்னர் நிச்சயம் செய்யும் நிலையே அதிகம் காணப்படுகிறது.

பத்திரிகையில் உறவினர்களின் பெயர்கள் இடம்பெறுகின்றன. முதலில் அம்மான்கள் பெயர்களும் பிறகு மற்றவர்களின் பெயர்களும் இடம்பெறும். அவர்களின் பெயர்களுடன் ஆழ்வார், நாயனார் என்று சமயப் பிரிவுகளை உணர்த்தும் சொற்களும் இடம்பெறுவதுண்டு. வள்ளுவர்களின் திருமணப் பத்திரிகைகளில் முன்பெல்லாம் மணமகன், மணமக்களின் பெற்றோர், மணப்பெண் ஆகிய மூன்று நபர்களின் பெயர்களே பெண்கள் சார்பாக இடம்பெறும். இன்றைய நிலையில் அவ்வாறில்லாமல் உறவினர்களின் பெயர்ப்பட்டியலிலும் பெண்கள் பெயர்கள் இடம்பெற்றுவரும் நிலை காணப்படுகிறது.

### 5.5.8. பத்திரிகை (அழைப்பிதழ்) வைத்தல்

பத்திரிகை அச்சானதும் வீட்டிற்குக் கொண்டுவந்து பொங்கல், வடை, பாயாசம் செய்து உடன் பங்காளிகளை அழைத்துக் குலதெய்வத்திற்கு வெற்றிலைப் பாக்கு, பழம், பூ, தேங்காய் இவற்றுடன் படையல் போட்டு அதனுடன் பத்திரிகைகளை வைத்துப் படைத்து வணங்கி வழிபடுகின்றனர். இதனைப் பத்திரிகை படைத்தல் என்றழைக்கின்றனர். இது ‘குலதெய்வத்திற்கு முதலில் பத்திரிகை வைத்து விட்டோம்’ என்ற நம்பிக்கையின் வெளிப்பாடாகத் தெரிகிறது.

“முற்காலத்தில் திருமணத்திற்கு இதுபோன்று பத்திரிகைகளெல்லாம் அச்சிட்டு அழைத்ததில்லை. வெற்றிலைப் பாக்கு, பழம், பூ இவற்றைத் தாம்பாளத்தில் வைத்துத் திருமணம் இன்ன தேதியில் என்று தமிழ்த் தேதியை மட்டுமே கூறி, குடும்பத்துடன் வரவேண்டும் என்று வாய்மொழியாகவே அழைக்கும் மரபு இருந்தது. காலச்சூழலில் இன்று சற்று மாற்றம் பெற்றுள்ளது”[28]. எனினும், மரபு மாறாமல் முதல் பத்திரிகையை அம்மானுக்கு வைக்கும் வழக்கம் இன்றும் காணப்படுகிறது. “திருமண வீட்டார், ஊரார்,

[28]. பூ. பூங்காவனம், வயது. 65, சேமக்கோட்டை, பண்ருட்டி வட்டம்.

உறவினருக்கு வெற்றிலைப் பாக்குத் தாம்பூலம் வைத்துத் திருமணத்திற்கு அழைப்பர். கொண்டான் கொடுத்தார்கட்கு (சம்பந்திகட்கு) சிறப்புத் தாம்பூலம் வைக்க வேண்டும். இதற்குச் 'சம்பந்தித் தாம்பூலம்' என்று பெயர்''[29]. அதன்பின்னரே பிற உறவினர்களுக்கு வைக்கும் வழக்கம் உள்ளது. பெண்வீட்டாருக்கும் சிலநூறு பத்திரிகைகளைத் தம் செலவில் அச்சிட்டுக் கொடுக்கும் வழக்கம் வள்ளுவச் சமூகத்தவரிடம் இருந்து வருகிறது.

### 5.5.9. நெல்லு போடுதல், கால் நடுதல்

திருமணத்திற்கு ஏழு, ஐந்து அல்லது மூன்று நாட்களுக்கு முன்னர் மரணயோகம் அல்லாத சுபயோக சுபதினத்தில் அதிகாலை 4.30 மணி முதல் 6.00 மணிக்குள்ளாக சூரிய உதயத்திற்கு முன்னர் நெல்லு போடுதல், கால் நடுதல் ஆகிய சடங்குகள் நடைபெறுகின்றன. இதனை 'முகூர்த்தக்கால் நடுதல்', 'பந்தக்கால் நடுதல்' என்றும் அழைப்பதுண்டு.

''திருமணப் பந்தல் போடுவதற்காக நல்லநாள் பார்த்துக் 'கால் நடுதல்' என்னும் நிகழ்ச்சி நடத்துவர். திருமங்கலிகள் ஐவர் கூடிக் கால் நடுவர். பின்னர், வீட்டிலும் வெளியிலும் பந்தல் போடப்படும். பந்தல் முகப்பில் குலை உடைய வாழை மரங்கள், தென்னங்குலைகள், ஓலைக் கொடிகள் முதலிய மங்களப் பொருட்கள் கட்டப்படும். தரையில் புதுமணல் பரப்பப்பெறும்''[30].

அம்மான் உள்ளிட்ட மிக நெருக்கமான உறவினர்கள் இரவே வந்துவிடுகின்றனர். அதிகாலை 4.00 மணியளவில் வீட்டைக் கழுவிச் சுத்தம் செய்கின்றனர். நடுவாசலில் சதுர வடிவில் பசுவின் சாணத்தால் தரைமெழுகி அதன்மீது மாக்கோலமிடுகின்றனர். இருபுறங்களிலும் குத்துவிளக்குகள் ஏற்றப்பட்டு, நடுவில் நல்விளக்கும் ஏற்றப்படுகிறது. வள்ளுவப் புரோகிதர் வடக்குப்பக்கம் பார்த்தவாறு மனையின் மீது அமர்கிறார். அனைத்து விளக்கிற்கும் பூப் போடப்படுகிறது. கிழக்குமுகம் பார்த்தவாறு மஞ்சளில் பிள்ளையார் பிடித்துவைத்துச் சடங்குகளை ஆரம்பிக்கின்றார் புரோகிதர். பிள்ளையாருக்கு அருகம்புல் செருகி வெற்றிலைப் பாக்கு, வாழைப்பழம், தட்சணையாகப் பணம் வைப்பதுடன், வாழை இலையில் பச்சரிசி பரப்பி

---

[29]. சுந்தர சண்முகனார். கெடிலக்கரை நாகரிகம், ப. 427.

[30]. மேலது, ப. 427.

அதன்மீது கலசம் வைக்கின்றார். கலசத்தின் எதிரில் (கிழக்கில்) கழுவிய ஒரு பெரிய பானையை வாழை இலை மீது பச்சரிசி பரப்பி அதன்மீது வைக்கின்றனர். பானைக்கும் பூப் போடப்படுகிறது. மாப்பிள்ளை குளித்து வெண்மையான ஆடை அணிந்து அழைத்து வரப்படுகிறார் (மேலாடை அணியும் வழக்கம் இல்லை). கலசத்திற்கு மேற்கில் நெல்பரப்பி அதன்மீது மனை போடப்படுகிறது. அம்மனையின் மீது வெண்மையான ஆடையை வண்ணார் சமூகத்தவர் போடுகின்றார். அதன்மீது கிழக்கு முகம் பார்த்தவாறு மாப்பிள்ளை உட்கார வைக்கப்படுகின்றார்.

புரோகிதர் தேங்காய் உடைத்துத் தூபதீபம் காட்டி விநாயகப் பெருமானைப் போற்றிப்பாடி மாப்பிள்ளையை வணங்கச் செய்கிறார். சில வடமொழி (சமஸ்கிருத) மந்திரங்களைக் கூறிப் பிள்ளையார் மீதும் கலசத்தின் மீதும் அட்சதையைப் போடுகின்றார். மஞ்சளில் நனைத்த நூலில் வெற்றிலையை மடித்து, அதனுடன் கொம்பு மஞ்சளும் வைத்துக் கட்டி மாப்பிள்ளையின் வலக்கரத்தில் புரோகிதர் கட்டுகின்றார். இதனைக் ‘காப்பு கட்டுதல்’ என்கின்றனர். மற்றொரு காப்பு மாப்பிள்ளையால் பானைக்குக் கட்டப்படுகிறது. காப்புக் கட்டும்பொழுது பானைக்குத் தூபதீபம் காட்டப்படுகிறது. பானைக்குக் காப்புக் கட்டியதும் மூங்கிலால் செய்யப்பட்டு நன்கு மெழுகிய மூன்று முறங்களில் ஒவ்வொன்றிலும் மூன்று பெரிய படி அல்லது முத்தரப்படி (முத்திரைப்படி) ஆக ஒன்பதுபடி விதை நெல் கொண்டுவரப்படுகிறது. மூன்று முறங்களில் உள்ள நெல்மணிகள் மீதும் வேப்பிலை, மாவிலை, மஞ்சள்தூள் ஆகியவை புரோகிதரால் போடப்பட்டுச் சில மந்திரங்கள் ஓதப்படுகின்றன. அதன் பின்னர் மங்கலீஸ்திரி (கணவனுடன் இல்வாழ்க்கை நடத்துபவர்) என்று சொல்லக்கூடிய பிள்ளைகளைப் பெற்ற கைராசியுள்ள மூன்று பெண்கள் நன்கு குளித்துவிட்டு வருகின்றனர். இவர்கள் மூவரும் புரோகிதரை வணங்கி அவரிடம் திருநாமம் அல்லது திருநீறு அணிந்துகொண்டு ஒவ்வொருவரும் ஒரு முறத்தை எடுத்து அதிலுள்ள நெல்மணிகளைப் பானையில் சிதறாமல் கொட்டுகின்றனர். அப்பொழுது புரோகிதரால் சில மந்திரங்களும், தவில், நாதஸ்வர மங்கள ஒலிகளும் முழங்குகின்றன. அதன்பின்னர் அப்பானை மேலும் தூயநீரால் (நன்னீரால்) நிரப்பப்படுகிறது. இந்நிகழ்வே ‘நெல்லு போடுதல்’ என்றழைக்கப்படுகிறது.

நெல்லு போட்டு முடிந்தவுடன் வாசலின் சனிமூலையில் கால் நடுவதற்குப் பள்ளம் (குழி) தோண்டப்படுகிறது. அப் பந்தக்கால் பள்ளத்தருகில் மஞ்சளில்

பிள்ளையார் பிடித்து வைத்து, அருகம்புல் செருகி, வெற்றிலைப் பாக்கு, வாழைப்பழம், தட்சணைப் பணம் வைத்துத் தூபதீபம் காட்டி வணங்குகின்றனர். ஒன்பது அடிநீளமுள்ள பச்சை மூங்கிலைக் கணுக்கள் இல்லாமல் சீவுகின்றனர். ஒன்பது மங்கலீஸ்திரீப் பெண்களைக் குளித்துவிட்டு வரச்சொல்கின்றனர். அவர்களுக்குத் திருநாமமோ அல்லது திருநீறோ புரோகிதர் போடுவார். குங்குமம் கொடுக்கப்பட்டு அவர்களே இட்டுக் கொள்வர். ஒன்பதடி நீள மூங்கிலை ஒன்பது பெண்களும் வரிசையாக நின்றுகொண்டு கிழக்கு மேற்கு வாக்கில் பிடித்துக் கொள்வர். புரோகிதர் தண்ணீர் ஊற்றுவார். பெண்கள் மூங்கிலைக் கழுவுவார்கள். கழுவும்போது மரையில்லாமல் (இடைவெளி இல்லாமல் முழுவதுமாக) கழுவுவது முக்கியமானதாகும். அதன்பின்னர் புரோகிதர் மஞ்சள், குங்குமம் கொடுக்க, பெண்கள் மஞ்சள் பூசி, பொட்டு வைக்கின்றனர். அதன்பின்னர் மாப்பிள்ளையால் மூங்கிலின் உச்சியில் மாங்கொத்துக் (மாவிலைக் கொத்து) கட்டப்படுகிறது; காப்பும், துண்டும் கட்டப்படுகின்றன. புரோகிதர் சில மந்திரங்களை உச்சரித்துக்கொண்டே பந்தக்கால் பள்ளத்தில் தட்சணைப் பணம், சிறிது நெல்மணிகளைப் போட்டு, அதனுள் கற்பூரம் ஏற்றி வைத்து அனைவரையும் வணங்கச் செய்கின்றார். பின்னர் கெட்டிமேளம் ஒலிக்கப் புரோகிதர், மாப்பிள்ளை ஒன்பது மங்கலீஸ்திரிகள் அனைவரும் காலை (மூங்கிலை) அப்பள்ளத்தில் நடுகின்றனர். இதுவே, கால்நடும் முறையாக இருந்து வருகிறது. பெண் வீட்டில் நெல்லு போடுதல், கால் நடுதல் ஆகியச் சடங்குகள் இல்லை. மாப்பிள்ளை வீட்டில் கால்நட்ட பின்னரே பெண் வீட்டில் பந்தல் போட்டுப் பெண்ணுக்கு நலங்கு வைக்கப்படுகிறது.

### 5.5.9.1. அம்மான் நலங்கு

நலங்கு வைப்பதிலிருந்தே திருமணச் சடங்குகள் தொடங்குகின்றன. மணமகன் இல்லத்தில் நெல்லு போடுதல், கால் நடுதல் ஆகிய நிகழ்வுகள் நடைபெறுகின்றன. மணமகளுக்கும் மாப்பிள்ளை வீட்டில் முதல் நலங்கு நடைபெறும் அன்றே நடைபெறுவது வழக்கம். இருவீடுகளிலும் முதல் நாள் நலங்குச் செலவுகள் அனைத்தும் அவரவர் அம்மான்களுக்குரியவையாகும். எனவே, இந்த முதல் நலங்கினை ‘அம்மான் நலங்கு’ என்று அழைக்கின்றனர். மணமகளுக்கும் மணமகனுக்கும் மங்கிலீஸ்திரிப் பெண்களே நலங்கு வைக்கும் மரபு காணப்படுகிறது. பிள்ளைகுட்டிகளைப் பெற்று எல்லா நலன்களையும் வளங்களையும் பெற்ற மங்களப் பெண்மணியே முதலில் நலங்கு வைக்கின்றார்.

முதலில் நல்விளக்கிற்கும், பிடித்து வைத்துள்ள மஞ்சள் பிள்ளையார்க்கும் பொட்டு வைத்தபிறகே மணமகனுக்குப் பொட்டு வைக்கின்றார். அதன்பிறகு எண்ணெய்க் கிண்ணத்தில் உள்ள நல்லெண்ணெய்யை அருகம்பில்லால் (புல்லால்) தொட்டுத் தலையில் தடவுகின்றனர். கன்னம், கைகள், முதுகு, மார்பு ஆகிய பகுதிகளில் அரைத்து வைத்துள்ள சந்தனம், பைத்தம்பருப்பு ஆகியவை தடவப்படுகின்றன. குழவியைக் கைகளில் கொடுத்துப் பன்னீர் தெளித்து, அட்சதை போட்டு, மணமகன் ஆசீர்வதிக்கப்படுகிறார். இவ்வாறு ஒன்பது, பதினொன்று, பதின்மூன்று, பதினைந்து, அதிகபட்சமாக இருபத்தொன்று என்ற எண்ணிக்கை அளவில் ஒற்றைப் படையில் நலங்கு வைக்கப்படுகிறது. இரட்டைப் படையில் நலங்கு வைப்பதில்லை. நலங்கு வைக்கும் பெண்கள் அனைவருக்கும் ஒரு தட்டில் மஞ்சள், குங்குமம், சீப்பு, கண்ணாடி, இரவிக்கைத் துணி, வெற்றிலைப் பாக்கு, பழம், பூ, மிட்டாய் இவை வைத்துத் தட்டுடன் கொடுக்கப்படுகிறது. ஊர்ப் பெரியவர் அல்லது தங்கள் இனத்தின் தலைமையான ஒரு நபரின் கையால் எடுத்துக் கொடுப்பது வழக்கமாக உள்ளது. மீதமுள்ள அனைவருக்கும் தாம்பூலம் வழங்கப்படுகிறது.

நலங்கு வைக்கும்பொழுது மணமகளின் மைத்துனன் முறையினரான ஒருவர் மாப்பிள்ளைத் தோழனாக உடனிருப்பார். அவர் மணமகன் முகத்தில் வியர்வை வழியாதவாறு துடைத்துவிடுவார். கடைசியாக நலங்கு வைக்கும் பெண் மணமகனுக்கு ஆரத்தி எடுத்து நலங்கினை முடிப்பார். மணமகன் குளித்துவிட்டு வந்ததும் தாய்மாமன் புத்தாடையைச் சாமியிடம் வைத்துப் படைத்துக் கொடுத்து ஆசீர்வதிப்பார். மணமகன் அவர் காலில் விழுந்து வணங்கிப் பெற்றுக் கொள்வார். அதன்பின்னர் காலை உணவு (சிற்றுண்டி) பரிமாறப்படுகிறது.

மணமகளின் தாய்வழி, தந்தைவழி மாமன், மைத்துனர்கள் இவர்களைத் தொடர்ந்து காலை, மாலை என இருவேளைகளிலும் வேளைக்கு ஓர் உறவினர் மக்களைக் கூட்டி நலங்கு வைப்பார்கள். இவ்வாறே பெண்வீட்டிலும் நலங்கு நடைபெறுவது வழக்கம். அம்மான் நலங்கு முதல் மணநலங்கு வரையில் காலை, மாலை இரு வேளைகளிலும் நலங்கு தொடர்ந்து வைக்கப்படுகிறது. ஒரு வேளைகூட வைக்காமல் நிறுத்தப்படுவதில்லை. நலங்கு வைக்கும் காலங்களில் வள்ளுவர் சமூகத்தில் அசைவ உணவு வகைகள் திருமண வீட்டில் சமைக்கப்படுவதும், உண்ணப்படுவதும் கிடையாது. சைவ உணவுகளை மட்டுமே உண்ணும் வழக்கம் காணப்படுகிறது.

### 5.5.10. முகூர்த்தப் பாக்குக் கொண்டு செல்லுதல்

திருமணத்திற்கு முதல்நாள் பெண் வீட்டிற்கும் பிள்ளை வீட்டிற்கும் இடையே உள்ள தூரத்தைப் பொறுத்துக் காலை அல்லது மதியம் இராகு காலம், எமகண்டம் இல்லாத நல்லநேரத்தில் மாப்பிள்ளை வீட்டார் மூவர் செல்வர். இரு ஆண்கள் ஒரு பெண் அல்லது இரு பெண்கள் ஓர் ஆண் என ஒற்றைப்படையில் செல்வது வழக்கம். இவர்கள் வெற்றிலைப் பாக்கு, பூ, வாழைப்பழம், தேங்காய், இனிப்பு வகைகள், பட்டுப்புடைவை, மாலை ஆகியவற்றைக் கொண்டுசெல்வர். இதற்கு ‘முகூர்த்தப் பாக்கு கொண்டு செல்லுதல்’ என்று பெயர். கொண்டு செல்லும் பொருட்களைப் பெண்வீட்டில் சாமியறையில் (நடுவீட்டில்) வைப்பர். இருவீட்டாரும் ஒருமனத்துடன் இறைவனை வாழ்த்தி வணங்கி, வழிபாடு செய்து, பெண்ணையும் வாழ்த்தி அவளிடம் பூ, மாலை, சேலை ஆகியவற்றைக் கொடுக்கின்றனர். அவள் வணங்கி அதனைப் பெற்றுக்கொண்டு, சேலையை உடுத்தியும், அலங்காரம் செய்து கொண்டும் பெண்வீட்டாருடன் புறப்படுகிறாள். மணப்பெண் தன் வீட்டாருடன் திருமணம் நடைபெற இருக்கின்ற வீடு, கோயில் அல்லது மண்டபம் ஆகியவற்றிற்கு அருகில் உள்ள கோவிலில் வந்து காத்திருக்கின்றனர். முகூர்த்தப் பாக்கு எடுத்துச் சென்ற பிள்ளை வீட்டார் தங்களின் வீட்டாருக்குச் சொல்லிப் பெண்ணை அழைத்துச் செல்வதற்கு வழிவகை செய்வர்.

### 5.5.11. பெண் அழைத்தல்

‘‘திருமண முதல்நாள் மாலை, பெண்வீட்டார் பெண்ணை அழைத்து வந்து சேர்வர். ஊர்க்கோயிலிலோ அல்லது பிள்ளை வீட்டாருக்கு வழக்கமாக ஆகிவந்த ஓரிடத்திலோ பெண்ணைத் தங்கச் செய்வர். பிள்ளை வீட்டார் வரிசைகளுடன் சென்று பெண்ணையும் பெண்வீட்டாரையும் வரவேற்பர். அப்போது நீர்மோர், பானகம் (வெல்லத் தண்ணீர்) முதலியவை வழக்கப்படுதல் மரபு’’[31].

மாப்பிள்ளை வீட்டார் தங்கள் உறவினர்களுடன் ஊர்வல வண்டி, மேள தாளங்கள், ஒன்பது தட்டு வரிசைகளுடன், பானகம் ஆகியவற்றுடன் பெண்ணை அழைக்கக் கோவிலுக்குச் செல்கின்றனர். பெண் வீட்டாரை இருகரம் கூப்பி வணங்கி, ‘‘வருக! வருக!’’ என வரவேற்கின்றனர். தரையில் விரிப்புகளை

---

[31]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 427.

விரித்து இருதரப்பினரும் அமர்கின்றனர். தட்டு வரிசைகள் வைக்கப்படுகின்றன. பனைவெல்லம், வெங்காயம் கலந்து செய்த பானகத்தை அனைவரும் பருகுமாறு கொடுக்கின்றனர். பின்பு கோவிலில் உள்ள தெய்வத்தைத் தூபதீபம் ஏற்றி வணங்கி மணப்பெண்ணை ஊர்வல வண்டியில் அமர வைக்கின்றனர். மேளதாளங்கள் இசைக்க, தட்டுவரிசைகளுடன் திருமணம் நடைபெறுமிடத்திற்குப் (மண்டபம், வீடு, கோயில்) பெண் அழைத்து வரப்படுகிறாள். பெண் அழைப்பின்போது வானவேடிக்கைகள், புகைப்படம், வீடியோ பதிவுகள் நடைபெறுகின்றன. சில பெண் ஊர்வலங்களில் மாப்பிள்ளையும் இணைந்து வருவதுண்டு. பெரும்பான்மையான வள்ளுவர்களின் திருமணங்களில் இவ்வழக்காறு காணப்படவில்லை. பெண் மண்டபம் அல்லது வீட்டிற்கு வந்து இறங்கியதும் வாசலிலே நிறுத்தப்படுகிறாள். மாப்பிள்ளை வீட்டாரில் முதிர்ந்த ஓர் ஆண் தேங்காய் மீது கற்பூரம் ஏற்றி வைத்துப் பெண்ணின் தலையை ஒன்பது சுற்றுச் சுற்றிக் கண்ணாறு (கண்ணேறு) கழித்துத் தேங்காயைச் சூரை (சிதறுகாய் உடைத்தல்) விடுகின்றார். இதனை அடுத்து மாப்பிள்ளை வீட்டுப் பெண் ஒருவர் ஆலம் (ஆரத்தி) எடுக்கின்றார். மற்றொருவர் (மாமியார் அல்லது நாத்தனார்) கைராசியான மங்கலப்பெண் நல்விளக்கினைப் பெண்ணின் கைகளில் கொடுக்கின்றார். பின்னர் மணமகன் பெண்ணிற்கு மாலை அணிவித்து வாயில் சர்க்கரை ஊட்டி வரவேற்கிறாள். பெண் விளக்கு அணையாதவாறு மெல்ல வலக்காலை எடுத்துவைத்து உள்ளே செல்கிறாள். ‘‘கோவிலில் இருந்து பெண் ஊர்வலமாக அழைத்து வரப்பட்டு வீட்டை அடைவாள். பெண் முதல்முதலில் வீட்டு வாயிற்படியில் வலக்காலை வைத்து ஏற வேண்டும். அப்போது பெண்ணின் வாயில் சர்க்கரை கொட்டுவர்’’[32]. பெண்ணழைப்பு முடிந்ததும் அனைவருக்கும் சைவ உணவு வகைகள் இரவு உணவாகப் பரிமாறப்படும். இந்தச் செலவு மணமகள் வீட்டைச் சேர்ந்ததாகும்.

### 5.5.12. தாலி, கூறை படைத்தல்

தாலி மாப்பிள்ளை வீட்டாரின் பணத்தில் எடுக்கப்படுகிறது. அரை பவுன் (4 கிராம்) அல்லது கால் பவுன் (2 கிராம்) என வசதிக்கேற்ப எடுக்கின்றனர். தொப்பைத்தாலி, பட்டைத்தாலி என இருவகைகளை மட்டுமே எடுக்கின்றனர். பொட்டுத் தாலி எடுக்கும் வழக்கம் இல்லை. வள்ளுவ ஆழ்வார்களின் தாலியில் திருநாமமும், நாயனார்களின் தாலியில் பூசையும் பொறிக்கப்பட்டுள்ளன.

---

[32]. சின்னசாமி ஆழ்வார், வயது. 63, ஆண்டிக்குழி, உளுந்தூர்பேட்டை வட்டம்.

திருமணத்திற்கு முந்தைய நாளில் மட்டுமே தாலி எடுக்கின்றனர். அன்று அஷ்டமி, நவமி எனில் அதற்கு முன்னரே எடுப்பது வழக்கம். நீண்ட நாட்களுக்கு முன்னர் எடுத்து வைக்கும் வழக்கம் இல்லை. தாலி எடுப்பதற்கு ஆண், பெண் என மூன்று அல்லது ஐந்துபேர் செல்வது வழக்கம். ஒருசில தலைமுறைகளுக்கு முன்னர் தாலி வாங்க முடியாதவர்கள் பித்தளையில் கட்டியுள்ளனர். இதனைத் ‘தகரத்தாலி’ என்று அழைப்பர். வெறும் கொம்பு மஞ்சளைத் தாலியாகக் கட்டியவர்களும் உண்டு எனத் தெரிகின்றது.

கூறைச் சேலைகள் பல்வேறு வகைகளில் இருந்தாலும் சிறுகட்டம் போட்ட சிவப்பு நிறக் கூறைச் சேலைகளையே வள்ளுவர்கள் எடுக்கின்றனர். இதற்கு ‘இராம நெத்திலிக் கூறை’ என்று பெயர். திருமணத்திற்கு ஒருசில நாட்களுக்கு முன்னரே கூறைச் சேலை எடுக்கும் வழக்கம் காணப்படுகிறது. தாலி, கூறை இவற்றை இருதரப்பிலும் மிக நெருக்கமானவர்கள் என ஒருசிலரும் சென்று மாப்பிள்ளை வீட்டில் சாமி அறையில் படைப்பர். படையலில் பூ, பழம், தேங்காய், சோறு, கருவாடு, கத்திரிக்காய்க் குழம்பு, வெற்றிலைப் பாக்கு ஆகியவை இடம்பெறும். நல்விளக்கு ஏற்றி, தூபதீபம் காட்டிப் பெண், மாப்பிள்ளை விழுந்து வணங்கி வழிபடுவர். வழிபாட்டின்போது பெருந்தெய்வங்களுக்குரிய பாடல்களும் இடம்பெறுவதுண்டு. கடலூர் மாவட்டத்தை விடுத்துத் திருப்பதி, திருக்கடையூர், திருவண்ணாமலை எனத் தொலைவில் உள்ள கோயில்களில் திருமணம் நடைபெறுமெனில் புறப்படும் போதே தாலி, கூறை படைப்பதும் உண்டு. ‘‘பெண்ணையும் பிள்ளையையும் ஒருசேர வைத்துக்கொண்டு ‘தாலி படைத்தல்’ என்னும் நிகழ்ச்சி நடைபெறும்; அதாவது மாங்கலியத்தை இறையுருவத்தின் முன்வைத்து வடை, சர்க்கரைப் பொங்கல் முதலியன செய்து படைப்பர்’’[33]. கருவாட்டுக் குழம்பு, சோறு வைத்துப் படைத்த வள்ளுவர்களில் சிலர் இன்று சர்க்கரைப் பொங்கல், சுண்டல், மெதுவடை எனப் படைக்கும் மரபு மாற்றத்திற்கு உள்ளாகி இருப்பதும் காணப்படுகிறது. தாலி, கூறை படைத்தல் என்பது முதன்மையானதொரு சடங்காகக் கருதப்படுகிறது.

---

[33]. சுந்தர சன்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 428.

### 5.5.13. முகூர்த்தம் தொடங்குதல்

முகூர்த்த நேரம் காலை 6.00 மணி முதல் 7.30 மணி வரையிலான ஒன்றரை மணி நேரமாகும். ‘‘திருமணம் விடிவதற்கு முன் வைகறையில் அல்லது விடிந்தபின் முற்பகலில் குறிப்பிட்ட நல்ல நேரத்தில் நடைபெறும். நண்பகலிலோ, மாலையிலோ திருமணம் நடைபெறுவது இப்பகுதியில் வழக்கம் இல்லை’’[34]. ‘‘களப்பகுதியில் பெண்வீட்டார் எவ்வளவு பெருஞ்செல்வராயினும் திருமணம் மாப்பிள்ளை வீட்டில்தான் நடைபெறும். பெண்வீட்டில் திருமணம் நடைபெறுவது இருதரத்தார்க்கும் இழிவு எனக் கருதப்பட்டது’’[35]. முகூர்த்தம் நடத்தி வைப்பதற்கு வள்ளுவப் புரோகிதர்களே அமர்த்தப்படுகின்றனர். பிராமணப் புரோகிதர்களை அமர்த்துவதில்லை. வள்ளுவப் புரோகிதர் அதிகாலை நான்கு மணியளவில் குளித்துவிட்டுத் தயாராகி விடுகிறார். முகூர்த்தச் சாமான்களைப் (வேள்விப் பொருட்களை) பிரித்துத் தயார் செய்து கொள்கின்றார். இரண்டு குத்துவிளக்குகள், ஒரு நல்விளக்கு ஆகியவற்றுடன் புதுத் தோண்டியில் தண்ணீர் நிரப்பி அதன் கழுத்தில் பூச்சுற்றி, பொட்டு வைத்து அத்தோண்டிமீது பெரிய மண் அகலில் எண்ணெய் விட்டு, பெரிய திரிபோட்டு விளக்கேற்றுகின்றனர். இதனை ‘‘குடவிளக்கு ஏற்றுதல்’’ என்று குறிப்பிடுகின்றனர். ஓர் உரலின்மீது குடவிளக்கு ஏற்றப்படுகிறது. அதன் பிறகே மற்ற விளக்குகள் ஏற்றப்படுகின்றன. இந்தக் குடவிளக்கு மணமக்களின் பெற்றோர்கள் அல்லது பாதபூசை செய்து கொள்பவர்களால் மட்டுமே இறைவனை வேண்டி ஏற்றப்படுகிறது.

#### 5.5.13.1. விநாயகர் வழிபாடு

மஞ்சளில் பிள்ளையார் பிடித்து வைக்கப்படுகிறது. வாழை இலையில் பச்சரிசி பரப்பி, அதன் மீது கலசம் வைத்து, வெற்றிலைப் பாக்கு, பூ, பழம் இவற்றுடன் தேங்காய் உடைத்து, மணமக்களை அழைத்து வணங்கச் செய்கின்றனர். அவர்கள் முதலில் சபையை வணங்கி, பின்னரே விநாயகரை வணங்குகின்றனர். அப்பொழுது,

---

[34]. சுந்தர சன்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 426.

[35]. மேலது, ப. 428.

“*அல்லல்போம் வல்வினைபோம்*
*அன்னை வயிற்றில் பிறந்ததொரு தொல்லைபோம்*
*போகாத் துயரம் போம்*
*நல்ல மாமதுரைக் கோபுரத்தில் வீற்றிருக்கும்*
*செல்வக் கணபதியை கை தொழுதேன் காப்பு*”[36]

என்ற பாடலைப் பாடி வழிபாடு செய்த பின்னரே முகூர்த்த வேலையைத் தொடங்குகின்றனர்.

### 5.5.13.2. மண நலங்கு வைத்தல்

மணமக்கள் இருவரையும் மணவறையில் அமரவைக்கின்றனர். இருவரின் தலையினையும் ஒன்றாக இணைத்து, அதன்மீது தாம்பாளத் தட்டை வைத்து தலைக்கு வைக்கும் எண்ணெய்யை அருகம்புல்லால் தொட்டுத் தட்டில் விடுகின்றனர். அதன்பின்னர் குழைத்த சந்தனத்தினை எடுத்து இருவரின் கன்னங்களிலும் முழங்கைகளிலும் பூசுகின்றனர். இருவரின் நெற்றியிலும் பொட்டு வைத்து அட்சதையை (மஞ்சள் கலந்த அரிசி, பூ) எடுத்துப் பிள்ளையார் மீதும் மணமக்கள் மீதும் போட்டு வாழ்த்துகின்றனர். கடைசியாக ஆலம் (ஆரத்தி) எடுக்கின்றனர். இதனை, ‘மணநலங்கு’ அல்லது ‘சந்தன நலங்கு’ என்கின்றனர். இவ்வாறு நலங்கு வைக்கும்பொழுது மணமக்களின் தோழன், தோழி உடனிருப்பது வழக்கம். “திருமணத்தில் பெண்ணுக்குப் பெண் தோழியும் பிள்ளைக்கு மாப்பிள்ளைத் தோழனும் துணையாக இருப்பர். இந்தத் தோழன், தோழியர் மைத்துன – மைத்துனி முறையுடையவராயிருப்பர்”[37]. இந்த மண நலங்கினை மங்கலப் பெண்கள் மூன்று பேர் ஒவ்வொருவராகச் செய்கின்றனர்.

### 5.5.13.3. கூறைச் சேலை கொடுத்தல்

மணமகளுக்குக் கூறைச் சேலை, இரவிக்கையும், மணமகனுக்கு வேட்டி, அங்கவஸ்திரம், சட்டை ஆகியவையும் மஞ்சள் தடவி, அட்சதை போட்டு இறைவனை வணங்கிப் புரோகிதர் கையால் தரப்படுகின்றன. மணமக்கள் புரோகிதரை வணங்கிப் பெற்றுக்கொள்கின்றனர். புரோகிதர் அட்சதை போட்டு மணமக்களை ஆசீர்வதிக்கின்றார். மணமக்கள் அவரவர் அறைக்குச் சென்று

---

[36]. இரா. கலியமூர்த்தி, வயது. 61, சேமக்கோட்டை, பண்ருட்டி வட்டம்.

[37]. சுந்தர சன்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 428.

உடைகளை மாற்றிக் கொண்டும், அலங்காரம் செய்து கொண்டும் மணவறைக்குத் திரும்புகின்றனர். முகூர்த்த நேரத்தில் தாலி கட்டும்வரை பெண்ணை மாப்பிள்ளையின் வலப் பக்கமாகவே அமர வைக்கின்றனர். தாலிகட்டிய பின்னரே இடப்பக்கம் அமர வைக்கின்ற வழக்கம் காணப்படுகிறது.

### 5.5.13.4. காப்புக் கட்டுதல்

காப்பு என்பது ஒரு செயலைச் செய்துமுடிக்க எடுத்துக் கொள்ளும் உறுதிமொழியாகவே தெரியவருகிறது. ஒரு தாம்பாளத்தட்டில் பஞ்சுடன் கூடிய தேங்காயை வைத்து அதற்கு மஞ்சள், குங்குமத்தால் பொட்டிட்டு, மலர் தூவுகின்றனர். மஞ்சள் நனைத்த நூலில் வெற்றிலையை மடித்து அதனுடன் கொம்பு மஞ்சளையும் சேர்த்துக்கட்டித் தேங்காயின் மீது வைக்கின்றனர். இவ்வாறு ஐந்து காப்புகள் செய்யப்பட்டு ஒரே தேங்காய்மீது வைக்கப்படுகின்றன. இவற்றைப் புரோகிதரே செய்கின்றார். இந்தக் காப்புகளில் முதலில் ஒன்றை எடுத்து இறைவனை வேண்டி மணமகனின் வலக்கையில் கட்டுகின்றார். அப்போது சில மந்திரங்கள் கூறப்படுகின்றன. இரண்டாவது காப்பினை மணமகன் மணமகளின் வலக்கையில் கட்டுகின்றான். மூன்றாவதாக சாலுங் கரகங்கள் இரண்டிற்கும் இருவரும் ஆளுக்கு ஒன்றாகக் கட்டுகின்றனர். அதன்பின்னர் இருவரும் இணைந்து அரசாணிக் காலுக்குக் கட்டுகின்றனர். காப்புக் கட்டி முடிந்ததும் ஒரு தட்டில் வெற்றிலைப் பாக்கு, வாழைப்பழம் ஆகியவற்றுடன் கட்டிய காப்புகள் அனைத்திற்கும் தூபதீபம் காட்டி வழிபாடு செய்து மணமக்கள் வணங்குகின்றனர். இந்நிகழ்வினைக் 'காப்புக் கட்டுதல்' என்று அழைக்கின்றனர்.

### 5.5.13.5. அரசாணிக் கால் நடுதல்

திருமணத்தில் அரசாணிக்கால் நடுதல் என்பது ஒரு சிறப்பான சடங்காகவே கருதப்படுகிறது. நான்கடி உயரமுள்ள பசுமையான சிறு அரசமரக்கிளை (குச்சி) அல்லது ஒதியமரக்கிளையுடன், பசுமையான மூங்கில் கிளை இணைத்து நடுகின்றனர். இதனை நடும்பொழுது மணமக்கள் கைகளால் இக்கிளைகளை நன்றாகக் கழுவி, மஞ்சள், குங்குமம் வைத்து, துண்டு கட்டி (உடை அணிவித்து) அதன்பின்னர் காப்புக் கட்டி நடுகின்றனர். நட்டபின்பு அக்காப்பிற்கும் அரசாணிக்காலுக்கும் தூபதீபம் காட்டி வணங்கி வழிபாடு செய்கின்றனர். இதனைக் காப்புக் கட்டுதலின் ஓர் அங்கமாகக் கருதினாலும் 'அரசாணிக்கால் நடுதல்' என்றே அழைப்பது வழக்கம். திருமணம் முடிந்ததும் காப்புக் களைந்த பின்னர் அரசாணிக்காலை மணமக்கள் இருவரும் ஒன்றாகத்

தங்கள் வீட்டுத் தோட்டத்தில், நிலத்தில் அல்லது பொதுவான ஏரிக்கரை, குளக்கரையில் நடுவர். அரசாணிக்காலானது எவ்வாறு வளர்ந்து விருட்சமாகிறதோ அவ்வாறே வாழ்க்கை வளம்பெறும் என்பது ஒரு நம்பிக்கையாகத் தெரிகிறது.

### 5.5.13.6. கை மாற்றுதல், பூணூல் அணிவித்தல்

மணமகனின் கரங்களில் வெற்றிலைப் பாக்கு வைத்து அதன்மீது தேங்காய் வைத்து, பூப் போடப்படுகிறது. ஒரு பூணூலை இருகரங்களின் கட்டை விரல்களிலும் மாட்டி மறுமுனையை வலக்காதில் மாட்டுகின்றனர். புரோகிதர் கூறும் மந்திரங்களைத் தொடர்ந்து மணமகன் கூறுகின்றார். மணமகன் கைகளில் உள்ள வெற்றிலைப் பாக்கு, தேங்காய், பூ இவற்றை மணமகளின் கையில் கொடுத்து மீண்டும் பெற்றுக்கொள்கிறார். இவ்வாறு மூன்றுமுறை மாற்றுகின்றனர். இதனைக் 'கை மாற்றுதல்' என்றழைக்கின்றனர். இவ்வாறு கை மாற்றியதை அடுத்து அத்தேங்காயைப் புரோகிதர் வாங்கிக் கீழே வைத்து மணமகனை மேல்நோக்கி இறைவனை வணங்கச் செய்கின்றார். வணங்கியதும் வலக் காதில் மாட்டிய பூணூலை இடத் தோளிலும், வலக் கரத்துள்ளேயுமாக மாட்டிப் பூணூல் சார்த்தப்படுகிறது.

### 5.5.13.7. மிஞ்சி போடுதல்

மணமேடையில் சனி மூலையில் அரசாணிக்காலுக்கு அருகில் அம்மி போடப்படுகிறது. அம்மியை நன்கு மரை இல்லாமல் கழுவி (முழுவதுமாகக் கழுவுதல்) மஞ்சள் பூசிப் பொட்டு வைக்கின்றனர். அந்த அம்மியின் மீது கிழக்கு முகம் பார்த்தவாறு மணமகள் தனது வலக்காலைத் தூக்கி வைக்கின்றாள். மணமகன் வெள்ளியால் ஆன மிஞ்சியைக் (மெட்டியை) காலின் நடுவிரலில் போடுகின்றார். இதேபோல் இடக்காலிலும் மிஞ்சி போடப்படுகிறது. மிஞ்சி போட்ட கால்களைக் கற்பூர தீபம் காட்டி மணமகன் வணங்குகிறார். மேலே பார்க்கச் சொல்லி ''அருந்ததியைக் கண்டியா?'' என்று புரோகிதர் கேட்கின்றார். மணமகள் ஆகாயத்தைப் பார்த்தவாறு ''கண்டேன்'' என்று கூறுவது வழக்கமாக உள்ளது. இந்த மிஞ்சிபோடும் நிகழ்வினை 'அம்மி மிதித்து அருந்ததி பார்த்தல்' என்றும் குறிப்பிடுவர். காதல் திருமணம் செய்துகொண்ட பெண்ணை ''அம்மி மிதித்து அருந்ததி பார்த்தா கூட்டிக்கொண்டு வந்தாய்?'' என்று இழித்துக் கூறுவதிலிருந்து இந்தச் சடங்கின் கௌரவம் தெரிகிறது. ''அருந்ததி என்பவள்

சிறந்த பத்தினிப் பெண். அவள் நட்சத்திரமாக ஒளிர்கிறாள். உன்னைப் போல் என் மனைவியும் பத்தினியாக இருக்க வேண்டும் என்பதை உணர்த்தவே மணமகன் அருந்ததியை வழிபடுகிறான். மாற்றான் ஒருவன் தன்மீது காமம் கொண்டு ஆசை வார்த்தைகளால் மனத்தைக் கரைய வைத்தால் கரைந்திடாமல் மனத்தைக் கல்போல் வைத்திருக்க வேண்டும். உயிர் துறந்தாலும் கற்பு கெடுதல் கூடாது. கல் உடையும்; கரையாது என்பதை மணமகளுக்கு உணர்த்தவே அம்மிக்கல் மீது கால் வைத்து மிஞ்சி போடுகின்றனர்''[38].

மணமகளின் உடன்பிறந்த தம்பி அல்லது திருமணமாகாத தங்கை யாரேனும் ஒருவர் அல்லது இருவரும் இல்லாத பட்சத்தில் தம்பி முறையில் உள்ள ஒருவர் மணமகளின் கால்களை அம்மிமீது வைத்து மஞ்சள் பூசி, குங்குமம் வைத்து வெள்ளியாலான மிஞ்சி போடுகின்றனர். கால்களுக்குக் கற்பூரதீபம் காட்டப்படுகிறது. பின்னர் வெள்ளியால் ஆன பூணூலும் அணிவிக்கப்படுகிறது. மிஞ்சி போட்ட மைத்துனருக்கு மணமகன் ஒரு தாம்பாளத்தில் புத்தாடை மீது (வேட்டி, சட்டை அல்லது பேண்ட் சட்டை) வெற்றிலைப் பாக்கு, பூ, பழம், பணம் வைத்துக் கொடுக்கின்றார். மைத்துனர் வணங்கிப் பெற்றுக் கொள்கின்றார். மிஞ்சி போட்ட மைத்துனர் கை விரலுக்குத் தங்க மோதிரம் போடும் வழக்கமும் உண்டு.

### 5.5.13.8. எக்கியம் வளர்த்தல்

மணமேடையில் மணல் பரப்பி அதன்மீது செங்கற்களை அடுக்கிப் புரோகிதரால் ஓமகுண்டம் உருவாக்கப்படுகிறது. அதனுள் உமி பரப்பிப் பால் மரச் சுள்ளிகள் (ஆல், அரசு, மா) அடுக்கப்படுகின்றன. கற்பூரம் ஏற்றி அதனுள் போட்டுத் தீ மூட்டி, நெய் வார்த்துப் புரோகிதர் எக்கியம் வளர்க்கின்றார். புரோகிதர் வடமொழியிலும் தமிழிலுமாக சில மந்திரங்களை ஓதுகின்றார். நெய் வார்ப்பதுடன் புரோகிதர் கொடுக்கும் நவதானியங்கள், பழங்கள், வேள்விப் பொருட்களை எக்கியத்தில் போட்டு வணங்கி மூன்று முறை வலம் வந்து தீயை வழிபடுகின்றனர். பஞ்ச பூதங்களில் ஒன்றான அக்னியைச் சாட்சியாக வைத்துத் தாலி கட்டுவதை இது உணர்த்துவதாகும்.

---

[38]. ச. குப்புக்கிருஷ்ணன், வயது. 65, களையூர், கடலூர் வட்டம்.

### 5.5.13.9. பாத பூசை செய்தல்

பாதபூசை செய்வதென்பது மணமக்களின் பெற்றோர்களுக்கு மணமக்கள் செய்யும் பூசையாகும். பாத பூசையைத் தம்பதியினராக இருப்பவர்கள் மட்டுமே செய்துகொள்ளும் மரபு காணப்படுகிறது. ஒருவரில்லாமல் ஒருவர் மட்டும் தனித்துப் பாதபூசை செய்து கொள்வதில்லை. மணமகனுக்கோ மணமகளுக்கோ பெற்றோர்கள் இல்லாத பட்சத்தில் பெரிய தந்தை, சிறிய தந்தை, மாமன், அம்மான், அண்ணன் எனத் தமது உறவினில் தன்னைவிட முதிர்ந்த வயதுடைய தம்பதியினர்களை மணமக்கள் சார்பாக அழைத்துப் பாதபூசை செய்யும் வழக்கமும் உண்டு.

மணமக்களின் பெற்றோர்களை மணமேடைக்கு அழைத்துப் புரோகிதரின் கரங்களால் அட்சதை போட்டு வாழ்த்திப் புத்தாடைகள் கொடுக்கப்படுகின்றன. அவர்கள் புத்தாடைகளை உடுத்திக்கொண்டு மணமேடைக்கு வந்ததும் முதலில் மணமகனின் பெற்றோர்க்கு இரு மாலைகள் கொடுக்கப்படுகின்றன. அவர்கள் மாலைகளை மாற்றிக் கொண்டதும் இருவரையும் இரண்டு தாம்பாளத் தட்டில் நிறகவைத்து மணமக்கள் அவர்களின் பாதங்களைத் தண்ணீர் விட்டு மரை இல்லாமல் சுத்தமாகக் கழுவுகின்றனர். அதன்பின்னர் பாதங்களுக்கு மஞ்சள், சந்தனம் தடவி, குங்குமத்தால் பொட்டுவைத்து, மலர்த்தூவிக் கற்பூர தீபம் ஏற்றிப் பாதங்களுக்குக் காண்பித்துப் பாதங்களைத் தொட்டு வணங்குகின்றனர். பெற்றோர்கள் மணமக்களை அட்சதை போட்டு ஆசீர்வதிக்கின்றனர். இதனை அடுத்து மணமகளின் பெற்றோருக்கும் இவ்வாறே பாதபூசை செய்யப்படுகிறது. தங்களின் பிள்ளைகளிடம் திருமணத்தின்போது பாதபூசை செய்து கொண்டு அவர்களை வாழ்த்துவதைப் பெருமையாகவும், பெரும்பேறாகவும் பெற்றோர்கள் கருதுகின்றனர். வேறொருவர் கால்களைத் தொட்டுத் தங்கள் பிள்ளை பாதபூசை செய்துகொள்வது என்பது வருத்தம் மிகுந்த செயலாகவே கருதப்படும் நிலை காணப்படுகிறது.

### 5.5.13.10. கன்னிகாதானம் செய்தல்

மணமக்களின் பெற்றோர்கள் அல்லது இல்லாதபட்சத்தில் பாதபூசை செய்து கொண்டவர்களை மணமேடையில் இருபுறங்களிலும் புரோகிதர் அமரச் செய்கின்றார். பெரிய தாம்பாளத்தில் வெற்றிலைப் பாக்கு, பூ, பழம், தேங்காய் ஆகியவற்றை வைக்கின்றனர். புரோகிதர் சில மந்திரங்களைச் சொல்லி நிகழும் என ஆரம்பித்து வருடம், மாதம், நாள், நட்சத்திரம், லக்கினம் அனைத்தையும்

கூறி இன்னாருடைய மகளை எனக் குலங்கோத்திரத்துடன் கூறி இன்னாருக்கு என மணமகனின் குலங்கோத்திரத்தைக் கூறிக் கன்னிகாதானம் செய்கின்றோம் எனப் பெண்ணின் பெற்றோரைக் கூறச் செய்கின்றார். அப்போது தட்டு மூன்று முறை மாற்றப்படுகிறது. கற்பூரதீபம் காட்டி, புரோகிதர் புனித நீரை (கோமியம்) மூன்றுமுறை திருமாங்கல்யத்தின்மீது தெளிக்கின்றார். மணமக்கள் திருமாங்கல்யத்தின்மீது அட்சதை போட்டு வழிபடுகின்றனர். தாலி கட்டுவதற்குச் சற்று முன்னர் நிகழும் இந்தச் சடங்கினைக் 'கன்னிகாதானம் செய்தல்' அல்லது 'தாரை வார்த்துக் கொடுத்தல்' என்றும் அழைக்கின்றனர்.

### 5.5.13.11. திருமாங்கல்யத்தை ஆசீர்வதித்தல்

புரோகிதரால் ஒரு தாம்பாளத் தட்டில் வெற்றிலைப் பாக்கு, பூ, வாழைப்பழம், அட்சதை இவற்றுடன் தேங்காய் வைக்கப்படுகிறது. அந்தத் தேங்காயின்மீது திருமாங்கல்யம் மஞ்சள் நனைத்த பூணூலில் (தாலிக்கயிற்றில்) கோர்த்து வைக்கப்படுகிறது. மணமேடையில் முதலில் மணமகனின் பெற்றோர், உடன்பிறந்தோர், மிக நெருக்கமான உறவினர்கள் அனைவரும் இறைவனை வேண்டித் திருமாங்கல்யத்தை ஆசீர்வதிக்கின்றனர். இதனைப் போன்றே மணமகள் உறவினர்களும் ஆசீர்வதிக்கின்றனர். புரோகிதரோ யாரேனும் ஒரு பெரிய மனிதரோ திருமாங்கல்யத்தை அனைவரிடமும் காட்டுகின்றார்கள். அனைவரும் திருமாங்கல்யத்தைத் தொட்டு வணங்கி ஆசீர்வதிக்கின்றனர். அனைவருக்கும் அட்சதை (மங்கள அரிசி, பூ) கொடுக்கப்படுகிறது.

### 5.5.13.12. தாலி கட்டுதல்

மணமக்களின் பெற்றோர்கள் மாற்று மாலைகளைப் படைத்து, ஆசீர்வதித்து மணமக்களிடம் கொடுக்கின்றனர். மாற்று மாலைகளைப் பெற்றுக்கொண்ட மணமக்கள் மாலைகளை அணிந்து கொள்கின்றனர். புரோகிதர் 'மாங்கல்யம் தந்து நானே' எனத் தொடங்கி மந்திரங்களைக் கூறக் கெட்டி மேளம் ஒலிக்கிறது. புரோகிதர் அல்லது பெற்றோர்கள் திருமாங்கல்யத்தை எடுத்து மணமகன் கைகளில் கொடுக்கத் தன் வலக்கையைப் பெண்ணின் வலத் தோள் பக்கமாகக் கொண்டுவந்து மூன்று முடிச்சுகள் போட்டுத் தாலியைக் கட்டுகின்றார். அந்த மூன்று முடிச்சுகள் மீது மஞ்சள், குங்குமம் வைத்து, புனிதநீர் தெளித்து, கற்பூர தீபம் காட்டி மணமகள் வணங்குகின்றார். அப்போது பெண்ணின் மாமியார் அல்லது நாத்தனார் யாரேனும் ஒருவர் நல்விளக்கு (காமாட்சியம்மன் விளக்கு) ஏற்றி அம்முடிச்சு அருகில் காண்பிக்கின்றார்.

பெண்ணின் தலைக்குப் பின்புறமாக மணமகன் வலக் கரத்தைக் கொண்டு சென்று மோதிரவிரலால் மணமகள் நெற்றியில் குங்குமம் இடுகின்றார். இவ்வாறு தாலி கட்டி முடிந்ததும் அனைவரும் அட்சதை தூவி மணமக்களை வாழ்த்துகின்றனர். மங்கள ஒலி (கெட்டி மேளம்) முழங்கியவாறு தாலிகட்டுதல் நடைபெறுகிறது.

''கடைகுட்டிப் பிள்ளையின் திருமணமாயின் விருந்தில் கடலை போடப்படும்''. ஆனால் வள்ளுவர்களின் திருமணத்தில் அட்சதை போட்ட அனைவருக்கும் அப்பொழுதே கையில் 'பொட்டுக்கடலை' கொடுக்கின்றனர்[39].

### 5.5.13.13. பட்டம் கட்டுதல், நெற்றிப்பணம் வைத்தல்

மணமக்களுக்கு மிகவும் நெருக்கமான உறவினர்களான அம்மான்கள், மாமன்கள், அத்தைகள், பாட்டன்கள், பாட்டிகள், மணமகளுக்கு நாத்தனார், ஓரவத்தி (ஓரகத்தி) என அனைவரும் தாலிகட்டியதும் மணமக்களுக்குப் பட்டம் கட்டுகின்றனர். இந்தப்பட்டம் தங்கத்தாலோ அல்லது ஐம்பொன்னாலோ ஆன தகடாகும். இதனை மஞ்சளில் நனைத்த நூலில் கட்டி மணமகன், மணமகள் நெற்றியில் உறவுமுறையைக் கூறிக் கட்டும் வழக்குக் காணப்படுகிறது. மணமக்களுக்கு முதலில் அவரவரின் அம்மான் பட்டம் கட்டிய பின்னரே மற்ற உறவினர்கள் பட்டம் கட்டுதல் என்பது வழக்கமாகும். ''தாலிகட்டியதும் அம்மான்கள், மாமிமார்கள், நாத்திமார்கள் ஆகிய பட்டங்களால் பெண்ணின் நெற்றியில் பல்வகைப் பட்டங்கள் கட்டப்பெறும். உற்றார், உறவினர் முதலியோர் மணமக்கட்கு அன்பளிப்பு வழங்குவர். அம்மான் அன்பளிப்பு முதலில் நடைபெற வேண்டும். பின்னர்க் கொண்டான் கொடுத்தான் சம்பந்திகளுள் முதல் சம்பந்தி இரண்டாம் சம்பந்தி வாரியாக அன்பளிப்பு நடைபெறும். இந்த முறையில் அரங்கம் சலசலப்புகளால் போர்க்களம் போன்று மாறிவிடும்''[40]. பட்டத்திற்குப் பதில் தங்கக்காசு கட்டுவதும் உண்டு.

பட்டம் கட்ட முடியாத சில உறவினர்கள் மணமக்கள் நெற்றியில் தங்களால் ஆன பணத்தைத் தங்கள் உறவுமுறையினைச் சொல்லி

---

[39]. சுந்தர சன்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 428.

[40]. மேலது, ப. 428.

வைப்பார்கள். நெற்றிப்பணம் மொய்ப்பணத்தைப்போன்று கணக்கில் வைக்கப்படுவது இல்லை.

### 5.5.13.14. அரிசி காப்பிடுதல்

பட்டம் கட்டியவர்களும், நெற்றிப்பணம வைத்தவர்களும் மணமக்களின் எதிரில் பெரிய தாம்பாளத்தில் உள்ள பச்சரிசியினை இருகரங்களிலும் அள்ளிக் கொள்கின்றனர். மணமக்களின் தலை, தோள்கள் இவற்றை அரிசியுடன் மூடிய கரங்களால் தொட்டு, குலதெய்வத்தையும் சூரிய தேவனையும் மனத்திற்குள் வணங்கி இருகரங்களையும் பெருக்கல்குறி வடிவில் வைத்துக்கொண்டு தாம்பாளத்தில் சிறிது சிறிதாக விடுகின்றனர். இவ்வாறு ஒவ்வொருவரும் மூன்றுமுறை செய்து மணமக்களை நெஞ்சார வாழ்த்துகின்றனர். அவ்வாறு வாழ்த்தும்போது,

*''ஆதலால் வாழ்க! வாழ்க!*
*அருந்தவ முனியும் வாழ்க!*
*காவலன் கருடன் வாழ்க!*
*கனத்த வைகுந்தம் வாழ்க!*
*வேதமும் நான்கு வாழ்க!*
*விண்ணவர்க்கு இளையோன் வாழ்க!*
*கரக்கமா டெடுக்கப் பிள்ளை*
*கன்று கால் பெருகி*
*மண்ணும் மனையும் தழைத்து*
*ஆயுள் வளர்ந்து பதினாறும்பெற்று*
*பெருவாழ்வு வாழ்ந்து சுகமே உண்டாகும்''*[41]

என்ற பாடல் பாடப்படுகிறது. இதற்கு ‘அரிசிக் காப்பிடுதல்’ என்று பெயர்.

### 5.5.13.15. மச்சான் (மைத்துனர்) மோதிரம் போடுதல்

மணமகளின் அண்ணன், தம்பி யாரேனும் ஒருவர் மணமகனுக்குத் தங்க மோதிரம் போடுவர். இதனை ‘மச்சான் (மைத்துனர்) மோதிரம்’ என்பர். பெண்ணின் உடன்பிறந்த சகோதரர் இல்லாத பட்சத்தில் பங்காளிகள் வகையிலும், தாய்வழிச் சகோதரர்களில் யாரேனும் ஒருவரோ போடுவதும்

---

[41]. சீனுவாசன், வள்ளுவப் புரோகிதர், வயது. 40, காரணப்பட்டு, கடலூர் வட்டம்.

உண்டு. பலரும் இன்று மோதிரத்துடன் தங்கச் சங்கிலியும் போடுகின்ற நிலை காணப்படுகிறது.

### 5.5.13.16. மொய் வைத்தல்

மச்சான் மோதிரம் போட்ட பின்னரே மற்ற உறவினர்களும் நண்பர்களும் மொய் வைப்பது, பரிசுப் பொருட்களைக் கொடுப்பது ஆகியன நடைபெறுகின்றன. பெண்வீட்டார், பிள்ளைவீட்டார் சார்பாக மொய் எழுதுவார்கள். அவர்களிடம் சென்று பணத்தைக் கொடுத்து, தங்களின் ஊர், பெயர், ரூபாய் இவற்றைப் பதிவு செய்வார்கள். இதனை 'மொய் வைத்தல்' அல்லது 'வரிசை வைத்தல்' எனக் குறிப்பிடுகின்றனர். மொய்வைத்தவர்களுக்குத் தாம்பூலம் வழங்கப்படுகிறது. தற்போது கவரில் பெயர் எழுதி மொய்ப்பணத்தை நேரடியாகவே மணமக்களிடம் கொடுக்கின்றனர். பரிசுப் பொருட்களும் இவ்வாறே கொடுக்கப்படுகின்றன. இவ்வாறு கொடுப்பதை மணமக்களுடன் வீடியோ, புகைப்படமாக எடுத்துக்கொள்வது காணப்படுகிறது.

### 5.5.14. சாலுங்கரக விளையாட்டு

சாலுங்கரகம் செய்வதற்கென்று முன்கூட்டியே குயவர் வீட்டில் அச்சாரம் (முன்பணம்) கொடுக்கப்படுகிறது. சாலுங்கரகம் என்பது வர்ணம் தீட்டப்பட்ட இரண்டு பெரிய பானைகளாகும். ஒரு பானையைவிட மற்றொன்று சற்றுச் சிறியதாகக் காணப்படும். பெரியதை 'ஆண்பானை' என்றும் சிறியதைப் 'பெண்பானை' என்றும் கருதுகின்றனர். இருபானைகளுக்கும் கூம்பு வடிவ வண்ணம் தீட்டிய மூடிகள் இருக்கின்றன. சாலுங்கரகப் பானைகள் மீது ஆண், பெண் பஞ்சவர்ணகிளிகள் வரையப்பட்டிருக்கின்றன.

### 5.5.14.1. சாலுங்கரகம் வாங்கிவரும் முறை

சாலுங்கரகங்களை முன்கூட்டியே திருமணம் நடைபெறுமிடத்திற்குக் கொண்டு செல்வதில்லை. பெண்ணழைப்பிற்குச் சற்று முன்னர் அல்லது மாலை வேளையில் வாங்கி வருவதே வழக்கமாக உள்ளது. ஒரு பெரிய தாம்பாளத்தட்டில் பச்சரிசி, புழுங்கல் அரிசி, காய்கறிகள், புளி, மிளகாய், பருப்பு வகைகள், வெற்றிலைப் பாக்கு, பூ, பழம், தேங்காய், தட்சணையாகப் பணம் ஆகியவற்றுடன் வசதியிருப்பின் வேட்டி துண்டு ஆகியவற்றைக் குயவர் (பத்தர்) வீட்டிற்கே கொண்டுசென்று அவரிடம் கொடுக்கின்றனர். அவர் இறைவனை

வணங்கி மணமக்களை மனமார வாழ்த்திப் பயபக்தியுடன் சாலுங்கரகங்களை மணமகள் வீட்டாரிடம் கொடுத்தனுப்ப அவர்கள் திருமண நிகழ்விடத்திற்குக் கொண்டு வருகின்றனர்.

### 5.5.14.2. விளையாட்டு

சாலுங்கரகங்களைத் தாலிகட்டுவதற்கு முன்னர், தண்ணீரால் நிரப்பி மூடிவைக்கின்றனர். தாலி கட்டியதும் சில சடங்குகளையடுத்து சாலுங்கரக மூடிகள் திறக்கப்படுகின்றன. புரோகிதர் இரண்டிலும் போடுவதுபோல் பாவனைகாட்டி ஏதேனும் ஒரு சாலுங்கரகத்தில் ஒரு மோதிரத்தைப் போடுவார். போட்டதும் மணமக்கள் இருவரும் அப்பானைக்குள் கைகளை விட்டுத் தேடி மோதிரத்தை எடுப்பர். மோதிரம் எவர் கையில் கிடைக்கின்றதோ அவரே வெற்றி பெற்றவராவார். இதுபோன்ற வெற்றி தோல்விகளைப் பெரிதுபடுத்தாமல் வாழ்வில் ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்து போக வேண்டும் என்பதனைச் சாலுங்கரக உள்ளடக்கியதாகவே விளையாட்டுக் கருதப்படுகிறது. இவ்விளையாட்டின்போது சாலுங்கரகங்கள் உடையாமலிருப்பது மிகமிக கவனமாகக் கொள்ளப்படுகிறது. பின்னர் இவை மணமகன் இல்லத்திற்குக் கொண்டு செல்லப்பட்டுப் பாதுகாக்கப்படுகின்றன.

### 5.5.15. பாலி விடுதல்

முகூர்த்தக் கால் நடும் அன்றே மணமகன் வீட்டில் எள், கொள், கம்பு, கேழ்வரகு, நெல், மொச்சை, கடலை, ஓமம் ஆகிய நவதானியங்களை ஊறவைத்துவிடுவர். முளை வந்ததும் பெரிய தாம்பாளத்தில் ஈரமான மணல் பரப்பி அதன்மீது முளைத்த நவதானியங்களை வைத்து வளரச் செய்கின்றனர். வளர்ந்த இந்த முளைப்பாலிகள் தாம்பாளத்தட்டுடன் மணமேடையில் மணமக்களுக்கு எதிரில் வைக்கப்படுகின்றன. “கோவில் திருவிழா, திருமண நிகழ்வுகளில் முளைப்பாலிகள் வைக்கப்படுகின்றன. இம்முளைப்பாலிகள் நோய்க்கிருமிகளை இழுக்கும் தன்மை கொண்டவை”[42] எனச் சுகிசிவம் குறிப்பிடுவதிலிருந்து சடங்குகளில் முளைப்பாலிகள் இடம்பெறும் அவசியத்தை உணரமுடிகிறது.

---

[42]. சுகிசிவம், சன் தொலைக்காட்சிக்கு அளித்த பேட்டி (08.04.2009).

தாலி கட்டியதும் மேளதாளத்துடன் மணமகள் தலையில் சொம்பில் கஞ்சியும், மணமகன் தோளில் முளைப்பாலியும் எடுத்துச் செல்கின்றனர். வயல்வெளியிலோ அல்லது ஏதேனும் நீர்நிலைக்கு அருகிலோ மணமகன் சிறிது பாத்தி கட்டுகிறார். மணமகள் முளைப்பாலிகளை அதில் நடுகிறார். இருவரும் அதற்குத் தண்ணீர் பாய்ச்சுகின்றனர். பின்னர் மணமகள் மணமகன் கைகளில் கஞ்சி வார்த்துத் தொட்டுக்கொள்ள வெங்காயம் அல்லது பச்சை மிளகாய் கொடுக்கின்றார். மணமகன் குடித்தபிறகு எஞ்சியதை மணமகளும் குடிக்கின்றாள். இதற்குப் ‘பாலி விடுதல்’ என்று பெயர்.

இன்றைய நிலையில் வசதிகள் கருதி நகரங்களில் உள்ள திருமண மண்டபங்களில் திருமணங்கள் நடைபெறுகின்றன. இச்சூழலில் பாலிவிடுதல் காணப்படவில்லை. சடங்கிற்காக மணமேடையிலேயே ஒன்பது அல்லது ஏழு சிறுமண் கிண்ணங்களில் மணமக்கள் கரங்களால் பாலியை அள்ளி வைப்பதுடன் இந்நிகழ்வு முடிந்துவிடுகிறது. இந்தச்சிறு மண்பாண்டங்கள் சாலுங்கரங்களுடன் குயவர் வீட்டிலிருந்து கொண்டுவரப்படுகின்றன.

### 5.5.16. காப்புக் களைதல்

திருமண நிகழ்வு காப்புகள் கட்டி தொடங்கப்படுவதைப் போன்றே காப்புகள் களையப்பட்டு (அவிழ்க்கப்பட்டு) நிறைவடைகின்றன. மணமக்கள் கரங்களில் கட்டியுள்ள காப்புகள், அரசாணிக் காலில் கட்டிய காப்பு அனைத்தும் களையப்படுகின்றன. அப்பொழுது தூபதீபம் காண்பிப்பதுடன் புரோகிதர் சில மந்திரங்களையும் ஓதுகின்றார். சில ஆண்டுகளுக்கு முன்னர் தங்களின் வீடுகளிலேயே திருமணங்களை நடத்தியவர்கள் “மாலையில் காப்புக் களைதல் என்னும் சடங்கினை நடத்துவர்”[43]. இன்றைய நிலையில் மண்டபங்களில் நடைபெறுவதால் உடனடியாகக் காப்புக் களைதல் நடைபெறுகிறது. காப்புக் களைந்ததையடுத்துப் புரோகிதரால் ‘சோபனப் பாடல்’ பாடப்படுகிறது. மணமகன் தோளில் உள்ள அங்கவஸ்திரத்தின் முனையையும் மணமகளின் கூறைச் சேலையின் முந்தானியையும் முடிச்சுப் போட்டு விடுவர். உடன் மாப்பிள்ளைத் தோழன், பெண் தோழி ஆகியோருடன் மணமக்கள் மணமேடையை வலம் வருகின்றனர். நான்கு திசைகளிலும் சற்று நிற்கவைத்து,

---

[43]. சுந்தர சன்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 428.

*“சோபனமே தென்பழனி*
*தோகைமயில் வாகனர்க்கும்*
*தேவர் தொழும் சீர்பதத்தால்*
*தெய்வானைவள்ளி நாயகிக்கும்*
*சோபனம் நித்ய சுபமங்களம்.*
*அம்மி வலமாக அரசாணி முன்பாக*
*சாலுங் கரகமுடன் சந்திரமும் முன்பாக*
*சோபனம் நித்திய சுபமங்களம்*

*காலிரங்கி மழை பொழிய*
*கண்ணாறு வாராமல் இந்த*
*ஊரில் உள்ள சனங்களுக்கும்*
*உற்றார் உறமுரைக்கும்*
*சோபனம் நித்தய சுபமங்களம்*

*மகுடாபிஷேகம் கொண்டாரே*
*ஸ்ரீராமசந்திரர் மகுடாபிஷேகம் கொண்டாரே*
*ஸ்ரீராபிராமனுக்கும் மண்ணும் பரந்தாமனுக்கும்*
*ஈராறு கையனுக்கும் மெய்யனுக்கும் மங்களம்*

*கொண்டல் மணிவண்ணனுக்கும்*
*கோசலை குமாரனுக்கும்*
*தீரனுக்கும் மங்களம்*

*தன்குலப தோளனுக்கும்*
*ஜானகி மணாளனுக்கும்*
*பூசக்காரகையனுக்கும்*
*மெய்யனுக்கும் மங்களம்*

*சோபனமே தென்பழனி*
*தோகை மயில் வானவர்க்குத்*
*தேவர் தொழும் சீர் பதத்தால்*

*தெய்வானை வள்ளி நாயகிக்கும்*
*சோபனம் நித்ய சுபமங்களம்*

*கரும்பாலே கால்நிறுத்தி*
*அரும்பாலே இவர்கள் பந்தலிட்டார்*
*வாசல் என்ன வாசல் இது*
*மகராசன் நித்ய வாசல் இது*
*மகராச நித்ய வாசலிலே*
*மாடுகன்றுகள் மிக்க பெருக வேண்டும்*

*ஆலதுபோல் தழைத்தோங்கி*
*அருகதுபோல் வேரூன்றி*
*அண்ணனும் தம்பியுமாய்*
*ராஜசுகம் பெற்று வாழ வேண்டும்*

*வாழ வேண்டும் சுகமாக*
*இந்த மண்ணூழி காலமட்டும்*
*இவர்கள் வாழ வேண்டும்*

*ஆதலால் வாழ்க வாழ்க!*
*அருந்தவ முனிவர் வாழ்க!*
*வேதமும் நான்கு வாழ்க!*
*விண்ணவர் போற்றி வாழ்க!*
*பூதலம் எங்கும் வாழ்க!*
*பொய் சொல்லா மன்னர் வாழ்க!*
*காதலர் பெரியோர் வாழ்க!*
*கனத்த வைகுந்தம் வாழ்க!*
*மணமக்கள் பதினாறும் பெற்று*
*பெறு வாழ்வு வாழ்க வாழ்க!*

*ஆலது போல் தழைத்தோங்கி*
*அருகது போல் வேரோடி*
*மூங்கிலைப் போல் கிளைகிளைத்து*

*மீளா சுகம் பெற்று*

*பல்லாண்டு வாழ்க! வாழ்க!*"[44]

என்ற பாடலைப் பாடித் திருமண நிகழ்வினைப் புரோகிதர் முடித்து வைக்கின்றார்.

### 5.5.17. குருதட்சணை கொடுத்தல்

திருமணத்தினை நடத்தி வைக்கும் குருவாகிய புரோகிதருக்கு ஒரு தாம்பாளத்தில் புத்தாடைகள் (வேட்டி, அங்கவஸ்திரம்), அரிசி, காய்கறிகள், பழவகைகள், வெற்றிலைப் பாக்கு, தேங்காய்ப் பூ, பணம் ஆகியவை வைத்துக் குருதட்சணையாகக் கொடுப்பர். அப்போது புரோகிதர் காலில் மணமகன் குடும்பத்தார் அனைவரும் விழுந்து வணங்குகின்றனர். புரோகிதர் அவர்கள் மீது கோமியம் தெளித்து அட்சதை போட்டு,

"*ஆல்போல் தழைத்து அருகுபோல் வேரூன்றி*

*மூங்கிலைப்போல் தழைத்து என்றும் சிரஞ்சீவியாக*

*பதினாறும் பெற்று பெருவாழ்வு வாழ வேண்டும்*"[45]

என வாழ்த்துகின்றார். அதன்பின்னர் புரோகிதம் செய்த பொருட்களான பச்சரிசி, தேங்காய், பழம் உள்ளிட்ட அனைத்தும் புரோகிதரால் கொண்டு செல்லப்படுகின்றன.

### 5.5.18. உணவு பரிமாறுதல்

தாலிகட்டி முடிந்ததும் திருமணத்தில் கலந்து கொண்டவர்கள் அனைவருக்கும் மொய் வைத்தபின் காலை உணவு வகைகள் பரிமாறப்படுகின்றன. இட்லி, பூரி, பொங்கல், மெதுவடை, காபி போன்ற சைவச் சிற்றுண்டி வகைகளே காலையில் பரிமாறப்படுகின்றன. மணமகன் வீட்டாரின் வசதிக்கேற்பவே திருமணத்தில் உணவு வகைகள் செய்யப்படுகின்றன. உணவு பரிமாறுவதையும்கூட வீடியோ பதிவு செய்கின்றனர். இதில் மணமக்கள் உணவு உண்பதும் இடம்பெறுகிறது.

---

[44]. எஸ்.ஆர். பாலக்கிருஷ்ணன், புரோகிதர், வயது. 62, சேமக்கோட்டை, பண்ருட்டி வட்டம்.

[45]. மேலது.

### 5.5.19. மணமகன் வீட்டிற்கு அழைத்துச் செல்லுதல்

திருமணமானதும் பொண்ணு (பெண்) மாப்பிள்ளை இருவரும் மாப்பிள்ளை வீட்டிற்கு அழைத்து வரப்படுகின்றனர். வீட்டிற்கு வருவதற்கு முன்னர் வீட்டிற்கு அருகில் உள்ள ஏதேனும் ஒரு கோயிலில் மாப்பிள்ளை பெண் இருவரும் கற்பூரம் ஏற்றி விழுந்து வணங்கிய பின்னரே வீட்டிற்குச் செல்கின்றனர்.

#### 5.5.19.1. ஆரத்தி எடுத்தல்

பெண், பிள்ளை இருவரும் நிற்பதற்குத் தகுந்த நீண்ட பலகையில் நனைத்த மாவினால் ஆண், பெண் கால்களை வரைந்து அதன்மீது இருவரையும் வாசலிலேயே நிற்க வைக்கின்றனர். வீட்டில் உள்ள மங்களகரமான பெண் ஆரத்தி எடுக்கின்றாள். அதன் பின்னர் மணமக்கள் உள்ளே செல்லும்பொழுது நாத்தனார் (மணமகனின் சகோதரி) பாயைக்கொண்டு வழிவிடாமல் தடுக்கின்றாள். ‘மணமக்கள் என்ன வேண்டும் என்று கேட்க, ‘‘என் பிள்ளைக்கு உங்கள் பெண்ணைக் கொடுத்தால்தான் வழிவிடுவேன்’’ என்றுகூற, ‘‘சரி தருகிறோம்’’ என்று வாக்கு கொடுத்த பின்னரே வழிவிடப்படுகிறது’. இது ஒரு விளையாட்டுச் சடங்காகவே தெரிகிறது. எனினும், இது உறவு விட்டுவிடக் கூடாது என்பதற்காகவே நிகழ்த்தப்படுகிறது.

#### 5.5.19.2. பால், பழம் கொடுத்தல்

மணமக்களை நடுவீட்டிற்கு (சாமியறைக்கு) அழைத்துச் சாமி கும்பிடச் செய்கின்றனர். அதன்பின்னர் மாமியார் புது மருமகளைத் தன்வீட்டு, உப்பு, புளி, அரிசி உள்ளிட்ட தானிய வகைகள் அடங்கிய பானைகளில் வலக்கையை விடச் செய்கின்றாள். தன் மருமகளை இலக்குமியாகப் (லஷ்மி) பாவித்து அவளது கரங்கள் பட்டால் வற்றாது இருக்கும் என்பதற்காக இவ்வாறு செய்யப்படுகிறது. அதன்பின்னர் மணமக்களுக்கு வாழைப்பழமும் காய்ச்சிய பசும்பாலும் கொடுக்கப்படுகின்றன.

#### 5.5.19.3. கால் கும்பிடுதல்

விருந்திற்குச் செல்லவிருக்கும் மணமகனின் அதே ஊரில் உள்ள பாட்டன் பாட்டி, பெரிய தகப்பனார், சிறிய தகப்பனார், அண்ணன், பங்கும் பங்காளிகள் ஆகியோரின் இல்லங்களுக்குச் சென்று பெரியோர்களைத் தம்பதிகளாக கிழக்கு முகம் பார்த்தவாறு நிற்கவைத்து அவர்களின் கால்களில் விழுந்து வணங்கி

விருந்திற்குச் செல்வதைத் தெரிவிக்கின்றனர். அவர்களும் மணமக்களை வாழ்த்தித் தங்களை அறிமுகம் செய்துகொண்டு வெற்றிலைப் பாக்கில் பணம் வைத்துக் கொடுத்து வழியனுப்புகின்றனர். இதுவே ‘கால் கும்பிடுதல்’ ஆகும்.

### 5.5.20. மருவுண்ணச் செல்லுதல்

மணமக்களை மணமகளின் வீட்டிற்கு அழைத்துச் சென்று விருந்து வைப்பது மருவுண்ணல் என்று அழைக்கப்படுகிறது. மருவுண்ண அனுப்பி வைக்கும் முன்னர் விருந்து முடிந்து திரும்பிவர, இரட்டிப்பு நாள், இரட்டிப்பு மாதம், அஷ்டமி, நவமி ஆகியவை இல்லாதவாறு நாள் பார்த்து அனுப்புகின்றனர். விருந்து மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது என ஒற்றைப்படை நாட்கள் மட்டுமே நடைபெறுகிறது. முதல் ராத்திரி நடைபெறுவதற்கும் இவ்வாறே நாள் பார்த்துப் பெண் வீட்டாரிடம் சொல்லி அனுப்புகின்றனர். முதல் இரவு என்பது பெரும்பான்மையாக மருவுண்ணலின் போது பெண் வீட்டிலேயே நடப்பது வழக்கம். ஒருசில குடும்பங்களில் விருந்து முடிந்து மணமகன் இல்லத்தில் நடைபெறும் வழக்கமும் வள்ளுவ மக்களிடம் காணப்படுகிறது.

### 5.5.21. அம்போகம்

விருந்திற்குச் சென்ற மணமக்களை மணமகள் வீட்டார் குறிப்பிட்ட நன்னாளில் ஒற்றைப் படையில் மூன்று, ஐந்து, ஏழு என்கின்ற அளவில் சென்று அழைத்து வருகின்றனர். செல்பவர்களின் எண்ணிக்கை இரட்டைப்படையில் இருப்பின் ஒரு குழந்தையையும் அழைத்துச் செல்லும் வழக்கம் காணப்படுகிறது. மணமகன் வீட்டார் அனைவருக்கும் மணமகள் வீட்டில் விருந்து நடைபெறும். நடுவீட்டில் பித்தளைக் குடங்களில் மூன்று அல்லது ஐந்து குடங்களில் அதிரசம் (பலகாரம்) லட்டு, ஜாங்கிரி, மைசூர்பாகு, முறுக்கு, சோமாசு போன்ற தின்பண்டங்கள் மஞ்சள் துணியால் வேடுகட்டப்பட்டு வைக்கப்படுகின்றன. இதில் மணப்பெண்ணின் நாத்தனாருக்குத் (கணவரின் சகோதரி) தனிக்குடம் கட்டுவது குறிப்பிடத்தக்கதாகும். இருவீட்டாரும் நடுவீட்டில் கற்பூரம் ஏற்றிச் சாமி கும்பிட்டுவிட்டு மணமக்களை அழைத்துச் செல்வர். இதனை அம்போகம் என்று குறிப்பிடுகின்றனர்.

### 5.5.22. சம்பந்தம் கலத்தல்

திருமணச் சடங்குகள் அனைத்தும் முடிந்த பிறகு இறுதியாக இந்நிகழ்வு நடைபெறுகிறது. மாப்பிள்ளை வீட்டிற்குப் பெண்வீட்டார்கள் வந்து விருந்து

உண்டு, புத்தாடைகள் அணிந்து செல்வதும், அவ்வாறே பெண்வீட்டிற்குப் பிள்ளைவீட்டார்கள் வந்து விருந்து உண்டு, புத்தாடை அணிந்து செல்வதும் நடைபெறுகின்றன. பெண்ணின் பெற்றோர்கள், பிள்ளையின் பெற்றோர்கள் 'சம்பந்திகள்' என்ற உறவுப் பெயரினைப் பெறுகின்றனர். இவர்கள் தங்களுக்குள் உறவினைக் கலந்து கொள்வது 'சம்பந்தங் கலத்தல்' எனப்படுகிறது. இருவீட்டாரும் சம்பந்தம் கலத்தல் முதன்முறையாக அசைவ உணவு வகைகளை இடம்பெறச் செய்கின்றனர்.

### 5.5.23. தனிவழிச் செல்லுதல்

புதுப் பெண்ணும், புது மாப்பிள்ளையும் இருவரும் சேர்ந்து பெண்ணின் தாய் வீட்டிற்குத் தனியாக சென்று வருமாறு அனுப்பி வைக்கப்படுகின்றனர். இதனைத் 'தனிவழி செல்லுதல்' என்று கூறுகின்றனர். இன்றைய நிலையில் ஒருமுறை மட்டும் கடைபிடிக்கப்படும் இந்தச் சடங்கு முன்பெல்லாம் மூன்று முறை (தனிவழிச் செல்லுதல்) நடைபெற்றுள்ளது எனத் தெரிகின்றது. இந்நிகழ்வு மணமக்களிடையேயுள்ள கூச்சம், வெட்கம் கலைந்து நெருக்கம் அதிகரிக்கும் என்பதற்காகவே நிகழ்த்தப்படுவதாகத் தெரிகிறது.

### 5.6. சீர் கொடுத்தல்

சீர் கொடுத்தல் என்பது வள்ளுவர்களிடம் அக்காலத்தில் பெரிய அளவில் இல்லை எனத் தெரிகிறது. பெண்ணிற்குப் பிள்ளை வீட்டார் நகைகள், பணம் கொடுத்துக் கட்டிக்கொண்டு வந்ததாகவே அறியமுடிகிறது. அக்காலத்தில் திருமணம் முடிந்து அம்போகத்தின் போது கொடுத்தனுப்பும் சீர் வரிசைகள் அனைத்தும் இன்று பெரிய அளவில் திருமணத்தின்போதே மண்டபத்தில் கொடுக்கும் நிலை காணப்படுகிறது.

பெண்வீட்டார் தங்களின் வசதிக்கேற்பச் சீர்வரிசைகள் கொடுப்பினும் பெண்ணிற்குக் கொடுக்கின்ற ஆடி மாதச் சீர், தீபாவளிச் சீர், பொங்கல் சீர் ஆகியவற்றை இன்றளவும் தொன்றுதொட்டுச் செய்து வருகின்றனர்.

### 5.6.1. சீர் கொடுக்கும் முறை

பெண்ணைத் திருமணம் செய்து கொடுத்தபின் வரும் முதல் ஆடி மாதம், முதல் தீபாவளி (தலை தீபாவளி), முதல் பொங்கல் (தலைப் பொங்கல்) ஆகியவற்றின்போது இந்தச் சீர்கள் கொடுக்கப்படுகின்றன. பழவகைகள்,

இனிப்புகள், கார வகைகள், பலகாரங்கள், தங்க நகைகள், புத்தாடைகள், பித்தளைப் பாத்திரங்கள் என அவரவர் தகுதிக்கேற்பச் சீர்கள் கொண்டு வரப்படுகின்றன. ஐந்து, ஒன்பது என ஒற்றைப் படையில் நபர்கள் கொண்டு வருகின்றனர். பிள்ளை வீட்டார் அவர்களை வரவேற்று விருந்தளித்து உபசரித்தபின்னர் பங்காளிகளை அழைத்துச் சீர்களை நடுவீட்டில் பிரித்து வைத்து இறை உருவத்தின் முன் படைக்கின்றனர். பெண்வீட்டாருக்குத் தாம்பூலம் கொடுத்து வழியனுப்புகின்றனர். பின்னர்த் தின்பண்டங்களை வீடுவீடாக வேண்டியவர்களுக்குப் பிரித்தளிக்கின்றனர். இதனை 'ஊர்வழங்குதல்' என்று குறிப்பிடுகின்றனர்.

இவ்வாறே பொங்கல், தீபாவளி ஆகிய சீர்களும் இடம்பெறுகின்றன. பெண்வீட்டார் ஆடி மாதச் சீர் கொடுத்துப் பெண்ணை உடன் அழைத்துச் செல்வர். தீபாவளிச் சீர் கொடுத்து இருவரையுமே அழைத்துச் செல்வர். இந்த சீரில் ''தீபாவளியின் போது எண்ணெய் அல்லது எண்ணெய்ப் பணம் கொடுப்பது வழக்கம். ஒரு பெண்ணின் வாழ்நாள் முழுவதும் எல்லாத் தீபாவளிகளுக்கும் பிறந்த வீட்டார் எண்ணெய்ப் பணம் கொடுப்பது என்பதைக் கடமையாகக் கருதி இன்றளவும் பெரும்பான்மையாகப் பின்பற்றி வருகின்றனர். பெண்ணிற்குத் தந்தை, தமையன் அதன்பின் அவனது மகன் எனத் தலைமுறை மாறினாலும் எண்ணெய்ப் பணம் கொடுக்கின்றனர்''[46]. பெண் கருவுற்றிருப்பின் ஆடிமாதச் சீர் வழங்கப்படுகின்ற வழக்கம் வள்ளுவ வழக்காற்றில் காணப்படவில்லை. பிற சீர்கள் வழங்கப்படுகின்றன.

### 5.7. அரைச் சோறு கொடுத்தல்

பெண் கருவுற்றிருக்கும் செய்தி அறிந்ததும் பெண்வீட்டார் ஐந்தாம் மாதம் ஏதேனும் ஒரு நன்னாளில் வருவதாக முன்கூட்டியே அறிவித்து அதன்படி அரைச்சோறு கொண்டு வருகின்றனர். இதில் எலுமிச்சை, தயிர், தக்காளி, புதினா, தேங்காய் என ஏதேனும் ஐந்து வகையான சோற்றுடன், எலுமிச்சை, மாங்காய், கிடாரங்காய், புதினா, நெல்லிக்காய் என எவையேனும் ஐந்து வகை ஊறுகாய்கள், பழவகைகள், இனிப்புகள், கார வகைகள், சடை பின்னலுக்கான பூ, வெற்றிலைப் பாக்கு என அனைத்தும் கொண்டு வருகின்றனர். பிள்ளைவீட்டார் பெண்வீட்டாரை வரவேற்று உபசரிக்கின்றனர். பின்னர்,

---

[46]. எஸ். முருகன், வயது. 37, காரைக்காடு, கடலூர் வட்டம்.

பெண்ணை அழைத்து அலங்காரம் செய்து, நடுவீட்டில் பண்டங்கள் வைத்துப் படைத்துப் பெண்ணிற்குக் கொடுக்கப்படுகின்றன. அதன்பின்னர் உணவு வழங்கல் நடைபெறுகிறது. இதனை 'அரைச்சோறு கொடுத்தல்' என்றே குறிப்பிடுகின்றனர். ஐந்தாம் மாதத்தில் கொடுப்பதனால் இவ்வாறு குறிப்பிடுவதாகக் கருதலாம்.

இவ்வாறே ஐந்தாம் மாதத்தில் பெண்ணின் உடன்பிறந்த ஒன்றுவிட்ட நாத்தனார்கள் தனித்தனியாகவோ அல்லது ஒன்று சேர்ந்தோ பெண்வீட்டார்கள் அரைச்சோறு கொடுத்தது போலவே செய்கின்ற வழக்கம் காணப்படுகிறது. இதனைப் 'பூ முடித்தல்' என்று குறிப்பிடுகின்றனர்.

## 5.8. வளையல் அணிவிழா

வளையல் அணிவிழாவை 'வளைகாப்பு', 'சீமந்தம்' என்றெல்லாம் குறிப்பிடுகின்றனர். கரு உண்டான ஒன்பதாம் மாதம் மாப்பிள்ளை வீட்டில் இந்நிகழ்வு நடைபெறுகின்றது. சில குடும்பத்தார் சூழல் காரணமாக ஏழாம் மாதம் சீமந்தம் செய்யும் நிலையும் காணப்படுகிறது.

பெண்வீட்டாருடன் கலந்து பேசிச் சீமந்தம் செய்ய ஒரு நன்னாளினை மாப்பிள்ளை வீட்டார் தேர்வு செய்கின்றனர். அதன்படி அழைப்பிதழ் அச்சடிக்கப்படுகிறது. முற்காலத்தில் அழைப்பிதழ்கள் இல்லாமல் வெற்றிலைப் பாக்கு வைத்து வாய்மொழியாகவே அழைக்கும் வழக்கம் இருந்துள்ளது. முதலில் அழைப்பிதழ்கள் குலதெய்வத்திற்குப் படைக்கப்படுகின்றன. அதன்பின்னர், பெண்வீட்டாருக்கு அழைப்பிதழ் கொடுத்த பின்னரே பிற உறவினர்களுக்குக் கொடுக்கப்படுகிறது.

முன்பெல்லாம் சாயுங்காலம் அல்லது இரவினில் வளையல் அணிவிழா நடைபெற்று வந்தது. வசதிக்கேற்பத் தற்போது காலை பத்து மணிக்குமேல் எப்பொழுது வேண்டுமானாலும் நல்ல நேரத்தில் நடைபெற்று வருகின்ற நிலை காணப்படுகிறது. வழக்கமாக வள்ளுவப் புரோகிதரே இதனையும் குருவாக இருந்து நடத்தி வைக்கின்றார்.

### 5.8.1. வளைகாப்புச் செய்யும் முறை

பெண்ணின் தாய் வீட்டார் சீர்வரிசையுடன் வந்ததுமே இவ்விழா தொடங்கப்படுகிறது. வாசலில் பந்தலின் கீழ்ப் பசுவின் சாணத்தால் சதுர வடிவில் மூன்றடிக்கு மூன்றடித் தரையை மெழுகுகின்றனர். அதன்மீது

மாக்கோலமிடுகின்றனர். புரோகிதர் வாழை இலையில் மஞ்சளினால் பிள்ளையார் பிடித்து அதன்மீது அருகம்புல் செருகிப் பூப் போடுகின்றார். அதன்பின்னர் இரு குத்துவிளக்குகள், காமாட்சியம்மன் விளக்கு ஏற்றி வைக்கப்படுகின்றன. வாழை இலையில் பச்சரிசி பரப்பி அதன்மீது கலசம் வைக்கப்படுகிறது. ஒரு புதிய பானை அல்லது குடத்தினை வாழையிலையால் மூடி, பானையின் கழுத்தில் நூலினைச் சுற்றி வைக்கின்றனர். ஒரு குவளையில் பால் வைக்கப்படுகிறது. உடன் பாலாடையும் வைக்கப்படுகிறது. இவற்றைத்தவிர, எக்கியம் வளர்ப்பதற்குப் பால்மரச் சுள்ளிகளும் நெய், எண்ணெய் ஆகியனவும் ஆயத்தமாக வைக்கப்படுகின்றன. பெண்வீட்டார் கொண்டு வந்த இனிப்பு வகைகள், பழவகைகள், பலகாரங்கள், சீர்வரிசைகள் அனைத்தும் சபையினர் முன் வைக்கப்படுகின்றன. இவற்றை ஆயத்தம் செய்த வள்ளுவப் புரோகிதர் மனைப்பலகையில் வடக்குத் திசையைப் பார்த்தவாறு அமர்கின்றார்.

ஆயத்த நிலையில் உள்ள வேள்விப் பொருட்களுக்கு மேற்கு திசையில் மூன்று படி நெல் பரப்பி அதன் மேல் மனைப்பலகை போடப்படுகிறது. அதன்மீது வண்ணார் கொண்டு வரும் வெண்ணிறத் துண்டு அல்லது சோமம் (வேட்டி) போடப்படுகிறது. வளைகாப்புப் பெண் அலங்காரம் செய்யப்பட்டுத் திருமணப் பட்டுப்புடைவை அணிந்து அழைத்து வரப்படுகிறாள். சபையினரை வணங்கிய பின்னர் கணவனால் மாலை அணிவிக்கப்பட்டுக் கிழக்கு முகம் பார்த்தவாறு மனையில் அமர்த்தப்படுகின்றாள்.

முதலில் புரோகிதர் பிள்ளையாருக்குப் பூப் போட்டு வணங்கச் செய்கின்றார். அதன்பின்னர், தூப தீபம் காட்டி, எக்கியம் வளர்க்கப்படுகிறது. எக்கியத்தில் பசுநெய், அவல், பொரி கடலை, பணம், நவதானியங்கள் என அனைத்தும் புரோகிதர் கொடுக்கப் பெண் இறைவனை வணங்கிப் போடுகின்றாள். அப்போது புரோகிதர் சில மந்திரங்களையும், பாடல்களையும் முழங்கியவாறே சடங்குகளைச் செய்து கொண்டிருக்கின்றார்.

### 5.8.2. முதுகுநீர் குத்துதல்

வளைகாப்புக்குரிய பெண்ணைக் கிழக்கு முகம் பார்த்தவாறு குனியவைத்து அவள் தலையருகில் வாழை இலையால் மூடி வேடுகட்டிய பானை அல்லது குடத்தில் அவளது ஆள்காட்டி விரலால் ஓட்டை போடச் செய்கின்றனர். குனிந்துள்ள பெண் முதுகில் வாழையிலை நுனி குடத்தருகில் உள்ளவாறு வைக்கின்றனர். மங்களகரமான பெண்கள் ஒன்பதுபேர்

பாலாடையால் வாழையிலைத் தண்டினில் பால் ஊற்றுகின்றனர். பால் குடத்தைச் சென்றடைகிறது. இதனை ‘முதுகுநீர் குத்துதல்’ என்றழைக்கின்றனர்.

### 5.8.3. நலங்கு வைத்தல்

முதுகுநீர் குத்திய பின்னர் சில குடும்ப வழக்கப்படிப் பெண் புத்தாடை அணிந்து வருவதும் உண்டு. பல குடும்பங்களில் புத்தாடை அணியும் வழக்கம் காணப்படவில்லை. பெண் மீண்டும் மனையில் அமர்கின்றாள். மங்களகரமான பெண்கள் ஒற்றைப் படையில் நலங்கு வைக்கின்றனர். முதலில் தாய் வீட்டாரே நலங்கு வைக்கின்றனர். பெண்ணின் தாய் அல்லது அண்ணி அல்லது மிக நெருக்கமான உறவினர்களில் யாரேனும் ஒருவர் நலங்கு வைக்கின்றனர். முதலில் பிள்ளையாருக்கு அட்சதை போட்டு, பிறகு பெண்ணிற்கு அட்சதை போடுகின்றனர். பிள்ளையாருக்குக் குங்குமம் வைத்து, காமாட்சியம்மன் விளக்கிற்கும் குங்குமம் வைத்து, பெண்ணிற்குக் குங்குமம் வைத்து, தங்கள் நெற்றியிலும் வைத்துக்கொள்கின்றனர். பின்னர் சந்தனத்தைப் பெண்ணின் இரு கன்னத்திலும் பூசுகின்றனர். கரங்களில் வேப்பிலைக் காம்புகளால் செய்யப்பட்ட வளையல்களை அணிவிக்கின்றனர். பின்னர், ஐம்பொன்னால் (பஞ்சலோகம்) செய்யப்பட்ட வளையல்கள் அல்லது தங்க வளையல்கள் அணிவிக்கப்படுகின்றன. அதன்பின்னரே கண்ணாடி வளையல்கள் அணிவிக்கப்படுகின்றன. பின்னர் வாழை இலையில் வைத்துள்ள குழவி குழந்தையாகப் பாவிக்கப்பட்டுப் பெண்ணின் கைகளில் கொடுத்து வாங்கப்படுகிறது. இறுதியில் ஆரத்தி எடுக்கப்படுகிறது. இவ்வாறே பின்வருபவர்கள் நலங்கு வைத்துக் கண்ணாடி வளையல்கள் மட்டும் அணிவிக்கின்றனர். வள்ளுவர் சமூகத்தில் ஆண்கள் நலங்கு வைக்கும் வழக்காறு இல்லை.

### 5.8.4. உணவு பரிமாறுதல்

வளைகாப்பிற்கு வந்திருந்த ஊர்ப் பெரியோர்களுக்கும், நலங்கு வைத்த பெண்களுக்கும் உறவினர்களுக்கும் தாம்பூலம் வழங்கப்படுகிறது. நலங்கு வைப்பவர்களுக்கு மட்டும் சிறப்பாகத் தாம்பூலம் வழங்கப்படுகிறது. அதில் வெற்றிலைப் பாக்கு, இரவிக்கைத் துணி, தட்டு, வாழைப்பழம், இனிப்புப் பண்டம் ஆகியன இடம்பெற்றிருக்கும்.

தாம்பூலம் வழங்கிய பின்னரே உணவு பரிமாறப்படுகிறது. வளைகாப்பு விழாவில் சைவ உணவு வகைகளே பரிமாறப்படுகின்றன. அசைவ உணவு வகைகள் இடம்பெறுவதில்லை. மாப்பிள்ளை வீட்டார் சமைத்து வைத்துள்ள உணவு வகைகளுடன் பெண் வீட்டார் கொண்டுவந்த இனிப்பு வகைகள், ஒன்பது வகைச் சோறுகள், ஒன்பது வகையான ஊறுகாய்களும் இடம்பெறுகின்றன. உணவு உண்ட பின்னர் நண்பர்களும், உறவினர்களும் வளைகாப்புப் பெண்ணிற்குப் பரிசுப் பொருட்கள் தருவதுடன் மொய்யாகப் பணமும் கொடுக்கின்றனர். பின்னர் பெண் வீட்டாருடன் பெண் அழைத்துச் செல்லப்படுகிறாள். பிள்ளைவீட்டார் தாம்பூலம் கொடுத்துப் பெண்ணை வழியனுப்பி வைக்கின்றனர்.

### 5.9. மறுமணம்

‘‘ஓர் ஆண் அல்லது பெண் ஏற்கெனவே திருமணம் செய்து ஏதாவது ஒரு காரணத்தால் தங்கள் இணையை இழந்திருந்தால் அல்லது இணையினால் கைவிடப்பட்ட நிலையில் மீண்டும் திருமணம் செய்து கொள்ளும் நிகழ்வு மறுமணம் என்றழைக்கப்படுகிறது. இந்த மறுமணத்தை சில சமயங்கள் ஆதரிக்கின்றன. சில சமயங்கள் மறுக்கின்றன’’[47]. வள்ளுவச் சமூகத்தில் கணவனை இழந்த பெண்களின் மறுமணத்தை ஆதரிக்கும் நிலை பெரும்பான்மையான்மையாகக் காணப்படவில்லை. அப்பெண்ணிற்குக் குழந்தை இல்லாத நிலையில் மறுமணத்திற்கு ஆதரவுதரும் நிலை அங்கொன்றும் இங்கொன்றுமாகக் காணப்படுகிறது. அதுவும் திருமணமான மாப்பிள்ளைக்கே திருமணம் செய்து வைக்கப்படுகிறது. திருமணமாகாத ஆண்கள் இந்த மறுமணப் பெண்களைத் திருமணம் செய்துகொள்ள முன்வரும் நிலையும் அதனை முழுமனத்துடன் ஏற்றுக் கொள்ளும் உறவுகளின் நிலையும் காணப்படவில்லை. மறுமணம் செய்துகொள்ளும் ஆண்களுக்குப் பெரும்பான்மையாக மணமாகாத கன்னிஸ்திரீப் பெண்களையே திருமணம் செய்து வைக்கின்ற நிலையும் காணப்படுகிறது. இந்த மறுமணம் பெரும்பான்மையாக அவரவர் சமயஞ்சார்ந்த கோயில்களில் மிக எளியமுறையில் நடைபெறுகின்றன.

---

[47]. த. கலியமூர்த்தி, வயது. 62, ஒழிந்தியாப்பட்டு, வானூர் வட்டம்.

### 5.9.1. நடுவீட்டுத் தாலி கட்டுதல்

மறுமணங்கள் பெரும்பான்மையாகப் பிரபலமான முறையில் நடைபெறுவதில்லை. சிலர் கோவில்களில்கூட நடத்தாமல் வீட்டிலேயே மிகமிக எளிய முறையில் நடத்துகின்றனர். மிக நெருக்கமான உறவினர்களில் சிலரை மட்டுமே கூட்டிக் கூறை, தாலி, வேட்டி, சட்டை, இருமாலைகளுடன் 'நடுவூடு' என்று சொல்லக்கூடிய சாமியறையில் இறையுருவத்தின் முன் புத்தாடைகளுடன் மாலை மாற்றிக்கொண்டு தாலி கட்டப்படுகிறது. இவ்வாறு நடுவூட்டில் தாலிகட்டுவதால் இது 'நடுவூட்டுத் தாலி' என்றும் அழைக்கப்படுகிறது. சில காதல் திருமணங்களும் வள்ளுவச் சமூகத்தில் இம்முறையில் நடைபெறுவதுண்டு.

### 5.9.2. அறுபதாங் கல்யாணம்

இந்து சமய ஆகமங்களிலும், புராணங்களிலும் மனிதர்கள் செய்ய வேண்டிய நாற்பத்தியொரு சடங்குகள் சொல்லப்படுகின்றன. இவற்றில் குழந்தைப் பருவத்தில் சில சடங்குகள், இளம்பருவத்தில் சில சடங்குகள், இறப்பின்போது சில சடங்குகள், இறப்பிற்குப் பின்னரும் சில சடங்குகள் என நடத்தப்படுகின்றன. இதில் முதுமையில் நடத்தப்படும் சடங்குகளில் ஒன்று அறுபதாம் கல்யாணம் ஆகும். இந்த அறுபதாம் கல்யாணம் 'ஷஷ்டியப்த பூர்த்தி' அல்லது 'உக்ரசாந்தி' என்று அழைக்கப்படுகின்றது.

இந்த அறுபதாம் கல்யாணம் ஆண்களுக்கு அறுபது வயது நடைபெறும்பொழுது செய்யப்படுகிறது. பிள்ளைகள், பேரக்குழந்தைகள் மற்றும் உறவினர்கள் அனைவருமாகச் சேர்ந்து வயதான தம்பதியினருக்குச் செய்து வைக்கின்றனர். இவ்விழா அவர்களுக்கு மனநிறைவைத் தருவதாக இருக்கின்றது. அறுபதாங்கல்யாணங்கள் திருக்கடையூர் சிவத் தலத்தில் மிக அதிக அளவில் வளர்பிறை நன்னாட்களில் நடைபெறுகின்றன. வள்ளுவர் சமூக மக்களும் இத்தலத்திலேயே அறுபதாங்கல்யாணத்தை நடத்துகின்றனர். ஒரு சிலர் அருகில் உள்ள பிற தலங்களில் நடத்துவதும் உண்டு.

''மனிதன் ஆசாபாசங்களை ஏற்று அனுபவிக்க வேண்டிய நிர்பந்தத்தில் இருக்கிறான். அறுபதாவது வயது அவனின் திருப்புமுனையாக அமைகிறது. திருமணத்தின் அடிப்படையில் குடும்பத்தைப் பேணுதல், பிள்ளைகளை ஆளாக்குதல் ஆகிய அவனனுடைய கடமைகள் நிறைவேறுகின்றன.

அதன்பின்னர் உறவுகளையும், வாழ்வியல் இன்பங்களையும் விடுத்து இறைவனை முழுமையாகச் சரணடைய வேண்டும். இந்த ஆன்மீகக் கடமையை நினைவுபடுத்தும் விழாவாக அறுபதாங் கல்யாணம் நிகழ்த்தப்படுகிறது என்ற கருத்தும் நிலவுகிறது''[48].

## 5.10. வீடு குடிபுகுதல்

வள்ளுவச் சமூகத்தினர் பிறசமூகத்தினரைப் போன்றே பெரிய அளவில் மாடிவீடுகள் கட்டிமுடித்தால் அழைப்போலை (பத்திரிகை) கொடுக்கப்படுகிறது. 'குடிபுகுதல்', 'கிரகப்பிரவேசம்', 'புதுமனை புகுவிழா' என்று இதனை அழைத்தாலும் 'புதுமனைப் புகுவிழா' என்றே பத்திரிகையில் அச்சடிக்கப்படுகிறது.

*''ஆடி அடிகோலக் கூடாது*
*கூனி குடிபோகக் கூடாது''*

என்ற பழமொழிக்கினங்க களப்பகுதியில் உள்ள எல்லாச் சமூகத்தினரும் பங்குனி மாதத்தில் குடிபுகுவதில்லை. இதனை வள்ளுவர்களும் கடைபிடித்து வருகின்றனர். மேலும் ஆனி, புரட்டாசி, மார்கழி மாதங்களிலும் குடிபுகும் வழக்கம் இவர்களிடம் காணப்படவில்லை. பிற மாதங்களில் வளர்பிறை நேத்திரம் ஜீவன் உள்ள நன்னாளில் குடிபுகுகின்றனர்.

இரவு பன்னிரண்டு மணிக்கு மேல் பழைய பேன்ட், சட்டைக்குள் வைக்கோலைத் திணித்து ஓர் ஆள் உயர ஆண் பொம்மை செய்கின்றனர். அந்தப் பொம்மையின் கழுத்தில் சுமார் மூன்று அல்லது நான்கடி நீளக் கயிறு கட்டப்படுகிறது.

வீட்டிற்கு உரியவர்கள் அதாவது கணவன், மனைவி, பிள்ளைகள் குடும்பத்தினரை வீட்டிற்குள் உட்காரவைத்து, எலுமிச்சை, ஊமத்தங்காய், துமிட்டிக்காய் ஆகியவற்றை ஒவ்வொன்றாகத் தலைகளைச்சுற்றி வள்ளுவப் புரோகிதரால் போடப்படுகிறது. பின்னர் கற்பூரம் சுற்றிப் போடுகின்றனர்.

---

[48]. த. கலியமூர்த்தி, வயது. 62, ஒழிந்தியாப்பட்டு, வானூர் வட்டம்.

### 5.10.1. கொடும்பாவி இழுத்தல்

பின்னர் ஒரு தாம்பாளத்தில் அரிசி, பருப்பு, மளிகைப்பொருட்கள், காய்கறிகள், வெற்றலைப்பாக்கு, பணம் (கணிசமான தொகை), புதிய வேட்டி, துண்டு அனைத்தும் வைத்துக் கொண்டுவரப்படுகின்றன. மனையேறுபவரின் கைகளால் (கணவன், மனைவி) கொடும்பாவி இழுப்பவருக்குக் காணிக்கையாகக் கொடுக்கப்படுகிறது. வள்ளுவர்கள் இல்லங்களில் கொடும்பாவியைப் பிற தாழ்த்தப்பட்ட சமூக மக்களில் யாரேனும் ஒருவர் இழுப்பது வழக்கம்.

காணிக்கையைப் பெற்றவர் கொடும்பாவியைக் கொளுத்தி வீடுமுழுவதும் எல்லா அறைகளுக்கும் இழுத்துச்சென்று பின்னர் வீட்டு வாசலுக்கு இழுத்து வருகின்றார். வள்ளுவப் புரோகிதர் எலுமிச்சைப் பழத்தை நான்காக வெட்டி அதில் குங்குமம் தடவி வீட்டின் நான்கு திசைகளிலும் போடுகின்றார். அதன்பின்னர், கொடும்பாவி ஊருக்கு ஒதுக்குப்புறமாக இழுத்துச் சென்றுவிடப்படுகிறது. கொடும்பாவி இழுத்தவர் அன்றைய தினம் முழுவதும் குடிபுகும் வீட்டின் பக்கம் வருதல் கூடாது என்று கூறப்படுகிறது.

கொடும்பாவி இழுத்த பின்னர் வீட்டினைப் பெருக்கி, கழுவிச் சுத்தம் செய்து, அலங்கரித்து தலைவாசக்காலுக்கு மாலை போடப்படுகிறது.

### 5.10.2. தாய்வீட்டு வரிசை

மனையேறப்போகும் பெண்ணின் தாய்வீட்டார் குடிபுகவிருக்கும் வீட்டிற்கு மிக அருகில் உள்ள ஏதேனும் ஒரு கோவிலில் இருந்து அதிகாலை நான்கு மணியளவில் மாலைகள், தட்டு வரிசைகள், புத்தாடைகள், ஐந்து சிறுபானைகளில் உப்பு, புளி, மிளகாய், பருப்பு, அரிசி அல்லது நெல் ஆகியவற்றை எடுத்துக்கொண்டு மேளதாளத்துடன் வருகின்றனர். மனையேறுபவர்கள் அவர்களை வரவேற்கின்றனர். தட்டுவரிசைகளும், தானியப் பானைகளும் சாமி அறைக்குள் கொண்டுசென்று வைக்கப்படுகின்றன.

### 5.10.3. காராம் பசுவை அழைத்தல்

தாய்ப் பசுவினையும் அதன் கன்றினையும் தம்பதியினர் நன்கு கழுவிக் குளிப்பாட்டுகின்றனர். அவற்றிற்கு மஞ்சள்பூசி, குங்குமம் வைத்துக் கழுத்துக்குப் பூமாலை அணிவிக்கின்றனர். கற்பூர தீபம் ஏற்றிக் குடும்பத்துடன் வணங்குகின்றனர். வீட்டிற்குள் எல்லா அறைகளுக்கும் கன்றினையும்

பசுவினையும் அழைத்துச் செல்கின்றனர். அவற்றிற்கு வெல்லம் கலந்த பச்சரிசியையும் அகத்திக்கீரையையும் உண்பதற்குக் கொடுக்கின்றனர். பசுவும் கன்றும் வீட்டிற்குள் சாணம் போடுவதையும், கோமியம் விடுவதையும் லஷ்மி கடாட்சமாகக் கருதுகின்றனர்.

### 5.10.4. எக்கியம் வளர்த்தல்

வள்ளுவப் புரோகிதரால் மஞ்சளில் பிள்ளையார் பிடித்து, பச்சரிசி பரப்பி அதன்மீது கலசம் வைக்கப்படுகிறது. வீட்டின் மையப்பகுதியில் மணல் பரப்பி அதன்மீது செங்கற்களைச் சதுரவடிவில் அடுக்கி ஓமகுண்டம் செய்யப்படுகிறது. ஓமகுண்டத்தின் நான்கு திசைகளிலும் வெற்றிலைப்பாக்கு, பழம், தட்சணைப் பணம் வைக்கப்படுகின்றன. ஓமகுண்டத்தினுள் பால்மரச் சுள்ளிகள் அடுக்கி வைக்கப்படுகின்றன. நெய்வார்த்துத் தீமூட்டப்படுகிறது. இந்த வேள்வித் தீயில் வன்னிமரக்குச்சிகள் அவசியம் இடம்பெற வேண்டும். அதனால் வெளியாகும் புகை வீடுமுழுவதும் பரவினால் லஷ்மி கடாட்சம் வரும்; வீட்டிற்குள் இருக்கும் கெட்ட ஆவிகள் வெளியேறும் என வள்ளுவர்கள் நம்புகின்றனர்.

குளித்துப் புத்தாடை, பட்டுவேட்டி, சட்டை, துண்டு, பட்டுப்புடைவை அணிந்து மாலை மாற்றிக் கொண்ட தம்பதியினர் ஓமகுண்டத்தின் மேற்கில் கிழக்கு முகம் பார்த்தவாறு மனைப்பலகையின்மீது அமர்கின்றனர், புரோகிதர் கொடுக்கும் நவதானியங்ள், பழங்கள், அவல், பொரி, தர்ப்பைப்புல், நெய் உள்ளிட்ட வேள்விப் பொருட்களை ஓமகுண்டத்தில் போடுவதுடன் புரோகிதர் கூறும் மந்திரங்களையும் கூறுகின்றனர். இவ்வாறு எக்கியம் வளர்த்தப்படுகிறது.

### 5.10.5. பால் காய்ச்சுதல்

காராம்பசுவினை வாசலுக்கு மீண்டும் அழைத்துச் சென்று பால்கறக்கப்படுகிறது. அந்தப் பாலைச் சமையலறையில் புது அடுப்பு வைத்து, தாய்வீட்டார் கொண்டு வந்த புதிய பாத்திரத்தில் மனையேறிய பெண் பால் பொங்கி வழியுமாறு காய்ச்சுகின்றாள். பின்னர் பால் இறையுருவத்தின்முன் படைக்கப்பட்டு நெருங்கிய உறவினர்களுக்கு வழங்கப்படுகிறது.

வள்ளுவச் சமூகத்தில் கூரைவீடுகள், ஓட்டுவீடுகள் கட்டினால் அதில் குடிபுகுவதை உறவினர்களுக்குப் பெரும்பான்மையாகத் தெரிவிப்பதில்லை. வீட்டினைக் கழுவி அல்லது மெழுகித் தூய்மைசெய்து தோரணங்கள் கட்டி அழகுபடுத்துகின்றனர். அதிகாலையில் புது கொசஅடுப்பு (குயவர் செய்த

அடுப்பு) வாங்கி வந்து, புதுப்பாத்திரத்தை வைத்துப் பால்காய்ச்சி அக்கம்பக்கத்தினருக்குக் கொடுப்பர். இவ்வாறு எளியமுறையில் குடிபுகுவதைப் 'பால்காய்ச்சுதல்' என்று குறிப்பிடுகின்றனர்.

### 5.10.6. சிற்றுண்டி வழங்குதல்

குடிபுகுவிழாவில் கலந்துகொண்ட அனைவருக்கும் சைவச் சிற்றுண்டி பரிமாறப்படுகிறது. சிற்றுண்டி சாப்பிட்டதும் அனைவரும் மொய்ப்பணமும், பரிசுப் பொருட்களும் குடிபுகுந்தவருக்குக் கொடுக்கின்றனர். பின்னர் புரோகிதருக்குப் பழங்கள், புத்தாடை, வெற்றிலைப் பாக்கு, பழம், தட்சணைப்பணம் ஆகியவற்றை ஒரு தாம்பாளத்தில் வைத்துக் கொடுத்துக் குடும்பத்துடன் வணங்குகின்றனர். இந்தக் குடிபுகும் நிகழ்வுகள் அனைத்தும் இன்றைய நிலையில் புகைப்படங்களாகவும், வீடியோவாகவும் பதிவு செய்யப்படுகின்றன.

## 5.11. தொகுப்புரை

- ❖ வள்ளுவர்கள் தங்கள் சடங்குகளைச் செய்யப் பிராமணப் புரோகிதர்களை அமர்த்தும் வழக்கம் இல்லை. வள்ளுவப் புரோகிதர்களை அமர்த்தும் நிலையே தொன்று தொட்டுக் காணப்படுகிறது. வள்ளுவப் புரோகிதர்கள் தங்கள் சமூகத்தினருக்குப் புரோகிதம் செய்யக் குருதட்சணையாக எவ்வளவு குறைந்த பணம் கொடுத்தாலும் மனமுவந்து பெற்றுக் கொள்கின்றனர். பிற சமூகத்தவரிடம் பெறும் அளவிற்கு எதிர்பார்ப்பதில்லை எனலாம்.

- ❖ வள்ளுவச் சமூகத்தவரின் வாழ்வுசார் சடங்குகளனைத்தையும் மேலோட்டமாக நோக்கும்பொழுது பிற சமூகத்தவரின் சடங்கு முறைகளைப் போன்றே ஒன்றுபட்ட தன்மைகளை உடையனவாகக் காணப்படுகின்றன. சற்றுக் கூர்ந்து நோக்கினால், பல்வேறு வகைகளில் வள்ளுவச் சமூகத்தாரின் சடங்குமுறைகள், பிற சடங்குமுறைகளிலிருந்து வேறுபடுவதையும் காணமுடிகிறது.

- ❖ மரபு மாற்றங்களாகக் கருதப்படும் புதிய கலாச்சாரங்களை வள்ளுவர்கள் ஏற்றுக் கொள்கின்றனர். பழைய மரபுகளை எவ்வித சடங்குகளிலும் புறந்தள்ளுவதில்லை. இவ்வித மரபு மாற்றங்கள் காலச்சூழலால் நடைபெற்று வருகின்றன என்று உணரமுடிகிறது.

- காலங்காலமாகப் பின்பற்றிவரும் சடங்குமுறைகளிலும், நம்பிக்கைகளிலும் அடங்கியுள்ள அறிவியல் பூர்வமான உண்மைகளை முழுவதும் உணராமலேயே இன்றைய நிலையில் வள்ளுவர்கள் அச்சடங்கு முறைகளைப் பின்பற்றிவரும் நிலை களப்பகுதியில் காணப்படுகிறது.

# 6. இறப்புசார் சடங்குகள்

## 6.1. முன்னுரை

தொன்மை மக்கள் தங்களின் வாழ்வுக்கும் இறப்புக்கும் ஆவிகளே காரணம் என்று கருதினர். ''மனிதன் இறக்கும்போது கண்ணுக்குப் புலப்படாத 'சக்தி' (ஆவி) வெளிப்படுவதாலேயே அவன் இறக்கிறான் என்றும், அச்சக்தி உடலினுள் இருக்கும்வரை உயிருள்ளவனாக இருக்கிறான் என்றும் கருதினர்''[1]. இவ்வாறு உடலைவிட்டு உயிர் (ஆவி) பிரிவதை 'இறப்பு' என்று கருதிவருகின்றனர்.

''மனிதனுக்கு 'நிலையற்ற சதைப்பகுதி', 'ஆத்மீகமான ஆவி' ஆகிய இரு உடற்கூறுகள் உள்ளன எனத் தொன்மை மக்கள் தீர்மானித்தனர். இந்த நம்பிக்கையால் விளைந்தவையே 'பச்சைச் சடங்குகள்', 'உலர்ந்த சடங்குகள்' என்னும் இருவகை ஈமச்சடங்குகளாகும். இறந்தவுடன் பச்சைச் சடங்கையும், இறந்தவரின் ஆவி இனிமேல் திரும்பி வராது என முடிவுசெய்த பின்னர் உலர்ந்த சடங்கையும் செய்தனர்''[2]. பச்சைச் சடங்கு என்பது உடல் ஆவி பிரிந்து இறப்புக்குள்ளான சதைப்பகுதிக்குச் செய்யப்படுவதாகும். உலர்ந்த சடங்கானது ஒருவரது ஆவி இறந்தபின்னும் சிலகாலம் அவர்கள் பகுதியில் உலவும்; பின்னர், இறுதியாக ஓரிடத்தில் உறையும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் அவரது ஆவிக்குச் செய்யப்படுவதாகும். இக்கருத்தாக்கம் பெருஞ்சமயங்களிலும் வேரூன்றியுள்ளது. இக்கருத்தினை வள்ளுவச் சமூகத்தினரும் தொன்றுதொட்டுக் கடைபிடித்து வருகின்ற நிலை காணப்படுகிறது.

## 6.2. அனை முறித்தல்

வள்ளுவச் சமூகத்தில் இறந்தவுடன் ஆணாக இருப்பின் முகச்சவரம் செய்வர். முகத்தைக்கழுவித் தலைவாரி, நெற்றியில் திருநாமமோ அல்லது திருநீற்றுப் பூசையோ போடுவர். சுமங்கலிப் பெண்ணாக இருப்பின் முகத்தில் மஞ்சள் பூசி, குங்குமம் இடுவர். விதவையாக இருப்பின் ஒற்றைத் திருநாமம் மட்டும் இடுவர். கை, கால்களை மடக்கி அமர்ந்த நிலைக்குக் கொண்டுவந்து வீட்டுச் சுவரில் சாய்த்து உட்கார்த்தி வைப்பர். இருபுறமும் உடல் சாய்ந்து

[1]. சீ. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானிடவியல், ப. 506.
[2]. மேலது.

விடாமலிக்க இரண்டு உலக்கைகள் முட்டு கொடுக்கப்படுகின்றன. இறந்த உடலை நாற்காலியில் உட்காரவைக்கும் வழக்கம் காணப்படவில்லை. இதனை 'அனைமுறித்தல்' என்கின்றனர். அனைமுறித்தலின்போது இரு கண்கள், நெற்றி ஆகிய பகுதிகளில் ஒரு ரூபாய் வில்லைகள் வைக்கப்படுகின்றன.

இறந்து நீண்ட நேரம் ஆனாலோ, நீண்ட நாட்கள் உடல்நலமில்லாமல் இருந்து இறந்துவிட்டாலோ, விபத்தில் இறந்தாலோ, சிறார்கள் இறந்தாலோ அனைமுறிக்கப்படுவதில்லை. அலங்காரம் செய்து பெஞ்சில் (விசுப்பலகை) படுக்க வைக்கின்றனர். கைகள், கால்கள் பிரியாமலிருக்கச் சிறு வெள்ளைத் துணிகளால் கட்டுப் போடப்படுகிறது. இன்றைய நிலையில் சவத்தை வைக்கும் கண்ணாடிக் குளிரூட்டிப் பெட்டியில் வைக்கின்றனர்.

### 6.2.1. அப்புத் தாம்பூலம்

இறந்த உடலின் வாயிலிருந்து கிருமிகள், துர்நாற்றம் வெளிவராமலிருக்கத் துளசி அல்லது வெற்றிலைப்பாக்கை இடித்து வைத்து வெள்ளைத் துணியால் வாயைக் கட்டுகின்றனர். இவ்வாறு இறுதியாக வாயில் வைக்கப்படும் இந்த வெற்றிலைப் பாக்கிற்கு 'அப்புத் தாம்பூலம்' என்று பெயர் கூறப்படுகிறது.

### 6.2.2. பூசை செய்தல்

அனைமுறித்த பின்னர் நல்விளக்கு (காமாட்சியம்மன் விளக்கு) ஏற்றுகின்றனர். வெற்றிலைப் பாக்கு, வாழைப்பழம், தேங்காய் உடைத்து வைக்கின்றனர். தூபதீபம் காட்டி இறந்தவருக்கு மாலை போடுகின்றனர். குடும்பத்தினர், பங்கும் பங்காளிகள், உற்றார், உறவினர் அனைவரும் இறந்தவரின்முன் விழுந்து வணங்குகின்றனர். அப்போது இறந்தவர் ஆழ்வாராக இருப்பின் தப்பு, சேமக்கலம் இசைக்கப்பட்டு, நாலாயிரதிவ்விய பிரபந்தம், கருடபத்து, திருநாமப் பதிகம் ஆகியவற்றிலிருந்து பாசுரங்கள் பாடப்படுகின்றன. இறந்தவர் நாயனாராக இருப்பின் சங்கு, சேகண்டி (சேமக்கலம்) முழங்க, தேவாரம், திருவாசகம், நடராசர் பத்து ஆகியன பாடப்படுகின்றன. தப்பு, சேமக்கலம், சங்கு, சேகண்டி ஆகிய இசைக் கருவிகள் இறந்தவரை அடக்கம் செய்யும்வரை இசைக்கப்படுகின்றன.

### 6.2.3. எழவு காணல்

பூசை செய்த பின்னரே குடும்பத்தாரும், ஊராருமாகப் பெண்கள் ஒன்றுகூடிச் சவத்தின் முன் வட்ட வடிவில் உட்கார்ந்து ஒருவர் மீது ஒருவர் கைபோட்டுக் கட்டிக்கொண்டு அழுகின்றனர். இது 'எழவு காணுதல்', 'கட்டிக்கினு அழுதல்' (கட்டிக்கொண்டு அழுதல்) என்று கூறப்படுகின்றது. நீண்ட நேரம் அழுதால் அவர்களின் உடல்நலம் பாதிக்கும் என்பதால் அவர்களின் நலன் கருதி யாரேனும் ஒருவர் அவர்மீது தண்ணீர் தெளித்து அவரது அழுகையைக் களைப்பர்.

### 6.2.4. இறப்பு அறிவித்தல்

உள்ளூர், வெளியூர்களில் உள்ள உறவினர்கள், நண்பர்களுக்கு எழவு சொல்லத் (இறப்பு அறிவிக்க) தங்களின் சீடர்களான பறையர் சமூக மக்களையே முன்பெல்லாம் அனுப்பியுள்ளனர். பனையோலையில் இறந்தவர் பெயர், வயது, முகவரி ஆகியவற்றை எழுதியும், எந்த ஊரில் யார் யாருக்கெல்லாம் சொல்ல வேண்டும், எப்பொழுது அடக்கம் செய்யப்பட உள்ளது என்பதைக் குறிப்பிட்டும், எழவு சொல்பவரிடம் கொடுத்தனுப்பப்பட்டது. இதனை 'எழவோலை' என்றும் 'எழவு சொல்லுதல்' என்றும் கூறுவர். இந்த இறப்பு அறிவித்தல் என்பது கால மாற்றத்தால் காகிதத்தில் அனுப்பப்பட்டது. எழவு சொல்பவர்க்குச் சாப்பாடு, செலவுக்குப் பணம் ஆகியவற்றை எழவோலையைப் பெறுபவர் கொடுப்பது வழக்கம். பின்னர் தந்தியிலும், தொலைபேசியிலுமாக இறப்பு அறிவிக்கப்படுகிறது. ஆட்களை எழவு சொல்லப் பயன்படுத்துவதென்பது இன்றைய நிலையில் முற்றிலும் காணப்படவில்லை.

### 6.2.5. குழி வெட்டுதல்

வள்ளுவர்கள் இறப்பு அறிவித்ததும் குழிவெட்ட ஆள் விடுகின்றனர். பறையர் சமூக மக்கள்தான் களப்பகுதியில் பிற சமூக மக்கள் அனைவருக்கும் குழி வெட்டுகின்றனர். அனைமுறித்தவரை அமர்ந்த நிலையிலேயே புதைப்பதற்கேற்பச் 'சதுரக்குழி' வெட்டுகின்றனர். வடக்குத் திசை நோக்கி அமருமாறும், முதுகுப்பகுதி நன்கு உட்காருமாறு குடைந்தும் குழி வெட்டப்படுகிறது. இறந்தவரைப் படுக்க வைத்திருப்பின் அதற்கேற்ப ஆறடி நீளத்தில் வடக்குத் தெற்காகக் குழி வெட்டப்படுகிறது. களப்பகுதியில் பெரும்பான்மையான கிராமங்களில் மண் மிகவும் கடினத்தன்மை உடையதாகக்

காணப்படுகிறது. எனவே, காலையில் இருந்தே குழி வெட்டும் வேலை நடைபெறும்.

கடலோரக் கிராமங்கள், ஆற்றோரக் கிராமங்களில் பிணத்தைக் கொண்டு சென்று வைத்துவிட்டுக் குழிவெட்டிப் புதைக்கும் நிலையும் காணப்படுகிறது. முன்கூட்டியே வெட்டினால் மணல்சரிவு ஏற்பட்டுக் குழி மீண்டும் மூடிவிடும் என்பதற்காக இவ்வாறு செய்யப்படுகிறது.

வள்ளுவர்கள் தலசன் பிள்ளை, தற்கொலை செய்துகொண்டவர்கள் ஆகியோரின் பிணத்தை எரிக்கும் வழக்கத்தைக் கொண்டுள்ளனர். எரிக்கும் காலத்திற்கேற்ப விறகுக் கட்டைகள் அடுக்கி வைக்கப்படுகின்றன. இதுவும் குழிவெட்டும் குழுவாக உள்ள அதே மக்களால் செய்யப்படுகிறது.

### 6.2.6. சக்கரம் கட்டுதல்

'பூலா' என்னும் ஒருவகைக் குச்சிகளை வெட்டிக்கொண்டு வந்து அவை வெயிலில் வதங்குமாறு காயவைக்கப்படுகின்றன. நன்கு வதங்கியதும் தட்டுமுட்டு இல்லாமல் அவற்றின் மேல்தோல் சீவப்படுகிறது. வெண்ணிறத் தூய்மையான புதுத்துணியையும், நூல் உருண்டையையும் மஞ்சளில் நனைத்துத் துணியைச் சுற்றி அதன்மீது நூல் சுற்றிக் குச்சி வெளியில் தெரியாதவாறு கட்டப்படுகிறது. பின்னர் பெரிய குச்சிகள் இரண்டினைச் சிலுவை வடிவில் கட்டி அதன் நான்கு முனைகளும் கூர்மையாகச் சீவப்படுகின்றன. அதன்மீது பிற குச்சிகளை வளைத்துச் சக்கரம் கட்டப்படுகிறது. சக்கரத்தின் வலம், இடம், மேல் பகுதிகளில் எலுமிச்சைக் கனி செருகப்படுகிறது. "இந்தச் சக்கரம் கட்டுதலைச் செய்யும்பொழுது வள்ளுவச் சமூகத்தவரை மட்டுமே செய்ய அனுமதிக்கின்றனர். பிற சமூக மக்களைச் சக்கரம் செய்யும் மூலப் பொருட்களைத் தொடுவதற்குக்கூட அனுமதிப்பதில்லை. ஏனெனில் சக்கரத்தாழ்வார் மிகவும் கோபக்காரர். தூய்மையானவர் மட்டுமே செய்ய வேண்டும். தூய்மையற்றவர்கள் தொடுதல்"[3] கூடாது. அவ்வாறு செய்தால் சக்கரம் அடித்துவிடும் (இறந்து விடுவர்) என்ற நம்பிக்கை தொன்றுதொட்டு நிலவி வருகிறது. பிற சமூக மக்களும் இதனை நம்புகின்றவர்களாகவே உள்ளனர்.

---

[3]. எஸ்.என். ராமச்சந்திரன், வயது. 70, வள்ளுவர் சமூகம், சேமக்கோட்டை, பண்ருட்டி வட்டம்.

### 6.2.7. தண்ணீர் கொண்டு வருதல்

இறந்தவரின் பங்கும் பங்காளிகள் ஒரு பெரிய தாம்பாளத் தட்டில் வாய்க்கரிசி, பூ, மாலை, வாழை இலை, வாழைப்பழம், தேங்காய், மஞ்சள்தூள், குங்குமம், நாமக்கட்டி அல்லது திருநீறு, நல்லெண்ணெய், அபிஷேகத்தூள், சீயக்காய், பழவகைகள் அனைத்தையும் ஆயத்தம் செய்துவைத்துக் கொள்கின்றனர்.

அருகில் உள்ள நீர்நிலையில் ஐந்து குடங்களில் தண்ணீர் பிடித்து அவற்றில் மஞ்சள்தூள், வேப்பிலை போட்டு மங்கலப் பெண்கள் தலையில் தண்ணீர் ஊற்றிக்கொண்டு நனைந்த ஆடையுடன் தலையில் தூக்கிக் கொள்கின்றனர். அபிஷேகப் பொருட்களை ஆண் ஒருவர் தூக்கிக் கொள்கிறார். இவர்களை நடுவில் விட்டு முன்னும் பின்னுமாக இரு ஆண்கள் தண்ணீர்க் குடங்களுக்கு மேல் வெண்ணிறத் துணி அல்லது புதுச் சோமத்தைத் (வேட்டி) தூக்கிப் பிடித்து வருகின்றனர். இவர்களுக்கு முன்பு மேளம் அடித்துக் கொண்டு சாவு வீட்டிற்குச் செல்கின்றனர். இதற்குத் 'தண்ணீர்க் கொண்டு வருதல்' என்று பெயர். ''வள்ளுவர் சமூகத்தில் ஆண்கள் தண்ணீர்க் குடங்களைத் தூக்கிவரும் வழக்காறு இல்லை. பெண்கள்தாம் தூக்கி வருவர்''[4].

### 6.2.8. பிணத்தைக் குளிப்பாட்டுதல்

பந்தலுக்குத் தண்ணீர் கொண்டுவந்ததும் அருகில் பெஞ்சினைக் (விசுப்பலகை) கிழக்கு மேற்காகப் போடுகின்றனர். பிணத்தைக் கிழக்கு முகம் பார்த்தவாறு பெஞ்சின்மீது அமரவைத்து ஓர் ஆண் தனது காலில் சார்த்திக் கொள்கிறார். வள்ளுவப் புரோகிதரால் சவத்தின் தலையில் எண்ணெய் வைத்துச் சீயக்காய் தேய்த்துத் தண்ணீர் ஊற்றப்படுகிறது. அத்தண்ணீர் அருகில் உள்ள பங்கும் பங்காளிகள் மீதும் ஊற்றப்படுகிறது. பின்னர் இறந்தவரின் உடல் நன்கு தேய்த்துக் குளிப்பாட்டப்படுகிறது. அப்போது வாய்க்கட்டு அவிழ்க்கப்படுகிறது. ''இறப்பின்போது இறந்தவரின் உடலையோ வேள்விப் பொருட்களையோ பிற சமூகத்தவர் தொடும் வழக்கம் காணப்படவில்லை. அவ்வாறு தொட அனுமதிக்கப்படுவதும் இல்லை''[5].

---

[4]. ஆர். கோதண்டபாணி, வயது. 40, வள்ளுவர் சமூகம், சேமக்கோட்டை, பண்ருட்டி வட்டம்.
[5]. சின்னசாமி ஆழ்வார், வயது. 60, வள்ளுவர் சமூகம், ஆண்டிக்குழி, உளுந்தூர்பேட்டை வட்டம்.

பிணத்தைக் குளிப்பாட்டியதும் பெண்ணாக இருப்பின் முகத்தில் மஞ்சள் பூசி, குங்குமம் இடப்படுகிறது. ஆணாக இருப்பின் திருநாமமோ திருநீறோ நெற்றியில் இட்டு அலங்காரம் செய்யப்படுகிறது. ஏதேனும் காரணத்திற்காக இறந்தவரின் உடல் பரிசோதனைக்காக மருத்துவமனைக்குச் சென்று வந்தால் அவ்வுடலைக் குளிப்பாட்டுவதில்லை. சடங்கிற்காகச் சிறிது எண்ணெய் தொட்டு வைத்து, சீயக்காய், அபிஷேகத்தூள் தொட்டு வைத்துச் சிறிதளவு மஞ்சள் தண்ணீர் தெளிப்பதுடன் முடித்துக் கொள்கின்ற நிலை காணப்படுகிறது.

### 6.2.9. கோடி போடுதல்

கோடித்துணி என்பது இறந்தவருக்கு இறுதியாகப் போடப்படும் புத்தாடையாகும். கோடி என்பது கடைசி அல்லது இறுதி என்று பொருள்படும் என்று கூறப்படுகிறது. ஆண் இறப்பின் அவரது சார்பாக உயிருடன் இருக்கும் பெண்களுக்கும் (மனைவிக்கு) கோடி போடும் வழக்கம் உண்டு. மனைவி இறந்தால் கணவனுக்குக் கோடி போடுவதில்லை. இறந்தவர் ஆணாக இருப்பின் முதலில் உடன் பங்காளிகள், சம்பந்திகள் கோடி (சோமம்) போடுகின்றனர். இறந்தவர் பெண்ணாக இருப்பின் முதலில் தாய்வீட்டுக் கோடி (சேலை), அதன்பின் கொழுந்தன் கோடி, பங்கும் பங்காளிகள் கோடி எனப் போடப்படுகின்றன. கோடி போடுவதில் பல, இறப்பின் போதும் யார் முதலில் கோடி போடுவது என்பதில் சண்டை சச்சரவுகள் வருவதுண்டு. அப்போது பெரிய மனிதர்கள் தலையிட்டுத் தீர்த்து வைக்கும்நிலை காணப்படுகிறது. பிணத்தின் மீது போடும் கோடிகள் மட்டும் பிணத்துடன் புதைக்கப்படுகின்றன அல்லது எரிக்கப்படுகின்றன. இறந்தவரின் மனைவிக்குப் போடும் கோடிகள் அப்பெண்ணால் பின்னர் பயன்படுத்தப்படுகின்றன.

### 6.2.10. நூல் கட்டிக் கொள்ளுதல்

இறந்தவருக்குக் கொள்ளி வைப்பவர், குடும்பத்தினர், பங்கும் பங்காளிகள் அனைவரும் தலையில் தண்ணீர் ஊற்றிக்கொண்டு ஈரத்துணியுடன் புரோகிதரின் எதிரில் இருகரங்களையும் கட்டிக்கொண்டு நிற்கின்றனர். கொள்ளி வைப்பவர் புரோகிதரின் காலைத் தொட்டு வணங்குகின்றார். முதலில் புரோகிதர் கொள்ளி வைப்பவருக்கு நாமக்கட்டியைக் குழைத்து ஒற்றை நாமமிட்டு, நெற்றியில் அட்சதை வைக்கின்றார். வள்ளுவ நாயனாராக இருப்பின் திருநீற்றால் பூசை வைக்கப்படுகிறது. “இந்த ஒற்றைத் திருநாமத்திற்குத் ‘துக்க நாமம்’ என்று பெயர். வள்ளுவ ஆழ்வார்கள் இறப்பின்போது நெற்றியில் துக்க நாமம்

வைத்துக் கொள்வது வழக்கமாகும்”[6]. அதன்பின்னர் அவருக்கு வெண்ணிறச்சோமம் (காடாத்துணி) கொடுக்கப்படுகிறது. பூணூல் போட்டு, இடக் கை மோதிர விரலில் தர்ப்பைப் புல்லினாலான மோதிரம் அணிவிக்கப்படுகிறது.

பங்காளிகள் அனைவருக்கும் இவ்வாறு துக்க நாமமிட்டு, பூணூல் சார்த்தி, தர்ப்பைப்புல் மோதிரம் அணிவிக்கப்படுகிறது. துக்க நாமமிட்டுக் கொள்ளும் ஆண்கள் மேலாடை இல்லாமல் புரோகிதக் குருவின் காலைத் தொட்டு வணங்கிய பின்னரே, இச்சடங்கினைச் செய்து கொள்கின்றனர். பெண்களுக்குப் பூணூலுக்குப் பதில் வலக்கை மணிக்கட்டில் நூல் கட்டப்படுகிறது. இதனை ‘நூல்கட்டிக் கொள்ளுதல்’ என்கின்றனர். ஆண்களும், பெண்களுமாகப் பங்காளிகள் இந்த நூல் கட்டிக்கொள்வது ‘நூல் பாத்தியம்’ எனப்படும். இந்நிகழ்வு பங்காளி என்ற உறவு நிலையைக் காட்டுவதாக அமைகிறது.

### 6.2.11. சக்கரத்தாழ்வாருக்கு அபிஷேகம் செய்தல்

இறந்தவரின் உடலைப் பந்தலில் கிழக்குமுகம் பார்த்தவாறு மனையின்மீது அமரவைக்கின்றனர். ஒருவர் பின்புறமாக நின்றுகொண்டு காலில் சாய்த்துப் பிடித்துக் கொண்டிருக்கின்றார். இறந்தவரின் முன் ஒரு பெரிய தாம்பாளத்தட்டு வைக்கப்படுகிறது. தாம்பாளத்தின்மீது சக்கரத்தை நிற்கவைத்து ஒருவர் பிடித்துக் கொள்கின்றார். நல்லெண்ணெய், பால், தயிர், தேன், சொர்ணம் (தங்கம்), பஞ்சாமிர்தம், பழவகைச் சாறுகள், இளநீர் என்று ஒன்பது பொருட்களையும் ஒவ்வொன்றாகப் புரோகிதர் கொடுக்கின்றார். கொள்ளி வைப்பவர் அவற்றை வாங்கிச் சக்கரத்திற்கு அபிஷேகம் செய்கின்றார். புரோகிதர் மந்திரங்களை ஓதுகின்றார். நூல் கட்டிக் கொண்டவர்கள் அனைவரும் அபிஷேகம் செய்பவரைத் தொட்டுக்கொள்கின்றனர்.

அபிஷேகம் செய்து முடித்ததும் சக்கரத்திற்குத் திருநாமமிட்டு, பூப் போட்டு, புத்தாடை (சாமிதுண்டு) அணிவிக்கப்படுகிறது. வாழையிலையில் பச்சரிசி பரப்பிப் புதுத் தோண்டியில் (சிறுமண்பானை) நூல்சுற்றி மாவிலை செருகிக் கலசம் வைக்கப்படுகிறது. அவல், பொரிகடலை, பழவகைகள் வைத்து, ஊதுபத்தியுடன் கற்பூரதீபம் ஏற்றிப் புரோகிதர் மந்திரங்களைக் கூறுகின்றார். நூல்கட்டிக் கொண்டவர்கள் அனைவரும் சக்கரத்தாழ்வாரை விழுந்து

---

[6]. எஸ். குப்புகிருஷ்ணன், வயது. 65, வள்ளுவர் சமூகம், களையூர், கடலூர் வட்டம்.

வணங்குகின்றனர். வள்ளுவ நாயனாராக இருப்பின் களிமண்ணால் லிங்கம் செய்துவைத்து, இதுபோன்றே ஒன்பது அபிஷேகங்களைச் செய்து வணங்கி வழிபடுகின்ற நிலை காணப்படுகிறது. இவ்வாறு சக்கரத்தாழ்வாருக்கோ, லிங்கத்திற்கோ ஒன்பது அபிஷேகம் செய்த புனிதநீர் சவத்தின்மீது தெளிக்கப்படுகிறது.

### 6.2.12. சக்கரம் எடுத்தல்

இறந்தவரின் குடும்பத்திற்குக் கொண்டான், கொடுத்தான் அல்லது நெருக்கமான மாமன், மைத்துனர் முறையில் உள்ள யாரேனும் ஒருவரால் சக்கரம் எடுக்கப்படுகிறது. இந்த ஆண் பெரும்பாலும் வாலிபராக இல்லாமல் சற்று வயதானவராகவே உள்ளார். கொள்ளி வைப்பவர் சக்கரம் எடுப்பவரைக் கிழக்கு முகம் பார்த்தவாறு மனைப்பலகையின் மீது நிற்கவைத்து அவரின் பாதங்களை நீரினால் கழுவி, மஞ்சள்பூசி, குங்குமம் வைக்கின்றார். பின்னர் பாதங்களுக்குப் பூப் போட்டுக் கற்பூர தீபம் காட்டி, பாத பூசை செய்கின்றார். புரோகிதர் சில பாடல்களைப் பாடிச் சக்கரம் கொள்ளி வைப்பவரின் கரங்களில் கொடுத்துப் பின் சக்கரம் எடுப்பவரிடம் கொடுக்கின்றனர்.

‘‘சக்கரத்தைப் பெற்றவர் பிணம் சுடுகாட்டிற்குச் சென்று பாடையைவிட்டு இறக்கும்வரை அதனைக் கீழே வைக்கக்கூடாது. வேறு எவரிடமும் கொடுக்கக்கூடாது. கரும காரியம் நடைபெறும் பதினாறாம் நாள் வரையில் தினமும் குளித்துவிட்டு, மது, மாது, மாமிசம் இவற்றைத் தவிர்த்துத் தூய்மையுடன் இருக்க வேண்டும்’’[7]. பிணத்தைச் சுடுகாட்டில் இறக்கியதும் இந்தச் சக்கரம் சுடுகாட்டில் உள்ள ஏதேனும் ஒரு புதரில் அல்லது செடி கொடிகளுக்கு நடுவில் மறைத்து வைக்கப்படுகிறது. சக்கரம் எடுத்தவரே இதனை மறைத்து வைக்க வேண்டும் என்று அறியப்படுகிறது.

### 6.2.13. மஞ்சப்பத்து இடித்தல்

பசுவின் சாணத்தால் சதுரவடிவில் தரையை மெழுகி, அதன்மீது மாக்கோலம் போடப்படுகிறது. அதன்மீது நெல்பரப்பி, சொம்பில் நூல் சுற்றி, மாவிலை, தேங்காய் வைத்துக் கலசம் வைக்கப்படுகிறது. வாழைப்பழம், தேங்காய், வெல்லம், வெற்றிலைப் பாக்கு, தட்சணைப் பணம், சொர்ணம் வைத்துக் கற்பூரம் ஏற்றி வழிபாடு செய்யப்படுகிறது.

---

[7]. ஆர். கெஜேந்திரன், வயது. 47, வள்ளுவர் சமூகம், திருமங்கலம், விழுப்புரம் வட்டம்.

உரலையும் உலக்கையையும் நன்றாகக் கழுவி அதற்குத் திருநாமமிட்டு கொம்பு மஞ்சளுடன் வெற்றிலையை மடித்து வைத்து, உரலுக்கும் உலக்கைக்கும் காப்புக் கட்டப்படுகிறது. வெண்ணிறப் புத்தாடையும் (துண்டு) கட்டப்படுகிறது. உரலுக்கும் இறந்தவரின் சிரசு, இருபுறங்களுக்குமாக நூல் கட்டப்படுகிறது. உரலில் கொம்பு மஞ்சள், விதைநெல், மாவிலை ஆகியவை புரோகிதரின் கைகளால் போடப்படுகின்றன.

புரோகிதர் சிலவரிகள் பாடல்பாடி நிறுத்தியதும் நூல் கட்டிக் கொண்டவர்கள், ''அரி அரி கோவிந்தா! கோவிந்தா!'' என்று கூறி அனைவருமாக உலக்கையினைப் பிடித்து ஓங்கி ஓங்கி இடிக்கின்றனர். இவ்வாறு பாடல்களைப் பாடிப்பாடி இடையில் நிறுத்தி இந்த மஞ்சள், மாவிலை, விதைநெல் மையுமளவிற்கு இடிக்கப்படுகிறது. இது 'மஞ்சப்பத்து இடித்தல்' என்று கூறப்படுகிறது. இதனைத் 'திருச்சூரணம்' என்றும் கூறுவர். இந்நிகழ்வின்போது பாடப்படும் பாடலுக்குத் 'திருச்சூரணப் பத்து' என்று பெயர்.

### 6.2.13.1. திருச்சூரணப் பத்து

*''ஓங்கு புகழ் தாரணியில் ஓதுதிரு வித்தியானம்*
*பாங்கு திருபுகழ் மாலை பாடுதற்கு*
*தீங்கில்லா பண்ணும் ஐங்கரனார் பாதம் மிகவே*
*எந்நாளும் கண்ணில் மகிழ்ந் தேற்றினேன் காப்பு!*

*பூமாலும் மலர்பொழிய புனுகு பன்னீர் வசந்தமாட*
*நாவலர் தேவர்கள் போற்றி செய்ய, கார்முகில்*
*வண்ணனுக்குக் கனக பொற்சூரணம் இடிப்பதாமே!*

*சீர்கொண்ட திருமால் தன் பாதம் காண*
*சிந்தைதனில் தான் நினைந்து தினமும் போற்றி!*
*வார் கொண்ட மாடுமனை பெண்டிர் சுற்றம்!*
*வன்மையுடன் வாழ்ந்திருந்து வயது சென்று*
*பார்கொண்ட புவிதனிலே இறந்தோர்க்கெல்லாம்*
*பதிகனக பொற்சூரணம் இடிப்பதாமே!*

*முத்தமதில் சதுரமாய் மெழுகி செங்கல்*
*மூர்க்கமுடன் மாவரைத்துக் கோலமிட்டு*
*சுத்தமுடன் விநாயகரை முன்னே வைத்து*
*வேதமுடன் நெற்பரப்பிக் கும்பம் வைத்து*
*நூல் சுற்றி வித்துடனே அரிசி தேங்காய்*
*வெல்லமுடன் பழங்கள் தாம்பூலம், சொர்ணம் வைத்து*
*பக்தியுடன் விதை(நெல்), மஞ்சள் உரலில் இட்டு*
*பதவி பொற்சூரணம் இடிப்பதாமே!*

*திருமந்திர நாமமுடன் பூணூல் மெத்தி*
*குரு கரமதினால் பெற்றுக் கொண்டு*
*அட்சதையும் கையில் வாங்கி*
*சுத்தமுடன் கும்ப அர்ச்சனையும் செய்து*
*சக்கரத்துக் குண்டான வேள்வி செய்து*
*பக்தியுடன் அரிதாசர் வேதம் ஓதி*
*பதிகனக பொற்சூரணம் இடிப்பதாமே!*

*ஆமெனும் ஆடைதனை உரலில் சுற்றி*
*அழகிய செம்பொன்னால் உலக்கை நாட்டி*
*கார்முகில் வண்ணனுக்கும் கேசவர்க்கும்*
*கனக பொற்சூரணம் இடிப்பதாமே!*

*தூபமுடன் அரிஓம் அவ்வும் உவ்வும்*
*துய்யமலர் பாடி, ஆடை, மாவிலை அர்ச்சித்து*
*தூபமுடன் கட்டியதோர் சக்கரத்திற்கு வேள்விசெய்து*
*பக்தியாய் வைகுந்தம் சேர்வதற்குப்*
*பதிகனக பொற்சூரணம் இடிப்பதாமே!*

*நலமான மஞ்சளுடன் விதையும் கூட்டி*
*நலமுடனே நிறுத்தியதோர் உலக்கைதனை உரலில் இட்டு*
*இடித்து ஓங்கி, ஓங்கி இடிக்கும் அந்த வேளைதனில்*
*சலசலன அரிதாசர் சங்கு சக்கரம் தனைச் சாற்றி*
*சாதி அரிதாசர்களும் அருகில் நின்று*

*மாய்ந்தவர்கள் வைகுந்தம் சேர்வதற்கு*
*மகாகனக பொற்சூரணம் இடிப்பதாமே!*

*இடித்தபின்பு உலக்கைதனை கையிலேந்திக் கொண்டு*
*இசையுடனே அரிஅரி என்று சொல்லி*
*மாய்ந்தவர்கள் சிரசுதனில் முன்னே வைத்து*
*வலது, இடம், புஜம் தனிலே பின்னே மூன்றுதரம் வைத்து*
*திடமான முத்திரையை இறக்கிப் போட்டு*
*மாய்ந்தவர்கள் ஆவியது வைகுந்தம் சேர*
*மகாகனக பொற்சூரணம் இடிப்பதாமே!*

*முத்திரையை தரையிறக்கித் திருமால் பாதம்*
*முதன்மையுடன் தான் நினைந்து மிகவும் ஓதி*
*சக்தியுடன் இடித்ததோர் சூரணத்தை*
*தகமையுடன் தாம்பாளம் தன்னில் வைத்து*
*சுற்றிலும் அரிதாசர் வேதம் ஓதி*
*துரிதமுடன் சவத்தின்மேல் தூவ, தூவ*
*பக்தியாய் வைகுந்தம் சேர்வதற்கு*
*கனக பொற்சூரணம் இடிப்பதாமே!*

*சக்கரத்து ஆழ்வார் தனையே போற்றி!*
*திகழ்ந்த குரு லஷ்மிதன் பாதம் போற்றி!*
*வகையான கருடாழ்வார் பாதம் போற்றி!*
*ஆழ்வார்கள் பன்னிருவர் பாதம் போற்றி!*
*அரிபக்தர் மிகவாழ்த்தும் அருளே போற்றி!*
*தாழ்விலா வைகுந்தப் பதவிசேர*
*பதிகனக பொற்சூரணம் இடிப்பதாமே!*

*ஆதிமுதல் தேவர்களும், முனிவர் வாழி!*
*அன்பான விஷ்ணுவின் பாதம் வாழி!*
*நீதியெனும் கருடாழ்வார் பாதம் வாழி!*
*நீதி தவறாத கருடன் வாழி!*

*சாதிஅரி தாசர்களும் என்றும் வாழி!*
*தவிக்கெனவே பொற்சூரணம் இடிப்பதாமே!"*[8]

### 6.2.14. முத்திரையை இறக்குதல்

மஞ்சப்பத்து இடித்ததும் இடித்த உலக்கையினை அனைவருமாகக் கைகளில் ஏந்திக் கொள்கின்றனர். இறந்தவரின் சிரசு, வல, இட புஜங்களில் (தோள்களில்) உலக்கையின் நுனிப்பகுதியைத் தொடுகின்றனர். தொட்டுத் தரையில் இறக்குகின்றனர். இவ்வாறு மூன்றுமுறை செய்கின்றனர். இது 'முத்திரை இறக்குதல்' எனப்படுகிறது. "முத்திரை என்பது வள்ளுவ ஆழ்வார்கள் ஏதேனும் தென்கலை பிரிவுள்ள வைணவ ஆலயத்திற்குச் சென்று தங்களைப் பெருமாளின் தாசன் (அடிமை) என்பதற்காக உலோகத்தில் உள்ள திருநாமத்தையும், சங்கு, சக்கரத்தையும் சூடு செய்து குரு கரத்தால் நெற்றி, இரு புஜங்களிலும் போட்டுக் கொள்வர். அன்றையிலிருந்து மது, மாமிசம் தவிர்க்கப்படுகிறது"[9]. இதனை 'முத்திரைத் தானம் பெறுதல்' என்கின்றனர்.

இந்த முத்திரையை இறக்கும்போது புரோகிதக் குருவினால் சில கவிகள் சொல்லப்படுகின்றன. புரோகித குரு கூறிய பின்னர் முத்திரையை இறக்குபவர்களால் அக்கவிதைகள் திரும்பக் கூறப்படுகின்றன.

#### 6.2.14.1. முத்திரை இறக்குங் கவி

*"குருவே பக்தி! குருவே ஒளி, சிறந்த*
*வேத வியாசர் வான் புகழ் கொடுத்து*
*தன்னிறமாக்கியது போல்*
*கோலா திரு மந்திரமோதிய*
*வாரண எப்படி என்றால்,*

*சங்கென்றும், சக்கரமென்றும் எமது தோளில்*
*தரித்திருக்கப்பட்ட சங்கு சக்கரத்தை*
*வாங்கிடப் பன்னிரு ஆழ்வார்களில்*
*முதன்மையாகிய பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார்*

[8]. கே. குப்புசாமி, வயது. 55, வள்ளுவர் சமூகம், வீடூர், திண்டிவனம் வட்டம்.
[9]. மேலது.

*பாதத்தில் ஒப்புவித்து*
*அடியேன் செய்த பாவ புண்ணியத்தையும் நீக்கி*
*சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சம்*
*நான்காம் பதவி சேர வேண்டுமென்று*
*தோளில் பதியத் தான் துடைத்து*
*ஸ்ரீமன் நாராயணன் நாமம் கூறி*
*வைகுந்த பதவி சேர்வதாமே!''*[10]

### 6.2.15. கை மாற்றுதல்

நெல், உமி பரப்பி அதன்மீது பால்மரச் சுள்ளிகள் (சம்பத்துகட்டு) அடுக்கப்படுகின்றன. அதனுள் கற்பூரம் ஏற்றிவைத்து, நெய்வார்த்து எக்கியம் வளர்த்து மந்திரங்கள் ஓதப்படுகின்றன.

இறந்தவரின் பக்கத்தில் அவரது வாழ்க்கைத் துணையை அமர வைக்கின்றனர். கணவன் இறப்பின் மனைவி, மனைவி இறப்பின் கணவன் எனத் திருமணக்கோலம் போல் மாலை அணிவித்து உட்கார வைக்கப்படுகின்றனர். உயிருடன் உள்ள வாழ்க்கைத் துணையின் கைகளில் வெற்றிலைப் பாக்கு, தேங்காய், பூ ஆகியன வைத்து இறந்தவரின் கைகளுக்கு மாற்றப்படுகின்றன. இறந்தவரின் கைகளில் இவ்வாறே வைத்து உயிருடன் உள்ளவரின் கைகளுக்கு மாற்றப்படுகின்றன. இதனைக் 'கை மாற்றுதல்' என்று கூறுகின்றனர்.

திருமணத்தின்போது இவ்வாறு கை மாற்றப்பட்ட பின்னரே தாலி கட்டப்படுகிறது. இது கணவன் மனைவிக்குரிய பந்தத்தினைக் குறிக்கிறது. ''உலக பந்தத்தினை அறுத்தால்தான் இறைவனடி சேரமுடியும், பிறவி அறும் என்பதற்காக இறப்பின்போது மீண்டும் கைமாற்றப்படுகிறது. அதாவது திருமணத்தின்போது கைமாற்றியதைத் திரும்பப் பெறுவதாக இச்சடங்கு கருதப்படுகிறது''[11]. கை மாற்றிய பின்னர் பங்கும் பங்காளிகள் கைகளில் கட்டியுள்ள நூல்களும், தர்ப்பைப்புல் மோதிரமும் எக்கியத்தில் போடப்படுகின்றன. அத்துடன் பந்தம் முடிந்ததாகக் கருதப்படுகிறது.

---

[10]. கே. குப்புசாமி, வயது. 55, வள்ளுவர் சமூகம், வீடூர், திண்டிவனம் வட்டம்.
[11]. எஸ். ராமச்சந்திரன், வயது. 60, வள்ளுவர் சமூகம், களையூர், கடலூர் வட்டம்.

### 6.2.16. பாடை கட்டுதல்

முன்பெல்லாம் பாடை கட்டுவது களப்பகுதியில் பறையர் சமூகத்து மக்களால் செய்யப்பட்டு வந்தது. இன்றைய நிலையில் நகரங்களில் பூக்கடை வைத்துள்ள பூவேலைக்காரர்கள் பாடை கட்டுகின்றனர். இவர்கள் பெரும்பாலும் வன்னியர் (படையாட்சி), நாயுடு போன்ற மேட்டுக்குடிகளாகவே களப்பகுதியில் காணப்படுகின்றனர். இவர்களிடம் அதிகத்தொகை கொடுத்து பாடைகட்ட முடியாதவர்களுக்கு அப்பகுதியைச் சேர்ந்த பறையர் சமூகத்தில் சிலரே எளிய முறையில் பாடை கட்டித்தருவதும் காணப்படுகிறது.

அனைமுறித்த பிணமாக இருப்பின் உட்கார வைக்கும் பல்லக்குப் பாடையும், படுக்க வைத்த பிணமாக இருப்பின் நீட்டுப் பல்லக்குப் பாடையும் கட்டப்பட்டுப் பல்வேறு வண்ண மலர்களால் அலங்கரிக்கப்படுகின்றன. எந்தவிதப் பாடையாக இருப்பினும் இடையில் ஏழு புல்லுகள்தான் (கழிகள்) இடம்பெறும். காடாத் துணியில் உறைகள் செய்து அவற்றிற்குள் வைக்கோலைத் திணித்து மெத்தை, தலையணை செய்து பாடையில் வைக்கப்படுகின்றன. சனிக்கிழமையில் உயிர் பிரிந்தால் பாடையில் ஒரு கோழிக்குஞ்சு கட்டப்படுகிறது. 'சனிப்பிணம் தனியாகப் போகாது' என்ற நம்பிக்கையின் பொருட்டு இவ்வாறு செய்யப்படுகிறது.

வேள்விச் சடங்குகள் முடிந்ததும் பிணம் ஒரு பச்சைத் தென்னங்கீற்றில் வைத்துப் பாடைக்குள் வைக்கப்படுகிறது. பிணம் சாயாமலிருக்கத் தலை, இடுப்பு, கால் பகுதிகளைப் பாடையுடன் சேர்த்துத் துணியினால் கட்டுகின்றனர்.

### 6.2.17. நெய்ப் பந்தம் பிடித்தல்

இறந்தவரின் மகன் மற்றும் மகள் வயிற்றுப் பேரப்பிள்ளைகள், பங்காளி வீட்டுப் பேரப்பிள்ளைகள் அனைவரும் நெய்ப் பந்தம் பிடித்துக்கொண்டு பாடையினை ஒன்பது முறை வலம்வந்து இறந்தோரை வணங்குகின்றனர். ''நெய்ப்பந்தம் என்பது அரை அடி முதல் ஒரு அடி வரையிலான ஏதேனும் ஒரு குச்சியில் வெண்ணிற துணியைச் சுற்றி அதை நெய்யில் நனைத்துக் கொளுத்திப் பந்தமாக எரியவைத்துப் பிடித்துக் கொள்வதாகும். இதனை

வண்ணார் சமூகத்தைச் சார்ந்தவர் செய்து இறந்தோரின் பேரன், பேத்திகளுக்குக் கொடுப்பர்''[12].

சில இறப்புகளின்போது இவ்வாறு நெய்ப் பந்தம் செய்யாமல் சிறு வாழைக் கட்டைகளில் அல்லது தண்டுகளில் ஊதுபத்திகளைச் செருகி அவற்றைக் கொளுத்தி நெய்ப்பந்தமாகப் பிடித்துச் சுற்றிவரும் நிலையும் காணப்படுகிறது.

### 6.2.18. சுடுகாட்டிற்குக் கொண்டு செல்லுதல்

பாடையைச் சுற்றிப் பிள்ளைகள், பங்கும் பங்காளிகள் அனைவரும் மூன்றுமுறை வலம் வருகின்றனர். பின் எதிரில் கற்பூரம் ஏற்றி அனைவரும் இறந்தவரை விழுந்து வணங்குகின்றனர். இறந்தவர் தாயாக இருப்பின் தலைமகனும், தந்தையாக இருப்பின் கடைமகனும் கலசம் எடுக்கின்றனர். இக்கலசத்தினைக் 'கொள்ளிக்குடம்' என்கின்றனர். இறந்தோர்க்கு ஆண்பிள்ளை இல்லாமல் பெண்பிள்ளை இருப்பின் கலசத்தை அப்பெண் எடுத்து உடன் பங்காளிகளில் யாரேனும் ஒருவரிடம் கொடுக்கின்றாள். அவர் சுடுகாட்டிற்கு எடுத்துச் செல்கிறார். கலசம் எடுப்பவரே கருமாதிவரை பதினாறு நாட்கள் விரதமிருப்பவர்.

கலசம் எடுத்ததும் ''கோவிந்தா! கோவிந்தா!'' என்றோ வள்ளுவ நாயனாராக இருப்பின் ''அரகரா! அரகரா!'' என்று கூறியவாறே உறவினர்கள் அனைவரும் பாடையைத் தூக்கிச் செல்கின்றனர். அப்போது பறைமேளம், உருமிமேளம், தப்பு, சேமக்கலம் அல்லது சங்கு சேகண்டி முழங்கிச் செல்ல, அதன் பின்னர், சக்கரம், கலசம் எடுப்பவர்கள் செல்லப் பின்னாகப் பாடை எடுத்துச் செல்லப்படுகிறது. வழியில் கோயில் இருப்பின் மேளங்கள் அடிப்பது நிறுத்தப்பட்டு அதைத் தாண்டியதும் அடித்துச் செல்லும் வழக்கம் காணப்படுகிறது.

### 6.2.19. அரிச்சந்திர வழிபாடின்மை

களப்பகுதியில் உள்ள அனைத்துச் சுடுகாடுகளிலும் புகுமுன்னர் இடப்புறமாக அரிச்சந்திரனுக்கென்று சிறு கோவிலோ அல்லது சிறு அரிச்சந்திரன் சிலையோ (கற்சிலை) காணப்படுகிறது. பிற சமூகத்து மக்கள் அனைவரும்

---

[12]. எஸ்.ஆர். பாலகிருஷ்ணன், வயது. 62, வள்ளுவர் சமூகம், சேமக்கோட்டை, பண்ருட்டி வட்டம்.

அரிச்சந்திரன் கோவிலின் முன்னர்ப் பாடையை நிறுத்திச் சிலைக்குப் பூ அல்லது மாலை போடுகின்றனர். வெற்றிலைப் பாக்கு, பழம், தட்சணையாகப் பணம் (சுடுகாட்டிற்கான காவல் கூலி) வைத்து, கற்பூரம் ஏற்றி வழிபாடு செய்கின்றனர். அப்போது சில பாடல்கள் அரிச்சந்திரனைப்பற்றிப் பாடப்படுகின்றன. இப்பாடல் பாடுபவருக்கு அந்த தட்சணைப் பணம் சேருகிறது. அதன்பின்னரே சுடுகாட்டிற்குள் பாடை எடுத்துச் செல்லப்படுகிறது.

அரிச்சந்திரன் சுடுகாட்டைக் காவல் காப்பதாகவும், அதற்கான கூலி கொடுக்காதவரின் பிணம் சுடுகாட்டிற்குள் அனுமதிக்கப்படாது எனவும் நம்பிக்கை நிலவுகிறது. வள்ளுவர் சமூகத்தவரிடம் அரிச்சந்திர வழிபாடு செய்யும் (கூலி கொடுக்கும்) சடங்கு காணப்படவில்லை. வள்ளுவர்கள் தொன்றுதொட்டுப் புரோகித குருக்களாக இருந்து வருகின்றனர். குருவிடம் கூலி கேட்கும் வழக்கம் அந்நாளில் இல்லை. அரிச்சந்திரன் வெட்டியான் வேலை பார்த்ததாலும் அச்சமூக மக்களுக்கு வள்ளுவர்கள் புரோகித குருக்கள் என்பதாலும் அரிச்சந்திர வழிபாடு இல்லை என்ற கருத்து நிலவுவதாகத் தெரிகிறது.

### 6.2.20. அடக்கம் செய்தல்

அடக்கம் செய்வது புதைத்தல், எரித்தல் என இருவகையில் நடைபெறுகிறது. புதைப்பதெனில் பாடை குழியை மூன்று முறை வலம் வந்து குழிக்கு மேற்குத் திசையில் இறக்கி வைக்கப்படுகிறது. குழியில் உட்கார வைப்பதென்றாலும் படுக்க வைப்பதென்றாலும் முகம் வடக்குத் திசையைப் பார்த்தவாறு வைக்கப்படுகிறது. உடனே பாடை குழிக்குக் கிழக்கில் போடப்படுகிறது. வண்ணார் பாடையை மூன்றுமுறை கத்தியால் கொத்துகின்றார். குழிக்குள் ஒருவர் இறங்கிக் கைகள், கால்களில் உள்ள கட்டுகளையும் அன்னாக்கவுறையும் (அறைஞாண் கயிறு) அவிழ்க்கின்றார். பின்னர் அனைவராலும் வாய்க்கரிசி போடப்படுகிறது.

வாய்க்கரிசி போடும்பொழுது இறந்தவரின் குலம், கோத்திரம், முப்பாட்டன் பெயர், பெற்றோர் அல்லது கணவன் பெயர், இறந்த தமிழ் ஆண்டு, மாதம், நாள், நட்சத்திரம் அனைத்தும் கூறப்பட்டு இந்த ஆத்மா சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சம் என்று சொல்லக்கூடிய நான்காம் பதவி அடைய வேண்டும் என்று புரோகிதரால் கூறப்படுகிறது. அதன்பின்னர், முகத்தை மூடிக் கொள்ளி வைப்பவர் முதலில் மூன்று கை மண்ணைப் பிரேதத்தின் மீது போடுகின்றார்.

பிறகே மற்றவர்கள் மண்ணை அள்ளிப் போடுகின்றனர். பின்னர் மண்வெட்டியால் மண் தள்ளப்பட்டுக் குழி மூடப்படுகிறது.

குழியை மூடும்பொழுது மண் தள்ளுபவரின் இருகால்களுக்கு நடுவில் தள்ளப்படுவதில்லை. ஒருபக்கமாகவே தள்ளுகின்றனர். அப்போது மண்வெட்டிபட்டால் அந்தக் காயம் எளிதில் ஆறாது என்பதற்காக மிகவும் கவனமுடன் மண் தள்ளப்படுகிறது.

குழியை மூடியதும் பங்காளிகள் அனைவருமாகக் குழியை மேடையாக அமைத்துத் தட்டுமுட்டு இல்லாமல் சமன்செய்து நீர் தெளித்து மெழுகுகின்றனர். அதன்மீது மஞ்சள், குங்குமம் தெளிக்கப்படுகின்றன. தலைமாட்டுப் பகுதியில் தலைக்கு நேராகத் துளசிச் செடி செருகப்படுகிறது. அதனருகில் கொள்ளிக்குடம் (கலசம்) வைக்கப்படுகிறது. குழியின் மேல் மாலை போடப்படுகிறது. கால்மாட்டில் கற்பூரம் ஏற்றிக் குடும்பத்தினர் அனைவரும் விழுந்து வணங்குகின்றனர்.

சவத்தினை எரிப்பதெனில் கட்டைகள் அடுக்கப்படுகின்றன. அதன்மீது சவமானது தெற்கு வடக்காகப் படுக்கவைக்கப்படுகிறது. கை, கால் கட்டுகள் அவிழ்க்கப்பட்டு, வாய்க்கரிசி போடப்படுகிறது. பின்னர் எருமுட்டை (வரட்டி) அடுக்கி அதன்மீது வைக்கோல் தெளித்துச் சேற்றினால் மெழுகுகின்றனர். சவத்தை மூன்றுமுறை வலம் வந்து கால்மாட்டில் கற்பூரம் ஏற்றிக் குடும்பத்துடன் விழுந்து வணங்குகின்றனர். பின்னர் கொள்ளி வைக்கப்படுகிறது.

### 6.2.20.1. குழந்தைகளை அடக்கம் செய்தல்

சிறு குழந்தை எனில் அலங்காரம் செய்து, ஒரு பெரிய தாம்பாளத் தட்டில் மஞ்சள் துணியைப் போடுகின்றனர். அதன்மீது குழந்தையை வைத்துத் துணியால் மூடிவைக்கின்றனர். குழந்தையின் தந்தை தாம்பாளத் தட்டுடன் சுடுகாட்டிற்கு எடுத்துச் செல்கின்றார்.

பெரிய குழந்தை எனில் அலங்காரம் செய்து படுக்க வைக்கப்படுகிறது. குழந்தைகளை அனைமுறிப்பதில்லை. சற்றொப்ப ஆறு அடி நீளமுள்ள தடியில் புடைவையினால் ஏனை கட்டி (துணி) அதில் குழந்தையைப் படுக்கவைத்துத் தடியினை இருவர் தோள்களில் சுமந்து சுடுகாட்டிற்கு எடுத்துச் செல்கின்றனர்.

காது குத்தாத குழந்தைகளுக்குக் குழியில் புதைக்கும் போதோ எரிகக்கும்போதோ அதற்குச் சற்று முன்னர் வாய்க்கரிசி போடும்போது சில மந்திரங்கள் சொல்லப்பட்டு நெல்லினால் காது குத்தப்படுகிறது. தாயின் வயிற்றுக்குள் குழந்தை இருக்கும்பொழுதே தாய் இறந்து விட்டாலும் தாயை அடக்கம் செய்யும்போது வயிற்றிலிருந்து குழந்தை எடுக்கப்பட்டு, தலைகீழாகப் பிடித்தவாறு குழந்தை 'ஆணா', 'பெண்ணா' என்று அனைவருக்கும் காட்டப்படுகிறது. பின்னர் நெல்லினால் காதுகுத்தப்பட்டுத் தாயின் கால்களில் (மடியில்) குழந்தை படுக்க வைக்கப்பட்டு அடக்கம் செய்யப்படுகிறது.

### 6.2.20.2. இளைஞர்களை அடக்கம் செய்தல்

இளைஞர்கள் பிறருக்கு ஏதேனும் துன்பம் செய்துவிட்டால் "கன்னி கழிவாயா? காப்புநூல் கட்டுவாயா?" என்று அவர்களைச் சாபம் விடும் வழக்கம் களப்பகுதியில் காணப்படுகிறது. காப்புக் கட்டி, திருமணம் செய்துகொள்ளாத ஆண்கள் சமூகத்தில் இழிவாகக் கருதப்பட்டிருக்கின்றனர். இறப்பினும் அந்த இழிவு தொடரும் என நம்புகின்றனர். எனவே, அவர்களுக்குத் திருமணச் சடங்கு செய்தபின்னரே சுடுகாட்டிற்கு எடுத்துச் சென்று அடக்கம் செய்கின்றனர்.

குலை தள்ளாத வாழை மரத்தை வெட்டிவந்து இறந்தவரின் பக்கத்தில் பெண்ணாகப் பாவித்து நிற்க வைக்கின்றனர். மந்திரங்கள் கூறி இறந்தவருக்கும் வாழை மரத்திற்கும் புரோகிதர் காப்புக் கட்டுகின்றார். பின்னர் இறந்தவர் சார்பாக வாழை மரத்திற்குக் கொம்பு மஞ்சளில் நூல்கட்டித் தாலியாகக் கட்டப்படுகிறது. கை மாற்றும் சடங்கும் நடைபெறுகின்றது. அதன்பின்னர் வழக்கமான முறையில் அடக்கம் செய்யப்படுகிறது.

### 6.2.21. கட்டப் பணம் போடுதல்

பிணத்தை அடக்கம் செய்ததும் சுடுகாட்டிற்குச் சற்று தூரத்தில் உட்கார்வதற்கு உகந்த இடத்தில் சமுக்காளம் அல்லது வெள்ளைத் துணி விரிக்கப்படுகிறது. அதில் உறவினர்களும், ஊரார்களுமாகப் பெரிய மனிதர்கள் உட்கார்கின்றனர். அந்தச் சபையில் கொண்டான், கொடுத்தான் (சம்பந்திகள்) மாமன், மைத்துனர் ஆகியோர் தங்களின் ஊரையும், பெயரையும், புரோகிதரிடம் கூறித் தங்களால் இயன்ற பணத்தைக் கொடுக்கின்றனர். இந்தப் பணம் சபையில் வைக்கப்படுகிறது. இது 'கட்டப்பணம்' எனப்படுகிறது. பங்காளிகள் இந்தக் கட்டப்பணம் போடும் வழக்கம் இல்லை.

இந்த கட்டப் பணம் ஊரின் பெரிய மனிதரால் எழவு சொன்னவர் குழி வெட்டியவர், வண்ணாத்தி, கம்பக்காரன், மேளக்காரன், பாடை கட்டியவர் என்று சாவுக்கு வேலை செய்த அனைவருக்கும் அவரவரின் வேலைகளுக்ஏற்பக் கூலியாகக் கொடுக்கப்படுகிறது. பணம் பற்றாத நிலையில் சாவுக்கு உடையவரிடம் பணம் பெறப்பட்டுப் பைசல் செய்யப்படுகிறது.

### 6.2.22. வீட்டிற்குத் திரும்புதல்

தகனம் செய்யச் சுடுகாட்டிற்கு வந்த உறவினர்கள், பங்காளிகள் அனைவரும் வீட்டிற்கு வந்து தலைகுளிக்கின்றனர். பிணம் எடுத்ததும் உடனே அந்த வீடு பெருக்கி, கழுவப்பட்டு மஞ்சள் நீர் தெளிக்கப்படுகிறது. பந்தலின் முன்னர் ஓர் உலக்கை போடப்பட்டு, ஒரு தாம்பாளத்தில் திருநீறு வைக்கப்படுகிறது. அந்த உலக்கையினைத் தாண்டி வந்து திருநீற்றை எடுத்து நெற்றியில் பூசிக் கொண்டுதான் வீட்டிற்குள் செல்கின்றனர்.

### 6.2.23. சம்பந்திச் சோறு படைத்தல்

சாவிற்கான சடங்குகள் நடந்து கொண்டிருக்கின்ற பொழுதே சம்பந்திகள் (கொண்டான், கொடுத்தான்) ஒன்று கூடுகின்றனர். அவர்களில் ஒருவர் பொறுப்பேற்று எல்லாச் சம்பந்திகளிடமும் தலா இவ்வளவு ரூபாய் என வசூல் செய்கின்றார். இதற்குச் 'சம்பந்திப் பணம்' என்று பெயர். இப்பணத்தினைக் கொண்டு சம்பந்திகளாகச் சென்று காய்கறி, மளிகைச் செலவுகள் வாங்கிவந்து ஒதுக்குப்புறமான ஓரிடத்தில் சமையல் (சைவம்) செய்கின்றனர். இன்றைய நிலையில் சில இடங்களில் ஓட்டலில் (உணவு விடுதியில்) இருந்து உணவு பெறுதலும் காணப்படுகிறது.

அனைமுறித்த இடத்தில் அல்லது திண்ணையில் திருநாமமோ அல்லது பூசையோ போட்டுப் புகைப்படம் இருந்தால் வைக்கப்படுகின்றன. அங்கே இறந்தவரின் ஆடைகள் பயன்படுத்திய பொருட்கள் அனைத்தும் வைக்கப்படுகின்றன. அத்துடன் வாழை இலை போட்டுச் சம்பந்திகள் சோறு, சாம்பார், பொறியல், அப்பளம் என வைத்துப் படைக்கின்றனர். பின்னர் அனைவருக்கும் உணவு பரிமாறப்படுகிறது. இறந்தவரின் ஆடைகளும், பொருட்களும் கருமாதி வரை அந்த இடத்திலேயே வைக்கப்படுகின்றன.

## 6.3. பால் ஊற்றுதல்

அடக்கம் செய்த மறுநாள் பால் ஊற்றப்படுகிறது. உறவினர்களின் பல்வேறு பணிகளைக் கருத்தில் கொண்டும், காலச் சூழலாலும் அடக்கம் செய்த உடனே பால் ஊற்றுகின்ற நிலை பெரிதும் காணப்படுகிறது. இது 'உடன்பால்' என்று கூறப்படுகிறது.

பால் ஊற்றுவதற்குப் பாலுடன் சோறு, சாம்பார், பொறியல், முருங்கைக்கீரை, பலகாரப் பட்சணங்கள், இறந்தவருக்குப் பிடித்த திண்பண்டங்கள் அனைத்தும் ஆயத்தம் செய்து ஒரு கூடையினுள் வைத்து அதனை வெண்மையான துணியினால் கட்டி வைக்கின்றனர்.

### 6.3.1. பெண்கள் பால் ஊற்றுதல்

பெண்கள் சுடுகாட்டிற்கு வரும் வழக்கம் இல்லை. எனவே பந்தலிலேயே (வீட்டில்) இறந்தவரின் குலம், கோத்திரம், ஊர், பெயர், இறந்த தமிழ் வருடம், மாதம், நாள், நட்சத்திரம் அனைத்தும் புரோகிதரால் கூறப்படுகின்றன. இன்னார் இறந்ததை முன்னிட்டு அவரது ஆத்மா சாந்தியடைந்து சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சம் என்று சொல்லக்கூடிய நான்காம் பதவி அடைய வேண்டுமென்று குடும்பத்தார், பங்கும் பங்காளிகள், உற்றார் உறவினர்கள் அனைவருமாகச் சேர்ந்து கங்கா, யமுனா, கோதாவரி ஆகிய புண்ணிய நதிகளில் நீராடி இறந்த ஆத்மாவிற்குப் பால் ஊற்றப்படுகிறது என்று கூறும்பொழுது உடன் ''அரிஅரி'' அல்லது ''அரகர அரகர'' என்று பால் ஊற்றுபவர்களால் கூறப்படுகிறது.

ஒவ்வொருவராகப் பாலை ஊற்றும்பொழுது அது ஓர் அகன்ற பாத்திரத்தில் பிடிக்கப்பட்டு, ஒரு சொம்பினில் ஊற்றி எடுத்துக்கொள்ளப்படுகிறது. அதனுடன் சுடுகாட்டில் ஆண்கள் ஊற்ற வேண்டிய பால், கூடையில் கட்டிவைத்துள்ள சாப்பாடு, பலகாரங்கள், மஞ்சள் குங்குமம், வெற்றிலைப் பாக்கு, வாழைப்பழம், தேங்காய், கற்பூரம், பத்தி ஆகியவற்றுடன் தப்பு, சேமக்கலம் அல்லது சங்கு, சேகண்டி முழங்க உறவினர்கள் இறைவன்மீது பாடலைப் பாடிக் கொண்டு சுடுகாட்டிற்குச் செல்கின்றனர்.

சுடுகாட்டினை அடைந்ததும் குழிக்கரைமீது தண்ணீர் தெளித்து மெழுகி மஞ்சள் குங்குமம் தெளிக்கப்படுகின்றன. குழியில் தலைப்பகுதிக்கு நேராக ஒரு கோலால் துளைபோடப்பட்டு அதனருகில் கிழக்குப் பார்த்தவாறு ஒரு செங்கல்

நடப்படுகிறது. அக்கல்லிற்கு அபிஷேகம் செய்து வீட்டில் சொன்னவாறு குலம், கோத்திரம், இறந்த திதி இவற்றைக்கூறி முதலில் கொள்ளி வைத்தவர் பால் ஊற்றுகின்றார். பின்னர் உறவினர் அனைவரும் ஊற்றுகின்றனர். வீட்டிலிருந்து கொண்டு வந்த பெண்கள் ஊற்றிய பாலும் உடன் ஊற்றப்படுகிறது.

### 6.3.2. உரிமைச் சோறு படைத்தல்

பால் ஊற்றிய உடனே குழியின் கால்மாட்டுப் பகுதியில் அதாவது, வடக்குப் பகுதியில் வாழை இலை போட்டுச் சோறு, முருங்கைக்கீரை, பலகாரங்கள், திண்பண்டங்கள் அனைத்தும் வைக்கப்படுகின்றன. வாழைப்பழம், வெற்றிலைப் பாக்கு, தட்சணைப் பணம் வைத்துத் தேங்காய் உடைத்துக் கற்பூர தீபம் ஏற்றி அனைவருமே கும்பிடுகின்றனர். அப்போது புரோகிதர் இறைவன்மீது பாடலைப் பாடுகின்றார். படைத்து முடித்ததும் படைத்த உணவுப் பொருட்கள் அனைத்திலும் சிறிதளவு எடுத்து ஓர் இலையில் இட்டுக் காகத்திற்கு வைக்கப்படுகிறது. மீதமுள்ளவற்றை எடுத்துவந்து சற்றுத் தூரத்தில் உள்ள ஏதேனும் ஒரு நீர்நிலையில் கை கால்களைச் சுத்தம் செய்கின்றனர். உறவினரில் பெரியவர் ஒருவர் படைத்த பொருட்கள் அனைத்தையும் ஒன்றாகப் பிசைந்து உறவினருக்கு மட்டும் கொடுக்கின்றார்.

இந்தச் சோற்றிற்கு உரிமைச்சோறு என்று பெயர். ‘‘உரிமைச்சோறு உறவினர்களுக்கு மட்டுமே தரப்பட வேண்டும். உறவினர் அல்லாதவருக்கோ, பிற இனத்தாருக்கோ கொடுக்கக்கூடாது’’[13]. உரிமைச்சோறு மீதமிருந்தாலும் வீட்டிற்குக் கொண்டு வரும் வழக்கம் காணப்படவில்லை.

### 6.3.3. விரதமிருத்தல்

பிணத்தைத் தகனம் செய்த தினத்திலிருந்து கொள்ளி வைப்பவர் மது, மாது, மாமிசம் ஆகியவற்றிலிருந்து விடுபட்டு விரதமிருக்க வேண்டும். இறந்தவரின் படத்திற்கு அருகில் காலையில் ஏதேனும் உணவு (சிற்றுண்டி வகை) வைத்துப் படைத்துக் காகத்திற்கு வைக்கின்றனர். காலை உணவினை உண்ணாது நோன்பு இருக்கின்றனர். மதியம் சைவ உணவு வகைகள் (சோறு, சாம்பார், அப்பளம், பொறியல்) என வைத்துப் படைத்துக் காகத்திற்கு வைக்கின்றனர். காகம் உண்ட பின்னரே குடும்பத்தினர் உணவு உண்ணுதல் வழக்கமாகக் காணப்படுகிறது. இந்த விரதம் பதினாறு நாட்கள் கருமாதி வரை

[13]. ஆ. அழகப்பன், ஆசிரியர்(ஓய்வு), வயது. 65, வள்ளுவர் சமூகம், ஏம்பலம், புதுச்சேரி.

கடைபிடிக்கப்படுகிறது. கொள்ளி வைத்தவர் இந்தப் பதினாறு நாட்களும் வெளியூர் சென்று இரவு தங்குதல் கூடாது என்று கூறப்படுகிறது.

### 6.3.4. ஏழாந்துக்கம்

இறந்ததிலிருந்து ஏழாவது நாள், எட்டாவது நாள் மாலையில் துக்கம் மேற்கொள்கின்றனர். இதனை ஏழாந் துக்கம், எட்டாந் துக்கம் என்று கூறுகின்றனர். வள்ளுவ மக்கள் ஏழாந்துக்கம் மட்டுமே மேற்கொள்ளும் வழக்கமுடையவர்களாகக் காணப்படுகின்றனர்.

ஏழாம் நாள் அன்று சம்பந்திகள், மாமன், மைத்துனர்கள் அனைவரும் தம்பதிகளாக வருகின்றனர். இறந்தவருக்குப் பிடித்தமான பலகாரங்கள், திண்பண்டங்கள், பழவகைகள், குடிப்பழக்கம், புகைப்பழக்கம் இருப்பின் மது, சுருட்டு அல்லது பீடி, சிகரெட் என்று அனைத்தும் அவரவர் வசதிக்கேற்ப கொண்டுவந்து இறந்தவர் படத்தின் முன் வைக்கின்றனர். அத்துடன் வெற்றிலைப் பாக்கு, வாழைப்பழம், தேங்காய் உடைத்து வைக்கப்படுகின்றன.

#### 6.3.4.1. எழவு காணுதல்

பெண்கள் அனைவரும் ஒன்றுகூடிக் கட்டிக்கொண்டு எழவுகாண்கின்றனர் (அழுகின்றனர்). சிறிது நேரம் அழுததும் யாரேனும் ஒருவர் அவர்கள்மீது சிறிதளவு தண்ணீர் தெளித்து அழுகையினை நிறுத்துகின்றார்.

#### 6.3.4.2. படைத்தல்

எழவு கண்ட பின்னர் உறவினரில் முதியவர் ஒருவர் நல்விளக்கு ஏற்றி, இறைவன்மீது பாடல்கள் பாடி, கற்பூர தீபம் ஏற்றுகிறார். அனைவரும் கற்பூரத்தைத் தொட்டு வணங்கித் திருநீறு இட்டுக்கொள்கின்றனர். படைத்த பொருட்களைப் பங்கும் பங்காளிகள், உறவினர்கள் என அனைவருக்கும் பிரித்து ஊர் வழங்குதல் நடைபெறுகிறது. இந்த ஏழாந்துக்கத்திற்குப் படைப்பதனைக் களப்பகுதியிலுள்ள சில ஊர்களில் ‘இலை போடுதல்’ என்றும் குறிப்பிடுகின்றனர்.

‘‘இறந்தவரின் குடும்பத்தார், பங்கும் பங்காளிகள், கொண்டான் கொடுத்தான், உறவினர்கள் அனைவருமாக இறந்த ஏழாம் நாள் அன்று கூடி

துக்கத்துடன் அழுது, இறந்தவருக்குப் பிடித்தமானவற்றை வைத்துப் படைத்துத் துக்கத்தை வெளிப்படுத்துவது ஏழாந்துக்கம் எனப்படுகிறது”[14].

### 6.3.4.3. பத்திரிகை வைத்தல்

இறந்தவருக்குப் பதினாறாம் நாள் கரும காரியம் செய்யப் பத்திரிகை அச்சடிக்கப்பட்டு, உறவினர்களுக்கு வைக்கப்படுகிறது. வள்ளுவ ஆழ்வார்கள் ‘திருநாராயணபலிப் பத்திரிகை’ என்றும் வள்ளுவ நாயனார்கள் ‘உத்திரகிரியைப் பத்திரிகை’ என்றும் கறுப்பு வெள்ளை நிறத்தில் அச்சிடுகின்றனர். முன்னர், இறந்தவர் பெயருடன் ஆழ்வார் அல்லது நாயனார் என்று போட்டுவந்தனர். இளைய தலைமுறையினர் இறப்பின் இவ்வாறு போடுவது காணப்படவில்லை. பத்திரிகையின் பின்பக்கம் மார்பளவுப் புகைப்படம் போட்டு அதில் தோற்றம், மறைவுத் தேதிகள் குறிக்கப்படுகின்றன.

கருமாதிப் பத்திரிகையில் இறந்தவரின் குடும்பத்தினர் பெயர்கள், தலைகட்டிக் கொள்ளும் பங்காளிகளின் பெயர்கள் குறிப்பிடப்படுவதுடன், தெருக்கூத்து வைப்பதெனில் ‘கேளிக்கை’ நடைபெறும் என்றும் குறிப்பிடப்படுகிறது. தலைகட்டிக் கொள்பவர்கள் அவரவர்களின் சம்பந்திகள், உறவினர்களுக்குத் தாங்களே பத்திரிகை வைத்துக்கொள்கின்றனர்.

## 6.4. நடப்பு

பதினைந்தாம் நாள் மாலையே ‘நடப்பு’ தொடங்குகிறது. இதுவே கரும காரியத்தின் தொடக்கம் என்றும் கருதலாம். நடப்பு அன்று சூரிய அஸ்தமத்தின்போது உறவினர்கள் அனைவருடன் கொள்ளி வைத்தவர் வேள்விப் பொருட்கள், படைக்கும் பலகாரங்கள், பழவகைகளைக் கூடையில் வைத்து வெள்ளைத் துணியால் கட்டித் தோளில் சுமந்து செல்கின்றார். தப்பு சேமக்கலம் அல்லது சங்கு, சேகண்டி முழங்க இறைவனைப் பாடிக்கொண்டு குழிக்கரைக்குச் செல்கின்றனர்.

பிணமேடையைச் சுத்தம்செய்து நன்கு மெழுகி மஞ்சள் குங்குமம் தெளிக்கின்றனர். மேடைக்கு மாலை அணிவிக்கப்படுகிறது. தலைமாட்டில் உள்ள செங்கல்லிற்கு ஒன்பது வகையான அபிஷேகங்கள் செய்யப்படுகின்றன. இறப்பு அன்று சக்கரத்தை எடுத்துவந்து வைத்தவரே இன்று அந்தச் சக்கரத்தை எடுத்து

---

[14]. சீனுவாசன், வயது. 45, வள்ளுவர் சமூகம், காரணப்பட்டு, கடலூர் வட்டம்.

வருகின்றார். அதற்கும் ஒன்பது அபிஷேகங்கள் செய்யப்பட்டு அச்சக்கரம் நான்கு திசைகளிலும் பிரித்துப் போடப்படுகிறது. அபிஷேகம் முடிந்ததும் கொண்டுவந்த பலகாரங்கள், பழவகைகளை வைத்து அன்ன நிமித்தியம் செய்து குடும்பத்தார், பங்காளிகள் அனைவரும் விழுந்து வணங்குகின்றனர்.

### 6.4.1. தர்ப்பனை கொடுத்தல்

இறந்தவரின் உறவினர்கள் சுடுகாட்டிற்கு அருகில் உள்ள நீர்நிலைக்குச் செல்கின்றனர். அதனருகில் அமர்ந்து கலசம் எடுப்பவர், நூல்கட்டிக் கொண்ட பங்காளிகள் அனைவருக்கும் அம்பட்டரால் மீசை இல்லாமல் முகச்சவரம் செய்யப்படுகிறது. பின்னர் அனைவரும் நீர்நிலையில் நீராடிய பின்னர் குழிக்கரையில் படைக்கப்பட்ட பொருட்கள் புரோகிதரால் பிரசாதமாகக் கொடுக்கப்படுகின்றன.

புரோகிதர் கொள்ளி வைத்தவரைக் கிழக்குமுகம் பார்த்தவாறு உட்கார வைக்கின்றார். பிள்ளையார் பிடித்து, அவர் எதிரில் வாழையிலையில் பச்சரிசி பரப்பி அதன்மீது கலசம் வைக்கப்படுகிறது. பால்மரச் சுள்ளிகளைக் கொண்டு நெய்வார்த்து எக்கியம் வளர்க்கப்படுகிறது. உறவினர்கள் அனைவரும் ஓமத்தையும், நவதானியத்தையும் தலையைச்சுற்றி அதில் போடுகின்றனர். எக்கியத்தில் தண்ணீர் விழுமாறு ஒரு வெற்றிலையைக் கொள்ளி வைத்தவர் சாய்த்துப் பிடிக்கின்றார். பங்காளிகள் அவரைத் தொட்டுக் கொள்கின்றனர். அவ்வெற்றிலையில் எள், பணம் ஆகியவை வைக்கப்படுகின்றன. புரோகிதர் இறந்தவரின் குலம், கோத்திரம், ஊர், பெயர், இறந்த திதி ஆகியவற்றைக் கூறி, இன்னார் இறந்ததை முன்னிட்டுப் பங்கும் பங்காளிகள், உற்றார் உறவினர் அனைவரும் ஒன்றுகூடிக் கங்கா, யமுனா, கோதாவரி என்று சொல்லக்கூடிய புண்ணிய நதிகளில் மூழ்கித் தாயில பத்தும் தந்தையில பதினொன்றும் ஆக மூவேழ் இருபத்தோறு தலைமுறையினருக்குமாக முத்து மோட்சம் என்று சொல்லக்கூடிய சாலோக, சாரூப, சாயுச்சம் என்னும் நான்காம் பதவி சேரவேண்டி ‘எள்ளுந்தண்ணீரும் இறைத்தது’ என்று கூறித் தர்ப்பனம் கொடுக்கப்படுகிறது. புரோகிதர் இவ்வாறு கூறப் பங்காளிகள் ஆழ்வாராக இருப்பின் “அரிஅரி” என்றும் நாயனாராக இருப்பின் “அரகரா” என்றும் பின்தொடர்ந்து கூறுகின்றனர். புரோகிதர் இவ்வாறு கூறிக்கொண்டே மாவிலையினால் தண்ணீரை அள்ளி வெற்றிலையின் மீது விடுகின்றார். வெற்றிலையின் மீதுள்ள எள் தண்ணீருடன் சேர்ந்து எக்கியத்தை அடைகிறது.

பின்னர், புரோகிதர் வாழையிலையில் உளுத்த மாவினைக் (உளுந்து மாவு) கொட்டி நல்லெண்ணெய் ஊற்றிக் கொள்ளி வைத்தவரைப் பிசைந்து உருளை வடிவில் செய்யச் சொல்கின்றார். மாவு உருளை மூன்றாகப் பகுக்கப்பட்டு, ஒன்றன்மீது ஒன்று வைக்கப்படுகிறது. மீண்டும் எண்ணெய் விட்டுப் பிசைந்து உருளையாக்கி இரண்டாகப் பகுக்கப்படுகிறது. அவ்விரண்டுப் பகுதிகளும் ஆண், பெண் பாவைகளாகச் (பொம்மைகள்) செய்யப்படுகின்றன. அவற்றிற்கு மஞ்சள், குங்குமம் இட்டுத் தூபதீபம் காட்டி, தர்ப்பைப்புல் போட்டு அர்ச்சித்து வழிபாடு செய்யப்படுகின்றன.

### 6.4.1.1. தண்ணீரில் விடுதல்

எள்ளும் தண்ணீரும் இறைத்து எக்கியத்தைத் தணித்த பின்னர் எக்கியம் வளர்த்த வேள்விப் பொருட்களையும், ஆண், பெண் பாவைகளையும் ஒரு பெரிய தாம்பாளத்தில் வாரி வைக்கின்றனர். கொள்ளி வைத்தவர் வடக்குத் திசையைப் பார்த்தவாறு இடக்காலால் முட்டிப் போடுகிறார் (ஒருகால் முட்டி). தாம்பாளத்துடன் வேள்வி செய்த பொருட்கள் புரோகிதரால் அவரது வலத் தோளில் வைக்கப்படுகின்றன. "காசிக்குப் போறேன், இராமேஸ்வரம் போறேன், வைகுந்தம் போறேன், கைலாயம் போறேன்" என்று மூன்றுமுறை கூறியவாறே திரும்பிப் பார்க்காமல் சென்று நீர்நிலையில் வேள்வி செய்த பொருட்களை விடுகின்றார். பின்னர் நீராடப்படுகிறது.

### 6.4.2. முதல் சம்பந்தம் கட்டுதல்

தர்ப்பனம் கொடுப்பதற்குச் செய்த கலசத்தின்மீது பூச்சரங்கள் சுற்றப்பட்டு அவை நழுவாமலிருக்க நூல் சுற்றப்படுகிறது. கொள்ளி வைத்தவருக்கு முதல் சம்பந்தம் கட்டப்படுகிறது. முதல் சம்பந்தம் என்பது கொள்ளி வைத்தவர் திருமணம் ஆனவர் எனில், மாமனார் அல்லது மைத்துனர், திருமணம் ஆகாதவரெனில் அம்மான் முதல் சம்பந்தக்காரர் ஆவார். இவர்கள் சோமம் (வேட்டி), அங்கவஸ்திரம், துண்டு, குடை, செருப்பு, மோதிரம் ஆகியவற்றைக் கொண்டுவருகின்றனர். தலை கட்டுபவர் கொண்டு வந்த தலைகட்டுப் பொருட்களான ஆடைகள், மோதிரம் ஆகியவற்றைப் புரோகிதரிடம் கொடுத்து அவற்றில் மஞ்சள் பூசி அட்சதை போட்டு, தலை கட்டுபவரின் பெயர், ஊர் பொருட்களின் மதிப்புகூறி, இன்னாருக்கானது என்று சம்பந்தம் கொண்டாடப்படுகிறது. சம்பந்தம் கொண்டாடுவதற்குப் புரோகிதருக்குப் பணம் கொடுக்கப்படுகிறது. இதனைச் 'சம்பந்தப் பணம்' என்று கூறுகின்றனர். சம்பந்தம்

கட்டுபவர் கொள்ளி வைத்தவருக்கு வேட்டி கட்டி அங்கவஸ்திரம் போர்த்தி, தலைப்பாகை கட்டிக் கை விரலுக்கு மோதிரம் அணிவிக்கின்றார். இதனைச் 'சம்பந்தம் கட்டுதல்' என்று குறிப்பிடுகின்றனர்.

### 6.4.3. கலசம் எடுத்தல்

தலைகட்டிக் கொண்டவர் புரோகிதரின் கால்களில் விழுந்து வணங்குகின்றார். புரோகிதர் கலசத்தினை எடுத்துக் கொடுக்க ஒருகால் முட்டிபோட்டுக் கலசம் வாங்கப்பட்டு மார்புடன் அணைத்துக் கொள்ளப்படுகிறது. அவருக்குச் சம்பந்தம் கட்டியவர் குடை பிடிக்கின்றார். மத்தளம், நாதஸ்வரக் கச்சேரியுடன் தப்பு சேமக்கலமும் இசைக்க இறைவன்மீது பாடல்கள் பாடியவாறு வீட்டை அடைகின்றனர்.

### 6.4.4. கலசத்தை வாங்குதல்

கலசம் பந்தலுக்கு வந்ததும், தலைகட்டிக் கொண்டவர் கலசத்துடன் கிழக்கு முகம் பார்த்தவாறு நிற்கின்றார். வெண்ணிறத் திரை போடப்படுகிறது. திரைக்கு மறுபுறமிருந்தவாறே மனைப்பலகையும் போடப்படுகிறது. கலசம் கொண்டு வந்தவர் அந்த மனைப்பலகையின் மீது கலசத்துடன் ஏறி நிற்கின்றார். இறந்தவரின் குடும்பத்தையோ அல்லது உடன் பங்காளிகளின் குடும்பத்தையோ சேர்ந்த குழந்தை இல்லாப்பெண் தலையில் தண்ணீரை ஊற்றிக்கொண்டு திரையின் எதிர்ப்புறம் நிற்கின்றார். கலசம் கொண்டுவந்தவரின் கால்களைத் திரைக்கு மறுபுறம் இருந்தவாறே நன்கு கழுவி மஞ்சள்பூசிக் குங்குமம் வைத்துப் பூப்போட்டுக் கற்பூர தீபம் காட்டிப் பாதபூசை செய்து விழுந்து வணங்குகின்றார். திரை நடுவில் இருக்கும்பொழுதே ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொள்ளாமல் கலசம் வாங்கப்படுகிறது. வாங்கிய கலசத்தை அப்பெண் இறந்தவர்வீட்டுச் சாமியறையில் வைத்து வணங்குகின்றாள்.

கலசம் சாமியறைக்குச் சென்றதும் பெண்கள் ஒன்றுகூடிச் சிறிதுநேரம் எழவு காண்கின்றனர். கலசம் எடுத்துவந்தவருக்கு ஆரத்தி எடுத்து நெற்றியில் திலகம் இடப்படுகிறது. பின்னர் அனைவருக்கும் இரவு உணவு பரிமாறப்படுகிறது.

### 6.4.5. கேளிக்கை நடைபெறுதல்

இறந்தவர்கள் மோட்சப்பதவி அடைய வேண்டும் என்பதற்காகப் புராணங்களில் மோட்சம் அடைந்தவர்களின் கதைகளை நாடகமாகக் கொண்டு

தெருக்கூத்தினை நடத்துகின்றனர். கர்ண மோட்சம், வாலி மோட்சம் போன்ற மோட்ச நாடகங்கள் இத்தெருக்கூத்தில் இடம்பெறுகின்றன. இத்தெருக்கூத்து நடப்பு அன்று இரவு நடைபெறுகின்றது. தெருக்கூத்து நடைபெறுமிடத்தில் கூத்தினைக் கண்டுகளிப்பதைப் போன்று இறந்தவரின் திருவுருவப்படம் வைக்கப்படுகிறது. கூத்து முடியும்போது நாடக ஆசிரியர் இறந்தவரின் குலம், கோத்திரம், பெயர், இறந்த திதி இவற்றைக் கூறி அன்னாரது ஆவி மோட்சம் பெற வேண்டிச் சில மோட்சக் கீர்த்தனைகளைப் பாடி மோட்சம் சேர்க்கின்றார்.

இந்த தெருக்கூத்தினைப் பெரும்பாலும் வள்ளுவச் சமூகத்தைச் சேர்ந்த நாடக ஆசிரியர்களே நடத்தி வந்தனர். அவர்களுக்குத் தேதி இல்லாத நேரத்திலும் இன்றைய நிலையில் வள்ளுவர்களின் தெருக்கூத்துச் சபாக்கள் மிகக் குறைந்த எண்ணிக்கையில் இருப்பதாலும் வன்னியச் சமூக மக்களின் தெருக்கூத்துச் சபாக்களை அமர்த்தும் நிலை காணப்படுகிறது.

சாதியைக் காரணமாகக் கொண்டு வள்ளுவர்களின் வீடுகளில் உண்ணாத வன்னிய கூத்துக் கலைஞர்களுக்கு அதே ஊரில் உள்ள ஏதேனும் ஒரு வன்னியர் வீட்டில் மளிகைப் பொருட்களைக் கொடுத்து உணவு செய்துகொடுத்து வந்த நிலை உண்டு. அவ்வாறு பாராமல் வள்ளுவ இல்லங்களில் வன்னியக் கலைஞர்கள் உண்ணும் நிலை தற்போது காணப்படுகிறது.

தெருக்கூத்து வைக்குமளவிற்கு வசதி இல்லாத வள்ளுவக் குடும்பங்கள் பல காணப்படுகின்றன. முன்னர்த் தெருக்கூத்தினைத் தொழிலாகக் கொண்டிருந்த வள்ளுவர்கள் சோதிடர்களாகவும், அரசுப் பணிகளில் உள்ளவர்களாகவும் இருக்கின்றனர். இவர்களில் சிலர் கூடி ஆர்மோனியப் பெட்டி, மத்தளம் ஆகியவற்றை வாடகைக்கு வாங்கி வந்து இறந்தவர் வீட்டில் அமர்ந்து ஏதேனும் ஒரு நாடகத்தைத் தேர்வு செய்து நிகழ்த்துகின்றனர். அவர்கள் ஆளுக்கொரு வேஷமாகப் (பாத்திரங்களாகப்) பாடல்களைப் பாடியும், வசனங்களைப் பேசியும் நாடகம் நடத்தி இறந்தவரை மோட்சம் சேர்க்கின்ற நிலை காணப்படுகிறது.

### 6.4.6. தாலி வாங்குதல்

இறந்தவர் திருமணமான ஆணாக இருப்பின் இறந்தவரது மனைவியின் தாலி அறுக்கப்படுகிறது. இதனைத் 'தாலி வாங்குதல்' என்கின்றனர். கணவன் இறந்த தினத்திலிருந்து நடப்பு வரையில் மனைவி தினமும் நீராடி மஞ்சள் பூசிக் குங்குமம் இட்டு, தலையில் பூச்சரங்களைச் சூடிக் கொண்டும் காணப்படுகிறாள்.

கைகளில் கண்ணாடி வளையல்களை அணிந்துகொண்டும் காணப்படுகிறாள். இயல்பான வாழ்க்கையில் உள்ள சுமங்கலிப் பெண்களைவிடக் கணவனை இழந்தவர்கள் கருமகாரியச் சடங்கிற்காகச் செய்து கொள்ளும் அலங்காரம் சற்றுக் கூடுதலாகவே காணப்படுகிறது.

நடப்பு முடிந்தபின்னர் அதிகாலை மூன்று முதல் நான்கு மணி வரையில் இருட்டிற்குள்ளாகத் தாலி வாங்குதல் நடைபெறுகின்றது. கணவனை இழந்த பெண் குளிக்க வைக்கப்படுகிறாள். அவளது பிறந்த வீட்டில் இருந்து மஞ்சள், குங்குமம், பூ, புதுப்புடைவை, வளையல் ஆகியன கொண்டுவரப்படுகின்றன. புடைவையை உடன்பிறந்த சகோதரன் கொடுக்கின்றான். அவள் அதனைப் பெற்று உடுத்திக்கொண்டு அலங்காரம் செய்து வீட்டு வாசலில் போடப்பட்டுள்ள கருமாதிப் பந்தலுக்கு அழைத்து வரப்படுகிறாள்.

மர உரல், புதுப்பானை, சர்வசட்டி ஆகியவை நன்கு கழுவப்பட்டுப் பூசை வைத்து, பூச்சூட்டபடுகின்றன. அலங்காரம் செய்யப்பட்ட பெண் கிழக்கு முகம் பார்த்து உட்கார வைக்கப்படுகிறாள். அவள் எதிரில் மர உரலின்மீது மண் பானை வைத்து அதில் முழுவதும் தண்ணீர் நிரப்பப்படுகிறது. அதன்மீது சர்வசட்டியில் காய்ச்சாத பசும்பால் வைக்கப்படுகிறது.

விதவையான வண்ணார் அல்லது அம்பட்டர் சமூகத்தைச் சேர்ந்த பெண்ணால் முதலில் காலில் உள்ள உருட்டு (மெட்டி), பின்னர் வளையல், தாலி, பூ இவை கழற்றப்படுகின்றன. தாலி மர உரலின்மீது வைத்துள்ள பாலில் போடப்படுகிறது. இறுதியாகப் பொட்டு (குங்குமம்) அழிக்கப்படுகிறது.

தாலி அறுத்தவுடன் அருகில் உள்ள ஏதேனும் ஓர் அம்மன் கோயிலுக்குச் சென்று வெற்றிலைப் பாக்கு, வாழைப்பழம், தேங்காய் உடைத்து வைத்துக் கற்பூரம் ஏற்றி வணங்குகின்றாள். 'நான் கணவனை இழந்துவிட்டேன். அதனால் வேறு எந்த ஆடவனுக்கும் என்மீது இச்சை வரக்கூடாது?' என்று அம்மனிடம் வேண்டிக் கொள்வதாகவும் கூறப்படுகிறது. படைத்த பொருட்களை எடுத்துக் கொள்ளாமல் கோயிலிலேயே வைத்து வீடு திரும்புகின்ற நிலை காணப்படுகிறது.

வீட்டிற்கு வந்ததும் பசுவினைக் குளிப்பாட்டி மஞ்சள் குங்குமம் வைத்துப் பூ போட்டுக் கற்பூர தீபம் ஏற்றி அதன் வாலைக் கைகளால் உருவிவிட்டு நெருப்புக் கொளுத்தி வணங்குகின்றாள். பின்னர் பசுவிற்குப் பச்சரிசி, அகத்திக்கீரை கொடுக்கப்படுகின்றன. அதனருகில் உலக்கை போடப்படுகிறது.

தாலி அறுத்த பெண் முதலில் நெருப்பு, பின்னர் உலக்கையைத் தாண்டி வீட்டிற்குள் செல்கின்றாள்.

உள்ளே பச்சைத் தென்னங்கீற்றில் அமர வைக்கப்படுகிறாள். அவள் எதிரில் அட்சதையும், குங்குமமும் வைக்கப்படுகின்றன. பங்கும் பங்காளிகள் மாமன் மைத்துனர், மற்றுமுள்ள உறவினர்கள் வீட்டுச் சுமங்கலப் பெண்கள் ஒவ்வொருவராகச் சென்று தாமாகக் குங்குமத்தை எடுத்துத் தங்கள் நெற்றியிலிலும், திருமாங்கல்யத்திலும் வைத்துக்கொண்டு தாலி அறுத்த பெண்ணை வணங்குகின்றனர். அவள் ''எனக்கு வந்த விதவை நிலை வராமல் 'காருள்ள வரை கடல் நீருள்ள வரை' நீண்ட நாள் சுமங்கலியாக வாழ வேண்டும்'' என்று அட்சதை போட்டு ஆசீர்வதிக்கின்றாள். தாலி வாங்கிய பெண்ணின் முகத்தில் முழிப்பதால் (விழிப்பது) தங்கள் மாங்கல்ய பாக்கியம் வலுப்பெறும் என்பதனை மிகவும் நம்புகின்றவர்களாக வள்ளுவப் பெண்கள் உள்ளனர்.

## 6.5. கருமாதி செய்தல்

வள்ளுவர் சமூகத்தில் களப்பகுதியில் உள்ள வள்ளுவர் சமூகக் கிராமங்களில் இறந்த பதினாறாம் நாள் அதிகாலை நான்கு மணியளவில் கருமாதி ஆரம்பிக்கப்படுகிறது. அதிகாலையிலேயே வீடு வாசல்கள் தூய்மை செய்யப்படுகின்றன. இறப்பு அன்று போடப்பட்ட பந்தல் கருமாதி முடியும் வரை இருக்கின்றது. அப்பந்தலின் கீழ்ப் பெருக்கித் தூய்மை செய்யப்பட்டு ஐந்தடிக்கு ஐந்தடி சதுர வடிவில் பசுவின் சாணத்தால் மெழுகப்படுகிறது.

### 6.5.1. நான்கு வாசப்படி வரைதல்

வள்ளுவப் புரோகிதரும் உறவினர்களுமாக இந்த நான்கு வாசப்படியினைப் பச்சரிசி கொண்டு வரைகின்றனர். இதற்கு 'வைகுந்த வாயில்கள்' என்றும் பெயர் கூறப்படுகிறது. உலக்கையினை வைத்து அதன் இருபுறங்களிலும் பச்சரிசியினைக் கோலம் போடுவதைப் போல் விடுகின்றனர். இவ்வாறு ஓர் உலக்கை பக்க அளவாகக் கொள்ளப்பட்டுச் சதுரவடிவில் வரையப்படுகிறது. அந்த சதுரத்தின் நாற்புறமும் நடுவில் வாயில்கள் திறக்கப்படுகின்றன. சதுரத்திற்குள் மேற்குத் திசையில் கிழக்குப் பார்த்தவாறு திருநாமமும் அதன் இரு பக்கங்களில் சங்கு, சக்கரமும் வரையப்படுகின்றன. அதன்கீழ் கருடாழ்வார், ஆஞ்சநேயர் ஆகியோர் வரையப்படுகின்றனர். சூரியன்,

சந்திரன், கற்பக விருட்சம், கோமாதா, அட்சய பாத்திரம் ஆகியவற்றையும் சதுரத்திற்குள் வரைகின்றனர். தடித்த நூல்கள் பந்தலின் இருந்து சதுர வடிவில் உள்ள நான்கு வாசப்படியின் நான்கு மூலைகளுக்கும், அதன் நடுப்பகுதிக்கும் தரைக்கு அரையடிச் சற்றுத் தூரத்திலும் தொங்கவிடப்படுகின்றன. நூல்களின் நுனியில் பூக்கள் கட்டப்பட்டிருக்கின்றன (இந்த நான்கு வாசப்படியின் புகைப்படம் பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது).

வள்ளுவ நாயனாரால் இந்த நான்கு வாசப்படியில் நான்கு மூலைகளிலும் பிள்ளையார், நடுவில் இலிங்கம், தென்புறத்தில் நந்தி, வடகிழக்கு மூலையில் பரதேசி என வரையப்படுகின்றன. இவை 'திருக்கயிலாய வாயில்களாகக்' கருதப்படுகின்றன.

### 6.5.2. நூல் கட்டிக் கொள்ளுதல்

தலை குளித்துவிட்டுக் கொள்ளி வைத்தவர் பங்காளிகள் அனைவரும் ஆண்களும் பெண்களுமாக ஒவ்வொருவராகப் புரோகிதரின் கால்களைத் தொட்டு வணங்கி அவரிடம் வெண்ணிற நாமம் (துக்கநாமம்) இட்டுக் கொண்டு, ஆண்கள் பூணூல் அணிந்தும், பெண்கள் கையில் நூல்கட்டிக் கொண்டும், தர்ப்பைப் புல்லினால் ஆன மோதிரம் அணிந்து கொள்கின்றனர். பின்னர் வழக்கமான முறையில் எக்கியம் வளர்த்தி, இறந்தவரின் குலம், கோத்திரம், இறந்த திதி இவற்றைக் கூறி, எள்ளுந் தண்ணீரும் இறைத்துத் தர்ப்பனம் செய்யப்படுகிறது. எக்கியத்தில் நூல்களும், தர்ப்பைப்புல், மோதிரம் இவற்றுடன் ஓமம், நவதானியங்களும் பங்காளிகளால் தலையைச் சுற்றிப் போடப்படுகின்றன.

### 6.5.3. மோட்சம் சேர்த்தல்

மோட்சம் சேர்த்தல் என்பது இறந்தவரின் ஆத்மாவினைக் குடும்பத்தினர், பங்காளிகள் கயிலாயம் அல்லது வைகுந்தம் அழைத்துச் சென்று இறைவனது திருவடிகளில் சேர்ப்பதாகக் கூறப்படுகிறது. "கயிலாயம் அல்லது வைகுந்தத்தில் நான்கு வாயில்கள் இருக்கின்றன; இறந்தவரின் ஆத்மா அங்கு எவ்வாறு அனுமதிக்கப்படுகிறது? இறந்தவர் உயிருடன் இருக்கும்பொழுது செய்த பாவபுண்ணியங்களுக்கான தண்டனைகள் என்னென்னவென்று நிகழ்த்திக் காட்டும் ஒரு நிகழ்கலைதான் மோட்சம் சேர்த்தல் எனக் கூறலாம்"[15].

---

[15]. ஆர். ராஜாங்கம், வயது. 67, வள்ளுவர் சமூகம், வடலூர், கடலூர் வட்டம்.

நான்கு வாயில்களில் கீழ்வாசல் என்று கூறப்பட்டுக் கிழக்கு வாசலில் வெண்திரை போடப்படுகிறது. இருவரால் இந்த வெண்திரை சடங்கு முடியும் வரை நான்கு வாயில்களுக்கும் பிடிக்கப்படுகிறது. திரைக்குக் கிழக்கில் மேற்கு நோக்கியவாறு கொள்ளி வைத்தவர் மற்றும் பங்காளிகள் நிற்கின்றனர். புரோகிதரின் கைகளால் கொள்ளிவைத்தவரின் தலையில் புதுச்சட்டியில் மாவிளக்கு வைக்கப்படுகிறது. மற்றொருவர் ஒரு தாம்பாளத்தில் நான்கு வாயில்களுக்கும் வெற்றிலைப் பாக்கு, பழம், பணம் எடுத்துக் கொள்கின்றார். இவை முப்பத்திரண்டு தானங்களாகக் கருதப்படுகின்றன. திரைக்கு மேற்குத் திசையில் கிழக்கு முகம் பார்த்தவாறு மாமன் மைத்துனர் முறையில் உள்ள சில உறவினர்கள் நிற்கின்றனர். இவர்கள் வைகுந்த வாயிலின் காவலர்களாகக் கருதப்படுகின்றனர்.

மோட்சம் சேர்ப்பவர்கள் தப்பு, சேமக்கலத்தை இசைத்துக் கொண்டு இறைவனைப் பற்றிய பாடல்களைப் பாடுகின்றனர். வாயில் காவலர்களாக நிற்பவர்கள், ‘‘ஆடலுடனும் பாடலுடனும் சங்கீதத்துடனும் வருகின்றீர்களே நீங்கள் யார்? எதற்காக வந்துள்ளீர்கள்? என்ன வேண்டும்?’’ என்று கேட்கின்றனர்.

‘‘ஐயா! நாங்கள் இன்ன ஊரிலிருந்து வருகின்றோம். இன்னாருக்குப் பிறந்த இன்னார் இன்ன நாளில் (இறந்தவரின் குலம், கோத்திரம், பெயர், இறந்த தமிழ் வருடம், மாதம், தேதி, நட்சத்திரம், திதி கூறப்படுகின்றன) இறந்ததை முன்னிட்டு அவரது ஆத்மா சாந்தியடைய வேண்டி வைகுந்தப் பதவி சேர்க்க வந்துள்ளோம் ஐயா!’’ என்கின்றனர்.

‘‘அப்படியானால் இது வைகுந்தத்தின் கிழக்கு வாசல். இங்கே வரவேண்டுமானால் கோதானம், பூதானம், சொர்ணதானம் என்று சொல்லக்கூடிய முப்பத்திரண்டு தானங்களில் இன்னின்ன தானங்களைச் செய்திருக்க வேண்டும்’’ என்று கூறப்படுகிறது. வெற்றிலைப் பாக்கு, பழம், பணம் வைத்துத் தானங்களாகக் கொடுக்கப்படுகின்றன. அதனைப் பெற்றுக்கொண்டு கிழக்கு வாசலுக்குண்டான பாடல்கள் பாடப்படுகின்றன. பின்னர் தெற்கு வாசலுக்கு அனுப்பப்படுகிறது.

தெற்கு வாசலில் இவ்வாறே நிகழ்த்தப்பட்டுப் புரோகிதரால் அவ்வாசலுக்குரிய கவி, பாடல், பெருமைகள் கூறப்படுகின்றன. பின்னர், மேற்கு

வாசல், வடக்கு வாசல்களிலும் இவ்வாறே நிகழ்த்தப்படுகின்றன. வடக்கு வாசலில் விடப்பட்டு இறந்தவர் ஆத்மா வைகுந்தப் பதவி சேர்க்கப்படுகிறது.

அப்போது வரையப்பட்டுள்ள நான்கு வாசற்படிகளில் வைத்துள்ள கற்பூரங்கள் ஏற்றப்படுகின்றன. பந்தலின் மேலிருந்து நடுவினில் தொங்கும் நூலானது கற்பூரத்தின் மூலம் எரிந்துகொண்டு மேல்நோக்கிச் செல்கிறது. இந்த நிகழ்வு இறந்தவர் ஆத்மா சோதி வடிவில் இறைவனை அடைவதாகக் கருதப்படுகிறது. புரோகிதர் அப்போது இறந்தவரின் குலம், கோத்திரம், பெயர், இறந்த ஆண்டு, மாதம், திதி, நாள், நட்சத்திரம் இவற்றைக்கூறி ‘‘சாலோக, சாமீப, சாரூப, சாயுச்சம் நான்காம் பதவி சேர்வதாக நமோ நாராயணா’’ என்று கூறுகின்றார். இறந்தவர் குடும்பத்தினர், பங்காளிகள் ‘‘கோவிந்தா! கோவிந்தா!’’ என்று கூறி விழுந்து வணங்குகின்றனர். மாவிளக்கு, சாமியறைக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. கற்பூரங்கள் எரிந்து முடிந்ததும் உடனே அரிசியினால் வரைந்த இந்த நான்கு வாசல்களைக் கைகளால் ஒன்றாகக் கூட்டி விடுகின்றனர்.

### 6.5.4. திருவித்தியான மாலை (நாலு வாசப்படிப் பாட்டு)

*‘‘ஓங்கு புகழ் தாரணியில் ஓது திரு வித்தியானாம்*
*பாங்கு திரு புகழ் மாலை பாடுதற்கு*
*தீங்கில்லா பண்ணும் ஐங்கரனார் பாதம் மிகவே*
*என்னாலும் கண்ணில் மகிழ்ந் தேற்றினேன் காப்பு.*

*திருவளரும் பன்னிருவர் பாதம் போற்றி!*
*ஸ்ரீரங்க கமலம் மிக உண்டேற்றி*
*மலர் பொழியும் ஆச்சாரியனார் பாதம் போற்றி!*
*மறைபுகலும் வேதமதை மனதில் சாற்றி*
*திருவளரும் தரணி தனில் இறந்தோர்க் கெல்லாம்*
*தகைமை பெரும் வைகுந்தப் பதவி சேர*

*கருவளரும் அலர்மேலு மங்கை பங்கன்*
*கழலடியை அனுதினமும் போற்றி செய்வோம்.*

*செய்குவோம் மண்டபங்கள் சுத்தம் செய்து*
*செஞ்சாந்து வர்ணமதாய் கோலமிட்டு*
*நைகு பெற அமுதிட்டு சங்கு சக்கரம்*
*நேராக நவகோணம் நிலையுண்டாக்கி*
*அடைகு பெற நமோ நாராயணா*
*வென்ற அட்சரத்தைக் கூறி, அதன்மேல் கலசம் வைத்து,*
*வைகு பெற தாம்பூலம், சொர்ண புஷ்பம்,*
*பத்தியுடன், நைவேத்திய தூபம் ஈந்தார்.*

*ஈந்த பின்னும் குருமார்கள் ஆச்சாரியர்க்கு*
*இணையடியை நமஸ்கரித்து எழில்தானங்கள்*
*புகழ்நாத வஸ்திரதானம் குடைகளன்னம்*
*பூதானம் வாழ்ந்த கோதானம், பூமி தானம்*
*பாதரட்ஷையுடன் விசிறி தானம்*
*வளமாகக் கொடுத்தவர்க்குத் தாசம் செய்து*
*மாய்ந்தவர்கள் ஆவியது வைகுந்தம் சேர*
*மாவிளக் கெடுப்பதுவும் வகுப்பதாமே!*

*மகத்துவ மாவுதனைப் பிசைந்து நெய்வார்த்து*
*தாம்பாளம் தன்னில் வைத்து*
*ஜெகத்த அரிகேசவா ஐயும் கிலியும்*
*சவ்வும் மௌவும் என்று*
*தகுத்திருந்த குரு கரத்தால் விளக்கெடுத்து*
*தன்னுரிமை யானவன் தன்சிரசில் வைத்து*
*மகத்துவமாம் கீழ்வாசல் தன்னில் சென்றுவணங்கி*
*பன்னீஸ்திரி ஆழ்வார்கள் பாதம் போற்றி!*

*போற்றி செய்வோம் எம்பெருமான் ஐயன் சொன்ன*
*புகழான திருவித்தியான மாலை*
*கோத்திரம் சேர் எம்பெருமானையன் சொன்ன*
*குரிதான திருவித்தியான மாலை*
*சாற்றியபின் திருமால் தன்பாதம் கண்டு*
*தகமை பெரும் வைகுந்தப் பதவியேக*

*மாற்றியிடும் பிறவிதனை அறுத்தெடுக்க*
*வருமந்திரம் அஞ்சலனார் வகுப்பதாமே!"*[16]

*தந்தனா தந்தனா தந்த னானா*
*தனதந்தா தந்த தானன தானா*

### 6.5.4.1. கீழ் வாசப் பாட்டு

*"வருமந்திரகுரு விந்துக்கலை நாதர்*
*வஸ்திரலோக மயக்கம தாகவே*
*திருமந்திரத்துயர் காம மனைத்துமே*
*தஷ்ய மோட்ஷியம் தெரிந்திட வந்தருள்*
*குருமந்தரம் என்னும் ஸ்ரீபாதம் தந்தருள்*
*கோவிந்தா என்ற வாங்கு உட்கொண்டருள்*
*அருள் மந்திராபுரி ஆதிநாராயணா*
*அரி அரி என்னும் அஞ்சலநாதா!*

*பூண்டு பட்ஷி மிருகம் மனிதரனைத்தையும்*
*பொய்யலோகம் புகுந்து வளர்த்துமே*
*வேண்டு கர்மங்கள் நீதி பொய்வாக்கியம்*
*மெத்தவே கோடி நித்தமே செய்தருள்*
*நின்று வாழ்ந்து திருந்து மனிதர்கள்*
*நின்றபோது நினைத்திட வந்தருள்*
*ஆண்டுக்குள் திருவேங்கட மங்கைவாழ்*
*அரி அரி என்னும் அஞ்சலநாதா!"*[17]

### 6.5.4.2. தெற்கு வாசல் போகும் கவி

*"ஆழி சூழ் உலகு தனில் மிகவும் வாழ்ந்து*
*அரியினிட பாதமதை அனுதினமும் போற்றி!*
*வாழி எனும் மாடு மக்கள் பெண்டிர் சுற்றம்*
*மனதாசை நீதியாடை பொருள்கள் விட்டு*

---

[16]. எஸ். ராமச்சந்திரன், வயது. 60, வள்ளுவர் சமூகம், களையூர், கடலூர் வட்டம்.
[17]. மேலது.

*பாவி எனை தொடரு மெந்தன் வினைகள் நீக்கி*
*பரிகரித்து தெற்குதலை வாசல் வந்தேன்'’[18].*

## 6.5.4.3. தெற்கு வாசல் பாட்டு

*‘‘மருவி சூரரை வென்றவர் நீரே!*
*வானவர்க்கு முன் வந்தவர் நீரே!*
*பெருகி நாதம் விளைத்தவர் நீரே!!*
*பெண்கள் போல் வந்து பேசி நின்றீரே!*
*குருகு யானைக்குதவி தந்தீரே!*
*குன்றெடுத்து முன் காத்து நின்றீரே!*
*அருது நூற்றெட்டுப் பாற்கடல் மோட்சம்!*
*அரி அரி எனும் அஞ்சலநாதா!*

*மங்கை வில்லை வளைத்தவர் நீரே!*
*வானவர்க்கு முன் வந்தவர் நீரே!*
*நங்கை கூடப் பிறந்தவர் நீரே!*
*நான்முகனை அளித்தவர் நீரே!*
*இங்கு வந்து வளர்ந்து நின்றீரே!*
*எம்பிரா னென்று இரஞ்சின துண்டே*
*அங்கு என்றெண்ணி இங்கு வந்தீரே!*
*அரி அரி என்னும் அஞ்சலநாதா!’’[19]*

## 6.5.4.4. தெற்கு வாசல் பெருமை

*‘‘உண்ட மனையோருக்கு ரண்டகம் செய்தபேர்*
*ஓரவிபகார மருள்வோர்,*
*கொண்டவளை விட்டு வேறு பெண்டுகளை மருகினோர்*
*கோவில்கள் இடித்த பேரும்,*
*கன்று, தாய்ப் பசுதனைக் கயிற்றினால் கட்டி*
*கதறிட அடித்த பேரும்,*

[18]. எஸ். ராமச்சந்திரன், வயது. 60, வள்ளுவர் சமூகம், களையூர், கடலூர் வட்டம்.
[19]. மேலது.

*காமநோய் கொண்டு தன்மனம்*
*தாய் தங்கையை காதலுடனே மருகினோரும்,*
*சென்று வைகுந்த தென்வாசலில் இருக்கின்ற*
*செக்கினில் அரைக்கப் பட்டுமே*
*தேயுமுன் அரிதாகி அரவுவளர் பாதாள*
*நரகமதில் வீழ்வார்களே!''*[20]

### 6.5.4.5. மேற்கு வாசல் செல்லும் கவி

*''ஐயமிட் டுண்டு வாழ்ந்து*
*அரி தாசர்க்கு அமுதளித்து*
*பொய்யுரை களவு நீக்கி*
*பொல்லாத வினைகள் நீக்கி*
*செய்வினை தோஷம் நீக்கி*
*திருமால்தன் பாதம் கண்டு*
*மெய்யொடு தான தர்மம்*
*விளங்கி மேல்வாசல் வந்தேன்!''*[21]

### 6.5.4.6. மேற்கு வாசல் பாட்டு

*''பஞ்சவர்க்கு சகாயம் செய்தீரே!*
*பாரில் ஓரடி வைத்தவர் நீரே!*
*கொஞ்சம் கஞ்சனை கொண்டவர் நீரே!*
*கோடியாயிரம் நாமங்கள் பூண்டவர் நீரே!*
*தஞ்சம் என்றோரைக் காத்தவர் நீரே!*
*தாடகை தன்னை வென்றவர் நீரே!*
*அஞ்சல் அஞ்சலென்றுன் பாதம் போற்றினேன்*
*அரி அரி என்னும் அஞ்சலநாதா!*

*பொன்னின் கோவில் பொருந்திய பாற்கடல்*
*பொங்கும் ஆயிரம் ஆயிரம் பூமலர்*

---

[20]. எஸ். ராமச்சந்திரன், வயது. 60, வள்ளுவர் சமூகம், களையூர், கடலூர் வட்டம்.
[21]. மேலது.

*பின்னும் ஆயிரம் ஆயிரம் பூமலர்*
*வேதம் நான்கும் விளங்கிட வந்தருள்*
*பின்னும் மூவர் ஒருவர்க்கு ஒருவர் பின்*
*வேதம் நான்கும் விளங்கிட வந்தருள்*
*அன்னையே நமோ ராமானுஜாயா!*
*அரி அரி என்னும் அஞ்சலநாதா!''*[22]

### 6.5.4.7. மேற்கு வாசல் பெருமை

*''சாலை வழியில் குளம் சத்திரம் இடித்தபேர்*
*சதி பாதகம் செய்த பேர்*
*சாப்பிடும் சாதத்தில் நரவியை கலந்தபேர்*
*சற்குருவை நினையாத பேர்*
*கூலியைக் குறைத்ததிக வேலையைக் கொண்டபேர்*
*கோள் சொல்லியும் திரிகுவோர்*
*கோல் கொண்டு குருவிதன் கூடதை கலைத்தபேர்*
*கொடிய வஞ்சனை பாதகர்*
*துரோகி கனபாதகர் எல்லாம்*
*மேல் வாசலில் சென்று வேதனைப் படுவோரை*
*வீரகிங்கிலியர் தள்ள, வெகுசதிக*
*துரபதிக மேலுருக நரகமதில் வீழ்வார்களே!''*[23]

### 6.5.4.8. மேற்கு வாசல் கவி

*''மனதில் பயமில்லாமல் இந்த நேரம்*
*வந்து மேல் வாசல் நின்றாய் நீ யார்?*
*கனமுடன் திருமால் பாதம்*
*கவனமாய்த் தொழுகா விட்டால்*
*உனது பெயர் குலம் விளங்க*
*உற்றதைச் சொல்லா விட்டால்*

---

[22]. எஸ். ராமச்சந்திரன், வயது. 60, வள்ளுவர் சமூகம், களையூர், கடலூர் வட்டம்..
[23]. மேலது.

*வனங்கதை ஆழ்வார் கண்டால்*
*வதை செய்வார் வடக்கு போவாய்''*[24]

### 6.5.4.9. வடக்கு வாசல்பாட்டு

*''ஊனுலாவிய கோணம் முக்கோணம்*
*உக்கோணம் அது முக்கோணமாகிய*
*பூணூலாகிய கோணம் முக்கோணம்*
*பொங்கும் கோணம் புகழ்ந்திட வந்தருள்*
*காணு கோணமதாகிய மங்கைவாழ்*
*கண்டு வாழ்ந்து களித்திடும் நெஞ்சமே!*
*ஆணு கோணமதாகிய மங்கைவாழ்*
*அரி அரி எனும் அஞ்சலநாதா!*

*ஒன்று ரெண்டுடன் மூன்று நான்கைந்தாம்*
*ஓரா ரே ழெட்டு ஒன்பது மாகிய*
*துன்னும் பத்து பதினான்கு மூவேழும்*
*தொடருமெந்தன் வினைக ளறுத்திட*
*பின்னு மூவர் ஒருவர்க்கு ஒருவர் பின்*
*வைகுந்தம் மென்னும் வாமனம் தந்தருள்*
*அன்னையே நமோ ராமானுஜாயா!*
*அரி அரி எனும் அஞ்சலநாதா!''*[25]

### 6.5.4.10. வடக்கு வாசல் பெருமை

*''தடம் தன்னில் சத்திர முண்டாக்கினோர்*
*தடாக முண்டாக்கி வைத்தோர்*
*சகல உயிர்களையும் தன்னுயிர் போலவே*
*தஞ்ச மென்றோரைக் காத்தோர்*
*இடமளித் தன்னுடன் இருமென்று சொன்னபேர்*
*எடுத்த சுமை இறக்கி வைத்தோர்*

---

[24]. எஸ். ராமச்சந்திரன், வயது. 60, வள்ளுவர் சமூகம், களையூர், கடலூர் வட்டம்.
[25]. மேலது.

*மடவாலையம் கோவில் நித காலமும்*
*பூஜை மறவாமல் நடத்தி வருவோர்*
*மாதாமாதம் விரதம் தவறாமல் நடத்துவோர்*
*அன்னபோஜனம் செய்குவோர்*
*கடவுள் வளர் வைகுந்த வடவாசலில் சென்று,*
*கனக மணி மண்டபத்தில்,*
*கற்பக மலர்ப்பல, மலர் பலவகைப்பெறும்,*
*நற்பதம் சேர்வார்களே!''*[26]

**6.5.4.11. வடக்கு வாசல் கவி**

*''அரி அரி எனும் வைகுந்தவாசா!*
*அறிகிலேன் உனது நெஞ்சம்*
*தெரியாமல் மூன்று வாசல்*
*தேடினேன் உன் பாதம் காண*
*புரியாமல் நீதான் இந்த*
*புண்ணிய வழியைக் காட்டி*
*துரிதமாய் எனை ஆட்கொள்வீர்*
*துரமணி மகுடத் தோனே!*
*துரமணி என்று ரைத்த*
*தூதர்கள் கூறக் கேட்டு*
*துரை புகழ் மன்னனான*
*தராதிபன் அருகில் வந்து*
*கொத்துமா விளக்கிறக்கி*
*கொடுவினை பாவம் போக்கி*
*சுத்தமா வழி திறந்து*
*சுகமுடன் அழைப்பதாமே!*

*அழைத்திடு மென்று சொன்ன*
*ஆழ்வார்கள் அருகில் வந்தோம்*
*ஜெகம்புகழ் பாதம் கண்டு*
*திரைதனைத் திறந்து விட்டு*

[26]. எஸ். ராமச்சந்திரன், வயது. 60, வள்ளுவர் சமூகம், களையூர், கடலூர் வட்டம்..

*உகமையாய் கருடன் பாதம்*
*உட்கொண்டு மந்திரஞ் சொல்லி*
*தகமை சேர் ஆசனத்தில்*
*தங்குவீர் தங்குவீரே!*
*ஆதலால் வாழ்க வாழ்க!*
*அருந்தவ முனியும் வாழ்க!*
*காவலன் கருடன் வாழ்க!*
*கனத்த வைகுந்தம் வாழ்க!*
*வேதமும் நான்கு வாழ்க!*
*விண்ணவர்க்கு இளையோன் வாழ்க!*
*கரக்கமா டெடுக்கப் பிள்ளை,*
*கன்றுகால் பெருகி,*
*மண்ணும் மனையும் தழைத்து,*
*ஆயுள் வளர்ந்து, பதினாறும் பெற்று,*
*பெருவாழ்வு வாழ்ந்து, சுகமே இருக்க*
*திருவித்தியான மாலை எழுதினோரும்,*
*அதைப் பாடினோரும்,*
*காதினால் கேட்டோரும்,*
*இறந்து வைகுந்தம் சேர்ந்தோரும்,*
*சாலோக, சாமீப, சாரூப, சாயுச்ச*
*நான்காம் பதவி சேர்வார்கள்*
*கோவிந்தா! கோவிந்தா!''*[27]

### 6.5.5. தலைக்கட்டு வைத்தல்

இறந்தவரின் குடும்பத்தாருக்கும், நூல்கட்டிக் கொண்ட பங்கும் பங்காளிகளுக்கும் கருமாதி முடிந்தவுடன் சம்பந்திகள் மற்றும் மாமன், மைத்துனர் முறையினர் புரோகிதரின் மூலமாகப் புத்தாடைகள் வாழ்த்திக் கொடுக்கப்படும். இது தலைகட்டுதல் என்பர்.

கரும காரியத்தின் இறுதிப் பகுதியாக இந்தத் தலைகட்டுதலைக் கருதலாம். பந்தலைச் சுத்தம் செய்து, உட்காரச் சமுக்காளம் விரிப்பர். அதன்மீது கிழக்கு முகம் பார்த்தவாறு இறந்தவர் குடும்பத்தினர் மற்றும் பங்காளிகள் (ஆண்கள் மட்டும்) வரிசையாக உட்கார்கின்றனர். அவர்களுக்கு

[27]. எஸ். ராமச்சந்திரன், வயது. 65, வள்ளுவர் சமூகம், களையூர், கடலூர் வட்டம்.

எதிரில் வடக்கு முகம் பார்த்தவாறு மனைப்பலகையில் புரோகிதர் அமர்கின்றார். ஒரு தாம்பாளத்தில் குழைத்த மஞ்சள், அட்சதை வைக்கப்படுகின்றன.

### 6.5.6. சம்பந்தம் கொண்டாடுதல்

சோமம் (வேட்டி), சட்டை, துண்டு, புடைவை, இரவிக்கை, வசதி இருப்பின் தங்க மோதிரம் இவற்றை முதல் சம்பந்திகள் புரோகிதரிடம் கொடுக்கின்றனர். புரோகிதர் அவற்றின்மீது மஞ்சள் தடவி அட்சதை போட்டு இன்ன ஊரைச் சேர்ந்த இன்னார் இன்னாருக்காக அவர் கொடுத்த தலைக்கட்டு என்று கூறி மேலும் ஆடைகள், பொருட்களைக்கூறிக் கொண்டாடி வாழ்த்தித் தலைகட்டிக் கொள்பவரிடம் கொடுக்கிறார். இவ்வாறு சம்பந்தம் கொண்டாடும் புரோகிதருக்குச் சம்பந்தம் கட்டுபவர்கள் தற்போது ஐந்து அல்லது பத்து ரூபாய் கொடுக்கின்றனர். இதற்கு 'சம்பந்தப் பணம்' அல்லது 'கொண்டாட்டப் பணம்' என்று பெயர். தலைகட்டிக் கொள்பவர்கள் அனைவருக்கும் அவரவர்களின் முதல் சம்பந்தம் கொண்டாடிய பிறகே பிற சம்பந்திகள் மாமன், மைத்துனர்களின் தலை கட்டுகிற வழக்கம் காணப்படுகிறது. "முதல் சம்பந்தம் தலைகட்டிக் கொள்பவருக்குத் திருமணம் ஆகியிருப்பின் மாமனார் அல்லது மைத்துனரும், திருமணம் ஆகாதவர் எனில் தாய்மாமனும் (அம்மான்) கட்ட வேண்டும்"[28].

அண்ணன், தம்பி முறையினர் தலைகட்டும் வழக்கம் இல்லை. இவர்கள் பணம் வைக்கின்றனர். வைக்கப்படும் தலைக்கட்டுகள், பணம் ஆகியவற்றைத் தலைக்கட்டுப் பெறுபவர்கள் யார்யார் என்னென்ன ஆடைகள், எவ்வளவு பணம் வைத்துள்ளனர் என்பவற்றைக் கணக்கிட்டு எழுதி வைக்கின்றனர். பின்னாளில் அவரவர்களுக்குத் திரும்பிச் செய்யவேண்டி இவ்வாறு எழுதி வைக்கப்படுகிறது எனத் தெரிகிறது.

புதிய சம்பந்திகள் முதன்முதலில் தலைகட்டுவதில்லை. தலைகட்டிக் கொள்பவரின் இல்லத்தில் ஏதேனும் நற்காரியம் நடைபெற்று அதில் கலந்து கொண்டு சீர்வரிசைகள் செய்த பின்னரே தலைகட்டும் வழக்கமும் காணப்படுகிறது.

### 6.5.7. கசப்புத்தலை

இறந்தவரின் குடும்பத்தார் மற்றும் தலைகட்டிக்கொண்ட பங்காளிகளின் குடும்பத்தினர் அனைவரும் இறந்த அன்றைய தினத்திலிருந்து கருமாதி முடியும்

வரை தலையில் எண்ணெய் தேய்க்கும் வழக்கம் இல்லை. அசைவ உணவினை உண்பதும் இல்லை. கருமாதி முடிந்த மறுநாள் அனைவருமாக எண்ணெய் தேய்த்துத் தலைமுழுகுகின்றனர். அன்று முக்கியக் கொண்டான் கொடுத்தான் குடும்பத்தினரும் தங்குகின்றனர். அசைவ உணவுகள் இடம்பெறும். இதனைக் ‘கசப்புத்தலை’ என்கின்றனர். முக்கிய விரத தினமோ, வேறேதும் விழாவோ கசப்புத்தலை அன்று இருப்பின் அசைவ உணவுகள் தவிர்க்கப்படுவதும் உண்டு.

இறப்பு மற்றும் இறப்புசார் சடங்குகள், காரணமாக தலைகட்டிக் கொள்வது இவை அனைத்தும் மனத்திற்குக் கசப்பான நினைவுகள் ஆகும். இந்தக் கசப்பினை மறக்கும் விதமாகத் தலைமுழ்குவதால் இதனைக் ‘கசப்புத்தலை’ என்று கூறுகின்றனர்.

### 6.5.8. முப்பது கும்பிடுதல்

இறந்த தினத்திலிருந்து முப்பதாவது நாள் இறந்தவரை அனைமுறித்து வைத்த இடத்தில் அல்லது அவருடைய உருவப் படம் உள்ள இடத்தில் படத்திற்கு மாலை போட்டுப் பொட்டுவைக்கப்படுகிறது. இறந்தவரின் குடும்பத்திற்குக் கொண்டான் கொடுத்தான், மாமன், மைத்துனர்கள் பலகாரங்கள், காரவகைகள், இனிப்புகள், பழவகைகள் ஆகியவற்றைக் கொண்டு வருகின்றனர்.

இறந்தவருக்குப் பிடித்தமான பொருட்களும், புகைப்பழக்கம், குடிப்பழக்கம் இருப்பின் அவை தொடர்பான பொருட்களும், அவித்த பயிறு வகைகளும், உறவினர்கள் கொண்டுவந்த பொருட்களும் வள்ளுவச் சமூகத்தில் பெரியவர் அல்லது உறவினர்களில் பெரியவர் யாரேனும் ஒருவரால் பெரிய தலைவாழை இலை போட்டு எடுத்து வைக்கப்படுகின்றன. இதில் அசைவப் பொருட்கள் இடம்பெறுவதில்லை. இறந்தவரின் துணிகள், பயன்படுத்தியப் பொருட்கள் இடம்பெறுவதுண்டு.

இதில் பங்கும் பங்காளிகள், உறவினர்கள் அனைவரும் கலந்து கொள்வார்கள். பெண்கள் ஒன்றுகூடி ஒப்பாரி வைத்து அழுவார்கள். சில நிமிடங்கள் கழித்து அழுகை நிறுத்தப்படும். படையல் போட்ட பெரியவர் இறைவன்மீது பாடல்களைப் பாடிக் கற்பூரம் ஏற்றுவார். அனைவரும் விழுந்து வணங்கித் திருநீறு பூசிக்கொள்கின்றனர். அதன்பின்னர் ஊர்வழங்குதலும் உண்டு. இதனை ‘இலைபோடுதல், ‘பயிறு அள்ளி வைத்துப் படைத்தல்’,

‘முப்புது கும்பிடல்’ என்றெல்லாம் கூறுகின்றனர். இந்நிகழ்வு சாயுங்காலத்தில் அல்லது இரவு ஏழுமணிக்குள்ளாக நடைபெறுகிறது.

## 6.6. தொகுப்புரை

- வள்ளுவர் சமூகத்தில் இறந்தவரின் உடலையும், இறப்புசார் சடங்குகள் செய்யும் வேள்விப் பொருட்களையும் பிற சமூகத்தினர் தொடுவதற்கு அனுமதிக்கப்படுவதில்லை. இவர்களின் இறப்புசார் சடங்குகளைச் செய்விக்கும் புரோகிதக் குருக்களாக இவர்களே தொன்றுதொட்டு இருந்து வருகின்றனர்.
- இவர்களுடைய இறப்புசார் சடங்குகள் அனைத்தும் நாட்டுப்புற வைணவம், சைவம் தழுவிய ஒரு தனி மரபுக்குரிய தனித்துவமான போக்கினைக் காட்டுவனவாக உள்ளன.
- நாட்டுப்புற மக்களாகிய வள்ளுவர்களில் சிலர் தங்கள் பணிகள் காரணமாக நகர்மயமாகி வரும் இன்றைய நிலையில் இவர்களின் சடங்கு முறைகளில் மரபு மாற்றங்கள் சிறிய அளவில் காணப்படுகின்றன.
- இறந்தவரின் ஆத்மா சிலகாலம் இம்மண்ணுலகிலேயே தங்குகிறது. பின்னர் தங்களின் உள்ளினப் பிரிவிற்கேற்ப வைகுந்தம் அல்லது கயிலாயம் சென்று இறைவனின் திருவடியில் நான்காம் பதவி (மோட்சம்) அடைகிறது என்று வள்ளுவச் சமூகத்தினர் நம்புகின்றனர். கரும காரியத்தின்போது இதனைச் சடங்காக நிகழ்த்திக் காட்டுகின்றனர்.
- ஒருவர் வாழும் காலத்தில் இன்னின்ன தவறுகள் செய்தால் இன்னின்ன தண்டனைகளை அனுபவிப்பார்கள் என்ற கருத்தினை இவர்களின் இறப்புசார் சடங்குகளில் இடம்பெறும் பாடல்கள் சமூகத்தை எச்சரிக்கும் வகையிலும், நீதிகளைக் கடைபிடிக்க வழிவகை செய்யும் வகையிலும் வெளிப்படுத்தி நிற்கின்றன.
- இப்பாடல்களில் இடம்பெறும் அறக் கருத்துக்களில் சில திருக்குறளின் சில அதிகாரங்களுக்குத் தலைப்புகளாக அமைந்துள்ளன. இவ்வாறு இடம்பெற்றுள்ளமையால் வள்ளுவ மக்களின் நீதிக் கருத்துகள் திருக்குறளுக்கு அரண் செய்து அமைபவையாகக் காணப்படுகின்றன எனக் கருத இடமுண்டு.

# 7. வள்ளுவர்களின் பிற வழக்காறுகள்

## 7.1. முன்னுரை

'வள்ளுவர்களின் பிற வழக்காறுகள்' என்னும் இவ்வியலில், ஆய்வுக் கட்டமைப்பின் காரணமாகவும், ஒழுங்குமுறை வேண்டியும் மேற்கண்ட இயல்களில் ஆய்வு நோக்கில் பேசப்படாத சில வழக்காறுகள் பேசப்படுகின்றன. அவ்வகையில் வள்ளுவர்களின் உணவு முறைகள், உடை அணிதல், நம்பிக்கைகள், கொண்டாடும் திருவிழாக்கள், பண்டிகைகள், வள்ளுவர்களின் வாழ்வியல் சிக்கல்கள், பொழுதுபோக்குகள், வள்ளுவச் சிறார்களின் வழக்காறுகள் ஆகியவை இவ்வியலில் இடம்பெறுகின்றன.

## 7.2. உணவு முறைகள்

வள்ளுவர்களில் பெரும்பான்மையினர் காலையில் எழுந்ததும் உடல் தூய்மை செய்து சூரியனைக் கும்பிட்ட பிறகே காலை உணவை உண்கின்றனர். சிலர் கருடனைப் பார்த்துக் கும்பிட்ட பின்னரே உண்ணும் வழக்கமுடையவர்களாகவும் உள்ளனர். தங்களின் வீட்டில் யாரேனும் இறந்துவிட்டால் அவர்கள் நினைவாகக் காலையில் காகத்திற்கு உணவு வைத்த பின்னர் காலை உணவு உண்ணும் வழக்கமும் காணப்படுகிறது. சிலர் நாய்க்கு உணவு வைத்தபின்பு உண்பதும் உண்டு.

“சிலர் நாடோறும் கதிரவனை வணங்கியே உண்பர்; சிலர் கருடனைக் கண்ட பிறகே உண்பர்; சிலர் உண்பதற்கு முன் காகத்திற்கு உணவு வைத்துப் பின்னரே உண்பர். எல்லோருமே பகலில் கடவுளுக்குப் படைக்கும் நாளில், படைத்தபின் காகத்திற்கு உணவு வைத்துவிட்டுத்தான் உண்பர். சனிக்கிழமையில் பெருமாளுக்குப் படைப்பவர்கள் கருடனைக் கண்ட பிறகே உண்பர்”[1].

களப்பகுதியில் காணப்படும் வள்ளுவர்களில் முன்பெல்லாம் புலால் மறுத்தவர்கள் அதிகம் இருந்துள்ளனர். இன்றைய நிலையில் அங்கொருவர் இங்கொருவர் எனக் காணப்படுகின்றனர். அசைவ உணவு வகைகளை அதிகம் விரும்பி உண்பவர்களாக வள்ளுவர்கள் உள்ளனர். கடல்மீன், நண்டு, கருவாடு,

[1]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 450.

நாட்டுமீன், நத்தை, கோழி, ஆடு, கொக்கு, காடை, கௌதாரி, குருவிகள், காட்டுப் பறவைகள் ஆகியவற்றின் புலாலை உணவில் சேர்த்துக் கொள்கின்ற வழக்கம் காணப்படுகிறது. அதன் காரணமாகப் பிற தாழ்த்தப்பட்ட சமூக மக்களின் வீடுகளில் எவ்வகையான சமைக்கப்பட்ட உணவு வகைகளையும் உண்பதில்லை. மாட்டிறைச்சியை எந்த நிலையிலும் உண்பதில்லை. அவர்கள் தரும் சமைக்காத பொருட்களை மட்டுமே உண்ணும் நிலை காணப்படுகிறது. பன்றியின் இறைச்சியை முன்பு உண்டுவந்ததாகக் களப்பகுதியின் ஒருசில ஊர்களில் தெரிகின்றது. அமாவாசை, முன்னோர்களின் தெவஷ நாள் (திவசம்) கிருத்திகை, தைப்பொங்கல், மாட்டுப்பொங்கல், தமிழ் மாதப் பிறப்பு, வருடப் பிறப்பு, கார்த்திகை தீபம், புரட்டாசி மாதம் முழுவதும் ஆகிய விரத நாட்கள், நன்னாட்களில் புலால் வகைகளை உண்ணும் வழக்கமில்லை.

மரக்கறிப் பதார்த்தங்கள் அனைத்தையும் விரும்பி உண்ணும் வள்ளுவர்கள் ஏரிகளில் காணப்படும் ‘கொட்டிக் கிழங்கு’ என்னும் ஒருவகைக் கிழங்கினை அகழ்ந்து உண்பர். இன்றைய நிலையில் கொட்டிக் கிழங்கினைக் காண்பது அரிதாக உள்ளது. புளியங்கொட்டைகளை வறுத்துத் தோல்நீக்கி ஊறவைத்து அவித்து உண்பர். கொட்டிக் கிழங்கு, புளியங்கொட்டை இவற்றையெல்லாம் தங்கள் வறுமைக் காலத்தில் உண்டு வந்ததாகவும் தற்போது ஆசைப்பட்டால் மட்டுமே உண்பதாகவும் கூறுகின்றனர்.

கேழ்வரகு, மொட்டைக் கம்பு, நாட்டுக் கம்பு, திணை அரிசி ஆகியவை களப்பகுதியின் உணவுத் தானியங்கள் ஆகும். வள்ளுவர்கள் நெடுங்காலமாக அரிசியை முதன்மை உணவாகக் கொண்டுள்ளனர். முன்பெல்லாம் அரிசி உணவு என்பது எப்பொழுதாவது ஒருமுறை மட்டுமே அனைத்துச் சமூகத்தினராலும் உண்ணப்பட்டு வந்துள்ளது. புரோகிதம் செய்வதால் பச்சரிசி இவர்களுக்கு அதிகம் கிடைக்கும். எனவே, அரிசி இவர்களுக்கு முதன்மை உணவாக இருந்திருக்கிறது எனலாம்.

தங்கள் உள்ளினப் பிரிவின் இல்லங்களில்கூட உணவு உண்ணாத நிலை இன்று மாறிவருகிறது. உயர்சாதி மக்களின் வீடுகளில் உண்ணும் வள்ளுவர்கள் பிற தாழ்த்தப்பட்ட மக்களின் இல்லங்களில் தண்ணீர்கூடக் குடிக்கும் வழக்கமில்லை.

### 7.3. உடை அணிதல்

தாழ்த்தப்பட்ட மக்களின் வாழ்வுசார், இறப்புசார் சடங்குகளுக்குப் புரோகிதராகவும், அவர்களின் கோயில்களில் பூசாரிகளாகவும் உள்ள வள்ளுவர்கள் இடுப்பில் வேட்டியும், மார்பினில் பூணூலும் அணிந்திருக்கின்றனர். மேலாடையாகச் சட்டை அணிவதில்லை. அங்கவஸ்திரம் அணிகின்றனர். நெற்றியில் திருநாமமோ அல்லது திருநீறோ இட்டுக்கொள்வர்.

“நனைக்காத திருநீறுக்கு நோய் அணுக்களை அழிக்கும் சக்தியும், நனைத்த திருநீறுக்கு உடலின் ஈரத்தை உறிஞ்சும் சக்தியும் உண்டு”[2].

ஆண்கள் மற்ற பொழுதுகளில் மேலாடை அணிபவர்களாகவே காணப்படுகின்றனர். பெண்கள் இரவிக்கையும் புடைவையும் அணிந்து கொண்டிருக்கின்றனர். உடைகளணிவதில் வள்ளுவர்களுக்கும் உயர்சாதி மக்களுக்கும் பிற தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் எவ்வித வேறுபாடுகளும் இன்றைய நிலையில் காணப்படவில்லை. அவரவர் வசதிக்கேற்ப ஆடைகள் அணிகின்றனர். பெரிய மனிதர்கள் வேட்டி சட்டைக்கு மேல் தோளில் துண்டு போடத் தவறுவதில்லை.

முன்பெல்லாம் வள்ளுவ ஆண்கள் கீழ்ப்பாய்ச்சும், பூணூலும் அணிந்து, நெற்றியில் திருநாமம் அல்லது திருநீறுடன் பின் குடுமியும் கையில் குடையும் வைத்திருந்துள்ளனர். காதில் கல்வைத்த கடுக்கன் அணிந்தும் இருந்துள்ளனர். இவ்வாறு உடையணியும் வள்ளுவர்கள் மிகமிகக் குறைவாக ஒருசிலரே காணப்படுகின்றனர்.

கால் நூற்றாண்டு முன்பு வரையும் களப்பகுதியில் அனைத்துச் சமூகத்து மக்களிடையே “பெண்கள் எங்கும் உள்ளவாறு புடைவையும் கச்சு என்னும் இரவிக்கையும் உடுப்பர். ஆண்கள் கீழே வேட்டி உடுத்தி மேலே துண்டு போர்த்திக் கொள்வர். சிறப்பு நாட்களிலும் குளிர்காலத்திலும் மட்டுமே சட்டை அணிவர். மற்ற நாட்களில் சட்டையைச் சட்டை செய்யார். ஒருசிலர் எந்த நாளிலுமே சட்டை அணியாமல் துண்டு மட்டும் போர்த்திக் கொள்வர். சட்டை போட்டுக் கொள்பவரும்கூட அதன்மேல் கழுத்தில் துண்டு போட்டுக் கொள்வர்.

---

[2]. வெங்காலூர் பாலகிருஷ்ணன் (தமிழாக்கம் : ரஞ்சன் சுவாமிதாஸ்), ஓலைச்சுவடி, ப. 45.

சட்டை மட்டும் அணிந்து மேலே துண்டு போடாமல் வெளியே செல்வது மிகவும் இழிவாகக் கருதப்படும்.

பெரியவர்கள் கீழே துணியைக் கீழ்ப்பாய்ச்சுக் கட்டிக் கொண்டு, தலையில் முண்டாசு என்னும் தலைப்பாகை கட்டிக் கொள்வர். இவையெல்லாம் பழைய முறைகள் ஆகும். இன்று எத்தனையோ மாற்றங்கள் ஏற்பட்டு விட்டன''[3].

## 7.4. வள்ளுவர்களின் நாட்டுப்புற நம்பிக்கைகள்

மனிதன் தன்னுடைய ஒவ்வொரு செயலையும் நம்பிக்கை என்ற ஒன்றை முன்வைத்து நடத்திச் செல்கிறான். நம்பிக்கை என்பது மனிதனின் மூன்றாவது கையாகக் கருதப்படுகின்றது. மனிதன் தன்னுடைய செயல்களுக்கு ஆக்கம் தேடும் வகையில் நம்பிக்கையை மனத்தில் வளர்த்துக் கொள்கிறான். அந்த நம்பிக்கைதான் அவனது வாழ்க்கைத் தேவைகளை வெற்றியாகவோ தோல்வியாகவோ நடத்திச் செல்கின்றது என நம்புகின்றான்.

நாட்டுப்புற மக்களிடம் இதுபோன்ற நம்பிக்கைகள் ஏராளமாகக் காணப்படுகின்றன. இவை நாட்டுப்புற நம்பிக்கைகள் என்று கூறப்படுகின்றன. இந்த நாட்டுப்புற நம்பிக்கைகளில் சிலவற்றை வள்ளுவச் சமூகத்து மக்களும் தொன்றுதொட்டுக் கடைபிடித்து வருகின்றனர். இந்த நாட்டுப்புற ''நம்பிக்கைகள் பெரும்பாலும் மனிதனின் அச்ச உணர்வினை அடிப்படையாகக் கொண்டு தோன்றியவையாகவே காட்சி தருகின்றன''[4]. வள்ளுவ மக்கள் பிறநம்பிக்கைகளைவிடச் சகுனங்கள் பற்றிய நம்பிக்கைகளையும் சோதிடம் பற்றிய நம்பிக்கைகளையும் அதிகம் நம்புகின்றவர்களாக உள்ளனர்.

### 7.4.1. சகுனம் பற்றிய நம்பிக்கைகள்

நாட்டுப்புற வழக்கில் சகுனம் என்பதனை 'நிமித்தம்' என்று இலக்கியங்கள் கூறுகின்றன. 'நல்ல சகுனம்', 'கெட்ட சகுனம்' என்பவை 'நன்னிமித்தங்கள்', தீயநிமித்தங்கள் என்று அழைக்கப்படுகின்றன. சகுனங்கள் எல்லாம் எதார்த்தமாக நடைபெறும் நிகழ்வுகள், பறவைகள் மற்றும் விலங்குகள்

---

[3]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 436.

[4]. க. காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், ப. 103.

எழுப்பும் ஒலிகள், செயல்பாடுகளின் அடிப்படையில் கருத்தில் கொள்ளப்பெறுகின்றன.

### 7.4.1.1. நற்சகுனங்கள்

பூக்கூடை, தண்ணீர்க்குடம், தானிய மூட்டைகள், வண்ணான் கொண்டு வரும் அழுக்குத் துணி மூட்டை, சவ ஊர்வலம், சுமங்கலிப் பெண் ஆகியவை புறப்படும்போது எதிரே வருதல், நரி முகத்தில் விழித்தல் ஆகியவை நற்சகுனங்களாகக் கருதப்படுகின்றன. செயற்கையாகச் சுமங்கலிப் பெண்ணை எதிரே வரச்செய்வதும் உண்டு.

இரட்டைக் காகங்களைப் பார்த்தல், நாய் உடம்பை உதறுதல், கழுதை கத்துதல், கருடன் கடவுதல், மணி அடித்தல், வேட்டுப் போடுதல், சங்கு ஊதுதல் ஆகியவை ஏதேனும் ஒன்றினைப் பற்றிப் பேசி முடிவெடுக்கும் பொழுது தற்செயலாக நிகழுமானால் இவையும் நற்சகுனங்களாகக் கொள்ளப்படுகின்றன.

ஒரு காரியத்தைப் பற்றிப் பேசும் பொழுதோ, அதற்காக வேண்டிப் புறப்படும் பொழுதோ நடக்கும், கைகூடும், போய்வரலாம், நல்லது என்ற வாய்ச்சொற்கள் தற்செயலாகக் காதில் விழுவதும் நல்ல சகுனங்களாகக் கருதப்படுகிறது. ஏதேனும் ஒன்றைக் கொடுக்கும்பொழுது கைதவறி விழுந்தால் அதுவும் நல்ல சகுனமாகக் கருதப்படுகிறது.

### 7.4.1.2. கெட்ட சகுனங்கள்

எண்ணெய்க்குடம், விறகுக்கட்டு, வைக்கோல்கட்டு, கோடரி, மண்வெட்டி, கத்தி, கடப்பாரை, ஒற்றைப் பாப்பான், ஒற்றைப் பூணூல்காரன், விதவைப் பெண் ஆகியன எதிரே வந்தால் கெட்ட சகுனங்களாகக் கருதுகின்றனர்.

ஆந்தை அலறுதல், கோட்டான் கூவுதல், குள்ளநரி கூவுதல் (ஊளையிடுதல்), நாய் அழுதல், காகம் கரைதல் ஆகியனவும், பூனை குறுக்கே போவதும் கெட்ட சகுனங்களாகக் கொள்ளப்படுகின்றன.

புறப்படும்போது கால் தடங்குதல், ஏதேனும் தடை ஏற்படுதல், தும்முதல், புறப்பட்டுப் போகும்போது “எங்கே போகிறாய்?” என்று யாரேனும் கேட்டல், நற்காரியத்திற்குச் செல்லும்போது பெயர் சொல்லியோ, கைதட்டியோ கூப்பிடுதல் ஆகியவை கெட்ட சகுனங்களாகப் பாவிக்கப்படுகின்றன.

புறப்படும்போது இதுபோன்ற கெட்ட சகுனங்கள் ஏற்படின் வீட்டிற்குத் திரும்பி வந்து சற்றுத் தாமதமாகவோ, தண்ணீர் குடித்து விட்டோ செல்கின்றனர். சிலநேரம் சகுன நம்பிக்கைக்கேற்பப் பயணத்தைக் கைவிடுவதும் காணப்படுகிறது.

''புறப்படும்போது தீயநிமித்தம் ஏற்படின் புறப்பாட்டைச் சிறிதுநேரம் ஒத்திப் போடுவர்; புறப்பட்டுப் போகுங்கால் சிறிது தொலைவில் தீய நிமித்தம் ஏற்படின் திரும்பி வந்துவிடுவர். தீய நிமித்தத்தை வெல்வதற்காக வீட்டில் சிறிது நேரம் அமர்ந்தோ அல்லது ஒரு விழுங்காவது தண்ணீர் அருந்தியோ பிறகு மறுபடியும் புறப்படுவர். சிலர் பயணத்தை நிறுத்தி விடுவதும் உண்டு''[5].

போகாதே, அழிந்து போகும், நடக்காது என்பன போன்ற வாய்ச்சொற்கள் கேட்பதும், பூனை குறுக்கே செல்வதும், தீய சகுனங்களாகும். பல்லி கத்துவதும், மேலே விழுவதும் இடத்திற்கேற்ப நல்ல சகுனங்களாகவும் கெட்ட சகுனங்களாகவும் கொள்ளப்படுகின்றன.

காலங்காலமாகத் தமிழ் மக்களால் பின்பற்றப்பட்டு வரும் நம்பிக்கைகளுள் ஒன்றாகச் சகுனம் கருதப்படுகிறது. ''தமிழ்மொழியகராதி சகுனத்தை அறுபத்து நான்கு கலைகளுள் ஒன்றெனக் குறித்துள்ளது''[6].

சகுனம் என்பதற்கு நிமித்தம் என்றொரு பெயரும் உள்ளது. ''நிமித்தம் என்பதற்குச் சோதிடம் எனப் பொருள் கொள்ளப்பெறுவதால்''[7] சகுனத்தையும் ஒருவகைச் சோதிடமாகக் கருதமுடிகிறது. சோதிடத்தை முதன்மைத் தொழிலாகக் கொண்டுள்ளதால் வள்ளுவர்கள் சகுனங்களை ஆழ்ந்த நம்பிக்கையுடன் கடைபிடித்து வருகின்றனர் எனலாம்.

### 7.4.2. சோதிட நம்பிக்கைகள்

சோதிடம் இறைவனால் தோற்றுவிக்கப்பட்டது. சோதிடக்கலை ஒரு தெய்வீகக் கலை. தெய்வத்திற்கும் இக்கலைக்கும் தொடர்பு உண்டு என்று

---

[5]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 448.

[6]. நா. கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழியகராதி, ப. 550.

[7]. பிங்கல நிகண்டு, ஏழாவது செயலின் பகுதி,, நூ. 85.

வள்ளுவர்கள் கருதுகின்றனர். எனவே, பஞ்சாங்கத்தில் இடம்பெற்றுவரும் அனைத்துக் குறிப்புகளையும் நம்புகின்றவர்களாக உள்ளனர்.

செவ்வாய் தோஷம் உள்ளவர்களுக்குச் செவ்வாய் தோஷம் உள்ளவர்களையே திருமணம் செய்துவைக்க வேண்டும்; மாற்றிச் செய்து வைத்தால் குழந்தைகள் குறையுடன் பிறக்கும். சாதகத்தில் இரண்டு, நான்கு, ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடங்களில் செவ்வாய் நிற்பின் சாதகருக்குச் செவ்வாய் தோஷம் உண்டு எனப்படுகிறது.

சாதகனுக்குக் களத்திர தோஷம் இருப்பின் மனைவிக்கு மரணமோ, அதற்கு இணையான கண்டங்களோ ஏற்படும். பெண்ணுக்கு மாங்கல்ய தோஷம் இருப்பின் கணவனுக்குக் கண்டங்களோ மரணமோ ஏற்படும் என நம்புகின்றனர். களத்திர தோஷமுள்ள ஆண் குலை தள்ளாத வாழை மரத்திற்குத் தாலி கட்டியும், மாங்கல்ய தோஷமுள்ள பெண்ணின் தாலியை ஏதேனும் கோவிலின் உண்டியலில் போட்டுவிட்டு மறுதாலி கட்டிக் கொள்வதும் தோஷப் பரிகாரங்களாகச் செய்யப்படுகின்றன. இந்தத் திருமணம் தொடர்பான தோஷத்தினைத் ‘தார குற்றம்’ என்றும் வழங்குகின்றனர்.

அஷ்டமி, நவமி, பாட்டிமைத் திதிகள் அன்று பயணம் செல்வதைத் தவிர்க்கின்றனர். ஏகாதசி, அமாவசை இவற்றுக்கு முதல்நாள் புதிய நற்காரியங்களைத் தொடங்குவதில்லை. ஏகாதசியையும் அமாவாசையையும் எதிரே வைத்துக்கொண்டு நற்காரியங்கள் செய்யக்கூடாது என்ற நம்பிக்கை நிலவுகிறது.

இராகு காலம், எமகண்டம் ஆகிய நேரங்களில் வெளியில் புறப்படுவதையோ, நற்காரியங்களைத் தொடங்குவதையோ, புதியவர்களின் இல்லங்களில் நுழைவதையோ தவிர்க்கின்றனர்.

வள்ளுவர்கள் சில தோஷப் பரிகாரங்களைப் பௌர்ணமித் திதியிலும், பேய் பிடித்தவருக்குக் கழுப்புச் சுற்றுதல், மாந்திரீகம் செய்தல் போன்றவற்றை அமாவாசைத் திதியன்றும் செய்கின்றனர். அவ்வாறு செய்தால் பலிதமாகும் என்று நம்புகின்றனர்.

செவ்வாய், புதன் வடக்கு சூலம், வியாழன் மேற்கு சூலம், ஞாயிறு, வெள்ளி மேற்கு சூலம், திங்கள், சனி கிழக்கு சூலம் என்று பஞ்சாங்கத்தில்

குறிப்பிட்டுள்ளன. எந்தக் கிழமையில் எந்தத் திசைச் சூலமோ அந்தக் கிழமையில் அந்தத் திசையில் பயணம் செய்வது தவிர்க்கப்படுகிறது. தவிர்க்கமுடியாத நிலையில் கிழக்கு சூலத்திற்குத் தயிரும், மேற்கு சூலத்திற்கு வெல்லமும், தெற்கு சூலத்திற்குத் தைலமும் (நல்லெண்ணெய்), வடக்கு சூலத்திற்குப் பாலும், சிறிதளவு பரிகாரமாக உட்கொண்ட பின்னர் செல்கின்றனர்.

அவிட்ட நட்சத்திரத்தில் உயிர் பிரிந்தால் இறந்தவர் அலைவார் என்று நம்பப்படுகிறது. எனவே, அவிட்டத்தில் உயிர் விட்டவரின் வீட்டிற்கு அருகில் உள்ளவர்கள் முப்பது கும்பிடும்வரை நள்ளிரவில் தனியாக வெளியில் வருவதற்குப் பயப்படுகின்ற நிலை காணப்படுகிறது.

மரணயோகத்தன்று எந்த நற்காரியங்களையும் குறிப்பாகச் சடங்கு முறைகளைச் செய்வதில்லை. நேந்திரம், ஜீவன் இல்லாத நாட்களிலும் செய்யும் வழக்கம் இல்லை. நேத்திரம், ஜீவன் இல்லாத நாட்கள் கண்ணற்ற, உயிரற்ற நாட்களாகக் கருதப்படுகின்றன.

### 7.4.3. பிற நம்பிக்கைகள்

காலையில் நல்ல கையால் முதன்முதலில் போனி ஆனால் நாள் முழுவதும் வியாபாரம் நன்றாக நடக்கும். நரி முகத்தில் விழித்துச் சென்றால் நல்ல வருமானம் கிடைக்கும். வியாபாரமும் நன்கு நடக்கும்.

அங்காடிக் கூடையை அதிரவிலை (வியாபாரி நஷ்டப்படும்படி) பேசக்கூடாது. அங்காடிக் கூடையைத் தூக்கிவிட்டுக் கைதட்டினால் பொருட்கள் விரைவில் விற்பனையாகும்.

‘கல்லடி பட்டாலும் படலாம்; கண்ணடி படக்கூடாது. நல்ல கண்பட்டால் வளரும்; கெட்ட கண் பட்டால் கண்ணாறு (கண்ணேறு) விழும்’. விருந்தினரை அனுப்பி விட்டு வீட்டைப் பெருக்கக்கூடாது. விருந்தினரை அனுப்பிவிட்டு எண்ணெய் தேய்த்துக் குளிக்கக்கூடாது. எண்ணெய் தேய்த்துத் தலைமுழ்கியவுடன் ஊருக்குச் செல்லக்கூடாது.

தெருவில் நாய் அழுதால் சாவுச் செய்தி வரும். வடக்கே தலைவைத்துப் படுத்தால் வயது குறைவாம். தன்னுடைய நிழலைப் பார்த்துக் கொண்டே நடக்கக்கூடாது.

இரவில் எச்சில் பாத்திரங்களைக் கழுவாமல் தூங்கக் கூடாது. இதனை ‘எச்சி இறக்கும்’ என்று கூறுகின்றனர். எச்சில் இறக்கும் என்பது குடும்ப வளர்ச்சியைக் குறைக்கும் என்ற பொருள்படுவதாக வள்ளுவ மக்கள் கூறுகின்றனர். ‘‘எச்சில் பாத்திரங்களில் ஒட்டியிருக்கும் உணவின் அம்சங்களைப் பருகவரும் ஈக்கள், கொசுக்கள், பூச்சிகள் முதலியன நோயணுக்களைக் கொண்டு செல்பவை. இவற்றிடமிருந்து நோயணுக்கள் மிகச்சுலபமாக உறங்குபவர்களுக்குப் பரவும்’’[8].

### 7.4.4. கிழமைகள் பற்றிய நம்பிக்கைகள்

ஒருவர் தாம் பிறந்த கிழமைகளில் எண்ணெய் தேய்த்துத் தலைமுழுகக்கூடாது. பெண்கள் வெள்ளிக்கிழமைகளில் வெளியூர் செல்லமாட்டார்கள். வெள்ளி, செவ்வாய்க் கிழமைகளில் தம்வீட்டுப் பொருட்களைப் பிறருக்கு அளித்தால் திருமகள் போய்விடுவாள் என்று கருதுகின்றனர். ‘வெள்ளிக்கிழமை வளரும் நாள்’ என்பர். இழுபறியான செயல்களை அன்று தொடங்குவதில்லை. ‘செவ்வாய் வெறும் வாய்’ என்பர். செவ்வாயன்று தொடங்கும் செயல் உருப்படாது என்று நம்புகின்றனர். சனிக்கிழமை உயிர்நீத்தார் மற்றோர் உயிரையும் துணையாக அழைத்துச் செல்வார். ‘சனிப்பொணம் துணை தேடும்’ என்பர்.

பொன் கிடைத்தாலும் புதன் கிடைக்காது. புதன் நல்ல நாளாகும் என்பன போன்று கிழமைகள் பற்றிய நம்பிக்கைகள் வள்ளுவ மக்களிடம் நிலவிவருகின்றன. இவற்றைப் பிற சமூகத்தவரும் கடைபிடித்து வரும் நிலையும் காணப்படுகிறது.

## 7.5. வாழ்வியல் சிக்கல்கள்

தாழ்த்தப்பட்ட சமூகத்தில் பல்வேறு பிரிவுகள் உள்ளன. இதில் வள்ளுவர், வண்ணார், அம்பட்டர், சக்கிலியர் ஆகியோர் மிகக் குறைந்த அளவில் ஓர் ஊருக்கு ஒருசில குடும்பங்களாக அல்லது சிறு குழுக்களாக வாழ்ந்து வருகின்ற நிலை காணப்படுகிறது. தாழ்த்தப்பட்ட சமூகத்தில் ஆதிதிராவிடர் என்று சொல்லக்கூடிய பறையரும், மேட்டுக்குடிகளில் வன்னியர்கள் என்று

[8]. வெங்காலூர் பாலகிருஷ்ணன் (தமிழாக்கம் : ரஞ்சன் சுவாமிதாஸ்), ஓலைச்சுவடி, ப. 119.

சொல்லக்கூடிய படையாட்சிகளும் களப்பகுதியில் அதிக அளவில் வாழ்ந்து வருகின்றனர். ‘‘மிகுந்த எண்ணிக்கையில் உள்ள இனத்தவர் வன்னியரே. வன்னியருக்கு அடுத்தபடியாக மிக்க எண்ணிக்கையில் இருப்பவர்கள் அரிசனர் என்றும் ஆதிதிராவிடர் என்று சொல்லப்படும் தாழ்த்தப்பட்ட மக்களாவர்’’[9].

வன்னியர்கள் ஒரு காலத்தில் தாழ்த்தப்பட்ட மக்களைத் தரக்குறைவாக நடத்தியுள்ளனர் என்றாலும் இன்றைய நிலையில் அதிகளவில் கல்வியறிவு பெற்று அரசியல் சட்டங்களை அறிந்தும், வன்கொடுமைச் சட்டத்தின் தன்மைகளை உணர்ந்தும் தாழ்த்தப்பட்ட சமூக மக்களிடம் மரியாதையுடன் நடந்து கொள்கின்ற நிலை காணப்படுகிறது. தாழ்த்தப்பட்ட சமூகத்துள் ஒரு பிரிவினராகிய வள்ளுவர்களிடம் வன்னியர்கள் மருத்துவம், மாந்திரிகம், சோதிடம் ஆகியவற்றைப் பார்த்துக் கொள்வதால் சற்றுக் கூடுதலான பாசத்துடனும், மரியாதையுடனும் வள்ளுவர்களை நடத்துகின்ற நிலையும் காணப்படுகிறது.

தாழ்த்தப்பட்ட சமூகங்களுக்குள்ளே உள்ள சிறுபான்மை மக்களாகக் காணப்படும் வள்ளுவர், அம்பட்டர், வண்ணார், சக்கிலியர் ஆகிய சமூகத்தவர்களைப் பெரும்பான்மையினராக உள்ள பறையர் சமூகத்தவர்கள் பல்வேறு நிலைகளில் ஒடுக்குபவர்களாகக் காணப்படுகின்றனர். பறையர்களுக்கு அஞ்சி வாழும் நிலை களப்பகுதியில் உள்ள பல சிற்றூர்களில் காணப்படுகிறது. இந்த ஒடுக்குமுறைகளில் வள்ளுவச் சமூகத்தவர்கள் அதிக அளவில் பாதிப்புக்குள்ளாகின்றனர்.

முன்பெல்லாம் பறையர்களால் மிகவும் மதிக்கப்பட்ட வள்ளுவர்கள் இன்றைய நிலையில் உள்ள அவர்களின் ஒடுக்குமுறைக்கு அஞ்சித் தங்கள் புரோகித கிராமங்களைக் கைவிட்டு வரும் நிலையும் பல்வேறு இடங்களில் காணப்படுகிறது.

பிற தாழ்த்தப்பட்ட சமூக மக்களுடன் ஒன்றிக் கலக்கும் இயல்பில்லாமல் பல்வேறு வழக்காறுகளால் தனித்துவமான நிலையில் காணப்படுவதும், ஆதிதிராவிடர்களிடம் சரிநிகர் சமமாக எதிர்த்துப் போராடும் மக்கள் பலம் வள்ளுவர்களிடம் இல்லாமையும், மருத்துவம் மற்றும் புரோகிதம் செய்துகொள்ள

---

[9]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 417.

ஆதிதிராவிடர்களுக்கு இன்று வேற்று வழிமுறைகள் உள்ளதாலும், இத்தகைய ஒடுக்குமுறைகளை எதிர்கொள்ள வேண்டியுள்ளது.

‘‘தாழ்த்தப்பட்டவர்களில் பதிமூன்று கிளைகள் உண்டு. இதில் வள்ளுவர்கள் மிகவும் மதிக்கப்படுவார்கள். இச்சாதியினருக்கு வள்ளுவர்கள்தான் புரோகிதர்கள், குருக்கள். இவர்களுக்கு வைத்தியம் தெரியும். சூத்திரர்கள் இவர்களிடம் நாடிபார்த்துக் கொள்வார்கள்’’[10].

பொருளாதாரத்தில் உயர்ந்த சில தாழ்த்தப்பட்ட சமூகத்தவர்கள் தங்களுக்குத் தொன்றுதொட்டு, சோதிடம் புரோகிதம் ஆகியவற்றினைப் பார்க்கும் வள்ளுவர்ளிடம் சோதிடம் பார்த்துக் கொண்டும், சடங்குகளைச் செய்ய நாள் பார்த்துப் பத்திரிகை (அழைப்பிதழ்கள்) எழுதிக் கொண்டும், சடங்குகளைச் செய்வதற்கு மட்டும் ஆரிய பிராமணர்களைப் புரோகிதர்களாக அமர்த்துகின்றனர். தங்களின் நட்பு வட்டாரங்களில் தங்களின் சாதி தெரியாமலிருக்க இவ்வாறு செய்கின்றனர் எனக் கருத இடமுண்டு.

இதனால் வள்ளுவர்களின் புரோகிதம் பெரிதும் பாதிப்பிற்குள்ளாகிறது. உயர்சாதி மக்களும் வள்ளுவர்களைச் சோதிடம் பார்க்கவும், மருத்துவம், மாந்திரிகம் செய்யவும் பயன்படுத்திக்கொண்டு பல்வேறு நிலைகளில் புறக்கணிக்கின்றனர்.

வள்ளுவச் சமூகத்தவர்களுக்குப் பறையர்களுடன் கலக்க மனமில்லை. வன்னியர்கள் வள்ளுவர்களைப் புறந்தள்ளுகின்றனர். பறையர்களுக்கும் வன்னியர்களுக்கும் மோதல்கள் ஏற்படும்போது வள்ளுவர்கள் எந்த அணியிலும் இடம்பெறுவதில்லை. சில நேரங்களில் இரு சமூகத்தவராலும் தாக்கப்படுவதும் உண்டு.

வள்ளுவர்கள் சிறுபான்மையினராக உள்ளதால் பிற சமூகத்தவரால் இதுபோன்ற சிக்கல்களைச் சந்தித்து வரும் நிலை காணப்படுகிறது.

---

[10]. அ.பெ.ஜெ. துபுவா (தமிழாக்கம். வி.என். இராகவன்), இந்தியர்கள் : மதம் - பழக்கவழக்கங்கள், நிறுவனங்கள், ப. 377.

## 7.6. வள்ளுவர்களிடம் காணப்படும் பழமொழிகள்

சமுதாயத்தின் அனுபவ முதிர்ச்சியையும் அறிவுக் கூறுகளையும் விளக்கும் சான்றுகளாகப் பழமொழிகள் திகழ்கின்றன. இப்பழமொழிகள் அன்றாட வாழ்க்கையில் ஏற்படுகின்ற அனுபவங்களின் அடிப்படையில் உருவானவையாகும். இவை அறிவின் சுருக்கங்களாகக் காணப்படுகின்றன.

நாட்டுப்புற மக்களின் "பண்பாட்டுக் கூறுகளை விளக்கும் பழமொழிகளின் வாயிலாகச் சாதி, சமயம், தொழில், உறவுமுறை, மொழி, மிருகங்கள், பறவைகள், செடிகொடிகள், இயற்கை, குடும்பம், நம்பிக்கை, பழக்கவழக்கங்கள், தத்துவம், பொருளாதாரம், வானிலை, மருத்துவநம்பிக்கை, சகுனங்கள், வேளாண்மை, திருமணம் போன்றவற்றைப் பற்றிய அறியலாம்"[11].

நாட்டுப்புற மக்களில் ஒரு பிரிவினராகிய வள்ளுவ மக்களிடம் காணப்படும் பழமொழிகள் பிற சமூக மக்களிடமும் காணப்படுகின்றன. இருப்பினும் பிறசாதிகளைப் பற்றி இவர்கள் கூறும் பழமொழிகள் மற்றவர்களிடம் அவ்வளவாகக் காணப்படவில்லை எனலாம். எனவே, இப்பழமொழிகள் மட்டும் ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்படுகின்றன.

### 7.6.1. வள்ளுவச் சாதி பற்றிய பழமொழிகள்

*" 'வள்ளுவன் சொல்லே சொல்லு*
*மாணிக்கக் கல்லே கல்லு'*
*'வள்ளுவன் சொல்லுக்கு வகையேது'*
*ஆயிரம் பாப்பான் (பார்ப்பனர்)*
*அரைவள்ளுவனுக்குச் சமம்'*
*'வள்ளுவன் சூதுக்கு வகையேது' "*[12]

ஆகிய பழமொழிகள், வள்ளுவர்கள் சோதிடம் பார்த்து, கைரேகை பார்த்து, ஆருடம் பார்த்துச் சொல்லும் வாய்ச் சொற்கள் மிகவும் உயர்ந்தவையாகும் என்றும், அவர்களின் வாய்ச் சொல்லிற்கு மறுசொல் கிடையாது என்றும்,

---

[11]. சு. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப. 120.

[12]. எஸ்.ஆர். பாலகிருஷ்ணன், வயது. 62, வள்ளுவர் சமூகம், சேமக்கோட்டை, பண்ருட்டி வட்டம்.

வள்ளுவர்களின் வாய்ச்சொற்கள் பலிதமாகும் என்பவற்றை வெளிப்படுத்தி நின்றகின்றன.

மேலும் வள்ளுவர்கள் பார்ப்பனர்களைவிடச் சோதிடம், புரோகிதம், மருத்துவம் ஆகிய துறைகளில் திறமை வாய்ந்தவர்கள் எனவும் கூறப்படுகிறது. வள்ளுவர்கள் சூழ்ச்சுமமானவர்கள் என்பதையும் இப்பழமொழிகள் மூலம் அறியமுடிகிறது.

### 7.6.2. பறையர் சமூகம் பற்றிய பழமொழிகள்

*“‘எள்ளு, கொள்ளு, ஏறுவாப் பயிறு*
*பறையஞ் சொல்லு கைக்கு வந்தா மெய்’*
*‘பாஞ்சாலும் பறகெண்டை’*
*பட்டால்தான் தெரியும் பறையனுக்கு*
*சுட்டால்தான் தெரியும் நண்டுக்கு’ ”*[13].

பறையர்களின் வாக்குறுதிகள் அவர்களால் நிறைவேற்றப்படும் வரையில் நம்பிக்கையில்லாத தன்மை உடையன என்றும், அவர்களுக்குள் சண்டை சச்சரவுகள் இருப்பினும் வேற்றுச் சமூகத்தவரிடம் சண்டை வந்துவிட்டால் ஒற்றுமையாக ஒன்று திரள்வார்கள் என்றும் ஒரு செயலைச் செய்யும் முன்னர் அதன் பின்விளைவாக வரப்போகும் தீங்கினைப் பற்றி சிந்திக்காமல் செயல்படும் தன்மை கொண்டவர்கள் என்றும் இப்பழமொழிகள் கூறுகின்றன. இப்பழமொழிகள் வள்ளுவர்களுக்குள் பேசிக் கொள்ளும் வழக்காறுகளாகத் தெரிகின்றன. வெளிப்படையாகக் காணப்படவில்லை.

### 7.6.3. மேட்டுக் குடிகள் பற்றிய பழமொழிகள்

*“செட்டிப் புள்ள கெட்டிப் புள்ள” (பிள்ளை)*
*“பத்து பறபுள்ள குடுத்து ஒரு செட்டிபுள்ள வாங்கு”*[14]

செட்டியார்கள் மிகவும் கெட்டிக்காரர்களாக இருந்துள்ளனர். ஒரு செட்டியார் பிள்ளையின் அறிவுத்திறன் பத்து பறையர் பிள்ளைகளின் அறிவுக்குச் சமமானது என்று வள்ளுவர்கள் கருதுகின்றனர்.

---

[13]. எஸ்.ஆர். பாலகிருஷ்ணன், வயது. 62, வள்ளுவர் சமூகம், சேமக்கோட்டை, பண்ருட்டி வட்டம்.

[14]. எஸ். இராமச்சந்திரன், வயது. 60, வள்ளுவர் சமூகம், களையூர், பண்ருட்டி வட்டம்.

*"பள்ளி புள்ளன்னா (பிள்ளை)*
*செல்லம் குறையாது"*

*"பட்டாதான் தெரியும் பள்ளிக்கு*
*சுட்டாதான் தெரியும் நண்டுக்கு"*

*"பறையன் முத்தனா பள்ளி*
*பள்ளி முத்தனா படையாட்சி*
*படையாட்சி முத்தனா கவுண்டன்*
*கவுண்டன் முத்தனா நாயக்கன்"*

*"கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே*
*சங்கு சுட்டாலும் வெண்மை தரும்"*[15].

வன்னியர்களைப் பள்ளி என்று இழித்துக்கூறும் வழக்காறு களப்பகுதியில் உண்டு. அவ்வாறு கூறுவதால் அவர்கள் தரந்தாழ்ந்து போக மாட்டார்கள் என்று கூறப்படுகிறது. பறையர்களைப் போன்றே வன்னியர்களும் பின்விளைவு கருதாமல் செயல்படுபவர்கள் (கோபம் கொள்பவர்கள்) என்ற கருத்தையும் உணரமுடிகிறது.

பழங்காலத்தில் பொருளாதார அடிப்படையில் உயர்ந்த நிலையை அடைந்த பறையர்கள் பள்ளிகளாக மாறினர். பின்னர், படிப்படியாகப் படையாட்சி, கவுண்டர், நாயக்கர் என்ற நிலைகளும் பொருளாதார மாற்றத்தால் ஏற்பட்டவை என இந்தப் பழமொழியால் அறியப்படுகிறது.

பொருளாதாரம் கெட்டாலும் மேன்மக்கள் மேன்மையான நடத்தையை உடையவர்களாக இருப்பர் என்று கூறப்படுகிறது. இப்பழமொழியில் உள்ள மேன்மக்கள் என்பதை வள்ளுவர்கள் மேல்சாதியினராகக் கருதுகின்ற நிலை காணப்படுகிறது.

வள்ளுவர் சமூகத்து மக்களிடம் தங்களின் சாதியைப் பற்றியும், பிறசாதிகளைப் பற்றியும் கருதுகின்ற மனக் கருத்துகள் பழமொழிகளாக அவர்களிடம் இன்றளவும் வலம்வந்து கொண்டிருக்கின்றன. கல்வி அறிவின் காரணமாக வள்ளுவர்களில் இளைய தலைமுறையினர் சாதிகளைப் பற்றிப் பேசுவதையும், அவை தொடர்பான செயல்பாடுகளை வெறுப்பவர்களாகவும்

---

[15]. எஸ். இராமச்சந்திரன், வயது. 60, வள்ளுவர் சமூகம், களையூர், பண்ருட்டி வட்டம்.

உள்ளனர். இவைபோன்ற பழமொழிகளை வள்ளுவர் சமூகத்தில் மிகவும் வயதானவர்கள் மட்டுமே பேசிவருகின்ற நிலை காணப்படுகிறது. மேலும் இவர்களிடம் காணப்படும் பிற பழமொழிகள் களப்பகுதியில் பிற சமூகத்தவர்களிடமும் காணப்படும் பொதுத்தன்மை தெரிகிறது.

## 7.7. வள்ளுவர்கள் கொண்டாடும் திருவிழாக்கள் மற்றும் நன்னாட்கள்

விழாக்களை வருடாந்திர விழாக்கள் என்றும் கோயில் விழாக்கள் என்றும் நாட்டுப்புறவியலார் வகைப்படுத்துவர். இவ்விழாக்களில் சிறுபாரம்பரிய மரபும், பெருபாரம்பரிய மரபும் கலந்துள்ளன. நாட்டுப்புற மக்களில் ஒருசாரார் சமஸ்கிருதமயமாதல் (Sanskritisation), புதுமையாக்கம் (Modernisation) காரணமாகப் பெரும்பாரம்பரிய மரபுடன் இணைத்த விழாக்களையும் கொண்டாடுகின்றனர். அதே மக்கள் சிறுபாரம்பரிய மரபுடன் இணைந்த விழாக்களையும் கொண்டாடுகின்றனர். இதுபோன்ற வழக்கம் வள்ளுவர் சமூக மக்களிடமும் காணப்படுகிறது.

### 7.7.1. திருவிழாக்கள்

வள்ளுவர்கள் தங்களின் குலதெய்வங்களுக்கு ஆடி மாதத்தில் வழிபாடு செய்து திருவிழா நடத்துகின்றனர். ஆடி மாதத்தில் பம்பை, உடுக்கையுடன் பொங்கல் வைத்து அன்று இரவு தெருக்கூத்து வைக்கின்றனர். வள்ளுவர்களின் குலதெய்வங்கள் ஊருக்கு ஊர் வெவ்வேறாகக் காணப்படுகின்றன. இவற்றில் ஆண் தெய்வங்களும் பெண் தெய்வங்களும் உண்டு. இத்திருவிழாக்கள் வள்ளுவர்களின் சிறுபாராம்பரிய மரபினை உணர்த்துகின்றன.

களப்பகுதியில் வள்ளுவ ஆழ்வார்கள் குழுக்களாக வாழும் சிற்றூர்களில் சில தலைமுறைகளுக்கு முன்னர் அவர்களுக்கென்று அவர்களே பெருமாள் கோயில்களை உருவாக்கியுள்ளனர். அந்தப் பெருமாள் கோயில்களுக்கு வருடம் ஒருமுறை திருவிழா செய்து, தெருக்கூத்து நடத்துவர். அன்னதானங்களும் இடம்பெறும். இறைவன், இறைவிக்கு வள்ளுவர்கள் வருடந்தோறும் திருமணம் நடத்துகின்றனர்.

வள்ளுவ நாயனார்கள் இதனைப் போன்றே தங்களுக்கென்று முருகன் கோவில்களைக் கட்டி வைத்துள்ளனர். அவர்களும் இவ்வாறே திருவிழாவினைச் செய்து வருகின்றனர். இந்தப் பெருமாள், முருகன் கோவிலில் வள்ளுவர்கள்

நடத்தும் திருவிழாக்கள் பாராம்பரிய மரபுடன் இணைந்த விழாக்களைப் போன்றே காணப்படுகின்றன.

### 7.7.2. வள்ளுவர்கள் செல்லும் திருவிழாக்கள்

சித்திரை மாதம் திருவந்திபுரம் (திருவயிந்திரபுரம்) தேவநாதசுவாமி கோயிலில் பத்து நாட்கள் திருவிழா, பருவத்தில் (பௌர்ணமி) தேர்த்திருவிழா, வசந்த உற்சவம் ஆகியவற்றிற்குச் செல்கின்றனர். தேர் ஓடுவதற்கு முதல்நாள் குடும்பத்துடன் வண்டி கட்டிக்கொண்டு விறகு, பாத்திரங்கள், மளிகைப் பொருட்கள் வாங்கிச்சென்று சோறு சமைத்து அன்னதானம் செய்துவிட்டு, தேரினைக் கும்பிட்டு வருகின்றனர். இன்றைய நிலையில் கோயிலில் தினமும் அன்னதானம் போடுகின்ற அன்னதானக் குழுவினரிடம் (அரசு அலுவலர்கள்) சிறப்பு நாட்களில் மூன்றாயிரம் ரூபாயும், மற்ற நாட்களில் இரண்டாயிரம் ரூபாயும் கட்டி அன்னதானம் போடச் செய்கின்றனர். இதுபோன்று பரிக்கல் நரசிங்க பெருமாள் கோயிலுக்கும் சென்று வருகின்றனர். சித்திரை சதய நாளில் திருவதிகை வீரட்டானேசுவரக் கோயில் அப்பர் சுவாமிகள் விழா, திருவாமூர் அப்பர்சாமி விழாவிற்கும் சென்று வழிபட்டு வருகின்றனர்.

சித்திரா பௌர்ணமி அன்று கூவாகம் கூத்தாண்டவர் கோயிலுக்கும் வண்டிகட்டிக் கொண்டு சென்று அன்னதானம் செய்கின்றனர். அங்குத் தாலிகட்டி அறுக்கின்ற சடங்குகளையும் வேண்டிக் கொண்டவர்கள் செய்து வருகின்றனர்.

வைகாசி மாதம் திருப்பாதிரிபுலியூர் பாடலேசுவரர் (சிவன்) கோவிலில் பத்து நாட்கள் திருவிழா. விசாகத்தில் தேர் ஓடும். அதில் பங்குகொண்டு சிவனை வணங்குகின்றனர்.

திருமாணிக்குழி சிவன் கோவிலுக்குச் சென்று பிரதோஷம், பௌர்ணமி ஆகிய நாட்களில் வழிபாடு செய்து வருகின்றனர். ஆனி மாதத்தில் சிதம்பரம் நடராசர் கோவிலுக்குச் சென்று ஆனித் திருமஞ்சனத்தைக் கண்டுகளிக்கின்றனர்.

ஆடி மாதத்தில் களப்பகுதியில் உள்ள சிறுசிறு அம்மன் கோவில்களில் நடைபெறும் தீமிதித் திருவிழா, செடல் திருவிடா அகியவற்றிற்கும் செல்கின்றனர்.

ஆவனி மாதம் மூல நட்சத்திரத்தன்று திருவதிகை, திருநாவலூர், திருவெண்ணெய்நல்லூர், திருமாணிக்குழி ஆகிய ஊர்களில் சிவ ஆலயங்களில் நடைபெறும் சிவன் பிட்டுக்கு மண் சுமந்த திருவிழாவிற்குச் செல்கின்றனர்.

மார்கழி மாதம் வைகுண்ட ஏகாதசி அன்று ஸ்ரீரங்கம், திருவந்திபுரம், திருக்கோவிலூர் ஆகிய பெருமாள் கோயில்களுள் ஏதேனும் ஒன்றிற்குச் செல்கின்றனர்.

தைப்பூசத்தன்று வடலூர் வள்ளலாரின் சத்தியஞான சபைக்குச் சென்று தங்கி வழிபாடு செய்து வருகின்றனர்.

மாசி மாதம் மகாசிவராத்திரியன்று இரவு முழுவதும் கண் விழித்து அவரவர்களுக்கு அருகில் உள்ள சிவன் கோயிலுக்குச் செல்கின்றனர்.

பங்குனி உத்திரத்தன்று தென்மயிலம் என்று சொல்லப்படும் விலங்கப்பட்டு முருகன் கோவில், வேலுடையான்பட்டு (நெய்வேலி), மயிலம், வையாபுரிப்பட்டினம் (பண்ருட்டி) ஆகிய முருகன் கோயில்களுக்குச் சென்று நாக்கில் அலகு குத்திக் கொண்டும், காவடி எடுத்து ஆடியும் தீமிதிக்கின்ற விழாவில் கலந்து கொள்கின்றனர்.

### 7.7.3. கொண்டாடும் நன்னாட்கள்

தீபாவளி, பொங்கல் ஆகிய பெருநாட்களை அனைத்துச் சமூகத்தினரும் கொண்டாடுவதைப்போல் அந்தந்த வட்டாரங்களுக்குத் தக்கவாறு வள்ளுவர்களும் வழக்கமான முறையில் கொண்டாடுகின்றனர். பிற நன்னாட்களைக் கொண்டாடுவதில் சற்று வேறுபடுகிற தன்மை தெரிகிறது.

#### 7.7.3.1. சித்திரை முதல்நாள்

களப்பகுதியில் உள்ள நாட்டுப்புற மக்களில் பெரும்பான்மையினர் ஆங்கிலப் புத்தாண்டைக் கொண்டாடுவதில்லை. தமிழ்ப் புத்தாண்டைக் கொண்டாடுபவர்களாக உள்ளனர். வள்ளுவர்களும் இவ்வாறே தமிழ்ப் புத்தாண்டைக் கொண்டாடுகின்றனர். இந்த நாளை ‘மாசப் பொறப்பு’, ‘வருஷப் பொறப்பு’ (மாதப் பிறப்பு, வருடப்பிறப்பு) என்று குறிப்பிடுகின்றனர்.

அன்றைய தினம் அதிகாலையில் குடும்பத்தினர் அனைவரும் எண்ணெய் தேய்த்துத் தலை மூழ்குகின்றனர். வீட்டினைத் தூய்மை செய்து தோரணங்கள் கட்டுகின்றனர். சைவச் சிற்றுண்டி வகைகள், இனிப்பு வகைகள், பழங்கள் அனைத்தும் சாமியறையில் வைக்கப்படுகின்றன. உடன் அனைவருக்கும் புத்தாடைகள் வறுமை இருப்பின் சிறுவர்களுக்கு மட்டுமாவது புத்தாடைகள்

வாங்கி அவற்றின் ஓரத்தில் மஞ்சள் தடவி வைக்கின்றனர். இதுபோன்றே அந்த ஆண்டிற்குரிய புதுப் பஞ்சாங்கமும், பூணூலும் வைக்கப்படுகின்றன. குடும்பத்தலைவர் இறைவனைப் போற்றிப் பாடல்களைப்பாடித் தூபதீபம் ஏற்றுவார். குடும்பத்தார் அனைவரும் விழுந்து வணங்குவர்.

அதன்பின்னர் அனைவரும் புத்தாடைகள் அணிந்து கொண்டு சிற்றுண்டி வகைகளை உண்கின்றனர். குடும்பத்தலைவர் பூணூல் அணிந்து பின்னர் உணவு உண்ணுவார். அன்றைய தினம் சோதிடம் பார்க்க யாரேனும் வந்திருந்தால் பார்க்கப்படும். இல்லையெனில் சாதகம் கணித்து எழுதுவர். அன்றைய தினம் யாரிடமும் எவ்விதச் சண்டைச் சச்சரவுகளும் வைத்துக்கொள்ள மாட்டார்கள். மீறி வரினும் தவிர்க்கப் பார்ப்பார்கள். வருடத்தின் முதல்நாள் மகிழ்வுடன் இருந்தால் அந்த ஆண்டு முழுவதும் மகிழ்வு. துயரத்துடன் இருப்பின் ஆண்டு முழுவதும் துயரம் என்று நம்புகின்றவர்களாகக் காணப்படுகின்றனர்.

‘‘தமிழ்ப் புத்தாண்டு சித்திரைத் திங்கள் முதல்நாள் கொண்டாடப்பெறும். வைகறையில் எழுந்து இல்லம் முழுவதும் தூய்மை செய்து, மஞ்சள் குங்குமத்தாலும் மாவிலை, வேப்பிலை கலந்த தோரணத்தாலும் வீட்டு வாயிற்படிகளை அணிசெய்வர். நண்பகலில் பல்வகைக் காய்கறி உணவுகளையும் சிற்றுண்டி வகைகளையும் இறைவனுக்குப் படைத்து உண்பர். அறுசுவை உண்டியும் இருக்கும். புத்தாண்டு நாளில் மகிழ்ச்சியுடன் இருந்தால் ஆண்டு முழுவதும் மகிழ்ச்சி நிலவும். இந்த நாளில் துன்புற்றால் ஆண்டு முழுவதும் துன்பந்தானாம். அதனால் இந்த நாளில் ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொள்ளார். சிறுவர்களை வைதலோ அடித்தலோ செய்யார். எதுவாக இருப்பினும் நாளைக்குப் பார்த்துக் கொள்கிறேன் என்பர்’’[16].

### 7.7.3.2. சித்திரா பௌர்ணமி

சித்திரை மாதம் வரும் முழுநிலவு நாளினைச் ‘சித்திரா பௌர்ணமி’ என்று குறிப்பிடுகின்றனர். சித்திரா பௌர்ணமி எமலோகத்தில் கணக்கெழுதும் சித்திர குப்தனுக்கு உயரிய நாள் என்று நம்புகின்றனர். எனவே மூங்கிலால் பின்னப்பட்ட புது முறத்தில் அவல், பொரி, கடலை, வாழைப்பழம்,

[16]. சுந்தர சண்முகனார், கெடிலக்கரை நாகரிகம், ப. 439.

வெற்றிலைப்பாக்கு ஆகியவற்றுடன் வெள்ளைத் தாள்கள், எழுதுகோல்கள் வைத்துப் படைக்கின்றனர். முன்பெல்லாம் வெள்ளைத்தாள், எழுதுகோல்களுக்குப் பதில் எழுதத் தகுந்த பனையோலையும், எழுத்தாணியும் வைத்துப் படைக்கப்படும்.

''சித்திரா பௌர்ணமி சித்திரை மாதம் பௌர்ணமி நாளில் கொண்டாடப்படுகிறது. சித்திரா பௌர்ணமி நாளன்று சிலர் சித்திர குப்தனை வரைந்து அவனை வழிபடுவதும் வழக்கமாகும்''[17].

இவ்வாறு சித்திரா பௌர்ணமி அன்று சித்திரகுப்தனை வழிபடுவதால் சிறார்களுக்குச் சிறந்த கல்வியும், நீண்ட ஆயுளும் கிட்டும் (கிடைக்கும்) என்ற நம்பிக்கையில் அடிப்படையில் வள்ளுவர்கள் இந்த நன்னாளில் வழிபாடு செய்கின்றனர் என்று அறியப்படுகிறது.

### 7.7.3.3. ஆடிப் பதினெட்டு

ஆடிமாதம் பதினெட்டாம் நாளினை 'ஆடிப்பதினெட்டு', 'பதினெட்டாம்பேர்' என்றும் 'ஆடிப்பெருக்கு' என்றும் வள்ளுவர்கள் குறிப்பிடுகின்றனர். இன்றும் அதிகாலை வீட்டினைத் தூய்மை செய்து, தோரணங்கள் கட்டி, எண்ணெய் தேய்த்துத் தலைமுழ்குகின்றனர். சைவச் சிற்றுண்டிகள், பழவகைகள், இனிப்புகள் வைத்துக் காலையில் இறைவனுக்குப் படைக்கின்றனர். மாலையில் சோறு, கறிக்குழம்பு, தின்பண்டங்கள் வைத்து இறந்த முன்னோர்களுக்குப் படைக்கப்படுகின்றன. இன்றைய தினத்தில் புதிய செயல்களைத் தொடங்குவதோ, ஊர்ப்பயணம் மேற்கொள்வதோ, விவசாய வேலைகளைத் தொடங்குவதோ நடைபெறுவதில்லை. இன்றைய நாளில் ஆரம்பிக்கும் புதுச்செயல்கள் நன்மையில் முற்றுப்பெறாமல் சண்டை சச்சரவுகளில் முடியும் என்ற நம்பிக்கை நிலவுகிறது.

### 7.7.3.4. மயானக் கொள்ளை

களப்பகுதியில் அங்காளம்மன் கோயில்கள் இருக்கும் சிற்றூர்களில் மட்டும் இவ்விழா கொண்டாடப்படுகிறது. மாசிமாதம் மகாசிவராத்திரிக்கு முதல்நாள் இம்மயானக் கொள்ளை நடைபெறுகிறது. இது அங்காள

[17]. சு. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப. 236.

பரமேஸ்வரிக்கு வருடா வருடம் நடைபெறும் திருவிழாவாகும். அங்காளம்மன் சாமி கோவிலில் இருந்து சாத்துப்படி (அலங்காரம்) செய்யப்பட்டுச் சுடுகாட்டிற்கு அலங்கார வண்டியில் கொண்டுவரப்படுகிறது. அங்காளம்மன் வேடமணிந்த ஒருவரும் உடன் ஆடிக்கொண்டு வருவார். இதில் அனைத்துச் சமூக மக்களும் கலந்து கொள்கின்றனர். அங்குக் 'கொடல் கவ்வும் (ஆட்டுக் குடலை வாயினால் கவ்வுதல்) நிகழ்வு' நடைபெறும்.

அதன்பின்னர் ஒவ்வொருவர் வீட்டிலும் இருந்து கொண்டு வரும் உண்டை, கொழுக்கட்டை, சுண்டல், பயிறு வகைகள் சாமிக்குப் படைக்கப்பட்டு அனைவருக்கும் கொடுக்கப்படும். தங்கள் தோட்டத்தில் விளைந்த காய்கறிகள், பழவகைகள், கொல்லியில் (நிலத்தில்) விளைந்த தானியங்களைச் சாமியின் முன்னர் மயானமாகிய சுடுகாட்டில் வாரி இறைப்பார்கள். அவற்றை அனைவரும் பொறுக்கி எடுத்துச் செல்வர். மயானத்தில் வாரி வாரிப் பொருட்களைக் கொள்ளை விடுவதால் 'மயானக்கொள்ளை' என்று கூறப்படுவதாகக் கருதலாம். இவ்வாறே வள்ளுவர்களும் மயானத்தில் பொருட்களைப் படைத்தும், கொள்ளையிட்டும் அங்காளம்மனை வழிபடுகின்றனர். இவ்வாறு கொள்ளையிடுவதால் அடுத்தமுறை விளைச்சல் அதிக அளவில் நன்கு விளையும் என்று நம்புகின்றனர்.

"வருடா வருடம் மயானக் கொள்ளை என்ற விழா அங்காளப் பரமேஸ்வரிக்கு நடத்தப்படுகிறது. மாசிமாதம் மகாசிவராத்திரிக்கு முதல்நாள் நடத்தப்படுகிறது. இவ்விழாவின்போது தெய்வத்தைப் பல்லக்கில் எடுத்து வைத்துச் சுடுகாட்டிற்குச் சென்று அங்குப் படைப்பர். அந்தப் படையலை உண்டால் குழந்தைப்பேறு கிட்டும், நோய்கள் குணமாகும் என்றும் நம்புகின்றனர்"[18].

## 7.8. வள்ளுவர்களின் பொழுதுபோக்குகள்

பொழுது போக்குதல் என்பதற்குப் 'பொழுது கழிய விளையாடுதல்' என்று தமிழ்மொழியகராதி பொருள் தருகிறது. நாட்டுப்புற விளையாட்டுகளைக் கொள்கை அடிப்படையில் ஆறு வகைகளாகப் பிரித்துப் பார்க்கின்றனர்

[18]. சு. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப. 244.

நாட்டுப்புறவியல் அறிஞர்கள். அவற்றுள் ஒன்றான பொழுதுபோக்குக் கொள்கையில் (Recreation theory) வள்ளுவப் பெரியோர்களின் விளையாட்டுக்களை அடக்கலாம்.

‘‘எளியனவாகவும் மனித இனத்தில் தொடக்க காலச் செயல்களை ஒத்திருப்பனவாகவும் இருத்தலால் விளையாட்டுச் செயல்கள் பொழுதுபோக்குச் செயல்கள் எனக் கருதப்படுகின்றன’’[19].

### 7.8.1. தாயக்கட்டை விளையாடுதல்

வள்ளுவர் சமூகத்தில் தாயக்கட்டையை ஆண்கள் மட்டும் பெண்கள் மட்டும், ஆண்களும் பெண்களுமாக சேர்ந்தும் விளையாடுகின்றனர். இவ்விளையாட்டிற்கு இருவர், நால்வர், அறுவர் என இரட்டைப் படையில் ஆட்கள் தேவைப்படுவார்கள். நால்வர் எனில் எதிரெதிரே அமர்பவர்கள் ஓர் அணியாகும். நால்வருக்குமேல் விளையாடினால் ஒன்றுவிட்டு ஒருவர் ஓர் அணியாகக் கருதப்படுவர்.

இவர்கள் ‘தாயபாஸ்’ என்று சொல்லக்கூடிய தாயக்கட்டைகளைப் பெரிதும் பயன்படுத்துவதில்லை. அகலமாக உள்ள ஆறு புளியங்கொட்டைகளை ஒருபுறம் நன்றாகத் தேய்த்து விளையாடுகின்றனர். எனவே இதற்குத் ‘தாயக்கொட்டை’ என்று பெயர் வந்ததாகக் கருதலாம்.

வீட்டின் திண்ணையிலோ வாசலிலோ வெள்ளைக் கோடுகளால் தாயக்கட்டம் போடப்படுகிறது (இது பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது). ஓர் அணிக்கு ஐந்து காய்கள் என இரு அணிக்கும் பத்துக் காய்கள் இடம்பெறுகின்றன. அவை சிறு கூழாங்கற்கள், ஓடுகள், புளியங்கொட்டைகளாக இருக்கின்றன. ஓர் அணிக்குக் கூழாங்கற்கள் என்றால் மற்ற அணிக்கு ஓடுகளோ புளியங்கொட்டைகளோ காய்களாக இருக்கும்.

‘‘தாயம் விளையாடுவதற்கு வரையப்படும் கட்டத்தினைத் ‘தாயக்கட்டம்’ என்றும் உருட்டும் பகடையைத் ‘தாயக்கட்டை’ என்றும் கூறுவர். சோழிகள் முதலியவற்றை வைத்தும் விளையாடுவர். நான்கு கட்டத் தாயம், எட்டுக் கட்டத்

[19]. சு. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப. 248.

தாயம், பத்துக்கட்டத் தாயம் எனப் பலவகையுண்டு. குறைந்தது இருவர் இவ்விளையாட்டில் பங்கு கொள்வர்”[20].

தாயக்கட்டைகளை வெற்றுக் கைகளால் போட வள்ளுவர்கள் அனுமதிப்பதில்லை. ஏனெனில் சூழ்ச்சுமம் செய்து வேண்டியவாறு போட முடியும் என்பதற்காக அனுமதிப்பதில்லை. சிறு குவளை (டம்ளர்) சிறு டப்பாவிற்குள் தாயக் கொட்டைகளை வாரிப்போட்டு போடுகின்றனர். தாயம் போட்டால்தான் துவைந்தவர்களாக (ஆட அனுமதித்தல்) கொள்வர். தாயம், ஐந்து, ஆறு, பன்னிரண்டு இவற்றைப் போட்டால் மீண்டும் போடுவதற்கு வாய்ப்பளிக்கப்படுகிறது.

தாயம் போட்டதும் காய் வெளியே கொண்டுவரப்படுகிறது. வலப் பக்கமாகக் காய் விடப்படுகிறது. எதிரணியினரின் காய் வெட்டப்பட்ட பின்னரே பழமாக உள்ளே புகுகிறது. ஐந்து காய்களும் பழம் புகுந்துவிட்டால் ஆட்டம் முடிவடைகிறது. பழம் புகுந்தவர் வெற்றி பெற்றவராவார். எதிரணியினர் ஒரு காயைக்கூட வெட்டிவிடாமலே வெற்றிபெறும் ஆட்டம் ‘கன்னி கழியாத ஆட்டம்’ என்று அழைக்கப்படுகிறது. பழம் புகும்போது தாயம் போட்டால் பழம் புகுந்துவிடலாம் என்ற நிலையில் உள்ள பழக்காயினை எதிரணியினர் வெட்டுவது ‘டொக்கு அறுத்தல்’ என்று கூறப்படுகிறது. வெட்டும் காய்களைத் தாயம் போட்டுத்தான் வாங்க வேண்டும். இந்தத் தாயக்கொட்டை விளையாடுவது வள்ளுவ மக்கள் இன்றியமையாத பொழுதுபோக்காகக் கருதப்படுகிறது. பகலில் பெண்களும் மாலை மற்றும் இரவு நேரங்களில் ஆண்களுமாகப் பெரிதும் விளையாடுகின்றனர்.

### 7.8.2. ஆடு புலி ஆட்டம்

வேலைகளில்லாத காலத்தில் களப்பகுதியில் உள்ள பெரியவர்கள் இதனைப் பொழுதுபோக்கிற்காக வேண்டி விளையாடுகின்றனர். ‘பதினைந்தாம் புலி’ என்றும் கூறப்படும் இவ்விளையாட்டினை வள்ளுவர்கள் ‘ஆடுபுலி ஆட்டம்’ என்றே அழைக்கின்றனர். தரையில் கோடுகள் போட்டு விளையாடப்படுகிறது. இவ்வாட்டத்தில் இருவர் பங்குகொள்கின்றனர்.

---

[20]. சு. சக்திவேல், நாட்டுப்புற இயல் ஆய்வு, ப. 254.

ஒருவர் ஆடாகப் பதினைந்து காய்களையும் மற்றொருவர் புலியாக மூன்று காய்களையும் வைத்து விளையாடுகின்றனர். ஆடாக இருப்பவர் காய்களை வைத்துக்கொண்டே இருக்க, புலியாக இருப்பவர் காய்களை நகர்த்திக் கொண்டே இருப்பார். ஆடு என்பதற்குரிய காய் வைக்குமிடத்திலிருந்து ஒரு புள்ளி தள்ளிக் காய் இல்லாவிட்டால், அக்காயை வெட்டலாம். புலியின் காய்களை நகர்த்த முடியாத அளவிற்குக் காய்களை வைத்துவிட்டால், ஆடாக இருப்பவர் வெற்றி பெற்றவராவார். காய்கள் அடைபடாதவாறு எதிரியின் காய்களை வெட்டி முடித்தால் புலியாக இருப்பவர் வெற்றி பெற்றவராகக் கருதப்படுவார்.

வள்ளுவர்கள் முன்பெல்லாம் இந்த ஆடுபுலி ஆட்டத்தினை அதிகமாக விளையாடி வந்துள்ளனர். இன்றைய நிலையில் அங்கொன்றும் இங்கொன்றுமாக ஒரு சிலரே விளையாடும் நிலை காணப்படுகிறது.

### 7.8.3. பிற பொழுதுபோக்குகள்

பல்லாங்குழி விளையாடுதல், கும்மி அடித்தல், கும்மிப் பாடல்களை மனப்பாடம் செய்து பாடுதல், ஒப்பாரிப் பாடல்களை மனப்பாடம் செய்தல் ஆகியவற்றைப் பொழுதுபோக்குகளாக வள்ளுவப் பெண்கள் மேற்கொள்கின்றனர்.

புராண இதிகாசங்களான இராமாயணம், மகாபாரதம், கந்தபுராணம், சிவபுராணம், விஷ்ணுபுராணம் ஆகியவற்றைப் படித்தல், தெருக்கூத்துப் பாடல்களைப் பாடுதல், கதைகளைச் சொல்லுதல், தெருக்கூத்துப் பார்த்தல், அதன்பின்னர், விமர்சனம் செய்தல், இளைய தலைமுறையினருக்குச் சோதிடம், மருத்துவம், புரோகிதம் ஆகியவற்றைச் செய்யும் முறைகளைக் கற்றுக் கொடுத்தல், சோதிடக் கணக்கினைப் போட்டுக்காட்டி அதில் கேள்விகளைக் கேட்டு விளக்குதல் ஆகியவை வள்ளுவப் பெரியோர்களின் பொழுதுபோக்குகளாகக் காணப்படுகின்றன.

இன்றைய நிலையில் பலரும் தொலைக்காட்சிகளில் வரும் குறுந்தொடர், நெடுந்தொடர் நாடகங்கள், திரைப்படங்கள், நகைச்சுவைகளைப் பார்த்து ரசிப்பவர்களாகக் காணப்படுகின்றனர். இன்றைய தலைமுறையில் சில பெண்கள் தொலைக்காட்சியே கதி என்றளவிற்கு ரசிப்புத்தன்மையுடன் காணப்படுகின்றனர்.

## 7.9. வள்ளுவர்களிடம் காணப்படும் வடசொற்கள்

வள்ளுவர் சமூகத்து மக்கள் தங்கள் பேச்சு வழக்கின்போதும் புரோகிதராக இருந்து சடங்குகளைச் செய்யும் பொழுதும் சில வடமொழிச் சொற்களையும், வடமொழி மந்திரங்களையும் பயன்படுத்துகின்ற நிலை காணப்படுகிறது.

நாம நட்ஷத்ரம், கர்ண பூஷ்ணம், விவாகம், சீமந்தம், பூஜை, ஜலம், கோத்திரம், எக்கியம், மோட்ஷம், கோமியம், பட்ஷி, புஷ்பம், சாதம், ஜென்ம நட்சத்திரம், ஸர்வலோகம், ஜோசியம், ஜாதகம், கிரகஸ்தன், குருதட்ஷணை, சுவாஹா, சமர்ப்பியாமே, ஜாலோகம், ஜாமீபம், ஜாரூபம், ஜாயுச்சம், ஜாதி ஆகிய வடசொற்களைப் பயன்பாட்டில் உடையவர்களாக உள்ளனர். மேலும், ‘சுக்லாம்பரதம்’ என்று ஆரம்பிக்கக்கூடிய ‘விஷ்ணு ஸஹஸ்ரநாமம்’ என்ற மந்திரத்தை எக்கியம் வளர்த்தும் போதெல்லாம் கூறுகின்றனர் (இம்மந்திரம் முழுவதுமாகப் பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது).

## 7.10. வள்ளுவர்கள் பேசும் கொச்சைச் சொற்கள்

வள்ளுவர்கள் பல்வேறு கொச்சை மொழிகளைப் (சொற்களை) பேச்சளவில் பேசி வருகின்றனர். அதிக அளவில் பெண்களிடம் இக்கொச்சை மொழிகள் காணப்படுகின்றன. ஆண்கள் இயல்பான நிலையில் கொச்சைச் சொற்களை பயன்படுத்துகின்றனர். சோதிடம் பார்க்கும்பொழுது கொச்சைச் சொற்கள் கையாளப்படுவதில்லை. இன்றைய நிலையில் கல்வியறிவு பெற்ற வள்ளுவ ஆண்கள், பெண்களிடம் இச்சொற்கள் பெரிதும் காணப்படவில்லை எனலாம்.

| **கொச்சை உருவம்** | **தூயஉருவம்** |
|---|---|
| கெழங்கு | கிழங்கு |
| கொழம்பு | குழம்பு |
| நாலு | நான்கு |
| திலுப்பி | திருப்பி |
| தாளாரமா | தாராளமாக |

| | |
|---|---|
| இருக்குது | இருக்கிறது |
| கொஞ்சோண்டு<br>அல்லது<br>ரவோண்டு | கொஞ்சம் |
| சாப்புட்டு | சாப்பிட்டு |
| போய்கினு | போய்க்கொண்டு |
| வந்துகினு | வந்துகொண்டு |
| வரப்ப | வரும்பொழுது |
| அப்படின்னாங்க | அவ்வாறு சொன்னார்கள் |
| நம்பாளு | நமது ஆள் |
| அப்ரமேல்ட்டு | அதன்பிறகு |
| ஆம்பளை | ஆண் |
| பொம்பளை | பெண் |
| பொண்ணு | பெண் |
| பொறப்பு | பிறப்பு |
| ஆம்பள பசங்க | ஆண் பிள்ளைகள் |
| பொம்பள பசங்க | பெண் பிள்ளைகள் |
| கேப்மாறி | ஏமாற்றுக்காரன் |
| காலங்காத்தால | அதிகாலையில் |
| நவுரு | நகர்ந்து போ |
| சரவுபொலவு | வெற்றிலைப்பாக்கு |
| கெடாசு | எறி |

| | |
|---|---|
| இழிஞ்சி | இறங்கி |
| கோட்டுவாய் | கொட்டாவி |
| கொழந்தை | குழந்தை |
| மொல்லமா | மெதுவாக |
| கெழமை | கிழமை |
| ராகாலம் | இரவு நேரம் |

### 7.11. வள்ளுவச் சிறார் வழக்காறுகள்

வள்ளுவச் சமூகத்து மக்களின் வழக்காறுகளில் சிறார்களின் வழக்காறுகளும் கருத்தில் கொள்ளப்பட வேண்டியவையாகும். பல சிற்றூர்களில் வள்ளுவர் வீதிகளும், பிற தாழ்த்தப்பட்ட மக்களின் குடியிருப்புகளும் அருகருகே காணப்படினும், வள்ளுவச் சிறார்களின் வழக்காறுகள் பிற சிறார்களின் வழக்காறுகளைவிட வேறுபட்டவையாகக் காணப்படுகின்றன. கூர்ந்து கவனித்தால் இந்த வேறுபாடுகளை அறியமுடிகிறது.

#### 7.11.1. விளையாட்டுகள்

வள்ளுவச் சிறார்கள் பள்ளிகளில் கற்றுத்தரக்கூடிய விளையாட்டுகளை மட்டுமே பிற சமூகத்துச் சிறார்களுடன் சேர்ந்து விளையாடுகின்றனர். மற்ற விளையாட்டுகளை அவர்களுக்குள்ளாகவே விளையாடுகின்ற நிலை காணப்படுகிறது. பிற சமூகத்துச் சிறுவர்களுடன் சேர்ந்து விளையாடுகின்ற நிலை காணப்படவில்லை.

வள்ளுவச் சிறார்களிடம் சிறுவர் விளையாடும் விளையாட்டுகள், சிறுவர் சிறுமியர் சேர்ந்து விளையாடும் விளையாட்டுகள் அதிகம் காணப்படுகின்றன. சிறுமியர் மட்டும் விளையாடும் விளையாட்டுகள் குறைவாகக் காணப்படுகின்றன. வள்ளுவச் சிறுவர்கள் கோட்டிப் புல்லு, குண்டு ஆகியவற்றை அதிகம் விளையாடுகின்றனர்.

### 7.11.1.1. கோட்டிப்புல்லு

கோட்டிப்புல்லு விளையாடுவதற்கு முதலில் கழி தேர்வு செய்யப்படுகிறது. நேராக வளைவு இல்லாமல் ஒன்றரையடி முதல் இரண்டடி வரை நீளமுள்ள நான்கு அங்குலம் முதல் ஐந்து அங்குலம் சுற்றளவு உள்ள வேப்பங்கழி, புளியங்கழி, முள்ளுக்கழி (வேலிகாத்தான் முள்) என ஏதேனும் ஒன்று தேர்வு செய்யப்படுகிறது. அக்கழியினை முட்டுகள் இல்லாதவாறு தோல் சீவி ஒன்றரை அடி நீளம் கோட்டியும், நான்கு அங்குலம் நீளம் இருபுறமும் கூர்மையாக சீவிய புல்லும் செய்யப்படுகின்றன.

நூறு அடிநீளம் ஓரளவிற்குச் சமமான தரையில் கோட்டிப்புல் விளையாடப்படுகிறது. அணிக்கு எத்தனை நபர்கள் வேண்டுமானாலும் இடம்பெறலாம். இரு அணியிலும் எண்ணிக்கை சமமாக இருக்க வேண்டும். இவ்விளையாட்டினைச் சிறுவர்கள் மட்டுமே விளையாடுகின்றனர். சிறுமியர் விளையாடுவதில்லை.

### 7.11.1.2. மப்பா மழையா போடுதல்

ஒருசிறு ஓட்டில் ஒருபுறம் எச்சில் தடவி இரு அணித்தலைவர்களுள் ‘‘மப்பா? மழையா?’’ என்று ஒருவர் கேட்டுவிட்டு அந்த ஓட்டை மேலே தூக்கி எறிவார். அப்போது மற்றவர் ‘‘மப்பு’’ அல்லது ‘‘மழை’’ என்று ஏதேனும் ஒன்றினைக் கேட்க எச்சில் புறம் விழுந்தால் மழை என்றும் மறுபுறம் விழுந்திருந்தால் மப்பு என்றும் கொள்ளப்படுகின்றன. மப்பா மழையாவில் வெற்றிபெற்ற அணி முதலில் தள்ளத் தொடங்குவர் (கெந்துதல்). இன்றைய நிலையில் நாணயத்தைக் கொண்டு ‘பூவா, தலையா’ போடப்படுகிறது.

கவ்வாளம் எத்தனை எண்ணிக்கையில் என்பதும் இரு அணிகளால் ஒப்பந்தம் செய்யப்படுகிறது. ஒருவர் குழியில் இருந்து புல்லைக் கோட்டியால் தள்ளுவார். எதிரணியினர் அதனைப் பிடிப்பார். பிடித்துவிட்டால் தள்ளியவர் ஆட்டமிழப்பார். பிடிக்கவில்லை என்றால் அந்தப் புல்லை எடுத்து எடுத்த இடத்திலிருந்து புல்லைக் குழியினை நோக்கி எறிவர். அந்தப் புல் குழியின் மீது உள்ள கோட்டியில் பட்டாலோ குழியிலிருந்து ஒரு கோட்டி அளவு தூரத்தில் நின்றாலோ ஆட்டமிழந்ததாகவே கருதப்படும்

இல்லையெனில் தள்ளியவர் புல்லை எடுத்து மூன்றுமுறை கோட்டியால் அடிப்பார். அதில் கில்லி எடுப்பதும் (இரட்டை அடி அடித்தல்) உண்டு. இவ்வாறு அடிக்கும்போது புல்லின்மீது அடிக்காமல் கோட்டியைத் தரையில் அடித்து விட்டாலும் ஆட்டமிழந்ததாகக் கருதப்படும். இதனைத் 'தரையடி' என்பர். அடிக்கும்போது எதிரணியினர் புல்லைத் தரையில் விழுவதற்கு முன்னர் பிடித்தாலும் அடித்தவர் ஆட்டமிழந்ததாகக் கருதப்படுவார்.

இவ்வாறு மூன்றுமுறை அடித்துப் பின்னர் குழியிலிருந்து புல்லு கிடக்கும் தூரத்தை அடித்த அணியினர் எவ்வளவு என்று கேட்பர். இதில் ஐந்து, பத்து என்ற எண்ணிக்கையில் இருக்கும். அவர் கேட்கும் புள்ளிகள் (எண்ணிக்கை) சரியெனில் கொடுக்கப்படும். குறையும் எனில் கோட்டியால் அளந்து அந்தப் புள்ளிகள் நீக்கப்படும். கில்லி எடுத்தால் எண்ணிக்கை இரட்டிப்பாகக் கொள்ளப்படும். பிற சமூகத்துச் சிறுவர்கள் விளையாடும்பொழுது கில்லி எடுத்தால் புல்லால் அளக்கின்ற நிலை காணப்படுகிறது. வள்ளுவச் சிறார்கள் எப்பொழுதும்போல 'கோட்டியில் அளந்து எண்ணிக்கையை இருமடங்காகக் கொள்கின்றனர்.

இவ்வாறாக ஓர் அணியில் அனைவரும் விளையாடி ஆட்டமிழந்த பிறகு எதிரணி விளையாடும். இவ்வாறு மாறிமாறி விளையாடுவர். எந்த அணியினர் முதலில் கவ்வாளத்திற்கான எண்ணிக்கை (புள்ளிகளை) பெறுகின்றனரோ அவர்களே வெற்றிபெற்றவராவார்.

### 7.11.1.3. வாழக்காய் சுங்குதல்

குழியைச் சுற்றி ஒரு வட்டம் போட்டு வெற்றிபெற்ற அணியினர் புல்லைத் தூக்கிப் போட்டுக் கோட்டியால் அடிப்பர். ஓர் ஆளுக்கு மூன்று அடி அடிக்கப்படுகிறது. அவ்வாறு அடிக்கும்பொழுது அடி தவறிப் புல்லின்மீது படவில்லை என்றால் அதனை 'வாழக்காய்' என்கின்றனர். வாழக்காய்க்குப் பதில் மீண்டும் அடித்துக் கொள்ளச் சொல்வதும் உண்டு. வாழக்காய் சுங்குவதும் உண்டு. சுங்குதல் என்பது கைவிரல்களின் வெளிப்புறம் புல்லை வைத்து தூக்கிப் போட்டு அதே கையினால் புல்லை அடிப்பதாகும். எதிரணியினர் கோட்டியால் அப்புல்லினை அடிப்பர். அடிபட்டுவிட்டால் மீண்டும் ஆளாளுக்கு அரையடி முழு அடி அடிப்பர். முழு அடி என்பது இயல்பாக அடிப்பது. அரையடி அரைப்புல்லையும், அரைக்கோட்டியையும் பிடித்துக்கொண்டு அடிப்பதாகும்.

### 7.11.1.4. புடி விடுதல்

கவ்வாளம் அடிக்கும்போது புல்லைப் பிடித்துவிட்டால் அதனைப் 'புடி' என்கின்றர். கவ்வாளம் பாடுவதற்கு முன்னர் குழியை நோக்கி எவ்வளவு தூரம் எறியமுடியுமோ அவ்வளவு தூரம் கவ்வாளம் பாடுபவர்களால் எறியப்படுகிறது. கவ்வாளம் வைத்தவர்கள் அதனைப் பிடித்துவிட்டால் மீண்டும் எறிந்த திசையை நோக்கி அவர்கள் எறிவர். இதனைப் 'புடிவிடுதல்' என்பர்.

### 7.11.1.5. கவ்வாளம் பாடுதல்

புடிவிட்டு முடிந்தவுடன் குழியை நோக்கிக் 'கபடி கபடி' என்று மூச்சுவிடாமல் பாடிக் கொண்டே ஓட வேண்டும். கவ்வாளம் பாடும் அணியில் எத்தனை பேர் இடம்பெறுகின்றனரோ அத்தனை மூச்சில் குழியை அடைய வேண்டும். முடியவில்லை எனில் மீண்டும் ஒரு நபருக்கு எட்டு அடி அடித்து அந்தத் தூரத்தையும் கவ்வாளம் பாடச் செய்வர். ஒருவரே கவ்வாளம் பாடிக்கொண்டும் ஓடலாம்; ஒருவர் பாட மற்றொருவர் ஓடலாம். இவ்வாறு கவ்வாளம் பாடப்படுகிறது.

பிற சமூகத்துச் சிறுவர்கள் 'கவ்' என்று மூச்சுவிடாமல் கவ்வாளத்தைப் பாடுகின்றனர். வள்ளுவச் சிறார்கள் 'கபடி கபடி' என்று பாடுகின்ற நிலை காணப்படுகிறது.

### 7.11.2. குண்டு விளையாடுதல்

குண்டு விளையாட்டினைக் 'குண்டடித்தல்' என்றே குறிப்பிடுகின்றனர். இதனைக் 'கோலி விளையாடுதல்' என்றும் குறிப்பிடுவர். வள்ளுவச் சிறார்கள் லைன், மாண்டா, பேந்தா, குழி ஆகிய நான்கு வகைகளில் விளையாடுகின்றனர். இவ்விளையாட்டுகளை எத்தனை சிறுவர்கள் வேண்டுமானாலும் விளையாடலாம். குறைந்தது இருவர் வேண்டும்.

### 7.11.2.1. லைன்

ஏதேனும் ஒரு மரம், சுவர் அல்லது படுக்கைவாக்கில் சுமார் நான்கடி நீளமுள்ள கருங்கல் இவற்றை மேற்புறப் பக்கமாகக் கொண்டு அதனருகில் இடத்தைச் சமன்படுத்திச் சுமார் இரண்டரையடி முதல் மூன்றடிக்குள் 'ப' வடிவில்

கோடு போடப்படுகிறது. இது ‘லைன்’ என்று கூறப்படுகிறது. லைனில் இருந்து சுமார் பத்து அல்லது பன்னிரண்டடி தூரத்தில் ஒருசிறு கோடு போட்டு அதனை ‘அத்து’ என்கின்றனர்.

### 7.11.2.2. குண்டுகள்

லைன் விளையாடுவதற்கு மூன்று இரும்புக் குண்டுகள் பயன்படுத்தப்படுகின்றன. ஒரே அளவு உடைய இரண்டு சிறிய குண்டுகளும், ஒரு பெரிய குண்டும் பயன்படுத்தப்படுகின்றன.

அத்திலிருந்து ஒருவர் இரண்டு சிறிய குண்டுகளை லைனுக்குள் போடுவார். மற்றொருவர் அதில் எந்தக் குண்டைக் காண்பிக்கின்றாரோ அதனைப் பெரிய குண்டால் அடிக்க வேண்டும். அடித்துவிட்டால் அடித்தவர் வெற்றிபெற்றவராவார். குண்டை மாற்றி அடித்தாலோ, அடிக்காமலே லைன்மீது (கோட்டில்) பெரியகுண்டு நின்றாலோ தோற்றதாகக் கொள்ளப்படுகிறது.

### 7.11.2.3. கலக்கு

குண்டினை மாற்றி அடித்தாலோ அதாவது காண்பிக்காத குண்டை அடித்தாலோ அல்லது இரண்டு குண்டுகளையும் அடித்துக் குண்டுகள் லைனுக்குள்ளே தங்கிவிட்டாலோ அதனைக் ‘கலக்கு’ என்கின்றனர். இவ்வாறு கலக்கிவிட்டாலும் தோற்றதாகவே கருதப்படும்.

### 7.11.2.4 மாசி

ஒருவர் இரண்டு குண்டுகளை லைனில் போட்டு அவற்றுள் ஏதேனும் ஒன்றினைக் காட்டி அடிக்கா நிலையில் ‘‘அதை அப்படியே நான் அடித்துக் கொள்கிறேன்’’ என்று மற்றொருவர் கேட்பது ‘மாசி’ எனப்படுகிறது.

### 7.11.2.5. இஷ்டம்

லைனுக்குள் இரண்டு குண்டுகளைப் போடும்பொழுது இரண்டு குண்டுகளும் இரண்டு விரற்கட்டை தூரத்தில் அதாவது இரண்டு விரல்கள் இடைவெளி அளவிற்குள் அருகருகே லைனுக்குள் நின்றால் அவற்றில் ஏதேனும் ஒன்றைக் காட்டி அடிக்க வேண்டிய கட்டாயம் இல்லை. அடிப்பவர் விரும்பும்

வகையில் எதை வேண்டுமானாலும் அடித்துக் கொள்ளலாம். இதனை 'இஷ்டம்' என்று கூறுகின்றனர்.

### 7.11.2.6. மேல் பந்தயம்

இருவர் விளையாடும்போது இருவர் தரப்பிலும் காசு போடப்படுகிறது. இதில் ஒருவர் தோற்றபின்னர் வெற்றிபெற்றவருடன் வேறொருவர் களமிறங்குவார். இவ்வாறு களமிறங்குவதைக் 'கை' என்று குறிப்பிடுகின்றனர். விளையாடுவதற்காகப் போகும் காசைக் 'கைக்காசு' என்கின்றனர்.

கைக்காசு அல்லாமல் விளையாடும் இருவரும் 'நான் ஜெயிக்கிறேன், நீ தோற்கிறாய்' என்று மேலும் காசு வைத்து விளையாடுவது 'மேல்பந்தயம்' எனப்படும். இந்த மேல்பந்தயத்தை விளையாடாத ஒருவர் விளையாடுபவருடனோ அல்லது விளையாடாத இருவர் அவர்களுக்குள்ளாகவோ ''இந்தக் கை ஜெயிக்கிறது, இந்தக் கை தோற்கிறது'' என்றும் கட்டுகின்றனர்.

### 7.11.2.7. டப்பான்

லைனுக்குள் இரு குண்டுகளையும் போடும்போது அதிக இடைவெளியில் போய் நிற்குமாறு செய்வர். அவ்வாறு செய்தால் எளிதில் அடித்து வெற்றிபெற்றுவிட முடியும். இதனைத் தவிர்க்கவேண்டி லைனுக்கு ஒட்டி ஒரு சாண் அளவுள்ள சிறு கட்டம் போடப்படுகிறது. இந்தக் கட்டத்தினைக் 'கை டப்பான்' என்று கூறுகின்றனர். இந்த டப்பானுக்குள் குண்டுகளைப் போட்டு, லைனுக்குள் குண்டுகள் சென்றால் பெரும்பாலும் பிரிந்து நிற்காது. அடிப்பதற்குச் சிரமமாக இருக்கும். கை டப்பானுக்குள் போடாமலே லைனுக்குள் குண்டுகள் போடப்பட்டால் செல்லாது. திரும்பப் போட வேண்டும். மூன்றுமுறை டப்பானுக்குள் சரியாகப் போடவில்லை என்றால் தோற்றதாகக் கருதப்படும்.

சிலர் குண்டை அடிக்கும்போது முன்பக்கம் ஓடிவந்து அடிப்பர். அவ்வாறு அடிப்பது எளிது. எனவே அத்துக்கு முன்பு ஒரு கோடு போடுவர். அடித்த பின்பு கைக்குண்டு அசையாமல் நிற்கும்வரை அந்தக் கோட்டைத் தாண்டி வருதல் கூடாது. அப்படி வந்துவிட்டால் 'வட்டம்' என்கின்றனர். வட்டம் என்பது அவரின்

கை முடிந்துவிட்டது, தோற்றுவிட்டார் எனப்படுகிறது. இதனைக் ‘கால் டப்பான்’ என்கின்றனர்.

### 7.11.2.8. காக்கா

லைனுக்குள் குண்டுகளைப் போடும்பொழுது அதில் ஒருகுண்டு லைனுக்கு வெளியே சென்றுவிட்டால் போட்டவர் அடிக்கமுடியாது. எதிர்நிலையில் உள்ளவர் குண்டுகளைப் போட்டு அடிக்க வாய்ப்பளிக்கப்படுகிறது.

போடும்போது இருகுண்டுகளுமே லைனுக்கு வெளியில் சென்றுவிட்டால் இதனைக் ‘காக்கா’ என்கின்றனர். போட்டவர் தோல்வியுற்றவராகக் கொள்ளப்படுகிறார்.

## 7.12 குழி விளையாட்டு

குழி விளையாட்டும் இருவருக்கு மேல் எத்தனை சிறுவர்கள் வேண்டுமானாலும் விளையாடலாம். இவ்விளையாட்டில் கலந்து கொள்கின்றவர்கள் அவரவர் ஒரு கண்ணாடிக்குண்டு எடுத்துக்கொண்டு வரவேண்டும். சுமார் மூன்று அங்குலம் ஆழம் குழி தோண்டப்படுகிறது. குழியிலிருந்து பத்து அல்லது பதினைந்து அடி தொலைவில் கோடு போடப்படுகிறது. இந்தக் கோட்டை ‘அத்து’ என்கின்றனர். குழியிலிருந்து ஒவ்வொருவராக அத்துநோக்கிக் குண்டைப் போடுகின்றனர். அத்துக்கு அருகில் யார் குண்டு இருக்கிறதோ அவர் ஒன்றாவது, அதன்பின் இருப்பவர் இரண்டாவது, மூன்றாவது எனப்படுகின்றனர். அத்தினைத் தாண்டிச் சென்ற குண்டுக்கு உரியவர் கடைசி ஆளாகக் கொள்ளப்பெறுகின்றார். குண்டு அத்தைத் தாண்டுதலைக் ‘காடு’ என்கின்றனர்.

### 7.12.1. ராசாவாகுதல்

அத்திலிருந்து வரிசைமுறையில் குண்டுகள் குழியை நோக்கி வீசப்படுகின்றன. முதலாவது ஆள் மற்றவரின் குண்டுகளை அடித்தும், குண்டைக் குழியில் புகுத்தியும், நான்கு அடிகள் அடிக்க வேண்டும். குண்டைக் குழியில் புகுத்தியும் அடிக்கலாம். இவ்வாறு குழியில் புகும்போது அதன் ஓரத்தில் ‘யார் அடித்து யார் குழி புகுந்தாலும் நானே ராசா’ என்று சொல்லிக் குண்டைக் கட்டுவர். மற்றவர் அடித்து அக்குண்டு குழியில் விழுந்துவிட்டால் அவர்

ராசாவாகிவிடுவார். ராசாவாக ஆவதற்கு நான்கு அடிகள் அடித்தும் ஆகலாம். குழி புகுந்தும் ஆகலாம். மூன்றுமுறை குழிபுகுந்தாலும் கடைசியாக அடித்தே ஆகவேண்டும். இவர்கள் ஒவ்வொருமுறை அடிக்கும்பொழுதும் அல்லது குழி புகும்போதும் ஒவ்வொரு வார்த்தையைச் சொல்லிச்சொல்லி விளையாடுகின்றனர்.

*''எட்டுகட்டு*
*எண்ணாயிரம்*
*காஞ்சள்புரம்*
*காணிக்குப்பத்து''*[21]

என்று முறையே நான்கு அடிகளுக்கும் கூறப்படுகின்றன. 'காணிக்குப் பத்து' என்று கூறி நான்காவது அடியை அடித்தவர் ராசாவாக ஆகிவிடுகிறார்.

### 7.12.2. முட்டித்தள்ளுதல்

ஒருவர் ராசாவாக ஆனதும் மற்றவர்கள் அனைவரும் மீண்டும் முதலிலிருந்து ஆட்டத்தைத் துவங்குகின்றனர். இறுதியில் இருவர் விளையாடும்பொழுது ஒருவர் ராசாவாக ஆகிவிடுவார். அதில் தோற்றவர் முட்டித்தள்ள வேண்டும்.

தோற்றவரின் குண்டைக் குழிமேல் வைத்து முதலில் ராசாவானவர் அத்துப் பக்கம் அடிப்பார். தோற்றவர் கையை மூடிக்கொண்டு குண்டைக் குழிக்குள் தள்ள வேண்டும். இதனை முட்டிதள்ளுதல் என்கின்றனர். ராசாவானவர் முட்டித்தள்ளத் தள்ள அடித்துக் கொண்டிருப்பார். பத்தடி அடித்து விட்டால் மீண்டும் குழிமேல் வைத்து முதலிலிருந்து முட்டி அடிக்கப்படும். இதனைக் காதினைப் பிடித்தவாறே முழங்கையின் முட்டியால் குழிக்குள் தள்ள வேண்டும். இது 'காதுமுட்டி வைத்தல்' என்று கூறப்படுகிறது. இவ்வாறே ராசாவானவர்கள் ஒவ்வொருவரும் முறையே முட்டி அடிப்பர். தோற்றவர் முட்டித் தள்ளுவர். இவ்வாறு குழியைக் கொண்டு குண்டு விளையாடுதலால் இதனைக் 'குழி விளையாட்டு' என்கின்றனர்.

---

[21]. ப. முகிலன், வயது. 12, வள்ளுவர் சமூகம், சேமக்கோட்டை, பண்ருட்டி வட்டம்.

## 7.13. பேந்தா விளையாட்டு

இரண்டு அணிகளாகப் 'பேந்தா' விளையாடுகின்றனர். ஓர் அணிக்கு எத்தனை பேர் வேண்டுமானாலும் இடம்பெறலாம். ஆனால் இரு அணிகளிலும் சமமான எண்ணிக்கையில் சிறுவர் இடம்பெறுதல் வேண்டும். ஆட்டத்தில் எத்தனை சிறுவர் இடம்பெறுகின்றனரோ அத்தனை கண்ணாடிக் குண்டுகள் வேண்டும்.

சமமான இடத்தினைத் தேர்வு செய்து ஒருசாண் குறுக்களவுள்ள செவ்வக வடிவில் ஒரு கட்டம் வரைகின்றனர். இதனைப் பேந்தா என்கின்றனர். பேந்தாவிற்கு சுமார் பத்து அல்லது பதினைந்தடி தூரத்தில் அத்துப் போடுகின்றனர். இருக்கும் குண்டுகளில் அடிப்பதற்கு உகந்த நல்ல குண்டுகள் தேர்வு செய்யப்படுகின்றன. அவை கைக்குண்டுகள் எனப்படுகின்றன. மீதமுள்ள குண்டுகள் அணியின் எண்ணிக்கைக்கேற்பப் பேந்தாவில் வரிசையாக ஒன்றோடொன்று ஒட்டி வைக்கப்படுகின்றன. இதனைப் 'பேந்தா கட்டுதல்' என்பர்.

குண்டுகளை அத்திலிருந்து பேந்தா நோக்கிப் போடும்போதும் அல்லது அடிக்கும் போதும் பேந்தாவின் கோட்டிலிருந்து நான்கு விரல்கடை தூரம் அளவிற்குள் குண்டுகள் இருந்தால் அதுவும் பேந்தா என்றுகூறி பேந்தாவிற்குள் கட்டிவிடுவர். பேந்தாவிற்குள் மாட்டிக் கொண்டவரின் குண்டினை அவரது அணியின் மற்ற சிறுவர் அடித்து வெளியேற்றிய பின்னரே அவர் விளையாடுவார்.

'மப்பா மழையா' போட்டு எந்த அணி முதலில் விளையாடும் எனத் தேர்வு செய்யப்படுகிறது. அந்த அணிச் சிறுவர்கள் அத்திலிருந்து பேந்தா நோக்கிக் கைக்குண்டுகளை வீசுகின்றனர். வீசும்பொழுது ஒருவர் கைக்குண்டின்மீது மற்றொருவரின் கைக்குண்டு பட்டுவிட்டதெனில் 'ஜொட்டு அடித்துவிட்டது' என்கின்றனர். ஜொட்டு அடித்தால் ஆட்டம் 'தீஞ்சிப் போச்சி' என்கின்றனர். ஆட்டம் தீஞ்சுவிட்டதெனில் அடுத்த அணி விளையாடும்.

ஜொட்டு அடிக்காமல் அனைவரும் போட்டுவிட்டபின்னர் ஒவ்வொருவராகப் பேந்தாவிலிருந்து குண்டுகளை அடித்து வெளியேற்றுவர். எவரும் குண்டுகளை அடிக்கவில்லை எனில் ஆட்டம் எதிரணியினருக்குப் போய்விடும். பேந்தாவை விட்டு அனைத்துக் குண்டுகளையும் வெளியேற்றிய பின்னர், அத்திலிருந்து அனைவரும் ஏதேனும் ஒரு பேந்தா குண்டுக்கருகில் கைக்குண்டுகளைப்

போடுவர். எதிரணியிலிருந்து ஒருவர் யார் எந்தெந்தக் குண்டுகளை அடிக்க வேண்டும் என்று கூறுவார். அவரவர் அவரவருக்குக் காண்பித்த குண்டுகளை அடிக்க வேண்டும். யாரேனும் ஒருவர் சரியாக அடித்துவிட்டால்கூட முட்டி முளைத்துவிட்டது என்பர். ஒருவர் குண்டை ஒருவர் மாற்றி அடித்துவிட்டாலும் அல்லது எவருமே அடிக்கவில்லை என்றாலும் ஆட்டம் எதிரணியினரிடம் ஒப்படைக்கப்படும்.

### 7.13.1. கண்ணு

முட்டியைத் தொடர்ந்து அடித்துச் செல்லும்போது பேந்தாக்குண்டு அத்துக்கு இருபுறமும் ஓடிவந்து அத்திலிருந்து தாண்டும் தூரத்திற்குள் இருந்தால் அக்குண்டை அடிக்கக் கையால் கைக்குண்டைப் போடக்கூடாது. பேந்தாக் குண்டு இருக்கும் பக்கத்தில் முதுகைக்காட்டி, கண்ணில் கைக்குண்டை வைத்துத் துள்ளிப்போட வேண்டும். இதனைக் 'கண்ணு' என்கின்றனர்.

முட்டி வைக்கும்போது ஒருவர்கூட அடிக்கவில்லை என்றால் அவர்களின் ஆட்டம் அத்துடன் முடிவடைகிறது. எதிரணியினர் முட்டியைத் தள்ளிப் பேந்தாவிற்குள் குண்டுகளை விட்டுவிட்டு அவர்கள் விளையாடுகின்றனர்.

### 7.13.2. மாண்டா விளையாட்டு

எத்தனை சிறுவர்கள் வேண்டுமானாலும் 'மாண்டா' விளையாடலாம். ஒரு வட்டம் போட்டு அவ்வட்டத்திற்குள் விளையாடும் சிறுவர்கள் தலா ஒரு குண்டோ அல்லது இரண்டு குண்டுகளோ போடுவர். இதனை மாண்டா என்பர். மாண்டாவிலிருந்து சுமார் பத்து அல்லது பதினைந்தடி தூரம் அத்துப் (கோடு) போடப்படுகிறது.

### 7.13.3. அல்லி அடித்தல்

மாண்டாவிலிருந்து கைக்குண்டுகளை அத்து நோக்கிப் போடுகின்றனர். அதில் முறையே ஒன்று, இரண்டு, மூன்று என்ற வரிசைகளின்படி அத்திலிருந்து மாண்டாவை நோக்கிப் போடுகின்றனர். முதல் ஆளாக வந்தவர் மாண்டாவில் உள்ள குண்டுகளை நோக்கி அடித்து வெளியேற்றுவார். மாண்டாவிற்கு உள்ளே இருக்கும் குண்டுகளை 'அல்லி' என்று கூறுகின்றனர். அல்லியை அடிக்காமலேயே மற்றவர்களின் கைக்குண்டுகளை அடித்தால்கூட அதற்குரிய

அல்லியை எடுத்துக் கொள்ளலாம். அடிபட்டவர் மாண்டுவிடுவார். கடைசி அல்லியை அடித்தவரை மாண்டு போகாமல் இருப்பவர்கள் அனைவரும் அடிப்பர். எவர் அடிக்கின்றாரோ அவருக்கு அந்த ஆட்டத்தில் அடித்த எல்லா அல்லியையும் கொடுத்துவிடுவர்.

### 7.13.4. மாண்டு போதல்

அடிக்கும்போது அல்லியின்மீது பட்டும் அது வெளியேறாமல் மாண்டாவிற்குள்ளேயே தங்கிவிட்டாலும் அடித்துக் கைக்குண்டு மாண்டாவிற்குள் மாட்டிக் கொண்டாலும், ஒருவர் கைக்குண்டை மற்றவர் அடித்துவிட்டாலும் அந்த ஆட்டத்தில் அவர் மாண்டுபோனவர் என்று கூறப்படுகிறது. இவ்வாறு ‘மாண்டுபோக வைப்பதனால்’ இந்த விளையாட்டை ‘மாண்டா’ என்று கூறுவதாகக் கருதலாம்.

இந்த மாண்டா விளையாட்டில் வள்ளுவச் சிறுவர்கள் ஜெயித்துப் (வெற்றிபெற்று) படிக்கணக்கில் கண்ணாடிக் குண்டுகளைச் சேர்த்து வைத்து அழகு பார்ப்பர். மாண்டாவில் கண்ணாடிக் குண்டுகளுக்குப் பதில் காசு (நாணயங்களைப்) போட்டு விளையாடும் வழக்கமும் உண்டு.

### 7.14. பிற விளையாட்டுகள்

வள்ளுவச் சிறுவர்களும், சிறுமியர்களும் சேர்ந்து கல்பாரி, நொண்டிப்பாரி, ‘சாணாம்பாரி’, ‘மண்ணா? மரமா?’, ‘கோலாட்டம்’, ‘பல்லாங்குழி’, ‘அல்லக்காய்’, ‘ஒத்தையா ரெட்டையா’, ‘ராஜாராணி’, ‘பம்பர விளையாட்டு’ ஆகிய விளையாட்டுகளையும், ‘ஓரிஓரி’ என்னும் நீரில் விளையாடும் விளையாட்டையும் விளையாடி வந்துள்ளனர். இருபது ஆண்டுகளுக்கு முன்வரையில் நடைமுறையில் இருந்த இந்த விளையாட்டுகள் இன்றைய மாறிவரும் கல்விச்சூழலில் முற்றிலும் மறைந்து விட்டதாகவே தெரிகிறது.

தூண்டில் போட்டு மீன் பிடித்தல், கவண் கொண்டு பறவைகளை அடித்தல், தும்பி பிடித்தல், பட்டாம்பூச்சி பிடித்தல் ஆகிய சிறார்ப் பொழுதுபோக்குகளை வள்ளுவச் சிறார்கள் செய்வதில்லை. ‘பாவம் வந்து சேரும்; நரக லோகத்தில் (எமலோகம்) செக்கில் போட்டு ஆட்டுவார்கள்’ என்று

வள்ளுவப் பெரியோர்கள் கூறுவதைக் கேட்டு அதனால் பயந்து இவற்றைச் செய்வதில்லை என்று அறியமுடிகிறது.

### 7.15. பிற பொழுதுபோக்குகள்

வள்ளுவப் பெரியோர்கள் சிறார்களின் எதிர்கால வாழ்வை மனத்தில் கொண்டு தங்களின் குலத்தொழில்களைக் கற்றுக்கொள்வதற்குத் தகுந்த வகையில் சிலபொழுபோக்குகளில் வள்ளுவச் சிறார்களை ஈடுபடுத்துகின்ற நிலை காணப்படுகிறது.

வள்ளுவச் சிறார்கள் இறைவனைப் பற்றிய பக்திப் பாடல்களை மனப்பாடஞ் செய்து பாடுகின்றனர். புராணங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்கின்றனர். வடமொழிச் சுலோகங்களைக் (மந்திரங்களை) மனப்பாடஞ் செய்யவும், அவற்றைத் திணறாமல் கூறவும் பழகுகின்றனர். கணிதச் சோதிடக் கணக்குகளில் பயிற்சி பெறுகின்றனர். சோதிட நூல்களில் உள்ள நூற்பாக்களைப் படித்து மனப்பாடஞ் செய்து, அவற்றைத் தெளிவாகப் பாடப் பழகுகின்றனர். பஞ்சாங்கம் பார்க்கக் கற்றுக் கொள்கின்றனர். அவற்றில் உள்ள அறுபது தமிழ் ஆண்டுகள், இருபத்தேழு நட்சத்திரங்கள், பதினைந்து திதிகள், பன்னிரண்டு இராசிகள், இலக்கினங்கள் முதலியவற்றையும் மனப்பாடம் செய்து அவற்றின் தன்மைகளை அறிந்து கொள்கின்றனர்.

வள்ளுவர்களின் புரோகித முறைகளைத் தெரிந்து கொள்கின்றனர். புரோகிதம் செய்யும் பெரியோர்களுடன் நேரில் சென்று பார்க்கின்றனர். வள்ளுவர்களின் நாட்டு மருத்துவ முறைகளைக் கற்றுக்கொள்கின்றனர். மூலிகைகளைத் தெரிந்து வைத்துக்கொள்வதையும், மூலிகைகளை வீட்டுத் தோட்டத்தில் வளர்ப்பதையும் பொழுதுபோக்காகச் செய்கின்றனர். தங்களின் பெரியோர்கள் பூசாரிகளாக இருக்கும் அம்மன் கோவில்களுக்குச் சென்று மாலையில் விளக்கு வைப்பது, கருவறையில் உள்ள சாமி சிலைக்கு அபிஷேகங்கள் செய்யும்போது உதவி செய்தல், உற்று நோக்குதல் மூலம் அபிஷேக முறைகளைக் கற்றுக்கொள்ளுதல் ஆகிய குலத்தொழில் சார்ந்த செயல்பாடுகளைக் கற்றுக்கொள்வது வள்ளுவச் சிறார்களின் முதல்நிலை பொழுதுபோக்காகக் காணப்படுகிறது. விளையாட்டுகளை இச்சிறார்களின் இரண்டாம்நிலைப் பொழுதுபோக்கு என்றே கருதலாம்.

## 7.16. தொகுப்புரை

- அன்றாடம் காலையில் துயில் எழுந்ததும் குளித்துவிட்டு நெற்றியில் திருநாமமிட்டும் அல்லது திருநீறு பூசியும் காலை உணவை உண்ணும் வழக்கமுடையவர்களாக வள்ளுவர்கள் காணப்படுகின்றனர். இவர்கள் பிற தாழ்த்தப்பட்ட சமூகத்தாரின் இல்லங்களிலும், மாட்டிறைச்சியையும் உண்ணும் வழக்கமில்லாதவர்கள்.

- இவர்களில் சைவ உணவுகளை உண்பவர்கள் குறைந்த அளவிலும் அசைவ உணவுகளை உண்பவர்கள் அதிக அளவிலும் உள்ளனர். இருப்பினும் முக்கிய விரத தினங்களில் அசைவ உணவுகளைத் தவிர்க்கின்றனர்.

- சோதிட நம்பிக்கை, சகுன நம்பிக்கை, கிழமை பற்றிய நம்பிக்கைகள் இவர்களிடம் காணப்படுகின்றன. இவர்கள் மிகவும் சிறுபான்மையினராக உள்ளனர். பிற சமூகத்தவர்களால் பல இடங்களில் ஒடுக்கப்படுகின்ற நிலை காணப்படுகிறது.

- பொருளாதாரத்தில் உயர்ந்த பிற தாழ்த்தப்பட்ட சமூகத்தினர், ஆரிய பிராமணர்களைப் புரோகிதராக அமர்த்துவதால் இவர்களின் புரோகிதத் தொழில் நலிவடைந்து வருவது இவர்களின் வாழ்வாதாரச் சிக்கலாக உள்ளது.

- பெருந்தெய்வக் கோயில் திருவிழாக்களையும், சிறுதெய்வ விழாக்களையும் இவர்கள் கொண்டாடுகின்றனர். தமிழ் வருடப்பிறப்பு, சித்ரா பௌர்ணமி, ஆடிப்பதினெட்டு ஆகிய நன்னாட்களைப் பிற சமூகத்தவரை ஒப்புநோக்கச் சிறு வேறுபாட்டுடன் கொண்டாடுகின்றனர்.

- புராண இதிகாசங்களைக் கேட்பதும், தெருக்கூத்தின் மூலம் அவற்றைப் பார்ப்பதும் வள்ளுவப் பெரியோர்களின் ஆர்வமிகுந்த பொழுதுபோக்குகளாக உள்ளன. தாயக்கொட்டை, ஆடுபுலி ஆட்டம் ஆகியனவும் இவர்கள் விரும்பும் பொழுதுபோக்கு விளையாட்டுகளாகும்.

- பிற சமூகமக்களைப் போன்றே பேச்சு வழக்கில் சில கொச்சைச் சொற்களைப் பேசுகின்றனர். புரோகிதம் செய்யும்பொழுது சில வடமொழிச் சொற்களையும், சில வடமொழி மந்திரங்களையும் உச்சரிக்கின்றவர்களாக உள்ளனர்.
- வள்ளுவச் சிறார்களின் பொழுபோக்குகள் பிறசமூகத்துச் சிறுவர்களின் பொழுதுபோக்குகளைவிட மாறுபட்டவையாக உள்ளன. இவர்தம் நாட்டுப்புற விளையாட்டுக்களில் சிறுசிறு மாறுபாடுகள் காணப்படுகின்றன.

# 8. முடிவுரை

❖ தமிழ்த் தொல்குடிகளுள் ஒன்றாக வாழ்ந்து கொண்டிருக்கும் வள்ளுவக்குடியின் வாழ்வியல் வழக்காறுகளை ஆராய்ந்ததில் ஆய்வின் முடிவாகப் பின்வரும் கருத்துகளைத் தொகுத்துரைக்கலாம்.

❖ தொன்மைக்காலத்தில் வள்ளுவர்கள் குறுநில மன்னர்களாகவும் இருந்துள்ளனர். நாஞ்சில் மலைப்பகுதியில் வள்ளுவநாடு என்ற நாடும் இருந்துள்ளது. வள்ளுவர்கள் பெருங்கணிகளாக (அரசவைக் கணியர்கள்) இருந்துள்ளனர். பல்லவர்களின் அரச குருக்களாகவும் இருந்துள்ளனர்.

❖ அணுக்கொள்கை, கணக்கியல், மருத்துவம், மெய்யியல் என்னும் பழைய வள்ளுவமே ஒருகாலத்தில் ஆட்சிக் கொள்கையாகவும், வாழ்வியல் நெறியாகவும் இருந்தது எனக் கருதமுடிகிறது.

❖ பிற்காலத்தில் நீதியரசர்களாகவும் இருந்துள்ள இவர்கள் மன்னரின் கீழ்த் தலைமை வகிக்கும் அதிகாரிகளாகவும், விளம்பர அதிகாரிகளாகவும், கல்வி புகட்டும் ஆசான்களாகவும் தாழ்நிலை எய்தியுள்ளனர் எனத் தெரியவருகிறது. பிற்காலத்தில் கோயில் அறங்காவலர்களாக இருந்த வள்ளுவர்கள் அந்த உரிமையையும்கூடப் படிப்படியாக இழந்துள்ளனர்.

❖ அரசியல் குமுகவியல் தலைமையையும், அதிகாரத்தையும் வள்ளுவர்கள் இழந்துவிட்ட பின்னரும் இவர்களுக்கிருந்த தனிச்சிறப்பும், தனிமதிப்பும் தொடர்ந்து இருந்து வந்துள்ளன. சில நூற்றாண்டுகளுக்கு முன்பு வரையில் பிறப்பியத்தை (பிறப்புச் சாதகம்) எழுத ஆரிய பிராமணப் பெண்கள் வள்ளுவர்களை நாடியுள்ளனர்.

❖ மூவேந்தரும் பகுத்தறிவைப் பயன்படுத்தாது பிராமணரை முற்றும் பின்பற்றியதால் கடைக்கழகக் காலத்தில் மதவியல், குமுகாயவியல், மொழியியல் என்னும் முத்துறையிலும் ஆரியம் மிக வேரூன்றியது. வள்ளுவர்களுக்கு மக்களிடையே இருந்த செல்வாக்கும் மன்னிடம் இருந்த மதிப்பும் நாளுக்குநாள் குறையத்தொடங்கின. வள்ளுவர் இனம் காலப்போக்கில் கவனிப்பார் அற்றுப் போனது.

❖ சோழர்கள் தமிழர்களை வலங்கையர், இடங்கையர் என்னும் பிறப்பு வழிச் சாதியினராகக் கூறாடினர். வடுக நாயக்கர்களின் கொடுங்கோன்மையால்

வள்ளுவர்கள் இனம் கீழ்சாதியினராகவும், தீண்டத்தகாதவர்களாகவும் தாழ்த்தப்பட்டுள்ளனர். இதுவரலாற்றில் நடைபெற்றுள்ள பெருங்கொடுமை எனத் தெரிகிறது.

❖ தங்கள் வாழ்க்கையைச் செம்மைப்படுத்திக்கொள்ள வள்ளுவர்கள் நாள், கோள் பார்த்துச் சொல்லும் பணியில் ஈடுபடலாயினர். வள்ளுவச் சாதியினர் தாம் வாழ்கின்ற ஊர்களில் நிலபிரபுத்துவ நலன்களுக்கு உகந்த வகையில் விதைத்தல், அறுவடை செய்தலுக்கு நல்லநாள் பார்த்துக் கொடுப்பதும், உடைமைச் சாதியினர் குடும்பத்தினரின் சாதகம் கணித்தல், சோதிடப் பலன் கூறுதல், திருமணத்திற்கு நாள் குறித்தல் ஆகியனவும் இவர்களின் முதன்மைத் தொழிலாகின.

❖ களப்பகுதியில் வள்ளுவர்கள் வள்ளுவ நாயனார், வள்ளுவ ஆழ்வார் என்னும் சைவ, வைணவ சமயங்கள் சார்ந்த இரு உள்ளினப் பிரிவினராக உள்ளனர். இவர்களுக்குள் தனிமொழியாகச் சில சொற்கள் பேசப்படுகின்றன. பூணூல் அணிந்துள்ளனர். பிற தாழ்த்தப்பட்ட சமூகத்தினரைத் தீண்டாராகக் கருதுகின்ற அறிவு மயங்கிய நிலையும் இவர்களிடம் காணப்படுகிறது.

❖ சிற்றூர்களில் இவர்களின் இல்லங்கள் சேரிக்கும் ஊருக்கும் இடையில் பெரும்பான்மையாகக் காணப்படுகின்றன. இவர்கள் வசிக்கும் வீதிகள் வள்ளுவர் வீதி என்ற பெயரிலேயே அனைத்துச் சிற்றூர்களிலும் காணப்படுகின்றன. இவர்கள் மாட்டிறைச்சியை உண்பதில்லை. பிற தாழ்த்தப்பட்டவரின் இல்லங்களிலும் உண்பதில்லை. பல்வேறு வகைகளில் வேறுபட்டும் தனித்தியங்கியும் வாழ்கின்ற தனிமரபு இவர்களிடம் காணப்படுகிறது.

❖ சோதிடம் நாட்டு மருத்துவம், புரோகிதம் ஆகியவற்றைத் தங்களின் குலத்தொழிலாகக் கொண்டுள்ளனர். பிற தாழ்த்தப்பட்ட சமூகத்தவர்களுக்கு மட்டுமே புரோகித குருக்களாக இருந்து சடங்குகளைச் செய்கின்ற நிலை காணப்படுகிறது. இவர்களுக்குரிய புரோகித கிராமங்களில் உள்ள சிறு கோயில்களுக்கான பூசாரிகளாகவும் இருந்து வருகின்றனர். மந்திர, சமய மருத்துவ முறைகள் வள்ளுவர்களிடம் அதிகம் காணப்படுகின்றன. இவற்றைத் தவிர

தெருக்கூத்து, மரத்தச்சு, வேளாண்மை, இன்றைய நிலையில் அரசு மற்றும் தனியார் துறை சார்ந்த தொழில்களையும் செய்து வருகின்றனர்.

❖ வள்ளுவர்கள் பெருந்தெய்வ வழிபாடுகளை உடையவர்களாகவும் நாட்டுப்புற வழக்கமான சிறுதெய்வ வழிபாடுகளையும் தொன்றுதொட்டுக் கடைபிடித்து வருகின்றவர்களாகவும் உள்ளனர்.

❖ சைவத்தையும், மாலியத்தையும் நாட்டுப்புறத் தன்மைகளுடன் பின்பற்றுகிற நிலை இவர்களிடம் காணப்படுகிறது. வள்ளுவ ஆழ்வார்கள் அனைவரும் தென்கலைப் பிரிவினராக உள்ளனர். இவர்களின் வழிபாட்டு முறைகள் நிறுவனப்பட்ட சைவம், வைணவம் ஆகிய வைதீக சமயங்களிடமிருந்து விலகிய ஒரு தனித்துவமான வழக்காறு இருந்து வருகிறது எனக் கருதமுடிகிறது. இத்தனித்துவத்தை நாட்டார் வைணவ மரபாகக் கருதலாம்.

❖ இயற்கையை வழிபடுவதும், இறந்தோரை வழிபடுவதும் இவர்களிடம் தொன்றுதொட்டுக் காணப்படுகின்றன. இவர்கள் தங்கள் ஊர்களில் சிறுசிறு பெருமாள் கோவில்களைக் கட்டி வழிபட்டு வருகின்றனர். இவர்கள் பின்பற்றும் வழிபாட்டு முறைகளிலும் தங்களின் பிறப்பு முதல் இறப்பு வரையிலான அனைத்துச் சடங்குகளுக்கும் பிராமணரைப் புரோகிதராக அமர்த்தும் வழக்கம் இல்லை. மாமன், மைத்துனர் முறையில் உள்ள வள்ளுவர்களையே புரோகிதராக அமர்த்துகின்றனர்.

❖ பிறந்த குழந்தைக்கு சாதகம் கணிப்பது, எழுதுவது, பார்ப்பது, குழந்தைப் பிறந்த நாமநட்சத்திரத்திற்கேற்பப் பெயர் சூட்டுவது, சடங்குகளுக்கு நன்னாள் பார்ப்பது, ருது சாதகம் பார்ப்பது, திருமணப் பொருத்தம் பார்ப்பது ஆகியவற்றிற்கும் வள்ளுவர்கள் பிராமணர்களை நாடுவதில்லை. அவர்களாகவே பார்த்துக் கொள்ளும் வழக்காறு காணப்படுகிறது.

❖ குழந்தைக்கு எழுதுகோலால் சேனை வைக்கின்ற வழக்கம் காணப்படுகிறது. காதுகுத்துவதற்குக்கூடத் தட்டாரை (பொற்கொல்லர்) அழைக்காத தனிமரபு வள்ளுவர்களிடம் காணப்படுகிறது. வள்ளுவர்கள் திருமணத்தின் போது மணமக்களை அரிசிக் காப்பிட்டு வாழ்த்துப் பாடலைப் பாடி வாழ்த்துகின்ற தனிமரபும் திருமணத்தின்போது இறுதியாக

சோபனப்பாடலைப் பாடுகின்ற மாறுபட்ட வழக்காறும் இன்றளவும் காணப்படுகின்றன.

- ❖ இறந்தவரின் உடலைப் பிற சமூகத்தவர் தீண்ட அனுமதிக்காத தனித்துவமான நிலை இவர்களிடம் இருந்து வருகிறது. மேலும், மஞ்சப்பத்து இடித்தல், சக்கரம் அல்லது சிவலிங்கம் எடுத்தல், அபிஷேகம் செய்தல், சக்கரம் எடுப்பவர் கருமகாரியம் செய்யும்வரை நோன்பிருத்தல், அதிகாலையில் கருமாதி செய்தல், இறந்தவர் ஆத்மா வைகுந்தம் அல்லது கயிலாயம் புகுவதை நிகழ்த்திக்காட்டுதல் ஆகியவை இவர்களின் தனிமரபுக்குரியனவாகக் காணப்படுகின்றன.

- ❖ நாலுவாசப்படிப் பாடல் என்னும் திருவித்தியானமாலையைக் கருமாதியின் போது பாடி வாழும் காலத்தில் இன்னின்ன தவறுகள் செய்தால் இன்னின் தண்டனைகள் கிடைக்கும் என்ற நீதியை மக்களுக்கு இப்பாடல் மூலம் எடுத்துக்கூறும் அறச்சிந்தனையும் கொண்ட மரபு வள்ளுவர்களிடம் காணப்படும் சிறந்ததொரு வழக்காறாகத் தொன்றுதொட்டுக் காணப்படுகிறது.

- ❖ வள்ளுவர்களில் சிலர் கதிரவனையும், சிலர் கருடனையும் வணங்கிய பின்னரே காலை உணவினை உண்பவர்களாக உள்ளனர். சோதிட நம்பிக்கைகள், சகுன நம்பிக்கைகள் இவர்களிடம் அதிகம் காணப்படுகின்றன. தாழ்த்தப்பட்ட சாதியினரில் பொருளாதார வளர்ச்சி பெற்ற சிலர் ஆரிய பிராமணர்களைப் புரோகிதர்களாக அமர்த்துவதால் வள்ளுவர்களின் புரோகிதத் தொழில் நலிவடைந்து வரும் நிலை காணப்படுகிறது.

- ❖ புராண, இதிகாசங்களைக் கேட்பதும், தெருக்கூத்துப் பார்ப்பதும், தாயக்கொட்டை விளையாடுவதும் வள்ளுவ முதியோர்களின் இன்றியமையாத பொழுதுபோக்குகளாகத் தெரிகிறது. வள்ளுவச் சிறார்களின் வழக்காறுகள் மாறுபட்டவைகளாகவும், தனித்துவமானதாகவும் காணப்படுகிறது.

❖ பிற சாதியினரைப் பற்றிய இவர்களின் மனக்கருத்துகள் பழமொழியாக இவர்களிடம் காணப்படுகின்றன. பிற சாதியினரைப் போன்றே இவர்களிடமும் பேச்சு வழக்கில் பல்வேறு கொச்சை சொற்கள் காணப்படுகின்றன.

❖ **மேலும் ஆராய்வதற்குரிய பகுதிகள்**

1. வள்ளுவர்களின் சோதிட முறைகள், நாட்டு மருத்துவ முறைகள், புரோகித முறைகள் ஆகியவற்றைத் தனித்தனிப் பொருண்மையில் ஆராயலாம்.

2. பிராமணர்களின் சோதிட முறைகளை வள்ளுவர்களின் சோதிட முறைகளோடு ஒப்பிட்டு ஆராயலாம்.

3. வள்ளுவர்களின் புரோகித முறைகளைப் பிராமணர்களின் புரோகித முறைகளோடு ஒப்பிட்டு ஆய்வு நிகழ்த்தலாம்.

# துணைநூற்பட்டியல்


1. **அயோத்திதாசப் பண்டிதர், - தீண்டாமையின் வரலாறு,**
**ரவிக்குமார்** (தொகுப்பாசிரியர்), கரிசல் பதிப்பகம்,
சென்னை, 2008.

2. **அறவாணன். க.ப., - அற இலக்கியக் களஞ்சியம்,**
தமிழ்க்கோட்டம்,
சென்னை, 2008.

3. **அறிவுநம்பி. அ, - தமிழரின் கூத்தியல்,**
சித்திரம்,
புதுச்சேரி – 2008.

4. **ஆளவந்தார். ஆர், - தமிழர் தோற்கருவிகள்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 1981.

5. **இரத்தின நாயக்கர் சன்ஸ்., - ஞானவெட்டியான்,**
(பதிப்பாசிரியர்) (மூலமும் உரையும்)
திருமகள் விலாச அச்சகம்,
சென்னை, 2012.

6. **இராகவையங்கார். மு, - ஆராய்ச்சித் தொகுதி,**
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர், 1984.

**7. இருதயராஜ். அ,** - **வழக்காறுகள் காட்டும் வாழ்வியல்,**
நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு மையம்,
பாளையங்கோட்டை, 2008.

**8. எட்கர் தர்ஸ்டன்,** - **தென்னிந்தியக் குலங்களும், குடிகளும்,**
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர், 1987.

**9. கருணாகரன். இல. அம்.,** - **வாழும் வள்ளுவம்(மாத இதழ்),**
அறக்கட்டளை வெளியீடு,
தி.நகர், சென்னை,
செப்டம்பர் - 2007.

**10. கழகப் புலவர் குழு,** **நன்னூல் காண்டிகையுரை, -**
**கழக வெளியீடு,**
சென்னை, 1982.

**11. காந்தி. க.,** - **தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும்,**
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 1980.

**12. குணா,** - **வள்ளுவத்தின் வீழ்ச்சி,**
தமிழக ஆய்வரண்,
வெங்காலூர், 2008.

13. **கௌமாரீஸ்வரி. எஸ்.,** - **ஆசாரக்கோவை,**
(பதிப்பாசிரியர்) சாரதா பதிப்பகம்,
சென்னை, 2009.

14. **சக்திவேல்.சு.,** - **நாட்டுப்புற இயல் ஆய்வு,**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை, 1983.

15. **சசிவல்லி.வி.சி.,** - **பண்டைத் தமிழர் தொழில்கள்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 1989.

16. **சண்முகம்பிள்ளை. மு.,** - **தொல்காப்பியம் பொருளதிகாரம் -**
(தொகுப்பாசிரியர்) இளம்பூரணம்,
முல்லை நிலையம்,
சிதம்பரம், 1995.

17. **சாமிநாதையர். உ.வே.,** - **என் சரித்திரம்,**
உ.வே.சா.நூலக வெளியீடு,
சென்னை, மூன்றாம் பதிப்பு – 1990.

18. **சாமிநாதையர். உ.வே.,** - **சிலப்பதிகாரம்,**
(பதிப்பாசிரியர்) தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர், 1985.

19. **சாமிநாதையர். உ.வே.,** - **நல்லுரைக் கோவை,**
உ.வே.சா.நூலக வெளியீடு,
சென்னை, எட்டாம் பதிப்பு – 1991.

**20. சாமிநாதையர். உ.வே.,** - **புறநானூறு,**
(பதிப்பாசிரியர்) தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர், 1985.

**21. சாமிநாதையர். உ.வே.,** - **பெருங்கதை,**
(உரையாசிரியர்) கமர்சியல் அச்சுக்கூடம்,
சென்னை, 1924.

**22. சாமிநாதையர். உ.வே.,** - **மணிமேகலை,**
(பதிப்பாசிரியர்) கேசரி அச்சுக்கூடம்,
சென்னை, 1931.

**23. சீத்தாராமய்யர். சா.வே.,** - **சர்வ முகூர்த்தப் பஞ்சாங்கம்,**
விக்ருதி வருடம் (2010 – 2011),
ஆர்க்காடு.

**24. சுந்தர சண்முகனார்,** - **கெடிலக்கரை நாகரிகம்,**
மெய்யப்பன் தமிழாய்வகம்,
சிதம்பரம், 2001.

**25. செந்துறை முத்து. புலவர்.,-** **ஆய கலைகள் அறுபத்து நான்கு,**
நல்வாழ்வுப் பதிப்பகம்,
சென்னை, 1978.

**26. ஞானசம்பந்தன். அ.ச.,** - **கம்பராமாயணம்**
(முதன்மைப் பதிப்பாசிரியர்) **(அயோத்தியா காண்டம்),**
கம்பன் அறநிலை,
கோயம்புத்தூர், 1994.

27. **ஞானசேகரன். தே.,** - **மக்கள் வாழ்வில் மந்திரச் சடங்குகள்,**
பார்த்திபன் பதிப்பகம்,
சென்னை, 1987.

28. **தர்மாரெட்டி,** - **திருவள்ளுவர் வேமனர் ஓர் ஒப்பாய்வு,**
திருவேங்கடன் பல்கலைக்கழகம்,
திருப்பதி, 1984.

29. **தாயம்மாள் அறவாணன்,** - **குழந்தை ஓர் இலக்கியப் பகுப்பாய்வு,**
தமிழ்க்கோட்ட வெளியீடு,
புதுச்சேரி, 1991.

30. **துபுவா. அ.பே.ஜெ.எ.,** - **இந்தியர்கள் : மதம் - பழக்கவழக்கங்கள் - நிறுவனங்கள்,**
அலைகள் வெளியீட்டகம்,
சென்னை, 2008.

31. **துரைசாமிப்பிள்ளை. சு.ஔவை.,-** **தெய்வப்புலவர் திருவள்ளுவர்,**
கழக வெளியீடு,
சென்னை, 1949.

32. **துரைசாமிப்பிள்ளை. சு.ஔவை.,-** (பதிப்பாசிரியர்) **புறநானூறு,**
உ.வே.சா.நூல் நிலையம்,
தஞ்சாவூர், 1971.

33. **தேவநேயப் பாவாணர்.ஞா.,** - **தமிழர் வரலாறு,**
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை, 1972.

**34. தேவநேயப் பாவாணர். ஞா., - ஒப்பியன் மொழிநூல்,**
திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை, 1971.

**35. தேவநேயப் பாவாணர். ஞா., - திருக்குறள் தமிழ் மரபுரை,**
நேசமணி பதிப்பகம்,
காட்டுப்பாடி விரிவு, 1969.

**36. தேவநேயப் பாவாணர். ஞா.,- பழந்தமிழர் ஆட்சி,**
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை, 1972.

**37. நச்சினார்க்கினியர், - சீவகசிந்தாமணி,**
(உரையாசிரியர்)
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர், 1986.

**38. பக்தவச்சல பாரதி. சீ, - தமிழகத்தில் நாடோடிகள்,**
சங்ககாலம் முதல் சமகாலம் வரை,
புதுவை மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்,
புதுச்சேரி – 2003.

**39. பக்தவச்சல பாரதி. சீ, - பண்பாட்டு மானிடவியல்,**
புதுவை மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்,
புதுச்சேரி – 1990.

**40. பிலவேந்திரன். ச,** - **சனங்களும் வரலாறும்,**
புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம்,
புதுச்சேரி – 2004.

**41. பைகாவ். கே.எம்.,** - **உடலியங்கியல்,**
மொழிபெயர்ப்பு,மூன்றாம் தொகுதி,
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,
சென்னை, 1972.

**42. மகாலட்சுமி. தி,** - **இலக்கியத்தில் சோதிடம்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 1996.

**43. மகாலட்சுமி. தி,** - **சோதிடவியல்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 1996.

**44. லூர்து. தே,** - **நாட்டார் வழக்காற்றியல் சில அடிப்படைகள்,**
நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு மையம்,
பாளையங்கோட்டை, 2000.

**45. வானமாமலை. நா.,** - **தமிழர் நாட்டுப்பாடல்கள்,**
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்,
சென்னை, 1964.

46. **வானமாமலை. நா,** - **முத்துபட்டன் கதை,**
மதுரைப் பல்கலைக்கழகம்,
மதுரை, 1971.

47. **விக்டர்.ம.சோ.,** - **தமிழர் சமயம்,**
நல்லோர் பதிப்பகம், மைலாப்பூர்,
சென்னை, 2003.

48. **விக்டர். ம.சோ.,** - **வானியலும் தமிழரும்,**
நல்லோர் பதிப்பகம், மைலாப்பூர்,
சென்னை, 2007.

49. **வீரமணி. கீ,** - **பெரியார் களஞ்சியம்**
**(தொகுதி நான்கு),**
பெரியார் சுயமரியாதை பிரச்சார
நிறுவன வெளியீடு,
சென்னை, 1981.

50. **ஸ்டீபன். ஞா,** - **பண்பாட்டு வேர்களைத் தேடி,**
நாட்டார் வழக்காற்றியல் ஆய்வு
மையம்,
தூயசவேரியர் கல்லூரி,
பாளையங்கோட்டை, 1999.

## அகராதிகள்


1. **அமிர்தசாகரர், - திவாகர நிகண்டு,**
(முதல் தொகுதி)
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை, 1990.

2. **அவிநாசிலிங்கம். தி.சு., - கலைக்களஞ்சியம்,**
(பதிப்பாசிரியர்)
தமிழ் வளர்ச்சிக்கழக வெளியீடு,
சென்னை, 1955.

3. **கதிரைவேற்பிள்ளை. நா., - தமிழ்மொழியகராதி,**
சாரதா பதிப்பகம்,
சென்னை, 2003.

4. **சிங்காரவேலு முதலியார். ஆ., அபிதான சிந்தாமணி,**
ஏசியன் எஜுகேஷனல் சர்வீஸ்,
புதுதில்லி,
மூன்றாவது பதிப்பு, 1983.

5. **…………… தமிழ் லெக்சிகன், -**
**தொகுதி – VI,**
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை, 1982.

6. **…………… பன்னிருபாட்டியல்,**
**கழக வெளியீடு,**
சென்னை, இரண்டாம் பதிப்பு, 1949.

**7. பாலுசாமி. நா.,** - **வாழ்வியற்களஞ்சியம்,**
(பதிப்பாசிரியர்) தொகுதி – ஐந்து,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர், 1987.

**8. வையாபுரிப்பிள்ளை. எஸ்., -** **பிங்கல நிகண்டு,** -
(பதிப்பாசிரியர்) கழக வெளியீடு,
சென்னை, 1968.

## இதழ்கள்

**1. சரவணன். வி.,** - **தமிழினி (மாதஇதழ்),**
**எஸ். இராமச்சந்திரன்,** கன்னியாகுமரி,
(கட்டுரையாளர்) செப்டம்பர், 2009.

**2. பத்மநாபன். எஸ்,** - **ஆய்வுக் களஞ்சியம் (மாத இதழ்),**
கன்னியாக்குமரி வரலாற்றுப் பண்பாட்டு
ஆய்வு மையம், நாகர்கோவில்,
அக்டோபர் - 2008.

## ஆங்கில நூல்கள்

1. **Edgar Thurstan,** - **Castes and tribes of South India,**
Vol-VII.

2. **Gustav Salomon oppert,** - **The Dravidians,**
Asian Educational Services,
New Delhi, 1998.

3. **Mega Lifco Dictionary,** - **Eng – Eng – Tamil,**
The Little flower Co.,
Chennai, 2001.

4. **Som Benegal,** - **A Panorama of theatre in India,**
Indian Council for Cultural Relations,
New Delhi, 1967.

## 1. களப்பகுதி வரைபடம்



## 2. தகவலாளி பட்டியல்

| வ. எண். | பெயர் | பாலினம் | வயது | கல்வி | சாதி | தொழில் | ஊர் | நேர்காணல் நாள் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | ஜெயராமன் | ஆண் | 40 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | சோதிடர் | ஆண்டிக்குழி | 06.01.2008 |
| 2. | சாமி. ஜனார்த்தனன் | ஆண் | 45 | 12 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | தெருக்கூத்து ஆசிரியர் | இருளக்குறிச்சி | 03.01.2008 |
| 3. | கோதண்டராமன் | ஆண் | 60 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | தெருக்கூத்து ஆசிரியர் | ஆண்டிக்குழி | 05.01.2008 |
| 4. | சின்னசாமி ஆழ்வார் | ஆண் | 65 | 9 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | சோதிடர் | ஆண்டிக்குழி | 03.01.2008 |
| 5. | இராமானுஜ ஆழ்வார் | ஆண் | 75 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | சோதிடர் - புரோகிதர் | திருவாமூர் | 08.01.2008 |
| 6. | இராமர் | ஆண் | 55 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | சோதிடர் - புரோகிதர் | திருவாமூர் | 08.01.2008 |
| 7. | சக்திவேல் | ஆண் | 59 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | சோதிடர் - புரோகிதர் | இராயர்பாளையம் | 10.01.2008 |
| 8. | வெங்கடாசலம் | ஆண் | 60 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | அரசு ஊழியர் – புரோகிதர் | ஆனத்தூர் | 12.01.2008 |
| 9. | இராமலிங்கம் | ஆண் | 62 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | தெருக்கூத்து- இசைக்கலைஞர்- புரோகிதர் | மேல்தனியாளம்பட்டு | 13.01.2008 |
| 10. | எஸ்.என். இராமச்சந்திர ஆழ்வார் | ஆண் | 75 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | சோதிடர்- புரோகிதர் | சேமக்கோட்டை | 02.03.2008 |
| 11. | எஸ்.ஆர். பாலக்கிருஷ்ணன் | ஆண் | 70 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | சோதிடர் – புரோகிதர் | சேமக்கோட்டை | 02.03.2008 |

| 12. | இரா. கலியமூர்த்தி | ஆண் | 58 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | அரசு ஊழியர் (பதிவுத்துறை) | சேமக்கோட்டை | 03.03.2008 |
|---|---|---|---|---|---|---|---|---|
| 13. | வெ. கலியமூர்த்தி | ஆண் | 60 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | காண்ட சோதிடர் | சேமக்கோட்டை | 04.03.2008 |
| 14. | கோ. தனுசுராமன் | ஆண் | 58 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | அரசு ஊழியர் (தீயணைப்புத்துறை) | சேமக்கோட்டை | 06.03.2008 |
| 15. | பூ. பூங்காவனம் | பெண் | 69 | 6 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | விவசாயக்கூலி | சேமக்கோட்டை | 08.03.2008 |
| 16. | சீ. அம்பிகா | பெண் | 61 | 5 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | விவசாயக்கூலி | சேமக்கோட்டை | 09.03.2008 |
| 17. | இரா. செல்வராஜ் | ஆண் | 65 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | கிளி சோதிடர் | சேமக்கோட்டை | 10.03.2008 |
| 18. | இரா. சீனுவாசன் | ஆண் | 63 | 9 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | கிளி சோதிடர் | சேமக்கோட்டை | 11.03.2008 |
| 19. | நடராசன் | ஆண் | 68 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ நாயனார் | தனியார் துறை | சேமக்கோட்டை | 13.03.2008 |
| 20. | ப. இராமச்சந்திரன் | ஆண் | 73 | பட்டதாரி | வள்ளுவ ஆழ்வார் | ஆசிரியர் (ஓய்வு) – சோதிடர் | எஸ். குமராபுரம் | 07.06.2008 |
| 21. | அரிதாஸ் | ஆண் | 55 | 12 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | சோதிடர் | எஸ். குமராபுரம் | 09.06.2008 |
| 22. | எஸ். இராமச்சந்திரன் | ஆண் | 69 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | புரோகிதர் | களையூர் | 09.06.2008 |
| 23. | எஸ். குப்புக்கிருஷ்ணன் | ஆண் | 72 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | சோதிடர் – புரோகிதர் | களையூர் | 09.06.2008 |
| 24. | குமார் | ஆண் | 40 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | மரத்தச்சர் (ஆசாரி) | தோட்டப்பட்டு | 12.06.2008 |
| 25. | குரு | ஆண் | 40 | 12 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | கம்பி கட்டுபவர் | தோட்டப்பட்டு | 12.06.2008 |
| 26. | செல்வம் | ஆண் | 48 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | புரோகிதர் | மருதாடு | 15.06.2008 |

| 27. | பாபு | ஆண் | 45 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | புரோகிதர் | மருதாடு | 15.06.2008 |
|---|---|---|---|---|---|---|---|---|
| 28. | இராமலிங்கம் | ஆண் | 70 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ நாயனார் | ஆசாரி | உண்ணாமலைசெட்டி சாவடி | 04.07.2008 |
| 29. | சா. சரவணன் | ஆண் | 70 | 18 ஆம் வகுப்பு | வள்ளுவ நாயனார் | ஆசாரி | உண்ணாமலைசெட்டி சாவடி | 04.07.2008 |
| 30. | ஜெகந்நாதன் | ஆண் | 48 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ நாயனார் | ஆசாரி | குண்டு உப்பளவாடி | 10.07.2008 |
| 31. | இராமதாஸ் | ஆண் | 65 | பட்டதாரி | வள்ளுவ ஆழ்வார் | ஆசிரியர் | குண்டு உப்பளவாடி | 10.07.2008 |
| 32. | கண்ணன் | ஆண் | 67 | பட்டதாரி | வள்ளுவ ஆழ்வார் | வங்கி ஊழியர் | குண்டு உப்பளவாடி | 11.07.2008 |
| 33. | இராதா | பெண் | 65 | 6 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | குடும்பத் தலைவி | குண்டு உப்பளவாடி | 12.07.2008 |
| 34. | பத்மாவதி | பெண் | 67 | 5 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | விவசாயக் கூலி | காரணப்பட்டு | 06.09.2008 |
| 35. | சீனுவாசன் | ஆண் | 45 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | புரோகிதர் | காரணப்பட்டு | 07.09.2008 |
| 36. | சக்கிரபாணி | ஆண் | 70 | தொழிற்கல்வி | வள்ளுவ ஆழ்வார் | லைன் மேன் (ஓய்வு) | மி. மண்டகப்பட்டு | 11.11.2008 |
| 37. | கருணாநிதி | ஆண் | 48 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | கட்டிட மேஸ்திரி | மி. மண்டகப்பட்டு | 11.11.2008 |
| 38. | செல்வமூர்த்தி | ஆண் | 55 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | ஊராட்சி மன்றத் தலைவர் | மி.மண்டகப்பட்டு | 17.11.2008 |
| 39. | இரா. கெஜேந்திரன் | ஆண் | 55 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | சோதிடர் – புரோகிதர் | திருமங்கலம் | 17.11.2008 |
| 40. | இராமமூர்த்தி | ஆண் | 65 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | புரோகிதர் | கண்டமங்கலம் | 18.11.2008 |
| 41. | இராதாகிருஷ்ணன் | ஆண் | 55 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | புரோகிதர் | கண்டமங்கலம் | 18.11.2008 |

| 42. | குப்புசாமி ஆழ்வார் | ஆண் | 65 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | புரோகிதர் – சோதிடர் | வீடூர் | 25.11.2008 |
|---|---|---|---|---|---|---|---|---|
| 43. | இர. தேவராஜ் | ஆண் | 70 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | சோதிடர் | விக்கிரவாண்டி | 26.11.2008 |
| 44. | வே.தா. சானகிராமன் | ஆண் | 73 | முதுகலைப் பட்டதாரி | வள்ளுவ ஆழ்வார் | ஆசிரியர் (ஓய்வு) | விக்கிரவாண்டி | 26.11.2008 |
| 45. | த. கலியமூர்த்தி | ஆண் | 65 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | அரசு ஊழியர் (ஓய்வு) – புரோகிதர் | ஒழிந்தியாபட்டு | 07.03.2009 |
| 46. | அமிர்தம் அம்மாள் | பெண் | 88 | 5 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | கோவிலுக்கு விளக்கு வைப்பவர் | இராயர்புதுப்பாக்கம் | 10.03.2009 |
| 47. | நித்திய கல்யாணி | ஆண் | 58 | 12 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | அரசு ஊழியர் | மடுகரை | 17.03.2009 |
| 48. | ரவிச்சந்திரன் | ஆண் | 45 | 12 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | புரோகிதர் | கலிதீர்த்தாள்குப்பம் | 21.03.2009 |
| 49. | இராதா | பெண் | 55 | 6 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | விவசாயக்கூலி | கலிதீர்த்தாள்குப்பம் | 21.03.2009 |
| 50. | அம்பிகா | பெண் | 50 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ நாயனார் | விவசாயக்கூலி | திருவதிகை | 05.04.2009 |
| 51. | கலியபெருமாள் | ஆண் | 69 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | அரசு ஊழியர் (ஓய்வு) - புரோகிதர் | ஆலடி | 07.07.2010 |
| 52. | கருணாகரன் | ஆண் | 41 | 12 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | அரசு ஊழியர் | ஆலடி | 07.07.2010 |
| 53. | திருப்பதி | ஆண் | 65 | 9 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | புரோகிதர் | கூ. கள்ளக்குறிச்சி | 10.07.2010 |
| 54. | குணசேகரன் | ஆண் | 50 | 12 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | சோதிடர் – புரோகிதம் | கூ. கள்ளக்குறிச்சி | 11.07.2010 |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 55. | தேவராசு | ஆண் | 85 | 6 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | சோதிடர் - மருத்துவர் - மாந்திரீகம் | கூ. கள்ளக்குறிச்சி | 11.07.2010 |
| 56. | கலியமூர்த்தி | ஆண் | 65 | 6 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | சோதிடர் - புரோகிதம் | ஆரியநத்தம் | 18.07.2010 |
| 57. | பொன்னுசாமி ஆழ்வார் | ஆண் | 75 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | அரசு ஊழியர் (ஓய்வு) - சோதிடர் | இலுப்பையூர் | 03.09.2010 |
| 58. | சுந்தரராஜன் | ஆண் | 55 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | சோதிடர் | இலுப்பையூர் | 03.09.2010 |
| 59. | பரந்தாமன் | ஆண் | 50 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | சோதிடர் | இலுப்பையூர் | 04.09.2010 |
| 60. | அழகர் | ஆண் | 68 | பட்டதாரி | வள்ளுவ ஆழ்வார் | ஆசிரியர் (ஓய்வு) | ஏம்பலம் | 05.10.2010 |
| 61. | அன்பன் | ஆண் | 61 | பட்டதாரி | வள்ளுவ ஆழ்வார் | தலைமையாசிரியர் (ஓய்வு) | ஏம்பலம் | 05.10.2010 |
| 62. | ரங்கநாதன் | ஆண் | 59 | பட்டதாரி | வள்ளுவ ஆழ்வார் | தலைமையாசிரியர் | ஏம்பலம் | 06.10.2010 |
| 63. | துரைசாமி | ஆண் | 60 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | விவசாயக்கூலி | ஏம்பலம் | 07.10.2010 |
| 64. | வேல்முருகன் | ஆண் | 55 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ நாயனார் | தையல்காரர் | வடலூர் | 08.02.2010 |
| 65. | பழனிவேல் | ஆண் | 60 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ நாயனார் | கூலி வேலை | வடலூர் | 08.12.2010 |
| 66. | அருள்குமரன் | ஆண் | 44 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | சரக்குந்து ஓட்டுநர் | வடலூர் | 13.12.2010 |
| 67. | சேஷாச்சலம் | ஆண் | 58 | 12 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | அரசு ஊழியர் | பத்திரக்கோட்டை | 13.12.2010 |
| 68. | கணேசன் | ஆண் | 47 | பட்டதாரி | வள்ளுவ நாயனார் | அரசு ஊழியர் – சோதிடர் | பாலூர் | 13.12.2010 |

| 69. | அஞ்சாலாட்சி | பெண் | 60 | 6 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | விவசாயக்கூலி | விளங்கல்பட்டு | 15.12.2010 |
|---|---|---|---|---|---|---|---|---|
| 70. | புஷ்பா | பெண் | 50 | 18 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | விவசாயக்கூலி | வடுகப்பாளையம் | 16.12.2010 |
| 71. | ராமலிங்கம் | ஆண் | 53 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | விவசாயக்கூலி | வடுகப்பாளையம் | 16.12.2010 |
| 72. | வேலாயுதம் | ஆண் | 50 | 10 ஆம் வகுப்பு | செட்டியார் | மளிகை வியாபாரம் | சேமக்கோட்டை | 04.02.2011 |
| 73. | குப்பநாதன் | ஆண் | 53 | 10 ஆம் வகுப்பு | செட்டியார் | உப்பு வியாபாரம் | சேமக்கோட்டை | 05.02.2011 |
| 74. | இராமலிங்கம் | ஆண் | 57 | 8 ஆம் வகுப்பு | படையாட்சி | விவசாயம் | சேமக்கோட்டை | 05.02.2011 |
| 75. | இராஜாராமன் | ஆண் | 58 | 8 ஆம் வகுப்பு | பறையர் | ஊராட்சி மன்றத் தலைவர் | சேமக்கோட்டை | 05.02.2011 |
| 76. | சிங்காரம் | ஆண் | 69 | 9 ஆம் வகுப்பு | பறையர் | அரசு ஊழியர் (ஓய்வு) | சேமக்கோட்டை | 05.02.2011 |
| 77. | செல்வசிங் | ஆண் | 70 | 8 ஆம் வகுப்பு | நாடார் | மளிகைக்கடை | எஸ். ஏரிப்பாளையம் | 08.02.2011 |
| 78. | பச்சைக்கிளி | பெண் | 63 | 3 ஆம் வகுப்பு | நாடார் | குடும்பத்தலைவி | எஸ். ஏரிப்பாளையம் | 08.02.2011 |
| 79. | குருமூர்த்தி | ஆண் | 65 | 6 ஆம் வகுப்பு | படையாட்சி | தேநீர்க்கடை | எஸ். ஏரிப்பாளையம் | 12.02.2011 |
| 80. | பாஞ்சாலி | பெண் | 64 | 3 ஆம் வகுப்பு | படையாட்சி | விவசாயம் | எஸ். ஏரிப்பாளையம் | 12.02.2011 |
| 81. | கிருஷ்ணமூர்த்தி | ஆண் | 40 | பட்டதாரி | பறையர் | விவசாயம் | இராயர்பாளையம் | 15.04.2011 |
| 82. | பத்மநாபன் | ஆண் | 41 | பட்டதாரி | பறையர் | ஆசிரியர் | எலந்தம்பட்டு | 17.04.2011 |
| 83. | குணசேகரன் | ஆண் | 43 | 12 ஆம் வகுப்பு | பறையர் | செங்கல் சூலை | சிறுவத்தூர் | 05.06.2011 |
| 84. | பாண்டுரங்கன் | ஆண் | 49 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | புரோகிதம் | எல்.என்.புரம் | 06.06.2011 |

| 85. | பூ. லோகநாதன் | ஆண் | 50 | பட்டதாரி | வள்ளுவ ஆழ்வார் | வழக்கறிஞர் | பண்ருட்டி | 07.06.2011 |
|---|---|---|---|---|---|---|---|---|
| 86. | பக்கிரி | ஆண் | 53 | 6 ஆம் வகுப்பு | பறையர் | தவில்வித்வான் | களையூர் | 13.06.2011 |
| 87. | அழகப்பன் | ஆண் | 67 | 8 ஆம் வகுப்பு | பறையர் | மீன்வியாபாரி | களையூர் | 13.06.2011 |
| 88. | பெருமாள் | ஆண் | 50 | 12 ஆம் வகுப்பு | கவுண்டர் | அரசுப்பணி | களையூர் | 14.06.2011 |
| 89. | பாபு | ஆண் | 55 | 10 ஆம் வகுப்பு | நாயுடு | விவசாயம் | திருப்பணம்பாக்கம் | 15.06.2011 |
| 90. | இராமச்சந்திரன் | ஆண் | 65 | 10 ஆம் வகுப்பு | பறையர் | விவசாயம் | ஆண்டிக்குழி | 07.07.2011 |
| 91. | சந்திரா | பெண் | 55 | படிக்கவில்லை | வள்ளுவ ஆழ்வார் | விவசாயக்கூலி | ஆண்டிக்குழி | 08.07.2011 |
| 92. | அருந்தாமரை | ஆண் | 60 | படிக்கவில்லை | வள்ளுவ ஆழ்வார் | விவசாயக்கூலி | ஆலடி | 09.07.2011 |
| 93. | கலியராமானுஜ தேசிக தாசன் | ஆண் | 70 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | சோதிடர் | ஆண்டிக்குழி | 08.07.2011 |
| 94. | கலியமூர்த்தி | ஆண் | 62 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | விவசாயம் | வள்ளுவன்பேட் (பொறையூர்) | 14.07.2011 |
| 95. | பாஸ்கரன் | ஆண் | 35 | முனைவர்பட்ட ஆய்வாளர் | வள்ளுவ நாயனார் | படித்தல் | வள்ளுவன்பேட் (பொறையூர்) | 14.07.2011 |
| 96. | முருகன் | ஆண் | 40 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | தனியார் நிறுவனப் பணி | காரைக்காடு | 04.02.2012 |
| 97. | ஜெகவள்ளி | பெண் | 38 | 12 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | குடும்பத் தலைவி | காரைக்காடு | 04.02.2012 |
| 98. | சங்கு சக்கர ஆழ்வார் | ஆண் | 70 | தொழிற்கல்வி | வள்ளுவ ஆழ்வார் | N.L.C (ஓய்வு) | பண்ருட்டி | 08.02.2012 |
| 99. | இராமானுஜம் | ஆண் | 58 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | சோதிடர் | செறுவல் | 15.03.2012 |

| 100. | பச்சைமுத்து | ஆண் | 65 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | நிலக்கிழார் | செறுவல் | 15.03.2012 |
|---|---|---|---|---|---|---|---|---|
| 101. | பத்மநாபன் | ஆண் | 45 | பட்டதாரி | வள்ளுவ ஆழ்வார் | பொறியாளர் | திருவதிகை | 19.03.2012 |
| 102. | முருகன் | ஆண் | 52 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ நாயனார் | கட்டிட மேஸ்திரி | காலாப்பட்டு | 06.04.2012 |
| 103. | தெய்வநாயகம் | ஆண் | 65 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | அரசு ஊழியர் (ஓய்வு) | காலாப்பட்டு | 08.04.2012 |
| 104. | உத்தண்டி | ஆண் | 70 | 6 ஆம் வகுப்பு | வள்ளுவ ஆழ்வார் | வேலை செய்யவில்லை | காலாப்பட்டு | 10.04.2012 |
| 105. | விஜயன் | ஆண் | 55 | பட்டதாரி | வள்ளுவ ஆழ்வார் | அரசுப்பணி | வில்லியனூர் | 02.05.2012 |
| 106. | தேவிகா | பெண் | 50 | 8 ஆம் வகுப்பு | வள்ளுவ நாயனார் | கூலிவேலை | வேல்ராம்பட்டு | 06.05.2012 |
| 107. | நரசிம்மன் | ஆண் | 55 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ நாயனார் | மரத்தச்சர் | வேல்ராம்பட்டு | 06.05.2012 |
| 108. | முருகன் | ஆண் | 49 | 10 ஆம் வகுப்பு | வள்ளுவ நாயனார் | மரத்தச்சர் | வேல்ராம்பட்டு | 07.05.2012 |

# 3. புகைப்படங்கள்



குல தெய்வத்திற்குப் படைத்துக் காதிற்குக் குறி வைத்தல்



வள்ளுவப் புரோகிதர் காது குத்துதல்



மஞ்சள் நீராட்டுச் சடங்கில் நலங்கு வைத்தல்



மஞ்சள் நீராட்டில் தாய்மாமன் சீர் செய்தல்



வீடு குடிபுகுதலில் காராம் பசுவிற்குப் பச்சரிசி, வெல்லம் கொடுத்தல்



வள்ளுவ ஆழ்வார் நீராடியபின் திருநாமம் இடுதல்



கணித சோதிடம், சாதகம் எழுதுதல்



காண்ட சோதிடம் பார்த்தல்



கிளி சோதிடம் பார்க்கப் புறப்படுதல்



நாட்டு வைத்தியத்திற்கு மூலிகைகளைப் பறித்தல்




**வள்ளுவ சமாவினரின் தெருக்கூத்தில் திரை பிடித்தல்**



**வள்ளுவ நாடக ஆசிரியர் தெருக்கூத்து ஆடுதல்**



குல தெய்வத்திற்குப் பொங்கல் வைத்தல்



வள்ளுவர்களின் சிறு பெருமாள் கோவில்



வள்ளுவர்களால் பராமரிக்கப்படும் சிறு அம்மன் கோவில்



ஆஞ்சநேயர் சிலை (இறந்த குரங்கின் சமாதி)



தாயக்கட்டம்



வள்ளுவர்களின் இல்லத்தில் உள்ள துளசிமாடம்



கருமகாரியச் சடங்கில் காணப்படும் நான்கு வாசப்படி



கருமகாரியத்தில் எக்கியம் வளர்த்து தர்ப்பனம் கொடுத்தல்



சிறுதெய்வக் கோவிலில் பூசாரியாக வள்ளுவர்



வள்ளுவச் சோதிடர் பனையோலைகளில் எழுதிய சாதகக் குறிப்பு



தெருக்கூத்தில் வள்ளுவ இசைக் கலைஞர் (மத்தளக்காரர்)



தெருக்கூத்தில் வள்ளுவச் சிறுவன் பயிற்சி பெறுதல்



வள்ளுவ சமாவில் பங்கேற்ற வன்னிய கூத்துக் கலைஞர்கள்



வேடம் கலைத்த வன்னிய, வள்ளுவ கூத்துக் கலைஞர்கள்




வள்ளுவரின் மந்திராலய விளம்பரப் பலகை



மந்திராலயத்தில் அபிஷேகம் செய்யும் வள்ளுவர்



கிளி சோதிடம் பார்க்கப் பயன்படுத்தும் கிளிப்பெட்டி



வள்ளுவர் இல்லத்தில் பஞ்சாங்கம் படைத்தல் - தமிழ்ப் புத்தாண்டு



வள்ளுவர் இல்லங்களில் வழிபடப்படும் துளசி மாடம்



இறப்புச் சடங்கில் சக்கரம் கட்டப் பயன்படுத்தும் பூலாக் குச்சி



கருமாதியில் மாவிலக்கு எடுத்தலும் திரைப் பிடித்தலும்



கருமாதியில் தலை கட்டுதல்



வள்ளுவர் இசைக் கருவிகள் - தப்பு, சேமக்கலம்



சாதகம் எழுத தாலிப் பனையோலையைப் பக்குவப்படுத்துதல்

# 4. வள்ளுவர்கள் வழக்கமாகப் பாடும் பாடல்கள்

## கருடப்பத்து

1. ஓம் பூரணனே பதினாறுதிங்கள் சேறும் பொருந்தியே யருக்கன் பதினெட்டுஞ் சேரும், காரணனே கருமுகில் பொன்மேனிசேருங் கருணைபெறு மஷ்டாட்சரங் கலந்து வாழும், வாரணனே லட்சுமியோடெட்டுஞ்சேரும், மதிமுகம்போல் நின்றிலங்கு மாயாநேயா ஆரணனே ரகுராமா கெருடன் மீதில் அன்புடனே யேறிவந் தருள் செய்வாயே.

2. மந்திரமோ அஷ்டதித்து மெட்டுஞ் சேரும், வாழ்கிரக மொன்பதுமே வந்து சேரும், கந்திருவர் கணநாத ராசிவர்க்கம் கலைக்கியான நால்வேதங் கலந்து வாழும், நந்தி முதல் தேவர்களுங் கவன யோகம் நமஸ்கரித் துன் பாதம் நாளும் போற்ற, அந்தரமாய் நிறைந்திருக்குங் கெருடன் மீதில் அன்புடனேயேறி வந்தருள் செய்வாயே.

3. மூலமுதலோரெழுத்து நீர்தானாகும் மூன்றெழுத்து மைந்தெழுந்து மொழியலாமோ, சீலமுதல் ஓம் - அங் - உங்-மங்-றிங் கென்றே சிவனுடைய திருநாமம் நீர்தானாகும், காலமுதல் ஓம்-அங்-உங்-மங்- றிங் கென்றே கருணைபெரு மிவ்வெழுத்து நீர்தானாகும். ஆலவிஷங்கை யேந்துங் கெருடன்மீதில் அன்புடனே யேறிவந்தருள் செய்வாயே.

4. நவ்வென்றும் கிலியென்றும் ஓம்சிவாயமென்றும் நமநம சிவசிவ ராராவென்றும், சவ்வென்றும் ஓங்கார ரீங்காரமாகித் தவமுடைய விவ்வெழுத்தும் நீர் தானாகும். ஒவ்வொன்றும் ஓம் நமோ நாராயணா வென்று உன்பாத முச்சரித் துகந்து போற்ற, அவ்வென்று ரகுராமா கெருடன்மீதில் அன்புடனே யேறி வந்தருள் செய்வாயே.

5. உதிக்கின்ற சிவசொரூப முனக்கே யாகும் ஓம் - அவ்வும் - உவ்வுங்கிலியு மென்றே, பதிக்கிசைந்த ஐந்தெழுத்தை வெளியில்விட்டே பச்சை முகில்மேனியனே பணிந்தே னுன்னை, விதிக்கிசைந்த மெய்பொருளே அரி கோவிந்தா, விளக்கொளி போல் மெய்த்தவமே விரும்பித்தாதா, அதற்கிசைந்த நடம்புரியும் கெருடன்மீதில் அன்புடனே யேறிவந்தருள் செய்வாயே.

6. வேதமுதலா யிருந்த சிங்கரூபம் விளங்குகின்ற விரணியனை வதையேசெய்தாய் பூதமுதலாம் பிறவும் புண்ணியநேயா புகழ்ந்தவர்க்குத் துணைவருவா யசோதைபுத்ரா, நாதமுதல் விந்துவா யுயிருக்கெல்லாம் நயம் பெறவே நிறைந்திருக்கும் வாத பிரமயாதவன் போல் நிறைந்திருக்கும் கருடன் மீதில் அன்புடனே யேறிவந்தருள் செய்வாயே.

7. முக்கோண நாற்கோண மொழிந்தைங் கோணமுச்சுடரே யறுகோண மெண்கோணமாகும். சட்கோண நாற்பத்து மூன்று கோணம் தந்திரமுஞ் சிதம்பரமுஞ் சகலசித்தும், இக்கோணமிது முதலாய் வகாரமட்டும் இறையவனாய்த் தானிருந்து ரட்சித்தருளும், அக்கோணமீதிருந்து கெருடன் மீதில் அன்புடனே யேறிவந்தருள் செய்வாயே.

8. பச்சை முகில் மேனியனே யுனக்கே யிந்தப் பார்தனிலே பத்தவதாரமுண்டு, மச்சமென்றும் கூர்மமென்றும் வராக மென்றும், வாமனென்றும் ராமனென்றும் பவுத்தனென்றும், துஷ்டரையடக்க மோகினி வேடங்கொண்டவராய்த் தோன்றினாயுன்சொரூப மெல்லாம் அறிவாருண்டோ, அச்சந்தீர்த் தெனையாளக் கெருடன்மீதில் அன்புடனே யேறிவந்தருள் செய்வாயே.

9. வேதியனாய்த் தோன்றிவந்தாய் மாயலிக்கு விண்ணவர்க்காய், நரசிங்கரூபமாய்ச், சாதியிலே ராகவனாய்க் கிருஷ்ணனாகத் தானுதித்து த்வந்திருந்தாய் தரணி வாழ்க, சோதனைகள் பார்த்திடுவோர் துதிப்போர் தம்மை துஷ்டரையும் வதை செய்துலோகமாள்வாய், ஆதிமுதலோரெழுத்தே நீகெருடன் மீதில் அன்புடனே யேறிவந்தருள் செய்வாயே.

10. மாயவனே ரகுராமா அருகேவாவா வஞ்சனைகள் பறந்தோட நெஞ்சில் வாவா, காயாம்பூ நிறமுடனே கனவில்வாவா கருமுகில் மேனியனே என் கருத்தில் வாவா, நாயகனே யென்னாவிலிருக்க வாவா நாள்தோறும் முன்பாதந் துதிக்க வாவா ஆயர்குலத்துதித்தவனே கெருடன்மீதில் அன்புடனே யேறிவந்தருள் செய்வாயே.

11. முப்புரத்தை யெரித்தவனே யிப்போ வாவா முகில் நிறத்தவனே ஜகநாதா முன்னே வா வா எப்பொழுதுந் துதிப்பவர் பங்கில் வாவா ஏழைப் பங்கிலிருப்பவனே யிறங்கி வாவா, ஒப்பிலா மணிவிளக்கே யொளிபோல் வாவா, ஓம் நமோ நாராயணா வுகந்து வாவா, அப்பனே ரகுராமா கெருடன் மீதில் அன்புடனே யேறிவந்தருள் செய்வாயே.

12. துளபமணிமார் பழகா சுகத்தைத் தாதா சுருதியே மெய்பொருளே வரத்தைத்தாதா களபகஸ்தூரியனே கடாட்சந் தாதா, கம்சனை வென்றவனே கருணை தாதா, பழம் பொருளே சிவ சோதி பாக்கியந்தாதா பத்தி முத்தி சித்தி செய்யவுன் பாதந்தாதா, அளவில்லா மெய்ப்பொருளே கெருடன்மீதில் அன்புடனே யேறிவந்தருள் செய்வாயே.

## ஸ்ரீ ராமர் பதிகம்

1. சீர்மேவு மாழ்வார்கள் பன்னிருவ ருன் புகழ்
செப்பவும் ராம ஜெயமே! திருவடிக் கண்பராய்ச்
செல்வமு முத்தியுஞ் சித்திதரும் ராம ஜெயமே!
கார் மேகவண்ணனே யென்ற திரௌபதையை முன்
காத்திட்ட ராமஜெயமே!கரி யாதி மூலமென் றோல
மிட முதலையைக் கண்டித்த ராமஜெயமே! பார்மீதி
லுன்பாத தூளிபட் டெழுந்தகலி பரிவான ராம
ஜெயமே! பாங்கான வேடன் மரா மரா வெனப்
பதவி புரிந்திட்ட ராமஜெயமே! ஆர்தானுரை
க்கவரு வாருத்தனாமத்தை யனு தினமும் ராம
ஜெயமே! ஐயனே யெனை யாளுமெய்யனே
ஸ்ரீமதே ராமாநுஜாய நமவே.

2. விஞ்சுகா ரணியவன ரிஷிகளு க்காதரவுமே
விடும் ராமஜெயமே! மேலான தசரதன் மைந்தனாய்ப்
புவிதனில் விரைந்திடும் ராமஜெயமே! செஞ்சொன் மொழி
ஜெனகராஜன் வில்லொடித்து ஜெயம் பெற்ற ராமஜெயமே!
சீதைக் கிரண்டு வரங்கொடுத்துமே யயோத்தியில்சீர்
பெற்ற ராமஜெயமே, தஞ்சமென்றனுமன்றனக்கு
சிரஞ்சீவி தந்திட்ட ராமஜெயமே! தந்தைக் குரைத்த சொல்
வழுவாது தாரணியில் தரித்தருளும் ராமஜெயமே!
அஞ்சலென் றடியேனை யாதரித் துன்பாத மருள் செயும்
ராமஜெயமே! ஐயனே யெனை யாளுமெய்யனே
ஸ்ரீ மதே ராமாநுஜாய நமவே.

3. விண்ணொளிய தாகவே நந்தகோபன் மனையில் விளையாடும் ராமஜெயமே, வில்விஜயனுக்குப்பகவத் கீதையோதியே வெற்றி தரும் ராமஜெயமே, கண்ணொளிய தாகவே யன்புடன் கோவுகளைக் காத்ததும் ராமஜெயமே!
கஞ்சனை வதைத்துடல் கிழித்தெறிந்தனைவர்க்குங்
காட்சிதரும் ராமஜெயமே
கன்றென கரனைப் பாய்ந்து குடலைக் கிழித்து
மறை கொண்டுவரும் ராமஜெயமே
கொற்றவன் தசரதன் பெற்றசீர் மைந்தனே
கோவிந்த ராமஜெயமே
அண்ணலே யுனது திருவடியார்கள்
பங்கினிலமர்ந்தருளும் ராமஜெயமே
ஐயனே யெனையாளு மெய்யனே
ஸ்ரீ மதே ராமானுஜாய நமவே.

4. உற்றமிதிலைப்பதியில் வில்லி ரண்டாகவே
யொடித்தது ராமஜெயமே
உம்பர்தொழு மங்கையை யுணர்ந்து
திருமந்திர முவந்தருளும் ராமஜெயமே
கொற்றவர்கள் கண்டுதொழ பரசுராமன் கையில்
கொண்டதும் ராமஜெயமே
கோதண்ட வாள்கதை சங்குசக்ராயுத
கோபால ராமஜெயமே
மெத்தவரு மூலபல மத்தனையுமே கொன்று
வெற்றிபெறும் ராமஜெயமே
மெலிவுற்ற சுக்ரீவனுக்காக
வாலியை வீழ்வித்த ராமஜெயமே,
அத்தனே யெனையாளுங் சுத்தனே
மெய்ஞ்ஞான மருள் புரியும் ராமஜெயமே
ஐயனே யெனையாளு மெய்யனே
ஸ்ரீ மதே ராமானுஜாய நமவே.

5. சோதியே யென்று மறைவேதியர்களோதவுஞ்
சொல்லரிய ராமஜெயமே
சோம்புடனே வந்த விபீஷணன்
குறைதீர்க்கத் தோன்றிடும் ராமஜெயமே
ஊதிய குழலினாலே கனத்தனவிலே
யுகந்ததும் ராமஜெயமே
உயர்கருடன் மீதினிலிலட்சமி சமேதனா
யுலாவிவரும் ராமஜெயமே
நீதியே வழுவாமல் அஷ்டாட்சரப்
பொருளில் நின்றது ராமஜெயமே
நித்தனா யத்தனாய்ச் சுத்தனாய்
வைகுந்த நிலைகொண்ட ராமஜெயமே
ஆதியே நின்னாம மோதுவோர்க்கெந்நாளு
மருள்புரியும் ராமஜெயமே
ஐயனே யெனையாளு மெய்யனே
ஸ்ரீ மதே ராமாநுஜாய நமவே.

6. மண்டலம் புகழவே வாசுதேவன்
மைந்தனாய் வந்தருளும் ராமஜெயமே.
மாயாவதாரமாய் கோபஸ்திரீமா
ரெலாமயல்பூண்ட ராமஜெயமே
விண்டலம்புகழ் திருப்பதிகனூற் றெட்டினும்
விளங்கினதும் ராமஜெயமே
வேதவேதாந்த பரிபூரண தயாபர
மெய்ஞ்ஞான ராமஜெயமே
கொண்டல்மணி வண்ணனாய்ப் பாற்கடலிலே
பள்ளி கொண்டதும் ராமஜெயமே
கோடானு கோடிபேர் பல்லாண்டு கூறியே
கொண்டாடும் ராமஜெயமே
அண்டர்தினமே தொழும் புண்டரீக பாதனே
யரும்பொருளும் ராமஜெயமே
ஐயனே யெனையாளு மெய்யனே
ஸ்ரீ மதே ராமாநுஜாய நமவே.

7. முப்பத்து முக்கோடி தேவரு முனிவரும்
மொழிகின்ற ராமஜெயமே
மூவரும் ராமஜெயமே யெனவுரைக்க
நன்முத்திதரும் ராமஜெயமே
செப்புமந்திரமெலாம் ராமஜெயமே
மார்பில் திருவளரும் ராமஜெயமே
சீர்கொண்ட ராமஜெய மாரிகண்டு
பணிகுவார் சித்திரமொளி ராமஜெயமே
ஒப்பரிய ராமஜெய மெய்ப் பொருளும்
ராமஜெயம் ஓதரிய ராமஜெயமே
உட்சதரும் ராமஜெயம் பட்சதரும்
ராமஜெயம் ஓங்கார ராமஜெயமே
அப்பனே ராமஜெயமன்று துதிசெய்யவு
மன்புதரும் ராமஜெயமே
ஐயனே யெனையாளு மெய்யனே
ஸ்ரீ மதே ராமாநுஜாய நமவே.

8. சத்தியும் ராமஜெயமூர்த்தியும்
ராமஜெயஞ் சர்வமும் ராமஜெயமே
சாத்திரமும் ராமஜெயம் தோத்திரமு மிராமஜெயஞ்
சதுர்வேத மிராமஜெயமே,
பத்தியும் ராமஜெயம் சித்தியும்
ராமஜெயம் பதவியும் ராமஜெயமே
பக்தர்தொழும் ராமஜெயம் சித்தர்தொழும்
ராமஜெயம் பலவிதமும் ராமஜெயமே
வெற்றியும் ராமஜெயம் புத்தியும் ராமஜெயம்
மெய்ப்பொருளும் ராமஜெயமே,
வேள்வியும் ராமஜெயம் ஆவியும் ராமஜெயம்
மேல்வீடும் ராமஜெயமே
அத்தியின் மேல்பவனிவரும் நித்திய கல்யாணனே
ஆனந்த ராமஜெயமே
ஐயனே யெனையாளு மெய்யனே
ஸ்ரீ மதே ராமாநுஜாய நமவே.

9. பாடவறியேன் ராமஜெயமென்று
நின்புகழ் பகரவறியேன் ராமஜெயமே
பக்தியாய் ராமஜெயமென்றனது
பாதமலர் பணியறியேன் ராமஜெயமே,
தேடவறியே னின்னை ராமஜெயமே
தேவருக்கு முனிவர்க்கும்
யாவருக்கு மரிதான
தேனமுதே ராமஜெயமே
நாடவறியே னின்னை ராமஜெயமே
யெனநவிலவறியேன் ராமஜெயமே,
உனக்கடிமை யானே னெனக்குகதி
நல்குவாய் ராமஜெயமே,
ஆடரவ முண்டபல கோடி பேருண்ட
பொருளானந்த ராமஜெயமே,
ஐயனே எனையாளு மெய்யனே
ஸ்ரீ மதே ராமாநுஜாய நமவே.

10. விரிவாய கண்டபரிபூரணமுமாய் எங்கும்
விளையாடுகின்ற ஜோதி
விண்ணவர்க் கமுதளித்த வண்ணலே
உன்புகழ் விளம்புதற் கரிதுகண்டாய்,
தெரியாமல் நாயேனிடர்க் கடலிலே மூழ்கி
சிந்தைமிக நொந்துருகினேன்
தேவாதி தேவனே வைகுந்தவாசனே
செந்தாமரைக் கண்ணனே
பரிவான உனது திருவடியே
எனக்கருதி பரமபுருஷா
உனக்குப் பாரமோ துயர்களைய நேரமோ
விவ்வேளை பக்ஷம்வைத்தடியேன் மீதில்
அரியே நமோ வேத நாராயணா
கிருபை அருள்புரியும் ராமஜெயமே,
ஐயனே யெனையாளு மெய்யனே
ஸ்ரீ மதே ராமாநுஜாய நமவே.

11. சீர்கொண்ட ராமஜெய மென்றுதிரு
மந்திரஞ் செபிக்கவறியாம னாயேன்,
செப்பினேன் ராமஜெய மப்பனே
நூற்றெட்டுத் திருநாம மிராமஜெயமே,
நீர்கொண்ட பாதமிசை மலர்கொண்டு
சாத்தியே நித்தமு மிராமஜெயமே
நெஞ்சினி லிராமஜெய மந்திரமு
வந்தருளும் நீங்காமல் ராமஜெயமே
கார்கொண்ட திருமேனி ராமஜெயமே
யென்னைக் காத்தருளும் ராமஜெயமே
காதலால் ராமஜெய மேவென்று
நம்பினேன் காத்தனே ராமஜெயமே
ஆர்கண்டு மறியாதுமூல மந்திரமான
வாதியே ராமஜெயமே
ஐயனே யெனையாளு மெய்யனே
ஸ்ரீ மதே ராமாநுஜாய நமவே.

## ஸ்ரீ ராமர் தோத்திரம்

1. காயாமரத்தின் கனியாகி
கனியிற் கொட்டையுள்ளாட
தாயா ஈரேழுலகுக்குத் தந்தையுமான
தயாபரனே
ஆயமறை நூல்தனை வகுத்தவனே
யுந்த னடைக்கலங்காண்
பேயாயெங்கள் பெருமானே
பித்தா யெனைநீ ஆளாயோ.

2. அரவம் பணியா யணிவோனே வரனே
அடியார்க் கெளியோனே
மருவின் கொழுந்தின் வாசனைபோல்
மாயா மருளா மகதேவா
குருவைச் சீடன் தனைத் தேடி

குடிகொண்டு உளத்திலிருப்போனே
இரவும் பகலுமுனைப் புகழ்வேன்
ஈசா எனைநீ ஆளாயோ.

3. மட்டார் குழலிதனைக் கூடி
மாயா வயிற்றுக்கு இரைதேடி
பட்டாங்கடித்துப் பரஞ்சோதி
பாதம் காண வேணுமென்ற
கட்டாச் சுரபி கன்றதுபோல்
காசினி எங்குந்திரிந்து அடியேன்
எட்டாக் கொம்பை ஒட்டி நின்றேன்
ஈசா எனைநீ ஆளாயோ.

4. வனக்குன்றெடுத்து வளர்த்த பெண்ணை
வைத்தாய் உந்தன் இடப்பாகம்
சினக்கும் புலித்தோல் தரித்தோனே
சிவனே எங்கள் பெருமானே
நினைக்கும் பொழுது அடியேன்முன்
நிமலா வந்து நில்லாயோ
எனக்கும் உனக்கும் போகா
ஈசா எனைநீ ஆளாயோ.

5. கொல்லுங் களிறை உரித்தோனே
குடிகொண்டுளத்தி லிருப்போனே
செல்லுந் தளத்தில் இருந்தென்ன
சிவனேயடியேன் படமாட்டேன்
அல்லும் பகலும் உன்னைப் புகழ்வேன்
ஐயா உந்தன் அடைக்கலங்காண்
இல்லும் பிறப்புமினி வேண்டேன்
ஈசா எனைநீ ஆளாயோ.

6. வருவதும் போவதும் இனிவேண்டேன்
வாழ்வும் வேண்டேன் புவிவேண்டேன்
தருவதெனக்கு உன்பாதஞ்
சர்வ ஜீவதயாபரனே
குருவுபதேசம் நீ தந்து
குடிகொண்டுளத்தி லிருந்தடியே
அருவினை அறுத்தே எனையாண்டவனே
எளியேன் முன் நீவாரோயோ.

7. நில்லாவாழ்வைச் சதமென்று
நெறியான் அடக்க மாட்டால்
நல்லார் பொல்லார் என்றறியாமல்
நமன்போல் நடுங்கித் திரிந்தாலும்
அல்லாக் குழலா ளுமைபாகா
வரனே யடியார்க் கெளியோனே
எல்லாம் பொறுக்கப் பாரமுனக்கே
ஈசா எனைநீ ஆளாயோ.

8. பொங்கு கடல் சூழுலகமெங்கும்
புவியிலேழு புவனமெல்லாம்
எங்கும் உந்தன் ஒளியன்றோ
இறைவா எங்கள் பெருமானே
அங்கம் தளர்ந்து மிக மெலிந்து
வடியேன் வயிற்றுக்கு இரைதேடி
எங்குந்திரிந்து உழலாமல்
ஈசா எனைநீ ஆளாயோ.

9. பொய்யும் மெய்யும் தானுரைத்துப்
புவிமேல் வாழ்வைச் சதமென்று
கையுஞ் சலித்துக் கால்சலித்து
கர்த்தா வுன்றன் செயலன்றோ
செய்யும் தொழிலையும் மெய்யென்று
சிவனே அடியேன் பாடுவானேன்

மெய்யுஞ் சிலையான் தனையெரித்த
ஈசா எனைநீ ஆளாயோ.

10. நெருப்போவுந்தன் திருமேனி
நீறோ பூசித் திரிவதல்லால்
பொருப் போவுந்த னிருப்பிடந்தான்
புவியீரேழு புவனமன்றோ
தருப்போல் கிளைத்துத் தழைத்து நின்றாய்
சகல சீவசெந்துக்குள்ளே
இருப்பா யெந்தனுளந் தனிலே
ஈசா எனைநீ ஆளாயோ.

11. மங்குமனித ரெலும்பை யெல்லா
மார்மேல் நிரையப் பூண்டுகொண்டு
அங்கம் வளர்க்கப்படும் பாடு
யார் தானறியப் போகிறார்கள்
சங்குகரத்தில் மழுமானுந்
தரித்து சூலம் பிடித்தெதிரே
எங்கும் திரிந்து உழலாமல்
ஈசா எனைநீ ஆளாயோ.

12. கல்லாதவனாய் இருந்தாலும்
கனத்த பாவஞ் செய்தாலும்
பொல்லாதவனா இருந்தாலும்
புலையுங் கொலையுஞ் செய்தாலுஞ்
செல்லா வாசல் தனைச் சென்று
சிவனே உன்னை மறந்தாலும்
எல்லாம் பொறுக்கக் கடனுனக்கே
ஈசா எனைநீ ஆளாயோ.

13. பாடுவேன் பாடுபடச் சொன்னால்
பாரஞ் சுமக்கப் பாரமுனக்கே
விடுவேன் ஆசை விடச்சொன்னால்

விதியின் பயன் தன் பயனன்றோ
சுடுவேன் பாவந் தனையின்று
சுடரே உந்தன் ஒளியாலே
இடுவேன் வழக்கு நானுன்னை
ஈசா எனைநீ ஆளாயோ.

பூதலத்தை யோரடி அளந்த ரூபமானபொற்
பாததாமரைச்சரண்பணிந்து பூசை செய்குவேன்
மாதவாகோவிந்தாஹரிகேசவாநாராயணா
நாதகீதவேதமந்த்ர ராமராமராமனே!

சூகரத்தின் வடிவெடுத்த சுந்தரா சௌந்தரா
ஏகலோகநாயகா நீயெங்குமாய் நிறைந்தவா
மேகமா யளாவிநின்ற வேதஞானதேசிகா
நாகமீதில் மேவுகின்ற ராமராமராமனே!

காரணா தாமோதரா கரியநீலவண்ணனே
பூரணா பயோதரா புராதனா நிராதனா
வாரணாதிமூலமென்ற போதுவந்த வாமனா
நாரணா யசோதைபுத்ர ராமராமராமனே!

வீரசிம்ஹ உக்ரமுற்ற விஜயன்மீதுதசரதன்
பாரின்மீது மைந்தனாகவந்த பஞ்சவர்சகாயனே
பூரணா க்ருபாகரா புதியதூணில்வந்துமுன்
நாரஸிம்ஹ ரூபமான ராமராமராமனே!

மாமனான கம்சனை வளைந்துகொன்று வென்றவா
பூமியுண்டுமிழ்ந்தவா புகழ்ந்தபொன்னரங்கனே
வாமனஸ்வரூபனான வாசுதேவதேவனே
நாம மாயிரம் படைத்த ராமராமராமனே!

கோடி சூரிய ப்ரகாச கொண்டல்மேக வண்ணனே
வாடிநொந்திடைந்திடாமல் வந்தருள்புரிந்தருள்

தேடிஅந்தகன் வெகுண்டுசீறி மேவி உன்னிடம்
நாடி வந்தபோது காரும் ராமராமராமனே!

தந்திதான் முன்னோலமென்ற போதுவந்த வாமனா
வந்துகாத்ததன்றுபோல் வந்துகாப்பதெந்தநாள்
செந்திருமணாளனான ஸ்ரீநிவாஸநாதனே
நந்திசேகரன் தரித்த ராமராமராமனே!

எண்ணி யன்பரானபேர் இடத்திருந்து வாவியே
புண்ணியநாம தேசிகா புவனரக்ஷகாரனே
வண்ணனே லீலாவிநோதவாசனே நின்மலரடி
நண்ணினேன் வைகுந்தமேவும் ராமராமராமனே!

தானம்செய்தும் அறிகிலேன் தவங்கள்செய்தும் அறிகிலேன்
ஆனவன்பரான பேர்க்கு அன்னமிட்டும் அறிகிலேன்
தேனமர்துழாய்கொண்டு உன்னைச் சிந்தைசெய்தும் அறிகிலேன்
நானறிந்ததொன்றுமில்லை ராமராமராமனே!

களபவாசனை மிகுந்த கரியமேகவண்ணனே
துளபமாலை மார்பினில் புனைந்த சுருதிவேதநாயகா
உளம் மகிழ்ந்து கருணைகொண்டு உன்னடிமையென்று நான்
நளினபாதம் தந்து காரும் ராமராமராமனே!

இல்லறத்தின் மாயையாலே ஏங்கினேன்மயங்கியே
புல்லறிவுகொண்டுயானும் போற்றி உன்னைப் பணிந்திலேன்
அல்லல் உற்றகாயமென்று அறிந்துவந்து என்னுளே
நல்லறிவு தந்து ரக்ஷி ராமராமராமனே!

சங்குசக்கரம்தரித்த சாருஸ்ரீநிவாசகா
எங்குமாய்நிறைந்தவா இலங்குமுந்நூல்மார்பனே
மங்குல்மேனியாள் இலங்கு மகரகுண்டலாதிபா
ரங்கநாயகா முகுந்தராமராமராமனே!

ஆழிமீது நின்றுயர்ந்த அச்சுதா முன்னாதியில்
ஏழுமராமரத்தை எய்தி ராவணாதிகள்
மாளவேசரம் தொடுத்த மாயனேமகிழ்ந்து
எந்நாளும் நீ உகந்துகாரும் ராமராமராமனே!

கோலினின்று உயர்ந்தவா குசத்தில் ஏறிநின்றவா
காளைகன்றுமேய்த்தவா முன்கம்சனைவதைத்தவா
சாலநான்முகனை யுந்திதன்னில்படைத்தவா
நாலுவேதமும் புகழ்ந்த ராமராமராமனே!

மத்ஸ்யரூப ராகவா வராகரூபராகவா
கொச்சை யாயருக்குகந்து குன்றெடுத்துநின்றவா
பச்சை ஆலில் துயின்ற பச்சைநீலவண்ணனே
ரக்ஷகாஸ்ரீராகவா ஸ்ரீராமராமராமனே!

தஞ்சமாவதேதுன் பாததாமரைச்சரண்
மிஞ்சவேறு தப்புமில்லைமேகநீலவண்ணனே
அஞ்சலஞ்சல் என்று கையமர்த்தி ஆதரிப்பராரையா
ரஞ்சிதப்ரகாசனான ராமராமராமனே!

விருந்துசெய்ய வேண்டுமென்று விதுரன்மனையிலேகியே
இருந்துமாயையாக வில்லிரண்டு துண்டமாக்கினாய்
பொருந்துமாயமோ மயக்க புண்டரீகமாயனே
நறுந்துளவ மணிந்தரங்க ராமராமராமனே!

மாயவாமுன்பாரதப் போர்வந்துதோன்றும் நாளையில்
நேயமாய் அர்ச்சுனர்க்கு நின்று தேரையூர்ந்தவா
ஆயனேஅனந்தமான ஆதிலட்சுமியென்னும்
நாயகிமணாளனான ராமராமராமனே!

பாவியென்றுபேர்கொடாதே பஞ்சபாதகங்களை
மேவிநூறு குற்றமே செய்தாலும் வந்துமெய்தனில்

காவலாகநீயிருந்து கருணைகொண்டுகாரையா
நாவினால் நிதம்துதிப்பேன்ராமராமராமனே!

அம்புவிழிமாதர்கள் ஆசைதன்வலைக்குள்ளே
இன்பசாகரந்தரித்த எண்ணமற்றவஞ்சகன்
வம்புகோடிசெய்திடினும் மாயனேபொறுத்திடாய்
நம்பினேன்நான் உனதடிமைராமராமராமனே!

கந்தமர்துழாயணிந்த கருடகேசவாகனா
சொந்தடிமை இவனுமென்று சூக்ஷ்மபாதம் நல்கியே
இந்தவேளைவந்து ரட்சி ஏகலோகநாயகா
நந்தகேசவா முகுந்தராமராமராமனே!

சிகரகோபுரம்சிறந்த செய்யவீதிசூழவே
மகரதோரணம் சிறப்ப வரிசைமண்டபங்களும்
பகரமுற்றகொடிகளும் பணிந்துதான் அயோத்தியில்
நகரவாசமாயிருந்த ராமராமராமனே!

குற்றமென்ப தெதுசெய்தாலும் கொலைகள்செய்திருப்பினும்
பெற்றதாய்விரோதமுண்டோ பிள்ளையென்றுகொஞ்சுவாள்
அற்றதன்மையாவனோ யான்குறைசெய்தாலுமென்
நற்றமிழ் உகந்து காரும்ராமராமராமனே!
சாடிசெய்துரியோதனன் சபையில்திரௌபதிதனை
ஆடையுரித்தபோது ஆதிமூலமென்றிட
வாடிடாமல்நாணம்காத்து விளையுமாறுசேலைகள்
நாடியொன்று இலட்சமாக்கும் ராமராமராமனே!

கற்சிலையெனச்சபித்த அகலிகைசாபத்தையும்
உச்சிதமாகவென்று அந்தசாபம்நீக்கினாய்
ஜானகிதனைமேவ ஆசைதன்மிதிலைக்குளே
நற்சிலைவளைத்துநின்ற ராமராமராமனே!

வாசமாளிகைபொலிந்த மண்ணையுண்டவண்ணனே
கேசவாமுராரிநந்த கிருஷ்ணனேமனோகரா
தாசனென்றுபாததாமரைச் சரண்கொடுத்தருள்
நேசவேங்கடேசனான ராமராமராமனே!

ஆவல்கொண்டுபாரிலே அலைந்துமேயலாதிகள்நின்
சேவடிக்காளாய்வராத ஜென்மமென்னஜென்மமோ
பாவகாரியென்றெண்ணாமல் பாதுகாத்தருள்புரி
நாவலர்க்கன்பால் உகந்தராமராமராமனே!

ஏகவஸ்துவாகிநின்ற எங்கள்ரங்கநாயகா
சாகரத்தினின்றுயர்ந்த சஹஸ்ரநாமதேசிகா
மோகனாசௌந்திரா முராரிமோக்ஷகாரணா
காகவண்ணன் ஆகிவந்த ராமராமராமனே!

ஜானகிமணாளனாய் தரணியையோரடியுமாய்
வானமோடளாவிநின்ற வராகவவதாரனே
நமோநமோநாராயணா முகுந்தநந்தகேசவா
ஞானதேசிகப்ரதாப ராமராமராமனே!

பலச்ருதி

செப்பியேவுந்திபோற்றும் செங்கண்மால்பாதம்போற்றி
முப்பதும்படித்தோர்கேட்டோர் முற்றிலுமெழுதினோர்க்குத்
தப்பில்லாவரங்கள்தந்து சந்ததிகிளைபெற்றோங்க
இப்புவிதனில்வாழ்ந்து எண்ணமற்றுஇருப்பர்தாமே

## ராம நாடகம் - தசரதச் சக்ரவர்த்தி புலம்பல்

1. சின்னஞ்சிறு தாமரைபோல் பொன்னான பாதங்கள் நோவத்
   தேடிவனம் ஓடிவிட்டாய் ரகுராமா-ராமா
   என்னை இந்தவேளை நடுத்தண்ணீரில் கைவிட்டாற்போலே
   எப்படித் துணிந்துவிட்டாய் ரகுராமா-ராமா

2. முடிக்குமகுடஞ்சூட்டி முகம்பார்க்க இருந்தேனே
மோசம் கைகேசி செய்தாள் ரகுராமா-ராமா
உடுத்த புடவைதரினே பாம்பாய்க் கடிக்குமென்னும்
உளவறியாமற் போனேன் ரகுராமா-ராமா

3. மாலையிட்ட கைகேசிதான் காலனைப் போலே வந்தென்
வாணாளைக் கொண்டாள் அய்யோ ரகுராமா-ராமா
வேலிக்கு முள்ளிடவேஎன் காலுக்குமுள் ஆகவந்து
விளைந்ததென் விதிவசம் ரகுராமா-ராமா

4. ஆனைமேல் பவனியாக அபிஷேக முடிசூடும்
அலங்காரம் என்று காண்பேன் ரகுராமா-ராமா
நானொன்று நினைக்கத்தெய்வம் தானொன்று நினைத்ததையோ
நான்செய்த பாவம் ஈதோ ரகுராமா-ராமா

5. தாயும்நீ தந்தையும்நீ சற்புத்திர மாணிக்கமும்நீ
சகல பாக்கிய மும்நீயே ரகுராமா-ராமா
நீயில்ல நாடிதெல்லாம் நிலவில்லா முற்றம்போலே
நெடும்பாழ் அடைந்த தையோ ரகுராமா-ராமா

6. படித்துப் படித்துச் சொல்லிக் காலும் பிடித்துக்கொண்டேன்
பாவிகை கேசி அய்யோ ரகுராமா-ராமா
அடிக்க அடிக்கப் பந்து விசை கொண்டெழுந்தாற்போல்
ஆயுசுக்குலை வைத்தாளே ரகுராமா-ராமா

7. குடைமகு டந்தரித்துக் குலவியம் தன்னையாளும்
கோலங் காணும் முன்னாக ரகுராமா-ராமா
சடைமகுடந் தரித்துக் காட்டிலேபோ என்றேனே
சண்டாளன் என்போல் உண்டோ ரகுராமா-ராமா

8. தேறுதல் எங்குங் காணேன் திக்குந் திசையுங்காணேன்
தெய்வமும் துணை காணேன் ரகுராமா-ராமா
ஆறுதல் எங்கும் காணேன் அந்தரத்தில் கோல்எறிந்த
அந்தகன்போல் ஆனேன் அய்யோ ரகுராமா-ராமா

9. பாரெல்லாம் பரதன்கொள்ள உன்னையுமென் கண்ணின்முன்னே
பறிகாட்டில் போ என்றாளே ரகுராமா-ராமா
கீரைக்குப் புல்லுருவி கீழே முளைத்தாற்போலே
கெடுகாலி எங்கேவந்தாள் ரகுராமா-ராமா

10. சேனைகாவலர்கூட நான்கூடமுடிசூட்டி
சிங்காசனம் வைக்கும்முன்னே ரகுராமா-ராமா
ஆனைநிழலைப் பார்க்க தவளை கலங்கினாற்போல்
ஆனாளே கூனி அய்யோ ரகுராமா-ராமா

11. சற்றே பொறுத்துச் சென்றால் சகுனதோஷம் என்றோநான்
சாவேன் என்றறிவாயோ ரகுராமா-ராமா
சுற்றும் அழுகைக்குரல் கேட்கிறத்துக்குமுன்னே
சுருக்கா நடந்துவிட்டாய் ரகுராமா-ராமா

12. குலத்தை விளக்கவந்த மகனே உனக்குப்பட்டம்
கொடுத்து வாங்கிக் கொண்டது ரகுராமா-ராமா
கலத்திலே சோற்றையிட்டு கைப்பிடித்தாற்போலாச்சே
காலம் இப்படி ஆமா ரகுராமா-ராமா

13. பாயும் அமுதமும்பொன் பள்ளயமும் இங்கிருக்க
பறிகாட்டிலே நடந்து ரகுராமா-ராமா
காயும் கிழங்கும் தின்னல் ஆச்சோ தெய்வத்துக்கும்
கண்இல்லையோ மகனே ரகுராமா-ராமா

14. வீசும்நெருப்பைப் போல கடுங்கோடையும் கானலும்
வெய்யிலும் மேல் படுமே ரகுராமா-ராமா
காசாம் பூமேனியெல்லாம் வேர்வை முத்துமுத்தாகக்
காண்பாளோ கௌசலை ரகுராமா-ராமா

15. பூமேலே விழுந்தாலும் தழும்புபடுமே உன்தன்
    பொன் ஆனமேனி அய்யோ ரகுராமா-ராமா
மாமலையும் கொடியும் செடியும் பொடியும் தாக்க
    வழிநடந்தறிவாயோ ரகுராமா-ராமா

16. முடிக்கபிஷேகம் செய்துன் அடிக்கீழே ஓடுந்தண்ணீர்
    முந்திக்கொண் டாரானாலும் ரகுராமா-ராமா
பிடித்தொரு படிதந்தால் குடிக்கேனோ குடித்தென்தன்
    பெருந்தாகந் தணியேனோ ரகுராமா-ராமா

17. இழையாயிரம் பொன்பெற்ற பீதாம்பரம் உடுத்த
    இடைமீதிலே மகனே ரகுராமா-ராமா
பழிகாரி தான்கொடுத்த மரஉரிதான் உடுக்கப்
    பார்த்தாரோ ஊர் உள்ளோர்கள் ரகுராமா-ராமா

18. பார்த்தாலும் பசிபோமே பால்வடியுமே உன்தன்
    பவளவாய் முகந்தன்னை ரகுராமா-ராமா
காற்றோட்ட மாகவந்து சற்றே நீகாட்டி என்னைக்
    கரையேற்றி விட ஒண்ணாதோ ரகுராமா-ராமா

19. பிள்ளைதன் தொடைமேலே பெற்றவன் சீவன்விட்டால்
    பெருங்கதி உண்டென்பாரே ரகுராமா-ராமா
கள்ளக்கை கேசிகையில் காட்டிக் கொடுத்துவிட்டு
    கடக்கப்போய் நிற்கல் ஆமோ ரகுராமா-ராமா

20. கண்ணும் இருண்டதைய்யோ கருத்தும் அழிந்ததையோ
    கைகாலும் ஓய்ந்ததையோ ராகுராமா-ராமா
எண்ணம் குலைந்ததைய்யோ என்றுநான் காண்பேன் உன்தன்
    எழுதரு முகந்தன்னை ராகுராமா-ராமா

## ராம நாடகப் பாடல்

ஏன்பள்ளி கொண்டீர் அய்யா - ஸ்ரீரங்கநாதரே நீர்
ஏன் பள்ளிகொண்டீர் அய்யா (ஏன்)
ஆம்பல் பூத்தசய பருவத மடுவிலே-
அவதரித்த இரண்டாற்று நடுவிலே (ஏன்)

1) கோசிகன் சொல் குளித்ததற்கோ - அரக்கிக்
குலையில் அம்பு தெறித்தற்கோ
ஈசன் வில்லை முறித்ததற்கோ - பரசு
இராமன் உரம் பறித்ததற்கோ
மாசிலாதமிதி லேசன் பெண்ணுடனே வழிநடந்த இளைப்போ
தூசிலாதகுகன் ஓடத்திலே கங்கை துறைகடந்த இளைப்போ
மீசரமாம்சித்ர கூடச்சிகரக்கல் மிசைகடந்த இளைப்போ
காசினிமேல் மாரீசன்ஓடிய கதிதொடர்ந்த இளைப்போ ஓடிக்

களைத்தோ தேவியைத் தேடி
இளைத்தோ மரங்கள் ஏழும்
தொளைத்தோ கடலைக்கட்டி
வளைத்தோ இலங்கை என்னும்
காவல் மாநகரை இடித்த வருத்தமோ
ராவணாதிகளை அடித்த வருத்தமோ (ஏன்)

2. மதுரையி லேவரும் களையோ - முதலை
வாய்மகளைத் தரும் களையோ
எதிர்எருதைப் பொரும் களையோ - கன்றை
எடுத்தெறிந்த பெரும் களையோ
புதுவை ஆனமுலை உண்டுபேயினுயிர் போக்கி அலுத்தீரோ
அதிரஓடிவரும் குருவிவாயை இரண் டாக்கி அலுத்தீரோ
துதிசெய் ஆயர்களைக் காக்க வேண்டிமலை தூக்கி அலுத்தீரோ
சதிசெய் காலினால் காளிங்கன் மணிமுடி தாக்கி அலுத்தீரோ மருதம்

சாய்த்தோ ஆடுமாடுகள்
மேய்த்தோ சகடுருளை
தேய்த்தோ கஞ்சன்உயிரை
மாய்த்தோ அர்ச்சுனனுக்காகச்
சாரதியாய்த் தேர்விடுத்த வருத்தமோ (ஏன்)
போரிலே சக்கரம் எடுத்த வருத்தமோ

3. படிதனிலே மெத்தவும் நானே - உம்மைப்
பரமெனவே அடுத் தேனே
அடிமை கொள்வீர் என்னைத் தானே - செம்பொன்
அணியரங் கம்பெரு மானே

தடம் உறைந்தகரும் பாறை சாபமது தடுத்து ரட்சித்தீரே
விடஒணாதகாகா சூரனுக் கொருகண் விடுத்து ரட்சித்தீரே
கொடுமை கொண்டழுந்துரோ பதைக்குத்துகில் கொடுத்து ரட்சித்தீரே
மடுவில் ஆனைமுன் ஓடிமுதலையை மடுத்து ரட்சித்தீரே
அதுபோல

வாரும் கிருபைக் கண்ணாலே
பாரும் மனக்கவலை
தீரும் நினைத்தவரம்
தாரும் தாரும் என்சாமி

வட்சழி மேவும்மக லட்சுமியுடன் பெரும்
மட்ச மாகவென்னை ரட்சிக்க எழுந்திரும் (ஏன்)

## நடராசர் பத்து

1. மண்ணாதி பூதமொடு விண்ணாதி அண்டம் நீ
மறைநான்கின் அடிமுடியும் நீ
மதியும் நீ ரவியும் நீ புனலும் நீ அனலும் நீ
மண்டலமிரண்டேழு நீ
பெண்ணும் நீ ஆணும் நீ பல்லுயிர்க்குயிரும் நீ
பிறவும் நீ யொருவ நீயே

பேதாதிபேதம் நீ பாதாதி கேசம் நீ
பெற்றதாய் தந்தை நீயே
பொன்னும் நீ பொருளும் நீ இருளும் நீ ஒளியும் நீ
போதிக்க வந்த குரு நீ
புகழொணா கிரகங்கள் ஒன்பதும் நீ
யிந்த புவனங்கள் பெற்றவனும் நீ
எண்ணரிய ஜீவகோடிகளை ஈன்ற அப்பனே
என் குறைகள் யார்க்குரைப்பேன்?
ஈசனே சிவகாமி நேசனே!
எனையீன்ற தில்லைவாழ் நடராஜனே !

2.மானாட மழுவாட மதியாட புனலாட
மங்கை சிவகாமி யாட
மாலாட நூலாட மறையாட திறையாட
மறைதந்த பிரமனாட
கோனாட வானிலகு கூட்டமெல்லாமாட
குஞ்சர முகத்தனாட
குண்டல மிரண்டாட தண்டை புலி யுடையாட
குழந்தை முருகேசனாட
ஞானசம்பந்தரோடு இந்திராதி பதினெட்டு முனி
அட்ட பாலகருமாட
நரை தும்பை அருகாட நந்தி வாகனமாட
நாட்டியப் பெண்களாட
வினையோட உனைப்பாட எனைநாடி இதுவேளை
விரைந்தோடி ஆடி வருவாய்
ஈசனே சிவகாமி நேசனே
எனையீன்ற தில்லைவாழ் நடராஜனே!

3.கடலென்ற புவிமீதில் அலையென்ற உருக்கொண்டு
கனவென்ற வாழ்வை நம்பி
காற்றென்ற மூவாசை மாருதச் சுழலிலே
கட்டுண்டு நித்த நித்தம்
உடலென்ற கும்பிக்கு உணவென்ற இரைதேடி

ஓயாமலிரவு பகலும்
உண்டுண்டுறங்குவதைக் கண்டதே யல்லாது
ஒருபயனுமடைந்திலேனை
தடமென்ற மிடிகரையில் பந்தபாசங்களெனும்
தாவரம் பின்னலிட்டு
தாயென்று சேயென்று நீயென்று நானென்று
தமியேனை இவ்வண்ணமாய்
தடையென்று கடைநின்று ஏனென்று கேளாது
இருப்பதுனக்கழகாகுமா?
ஈசனே சிவகாமி நேசனே
எனையீன்ற தில்லைவாழ் நடராஜனே!

4.பம்புசூனியமல்ல வைப்பல்ல மாரணம்
தம்பனம் வசியமல்ல
பாதாள வஞ்சனம் பரகாயப் பிரவேச
மதுவல்ல சாலமல்ல
அம்புகுண்டுகள் விலக மொழியு மந்திரமல்ல
ஆகாய குளிகையல்ல
அன்போடு செய்கின்ற வாதமோடிகளல்ல
அறியமோகனமுமல்ல
கும்பமுனி மச்சமுனி சட்டமுனி பிரம்மரிஷி
கொங்கணர் புலிப்பாணியும்
கோரக்கர் வள்ளுவர் போகமுனியிவரெலாம்
கூறிடும் வயித்தியமுமல்ல
என்மனம் உன்னடிவிட்டு அகலாது நிலைநிற்க
ஏது புகல வருவாய்
ஈசனே சிவகாமி நேசனே
எனையீன்ற தில்லைவாழ் நடராஜனே!

5.நொந்துவந்தே னென்று ஆயிரம் சொல்லியும்
நின்செவியில் மந்தமுண்டோ!
நுட்பநெறியறியாத பிள்ளையைப் பெற்றபின்
நோக்காத தந்தையுண்டோ!

சந்ததமும் தஞ்சமென்றடியைப் பிடித்தபின்
தளராத நெஞ்சமுண்டோ!
தந்திமுகன் அறுமுகன் இருபிள்ளையில்லையோ
தந்தை நீ மலடுதானோ!
விந்தையும் ஜாலமும் உன்னிடமிருக்குதே
வினையொன்றும் அறிகிலேனே
வேதமும் சாஸ்த்ரமும் உன்னையே புகழுதே
வேடிக்கை இதுவல்லவோ
இந்தவுலகு ஈரேழும் ஏனளித்தாய் சொல்லு
இனியுன்னை விடுவதில்லை
ஈசனே சிவகாமி நேசனே
எனையீன்ற தில்லைவாழ் நடராஜனே!

6.வழிகண்டு உன்னடியைத் துதியாத போதிலும்
வாஞ்சையில்லாத போதும்
வாலாயமாய்க் கோயில் சுற்றாத போதிலும்
வஞ்சமே செய்தபோதும்
மொழியென்ன மொகனையில்லாமலே பாடினும்
மூர்க்கனே முகடாகினும்
மோசமே செய்யினும் தேசமே தவறினும்
முழு காமியே ஆயினும்
பழி எனக்கல்லவே தாய்தந்தைக்கல்லவோ
பார்ப்பவர்கள் பழியார்களோ
பாரறிய மனைவிக்குப் பாதியுடலீந்த நீ
பாலன் எனைக் காக்கொணாதோ
எழில் பெரிய அண்டங்கள் அடுக்காய் அமைத்த நீ
என் குறைகள் தீர்த்தல் பெரிதோ
ஈசனே சிவகாமி நேசனே
எனையீன்ற தில்லைவாழ் நடராஜனே!

7.அன்னைதந்தையர் என்னை ஈன்றதற்கழுவனோ
அறிவிலாததற்கழுவனோ
அல்லாமல் நான்முகன் தன்னையே நோவனோ

ஆசை மூன்றுக்கழுவனோ
முற்பிறப்பென்வினை செய்தேனென்றழுவனோ
என் மூட உறவுக்கழுவனோ
முற்பிறப்பின் வினைவந்து மூளுமென்றழுவனோ
முத்தி வருமென்றுணர்வனோ
தன்னைநொந்தழுவனோ உன்னை நொந்தழுவனோ
தவமென்ன எனுறழுவனோ
தையலார்க்கழுவனோ மெய்தனக்கழுவனோ
தரித்திர தசைக்கழுவனோ
இன்னமென்னப் பிறவிவருமோ வென்றழுவனோ
எல்லாமுரைக்க வருவாய்
ஈசனே சிவகாமி நேசனே
எனையீன்ற தில்லைவாழ் நடராஜனே!

8.காயாமுன் மரமீது பூபிஞ் சறுத்தனோ
கன்னியர்கள் பழிகொண்டனோ
கடனென்று பொருள்பறித்தே வயிறெரித்தனோ
கிளைவழியில் முள்ளிட்டனோ
தாயாருடன் பிறவிக்கென்னவினை செய்தனோ
தந்தபொருளிலை யென்றனோ
தானென்று கெர்வித்து கொலைகளவு செய்தனோ
தவசிகளை ஏசினேனோ
வாயாரப் பொய்சொல்லி வீண்பொருள் பறித்தனோ
வாணரைப் பழித்திட்டனோ
வடவுபோலே பிறரைச் சேர்க்கா தடித்தனோ
வந்தபின் என் செய்தனோ
ஈயாத லோபி என்றே பெயரெடுத்தனோ
எல்லாமும் பொறுத்தருளுவாய்
ஈசனே சிவகாமி நேசனே
எனையீன்ற தில்லைவாழ் நடராஜனே!

9.தாயாரிருந்தென்ன தந்தையுமிருந்தென்ன
தன்பிறவியுறவு கோடி
தனமலை குவித்தென்ன கனபெயரெடுத்தென்ன
தாரணியையாண்டுமென்ன
சேயர்கள் இருந்தென்ன குருவாயத் திரிந்தென்ன
சீஷர்கள் இருந்துமென்ன
சித்துபல கற்றென்ன நித்தமும் விரதங்கள்
செய்தென்ன நதிகளெல்லாம்
ஓயாது மூழ்கினும் என்ன பயன் எமனோலை
ஒன்றினைத் தடை செய்யுமோ!
உதவுமோ இதுவெல்லாம் உபாயம் கருதியே
உந்தனிருபாதம் பிடித்தேன்
யார்மீது உன்மனமிருந்தாலுமுன் கடைக்
கண்பார்வையது போதுமே
ஈசனே சிவகாமி நேசனே
எனையீன்ற தில்லைவாழ் நடராஜனே!

10.இன்னமும் சொல்லவோ உன்மனம் கல்லோ
இரும்போ பெரும்பாறையோ
இருசெவியும் மந்தமோ பார்வையும் அந்தமோ
இது உனக்கழகு தானோ
என்னென்ன மோகமோ இதுஎன்ன கோபமோ
இதுவே உன்செய்கை தானோ
இருபிள்ளைதாபமோ யார்மீது கோபமோ
ஆனாலும் நான் விடுவனோ
உன்னை விட்டெங்கெங்கு சென்றாலும் வாழ்வனோ
உனையடுத்துங் கெடுவனோ
ஏழை என் முறையீட்டில் குற்றமென கூறுநீ
முப்புரம் எரித்த ஐயா
என் குற்றமாயினும் உன் குற்றமாயினும்
இனியருள் அளிக்க நினைவாய்
ஈசனே சிவகாமி நேசனே
எனையீன்ற தில்லைவாழ் நடராஜனே!

## திருநீற்றுப் பதிகம்

1. கொண்ட கொண் டிட்டவெகு
சொரூபங்களுக்கழகு கொடுக்கச் சமைந்த நீறு
கொடிய வெண்ணாயிரஞ் சமணரைக் கழுவினிற்
கொலை செய்து கண்ட நீறு
துண்டகண்டப்படக் கொடூர வெஞ்சூரனுடல்
துணிக்கவேல் தொட்டநீறு
சொல்லரிய பூதப் பிசாசு பில்லி
சூனியஞ் சுடரிட்டெரித்த நீறு
செண்டுபோற் கயிலை மலையெடுத்தவன்
கூன் முதுகு செவ்வையாய் நிமிர்த்தநீறு
சிவபக்தியில்லாத முழு மூடர்
நெஞ்சந் திடுக்கிடத் தொடுத்தநீறு
அண்ட நவகண்ட முதல் வணங்கித்
துதித்திட ஆண்மையாய் வந்த நீறு
அடியவர்க்கருள் கிருபைபொழி
பழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே.

2. சம்பந்தராகவே தென்னவன்
கூடலிற் சமணரையழித்த நீறு
சகல குருபரவனாக அரசனுக்கு
வுபதேசந் தானாயுரைத்த நீறு
நம்பின அடியவர்கள் ஈடேற
வினையோட நாதனாய் வந்தநீறு
நாற்பத் தெண்ணாயிரம் ரிஷிகள்
முனி சித்தர்கள் நம்பியே பூசுநீறு
கம்ப மதயானை மாமுகவனுக் கிளையவன்
கருதியே தந்த நீறு
காலனிட தூதனை நாடாமல் எந்நாளும்
காக்கவே வந்த நீறு
அம்பிகை திரிசூலி சுந்தரி சவுந்தரி

அபிராமிவல்லி தந்த
அடியவர்க்கருள் கிருபை பொழி
பழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே.

3. அரவங்கள் பூதங்கள் மிருகங்கள்
பேய்களை அடக்கவே இட்டநீறு
அஷ்டபாக்கிய லட்சுமி இஷ்ட
முடலெந் நாளும் அகலாமல் இட்டநீறு
இரவுபகல் மறவாமல் முருகர்
திருநாமமே இறைஞ்சித் தரித்தநீறு
எதிராளி நெஞ்சங் கலங்கிப்
பயந்தோட ஏற்கவே இட்டநீறு
பரவு பல பிணிகளும் உறவு கெடுகோள்களும்
பணிந்தோட விட்டநீறு
பஞ்சபாதகமுடன் மிஞ்சிடும் வல்வினை
பணிந்திட வணிந்த நீறு
அரசனுடன் மந்திரியாண் புவி வீரரும்
மதி வசியமான நீறு
அடியவர்க்கருள் கிருபைபொழி
பழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே.

4. இருப்பான தலமெலா மென்றுந்
துதிப்பதற் கீடேற்றஞ் செய்யுநீறு
எங்கெங்கிருந்தாலுமேத்திப்
பணிந்திடவெதிராக நிற்குநீறு
திருப்பரங்குன்றமுஞ் செந்தில்
கதிர்காமமுந் திருச்சோலைக்குகந்தநீறு
திருத்தணிகை சுவாமிமலை திருவேரகம்புகழ்
செவ்வேலர் தந்த நீறு
பொருப்புகள் முடிதோறும் பதகமலமுத்திரை
புகழ்பெருக வந்தநீறு
பூசைசெய் யைவராற்றிருவா வினன்குடி
போதிக்க வந்தநீறு

அருட்பாதம் நத்தியே நினைப்பவர்கள்
நெஞ்சினில் அகலாதிருந்த நீறு
அடியவர்க்கருள் கிருபைபொழி
பழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே.

5. நூலைப்பகுத்த விடைமாதர்க்கு
வேலாக நுதலிற்றரித்த நீறு
நூரு நூறாயிர மீமிசை வந்தாலுமொரு
நொடிற்றொலைக்கு நீறு
வேலைக்கடிந்து வெகு சூரர்கள் மடியவே
வெற்றிவேல் தொட்டநீறு
வேதனைச் சிறையிட்டு பிரணவத்துட்பொருள்
விமலற்குரைத்த நீறு
வாலைப் பருவமாய் வயது நூறாகவே
வசியகரமான நீறு
மாறாத செல்வமும் பேறான வாழ்வுடன்
வரிசை தர வந்தநீறு
ஆலவாய்ச் சொக்கருடன் ஆனந்தத்
தாண்டவம் ஆடிச் செழித்த நீறு
அடியவர்க்கருள் கிருபைபொழி
பழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே.

6. ஓராறு சென்னியு மீராறு
புயமென்னுள்ளம் பதித்தநீறு
ஓதுதமிழ் மதுரையி லுமை பெண்
பேசவே உபதேசமான நீறு
காரானை முகவனுக்கிளையவன்
விராலிமலைக் காங்கேயன் தந்த நீறு
கயிலைமலை யொரு நொடியில்
அரனை வலமாகவே காணவே வந்த நீறு
பேரான வசுரருங் குன்றமும்
வேலாற்பொடிபடத் துணித்த நீறு
பொற்சந்தி மலையிலுறை வள்ளியுட நாயகன்

பொன்னாடி வணங்கு நீறு
ஆறாடு செஞ்சடைக் கயிலை நாய
கனுமைக் கழகு பெறவந்த நீறு
அடியவர்க்கருள் கிருபைபொழி
பழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே.

7. எத்தேச காலமும் முத்தைய
ரென்னுமிவ் வேழைக் கிரங்குநீறு
எழிலான கிருத்திகை தவறாமல் அனுஷ்டிக்க
இன்பங்கள் தந்தநீறு
சிற்றிடை வள்ளியுடன் தினைப்புனங் காத்திடச்
சிவசித்தாய் நின்றநீறு
சிற்றூரு வேடர்கள் சிவபக்த ராகவே
திருவுருக்கொண்ட நீறு
முத்தமிழ்க்காகவே அருணகிரிநாதருக்கு
மோக்ஷங் கொடுத்தநீறு
முப்பத்துமுக்கோடி தேவாதி தேவரும்
முருகரென வந்தநீறு
அத்தனருள் கந்தனார் நித்தம்
விளையாடவே அகலாமலிட்டநீறு
அடியவர்க்கருள் கிருபைபொழி
பழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே.

8. வேதாள பூதப் பிசாசு பில்லி
சூனிய மிரட்டித் துரத்தநீறு
வெண்டையந் தண்டையொடு கிண்கிணி
சிலம்பசைய வீரவேல் தொட்டநீறு
சூதான களபமுலை வள்ளியிட நாயகன்
சுப்பிரமணியர் தந்தநீறு
தும்புரு நாரதர் கிம்புருடர் போற்றித்
துலங்கவே வந்தநீறு
ஓம் முருகாவென்று உள்ளமது
குளிரவே உற்றதுணையானநீறு

ஓம் நமசிவாய குரு ஞானாதி தேசிகன்
ஒளியாகி வந்தநீறு
ஆதாரமாகவே நெஞ்சினில் எப்பொழுது
மறவாது நின்றநீறு
அடியவர்க்கருள் கிருபைபொழி
பழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே.

9. துஷ்டப் பிசாசு பிணி கிட்ட
வெட்டாமலே சுடரிட்டெரித்த நீறு
சுற்றவே நிற்கின்ற அஷ்டதிசை பாலரும்
சொல்லுமுன் வணங்குநீறு
வட்டமாய்ப் படர்தேகம் பதினெட்டு
குஷ்டமும் வாராமற் பூசு நீறு
வாளரவம் வண்டுகடி சிலந்தி தேள்
விஷமெலாம் வாங்கவு மணிந்தநீறு
கொட்டமிடு சூரரை வெட்டிப் பலியிட்டு
செயங் கொள்ளவே வந்தநீறு
கூறுமொழி நக்கீரர் மேன்மைபெற
வேல்வாங்கி குன்றைப் பிளந்தநீறு
அஷ்டதிசை பதினாறு முக்கோண சட்கோண
மறுபத்து நாலுகலையும்
அடியவர்க்கருள் கிருபைபொழி
பழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே.

10. மருமலர் கமலத் துதித்தவன்
கிளைவழி வாழ்விக்க வந்தநீறு
மன்னுபிர மாமுனி அகஸ்தியர்
போகருடன் வழிகொள்ள வந்தநீறு
சரணமலான்பனாங் குலாலகுலத்
திருக்கை தண்டமிட்டுதவுநீறு
சண்முக நதிமூழ்கி கிரிவலம் வந்தோர்க்கு
சகலபிணி தீர்த்தநீறு
வறுமைபடு மெளியார்க்குங் கொலை செய்த

பாவற்கும் வருவிதர மொத்தநீறு
வாழ்வு கார்த்திகை சோம சுக்கிர வாரஞ்சஷ்டி
வந்திப்போர்க் கருளுநீறு
அருமறைகள் பரவுகுரு சிவசமயந்
தழைக்கவே அவதரித்தருளு நீறு
அடியவர்க்கருள் கிருபைபொழி
பழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே.

11. பத்தான கவிதையும் மனதிற் உதிப்போர்க்குப்
பாக்கியந் தந்தநீறு
பரிவாக எந்நாளும் சரவணபவா வென்ன
பரிசுபெற வைக்கும்நீறு
கஸ்தூரி குங்குமம் கமழ
வள்ளி நாயகன் காங்கேயன் தந்தநீறு
கார்த்திகை நாள் தோன்றி வெற்றி வேலாயுதன்
கடம்பனார் தந்தநீறு
முத்து நவரத்தினத் தண்டையணி பாதநன்
முடிமேற்றரித்த நீறு
முழு நீல மயிலேறி வந்துமுன்
நின்றுமே முன்கையிற்றந்த நீறு
அத்தனாற் பங்கினிற் சத்துரு சங்காரியாய்
அபிராமிவல்லி தந்த
அடியவர்க்கருள் கிருபைபொழி
பழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே.

12. வட்டச் சடாட்சரச் சரவணபவா வென்று
மதியிற்று திக்கும் நீறு
வாதாடி வந்தெதிர்த்திட்ட பூதங்களை
மார்பைப் பிளந்தநீறு
இஷ்டமுடன் சரியையொடு கிரியையோக
ஞானமேற்க வேதந்த நீறு
இன்பமாகவே கயிலை மலையேறி
மோக்ஷத்திலிருக்கத் தகுந்த நீறு

எட்டுத் திசையதிர மயிலேறி
உலகைவல மிமைக்கு முன் வந்தநீறு
இமையவர் முனிவர்கள் தேவேந்திரனாதியர்
யிடரழித்திட்ட நீறு
அஷ்டதிசை பெற்ற தீவேழு
மீரேழுகை அரசாளவந்தநீறு
அடியவர்க்கருள் கிருபைபொழி
பழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே.

# 5. வள்ளுவர்கள் பயன்படுத்தும் வடமொழி மந்திரம்

## <u>ஸ்ரீ விஷ்ணு சகஸ்ரநாமம்</u>

சுக்லாம் பரதரம் விஷ்ணும், சசி வர்ணம் சதுர் புஜம்,
பிரசன்னா வதனன் த்யாயேத், சர்வ விக்னோப சண்டையே
விசம் வசிஷ்டனப்தரம், சக்தே பௌற்றமகழ்மஷம்,
பரசரத்மாஜம் வண்டே, ʺகததம் தபோநிதிம்.
விசா விஷ்ணு ரூபய, விசா ரூபய விஷ்ணவே,
நமோ வை பிரம்மா விடய, வசிஷ்டாய நமோ நாம.
அவிகறைய ʺத்தய, நித்யாய பரமாத்மனே,
சடைக்க ரூப ரூபய, விஷ்ணவே சர்வ ஜிஷ்னவே.
யஸ்ய ஸ்மரண மத்ரென, ஜன்ம சம்சார பந்தனத்.
விமுச்சயடே நாம தஸ்மை, விஷ்ணவே பிரபா விஷ்ணவே
ஓம் நமோ விஷ்ணவே பிரபா விஷ்ணவே
ஸ்ரீ வைசம்பயண உவச்ச
ஸ்ருத்வ தர்மநேஷேன, பவநனி ச சர்வஷா,
யுதிஷ்டிரா சந்தணவம் புநேரவபிய பாஷ்ட
யுதிஷ்டிரா உவச்ச
கிமேகம் தைவதம் லோகே, கிம் வபஎகம் பாராயணம்,
ஸ்துவந்த கம் காமர்ச்சண்ட ப்ரப்ன்யூர் மாணவ சுபம்,
கோ தர்ம சர்வ தருமணம் பரமோ மத
கிம் ஜப்ன்முச்யதே சந்தூர் ஜன்ம சம்சார பாண்டனட்
ஸ்ரீ பீஷ்ம உவச்ச
ஜகாத் ப்ரபும் தேவதேவம் ஆனந்தம் புருஷோட்டமம்,
ச்டுவன் நாம சஹாஸ்ரென, புருஷ சததொதிட,
தமேவ சார்ச்சயன் நித்யம், பக்த்ய புருஷமவ்யாயம்,
தயான் சத்துவன் நமச்யஞ்ச யஜமனச்தமேவ ச,
அன்டி நிதானம் விஷ்ணும் சர்வ லோக மகேஸ்வரம்
லோகடைக்ஷம் ச்டுவன்னித்யம் சர்வ டுக்க்ஹகோ பவேத்,

பிராமண்யம் சர்வ தர்மக்னம் லோகனம் கீர்த்தி வர்தனம்,
லோகநாதம் மகாத்பிஊதம் சர்வ பூத பாவோட்பாவம்
ஏஷமே சர்வ தருமணம் தர்மாதிகா தமோ மத,

யாத் பாக்த்யோ புண்டரிகக்ஷம் ச்டுவ்ய்ர்-அர்ச்சனய்ர்-நர சட,
பரமம் யோ மகாத்டேஜா, பரமம் யோ மகாத்ட்ப
பரமம் யோ மகாத் பிரம்மா பரமம் யா பாராயணம்
பவித்ரணம் பவித்ரம் யோ மங்கலனம் ச மங்களம்,
தைவதம் தேவதானம் ச போஒடணம் யோ வய பித்த
யாத சரவணி போஒதனி பாவன்த்யாதி யுககமே
யச்மிஞ்ச பிரளயம் யந்தி புனரேவே யுக க்ஷே
தஸ்ய லோக பிரதனச்ய ஜகன்னடதச்ய போஒபதே
விஷ்ணோ நாம சஹாச்ரம் மீ ச்ருணு பாபா பாயபஹம்
யணி நமனை கௌனனி விக்ஹ்யடணி மகாத்மனாஹ்
ரிஸ்ஹிப்ஹிஹ் பரிகீடணி தனி வக்ஷ்யாமி பிஊடையே
ரிஷிர் நம்னம் சஹ்ச்ரஷ்ய வேதா வயசோ மஹா முநிஹ்
சாண்டோ ஆனுச்டுப் சட்ட தேவோ பகவான் தேவகி சுத்த
அம்ருதம்சு பாவோ பிஹெஜம் ஷக்திர் தேவகி நந்தன
திரிசம ஹ்ரிடயம் தஸ்ய சந்த்யர்த்தே விநியுஜ்யடே
விஷ்ணும் ஜிஷ்ணும் மகாவிஷ்ணும் பிரபா விஷ்ணுன் மகேஸ்வரம்
அநேக ரூப டைத்யந்தம் நமாமி புருஷோட்டமம்
ஸ்ரீ விஷ்ணு சஹாஸ்ரநம ச்டோற்ற
அசய ஸ்ராஈவிஷ்ஹ்னோர்-திவ்யசஹஸ்ரணாம ச்டோற்ற மகா மன்றச்ய
ஸ்ரீ வேடவ்யாசோ பகவான் ரிஸ்ஹ்ஹிஹ்
அனுஷ்ஹ்டுப் ச்ஹண்டாஹ்
ஸ்ரீ மஹாவிஸ்ஹ்நுஹ் பரமாத்மா ஸ்ராஈமன்னாராயனோ தேவதா
அம்ரிடாம் ஷஊட்பாவோ பானுரிடி பிஏஜம்
தேவகி நந்தனாஹ் ஸ்ரஷ்டேடி ஸ்ஹக்திஹ்
உட்பாவாஹ் க்ஷோபானோ தேவ இடி பரமோ மன்ற்றாஹ்
ஷன்க்ஹா-பிரின்னண்டகஈ சக்ரிஇடி கீலகம்
ஷார்ந்கதன்வா கடாதற இத்யச்ற்றம்
ரதாங்கபாணி ரக்ஷோபிய இடி னேற்றம்
ற்றிசாமா சாமகாஹ் சாமேடி கவசம்
ஆனந்தம் பரப்ரகுமேடி யொநிஹ்
ரிதுஹ் சுடர்ஷனாஹ் கால இடி டிக்பாந்தாஹ்
ஸ்ரீ விஸ்வருஉப இடி தியானம்
ஸ்ரீ மகாவிஷ்ஹ்னு ப்ரீத்யர்தம் சஹஸ்ரநாம ஜபே விநியோகாஹ்
தானம்
க்ஷீரோடன்வத் பரதேசே சுசிமணி விலஆசாத் சைகத்தே முக்திகனம்
மலக்ளுப்தசனச்த ஸ்படிகமணி நிபி முக்திகர் மண்டிதங்காஹ்

சுப்ரி-ராப்ரி-ரதப்ரை ருபரிவிரசிடை முக்த பீயுஷ வர்ஷி
ஆனந்தி ந புனியடரி நளின கத சங்கபநிர் முகுண்டஹா
ப்ஹூ படு யஸ்ய நபிய் ர வியடசு ராநில ச்ச்சன்ற ஸுர்யாஉ ச நெதர்
கர்னவசசிரோ துமுகமபிய் தஹனோ யஸ்ய வச்டேயமபிதி
அந்தச்தம் யஸ்ய விஸ்வம் சுறா நர க்ஹக கோ போகி கந்தர்வ தைதை,
சிற்றம் ராம் ரம்யதே தம் த்ரிபுவன வபுஷம் விஷ்ணுமீசம் நமாமி
ஓம் நமோ பகவதே வாசுதேவாய
சந்தகரம் பஜக சயனம் பத்மனபாம் சுரேசம்,
விஸ்வதரம் க்கான சட்ருசம் மேக்ஹா வர்ணம் ஶுபங்கம்
லக்ஷ்மி கந்தம் கமலா நயனம் யோகி ஹரித் தான கம்யம்
வண்டே விஷ்ணும் பவ பாயஹர்ரம் சர்வ லோகைக நாதம்
மேக்ஹா சயமம் பீத கௌசெய வசம் ஸ்ரிவட்சங்கம் குச்துபோத் பாசிதங்கம்
புன்யோபேதம் புண்டரீகயதக்ஷம் விஷ்ணும் வண்டே சர்வ லோகைக நாதம்
நமாஹ் சமஷ்ட பூடணம்-அடி-புதைய புப்ரிடே
அநேக-ருபருபய விஷ்ணவே பிரபா-விஷ்ணவே
சசாங்க சக்ரம் சகேரிட்ட குண்டலம் சப்பீதவச்ற்றம் சரசெருஹெக்ஷனம்,
சஹாரா வக்ஷ ஸ்தல ஷோபிய் கௌஸ்துபம் நமை விஷ்ணும் சிரச சடுர்புஜம்
சாயம் பரிஜடசிஸ் ஹெமசிம்ஹசநோபறி,
அசீனமம் புத சயாம மயதகஷமலன்க்ருதம்,
சந்திரனான சதுர்பஹூம் ஸ்ரீவட்சன்கித வக்ஷசம்,
ருக்மணி சட்யபாமபியம் சாஹிதம் க்ரிஷ்ணமஸ்ரையே.
விஷ்ணு சஹாஸ்ரனமம் ஸ்தோத்ரம்
ஓம் விஸ்வம் விஷ்ணுர்-வஷட்காரோ புட-பாவய-பாவத்-ப்ரப்ஹூஹ்
புடக்ருத் புடபிருத் பாவோ புட்டம புட-பாவனாஹ்
புட்டம பரமாத்மா ச முக்டணம் பரம கதிஹ்
அவ்யயாஹ் புருஷ சாக்ஷி க்ஷேற்றஜ்னோ-க்ஷர எவ ச
யோகோ யோகவிடம் நேட பிரதான-புருஷேச்வராஹ்
நரசிம்ஹா-வபு ஸ்ரீமன் கேசவாஹ் புருஷோட்டமாஹ்
சர்வாஹ் சர்வாஹ் சிவாஹ் ச்தனுர்-புடடிர்-நிதிர்-அவ்யயாஹ்
சம்பாவோ பவனோ பாரட்ட பிரபாவாஹ் ப்ரபுர்-இச்வராஹ்
ஸ்வயம்ப்ஹூஹ் சம்பூர்-அடித்யாஹ் புஷ்கரக்ஷோ மகாச்வனாஹ்
ஆனந்தி-நிதனோ தட வித்ட தடுருட்டமாஹ்
அப்ரமேயோ ஹ்ரிஷிகேசாஹ் பத்மா-நப்ஹோ-மாற-ப்ரப்ஹூஹ்
விஸ்வகர்மா மனுச்த்வஷ்ட ச்தவிஷ்டாஹ் ச்தவிரோ-த்ருவாஹ்
அக்ரகுயாஹ் சச்வதாஹ் கிருஷ்னோ லோஹிடக்ஷாஹ் பிரதார்டனாஹ்
பிரபுதாஸ்-ற்றிகுப்தம பவித்ரம் மங்களம் பரம்

இசனாஹ் ப்ரனடாஹ் பிரானோ ஜஎஷ்தாஹ் ஸ்ரேஷ்தாஹ் ப்ரஜபதிஹ்
ஹிரன்யகர்ப்ஹோ புகர்ப்ஹோ மதவோ மதுசுடனாஹ்
இஷ்வரோ விக்ரமி தன்வி மேதாவி விக்ரமாஹ் க்ரமாஹ்
அனுட்டமோ டுரதர்சாஹ் க்ருடஜ்னாஹ் க்ருடிரத்மவன்
சுறேசாஹ் சரணம் ஷர்ம விஸ்வறேதாஹ் ப்ரஜபாவாஹ்
அஹாஹ் சம்வசரோ வ்யலாஹ் பிரத்யயாஹ் சர்வடர்ஷனாஹ்
அஜாஹ் சர்வேஸ்வராஹ் சித்தாஹ் ஸிட்ட்ஹிஹ் சர்வடிர் அச்யுதாஹ்
வ்ருஷகபிர் அமேயத்மா சர்வ-யோகா-விநிஹ்ஸ்ருதாஹ்
வசூர் வசுமனாஹ் சட்யாஹ் சமத்ம சம்மிதாஹ் சமாஹ்
அமோக்ஹாஹ் புண்டரிகக்ஷோ வருஷ-கர்ம வ்ருஸ்ஹக்ருதிஹ்
ருத்ரோ பஹஷிற பபிரூர் விஷ்வ-யொநிஹ் சுசி ஸ்ரவாஹ்
அம்ருதாஹ் ஷஸ்வட-ச்தனுர் வரரஓஹோ மஹா-டபாஹ்
சர்வகாஹ் சர்வ-விட-பானூர் விஸ்வக்ஷேனோ ஜனர்டனாஹ்
வேடோ வேடவிட் அவ்யங்கோ வேடங்கோ வேடவிட் கவிஹ்
லோகத்யக்ஷாஹ் சுரத்யக்ஷோ தர்மத்யக்ஷாஹ் க்ருடக்ருதாஹ்
சடுரத்மா சடுர்வ்யுஹாஸ் சடுர்டம்ச்த்ராஸ் சதுர்-புஜாஹ்
பிராஜிஷ்ணுர்-போஜனம் போகட்ட சாஹிஷ்ணுர் ஜகாத்-அதிஜாஹ்
அனக்ஹோ விஜயோ ஜெட விஷ்வ-யொநிஹ் புனர்-வஸுஹ்
உபென்றோ வமனாஹ் பிரம்ஷுர் அமோக்ஹாஹ் சுசிற் உர்ஜிதாஹ்
அடின்றாஹ் சம்க்ராஹாஹ் சர்கோ த்ருடத்மா நியமோ யமாஹ்
வெட்யோ வைத்யாஹ் சட-யோகி விரஹா மதவோ மட்ஹஹ்
அடின்றியோ மகாமையோ மகோட்சஹோ மகாபலாஹ்
மகாபுட்டிர் மகாவிர்யோ மகாசக்திர் மஹட்யுதிஹ்
அநிர்டெஸ்யவபுஹ் ஸ்ரீமன் அமேயத்மா மகாத்ரித்றுக்
மகேஸ்வசோ மகிபார்ட ஸ்ரிநிவசாஹ் சட்டம் கதிஹ்
அணிருட்தாஹ் சுரனாண்டோ கோவிந்தோ கோவிடம் பதிஹ்
மரிசிற்-தமனோ ஹம்சாஹ் சுபர்ணோ புஜகோட்டமாஹ்
ஹிரண்யா-நபா சுடபாஹ் பட்மநப்ஹஹ் ப்ரஜபதிஹ்
அம்ருத்யுஹ் சர்வ-திருக் சிம்ஹாஹ் சந்தட சந்திமான் ச்திராஹ்
அஜோ துர்மர்ஷனாஹ் ஷஷ்ட விஸ்ருடத்மா சுரரிஹா
குரூர் குருடமோ தம சட்யாஹ் சத்ய-பறக்ரமாஹ்
நிமிஷோ அணிமிஷாஹ் ஸ்ரக்வி வச்சச்படிர் உடரட்ஹிஹ்
ஆக்ராநிர் க்ரமநிஹ் ஸ்ரீமன் நியோ நேட சமிரனாஹ்
சஹஸ்ர-முர்த விஸ்வத்மா சஹாஸ்ரக்ஷ சஹாஸ்ரபட்
அவர்தானோ நிவ்ருடத்மா சம்வ்ருதாஹ் சம்ப்ரமர்டனாஹ்
அஹாஹ் சம்வர்டகோ வஹ்னிற் அணிலோ தரணி-தராஹ்

சுப்ரசடாஹ் பிரசன்னத்மா விஷ்வ-திருக் விஷ்வ-புக் விப்ூஹஹ்
சாட்-கர்ட சாட்-க்ருதாஹ் சதுர் ஜக்னுர் நாராயணோ நராஹ்
அசந்க்ஹையோ ப்ரமேயத்மா விசிச்தாஹ் ஷிஷ்டக்ருச் சுகிஹ்
சித்தர்தாஹ் சித்த-சங்கல்பாஹ் சிட்திடாஹ் சிட்திசதனாஹ்
வ்ருஷஹி வ்ருஷப்ஹோ விஷ்ணுர் வ்ருஷபர்வ வ்ருஷோடராஹ்
வரதனோ வர்தமனச்ச்ச விவிக்தாஹ் ஸ்ருதி-சகராஹ்
சுபுஜோ துர்தரோ வக்மி மகேன்றோ வசொடோ வஸுஹ்
நைகருபோ ப்ருஹாத்-ருபாஹ் ஷிபிவிஷ்டாஹ் பிரகாஷன
ஓஜஸ் தேஜோ த்யுதி-தராஹ் பிரகஷத்மா பிரதாபனாஹ்
வ்ருட்தாஹ் ச்பஹ்ச்டக்ஷரோ மன்த்ராஸ் சன்றம்ஷுர் ப்ஹஸ்கரட்யுதிஹ்
அம்ர்டம்ு ட்பாவோ ப்ஹநுஹ் ஸ்ஹஸ்ஹபிந்டுஹ் சுறேஸ்வராஹ்
ஔஷதம் ஜகதாஹ் ஸெதுஹ் சத்ய-தர்ம-ப்ரரக்ரமாஹ்
புட-பாவய-பவன்-நதாஹ் பவனாஹ் பவனோ அனலாஹ்
கமஹா கமக்ருட் கண்டாஹ் கமாஹ் கமப்ரடாஹ் ப்ரப்ூஹஹ்
யுகடிக்ருத் யுகவர்டோ நைகமையோ மகாஷனாஹ்
அட்ருஷ்யோ விக்ட-ருபச்ச சஹாஸ்ரஜிட் ஆனந்டஜீத்
இஷ்டோவிஷிச்தாஹ் ஷிஷ்டேச்தாஹ் சிக்ஹண்டி நுஹஷோ வ்ருஷாஹ்
க்ரோதஹா க்ரோதக்ருட் கர்ட விஷ்வ-பாகூர் மகிதராஹ்
அச்யுதாஹ் பிரதிதாஹ் பிரணாஹ் பிரண்டோ வசவனுஜாஹ்
அப்பம்-நிதிர் அதிஷ்தனம் அப்ரமட்டாஹ் ப்ரடிஷ்டிதாஹ்
ச்கண்டாஹ் சகண்ட-தரோ துர்யோ வர்தோ வயுவஹனாஹ்
வுதேவோ ப்ருஹாத்-பானுர் அடிதேவாஹ் புரண்டராஹ்
அசோகஸ்-தரனஸ்-தராஹ் சுராஹ் சுரீர் ஜநேஸ்வராஹ்
அனுகுலாஹ் ஷடவர்தாஹ் படமி பத்மா-நிப்ஹெக்ஸ்ஹநஹ்
பத்மனப்ஹோ அரவிண்டக்ஷாஹ் பட்மகர்ப்ஹஹ் சரிரபிருட்
மகார்திர் ருட்தோ வ்ருத்தத்மா மகாக்ஷோ கருட-த்வஜாஹ்
அடுலாஹ் சரப்ஹோ பீமாஹ் சமயக்னோ ஹவிர்ஹரிஹ்
சர்வலக்ஷன லக்ஷன்யோ லக்ஷ்மிவன் சமிடிஞ்சயாஹ்
விக்ஷரோ ரோஹிடோ மார்கோ ஹெதூர்-டமொடராஹ் சஹாஹ்
மகிதரோ மகாபாகோ வேகவன் அமிடஷனாஹ்
உட்பாவாஹ் க்ஷோபானோ தேவன் ஸ்ஹ்ரிகர்ப்ஹஹ் பரமேஸ்வராஹ்
கரணம் காரணம் கர்ட விகர்ட கஹனோ குஹாஹ்
வ்யவசையோ வ்யவச்தனாஹ் சம்ச்தனாஹ் ச்தனடோ த்ருவாஹ்
பரர்ட்ஹிஹ் பரம-ச்பஷ்டஸ் டுஷ்டாஹ் புஷ்டாஹ் சுப்ஹெக்ஷனாஹ்
ராமா வீரமோ விரடோ மார்கோ நீயோ நயோனயாஹ்
விராஹ் ஷக்டிமடம் ஸ்ரேஷ்தோ தரமோ தர்ம-விட உட்டமாஹ்

வைகுந்தாஹ் புருஷாஹ் பிரணாஹ் ப்ரனடாஹ் ப்ரனவாஹ் ப்ருதுஹ்
ஹிரண்யா-கர்ப்ஹாஹ் ஷற்றுக்ஹ்னோ வ்யப்டோ வியூர் அதோக்ஷஜாஹ்
ரிதுஹ் சுடர்ஷனாஹ் கலாஹ் பரமேஷ்டி பரிக்ராஹாஹ்
உக்ராஹ் சம்வட்சரோ டாக்ஷோ விஷ்ரமோ விஷ்வ-டக்ஷினாஹ்
விச்டராஹ் சதவர-ஸ்தநுஹ் பிரமாணம் பிசம் அவ்யயம்
அற்தொனர்தோ மகாகொஷோ மகாப்ஹோகோ மகாதனாஹ்
அணிர்வின்னாஹ் ச்தவிஷ்தொபுர் தர்ம-யுபோ மஹா-மக்ஹாஹ்
நக்ஷத்ர-நிமிர் நக்ஷாத்ரி க்ஷமாஹ் க்ஷமாஹ் சமிஹனாஹ்
யஜன இஜா மகேஜ்யஸ் ச க்ரதுஹ் சாற்றம் ஸதம்கதிஹ்
சர்வடர்ஷி விமுக்டத்மா சர்வக்யோ க்ய்னனம்-உத்தமம்
சுவ்ரதாஹ் சுமுக்ஹாஹ் சுக்ஷ்மாஹ் சுக்ஹோஷாஹ் சுக்ஹடாஹ் சுஹ்ருட்
மனோஹரோ ஜிட-க்ரோதோ விரபாகூர் விடரனாஹ்
ச்வபனாஹ் ச்வவஷோ விபி நைகத்மா நிக்க-கர்ம-கருத்
வட்சரோ வட்சலோ வட்சி ரத்னா-கர்ப்ஹோ தநேஸ்வராஹ்
தர்மகுப் தர்மக்ருத் தரமி சட-அசட்க்ஷரம் அக்ஷரம்
அவிஞட சஹாஷ்ராம்சூர் வித்ட கருட-லக்ஷனாஹ்
கபாச்டி-நெமிஹ் சட்ட்வச்தாஹ் சிம்ஹோ புட-மகேஸ்வராஹ்
அடிதேவோ மகாதேவோ தேவேஷோ தேவபிருத்-குருஹ்
உட்டரோ கோபடிர் கோப்தா ஞானகம்யாஹ் புரடனாஹ்
ஷாரிர-புட-பிருத் போகட்ட கபின்றோ புரிடக்ஷினாஹ்
சம்போ அம்ருடபாஹ் சொமாஹ் புருஜித் புருஷோட்டமாஹ்
வினையோ ஜயாஹ் சட்யசந்தோ டஷர்ஹாஹ் ஸத்வதம்பதிஹ்
சிவோ வினையிட-சாக்ஷி முகுண்டோ அமிட விக்ரமாஹ்
அம்ப்ஹோநிதிர் ஆனந்டத்மா மகோடதிஷயோனடகாஹ்
அஜோ மகார்ஹாஹ் ச்வபாவ்யோ ஜிடமிற்றாஹ் ப்ரமொடனாஹ்
ஆனந்தோ நந்தனோ நண்டாஹ் சத்ய-தர்ம ற்றிவிக்ரமாஹ்
மஹர்ஸ்ஹிஹ் கபிலச்சர்யாஹ் க்ருடக்யோ மேதினி-பதிஹ்
ற்றிபதாஸ் ற்றிடஷத்யக்ஷோ மகாஸ்ருங்காஹ் க்ருடண்டக்ருட்
மகாவரஹோ கோயவிண்டாஹ் சுஷேனாஹ் கனகங்காடி
குஹ்யோ கபீரோ கஹனோ குப்டஸ் சக்ர-கடதராஹ்
வேதாஹ் ச்வங்கோ அஜிதாஹ் கிருஷ்னோ ட்ருதாஹ் சங்கர்ஷனோ அச்யுதாஹ்
வருணோ வாருனோ வ்ருக்ஷாஹ் புஷ்கரக்ஷோ மகாமனாஹ்
பகவன் பாககனண்டி வனமலி ஹலயுதாஹ்
அடிதா ஜ்யோதிர்-அடித்யாஹ் சாஹிஷ்ணுர் கடிசட்டமாஹ்
சுதன்வ-க்ஹண்டபரஷுர்-தருனோ திராவினப்ரடாஹ்
திவாஹ்-ச்ப்றுக் சர்வ-திருக் வயசோ வச்சச்படிர் அயோநிஜாஹ்

திரிசம சமகாஹ் சம நிறவனம் பிஎஷஜம் பிஷக்
சந்யசக்ருட் சமாஹ் சாண்டோ நிஷத ஸ்ஹந்திஹ் பாராயணம்
ஃபாங்காஹ் ஷண்டிடாஹ் ஸ்ரஷ்ட குமுடாஹ் குவலேசயாஹ்
கோஹிடோ கோபடிர் கோப்தா வ்ருஷபாக்ஷோ வ்ருஷப்ரியாஹ்
அணிவர்டி நிவ்ருடத்மா சம்க்ஷேப்ட க்ஷேம-க்ருசிவாஹ்
ஸ்ரிவச்ட-வக்ஷாஹ் ஸ்ரிவசாஹ் ஸ்ஹ்ரிபதிஹ் ஸ்ரீமடம்-வர்
ஸ்ரிடாஹ் ஸ்ரிஷாஹ் ஸ்ரிநிவசாஹ் ஸ்ஹ்ரிநிட்ஹிஹ் ஸ்ரீ-விபாவனாஹ்
ஸ்ரிதராஹ் ஸ்ரிகராஹ் ஸ்ரேயாஹ் ஸ்ரீமன் லோக-திருயஷ்ராயாஹ்
ச்வக்ஷாஹ் ச்வங்காஹ் ஷடனாண்டோ நண்டிர் ஜ்யோதிர்-கணேஷ்வராஹ்
விஜிடத்மா விதேயத்மா சட்கிர்டிச்சின்ன-சம்சயாஹ்
உடிர்நாஹ் சரவட-சக்ஷுர்-அணிசாஹ் சச்வட-ச்திராஹ்
புஷயோ புஷனோ புதிர் விஷோகாஹ் சோக-நஷனாஹ்
அற்சிஷ்மன் அற்சிதாஹ் கும்ப்ஹோ விஃத்தத்மா விஷோதனாஹ்
அணிருட்தோ ப்ரடிரதாஹ் பிரத்யும்னோ அமிட-விக்ரமாஹ்
கலநேமிநிஹா விராஹ் ஸௌரிஹ் சுறா-ஜநேஸ்வராஹ்
ற்றிலோகத்மா ற்றிலோகேஷாஹ் கேஷவாஹ் கேஷிஹா ஹரிஹ்
கமதேவாஹ் கமபலாஹ் காமி கண்டாஹ் க்ருடகமாஹ்
அணிர்தேஷ்ய-வபுர் விஷ்ணுர் விரோ ஆனந்தோ தனஞ்சயாஹ்
பிராமன்யோ பிராமக்ருத்-பிரம்மா பிரம்மா பிரம்மா-விவர்தனாஹ்
பிரமவித் பிரமனோ பிரம்மி ப்ரகும்க்னோ பிராமன-ப்ரியாஹ்
மகாக்ரமோ மகாகர்ம மகாதேச மகோரகாஹ்
மகாக்ரதூர் மகாயஜ்வ மகாயக்யோ மஹஹவிஹ்
ச்டவ்யாஹ் ச்டவப்ரியாஹ் ஸ்தோத்ரம் ஸ்துதிஹ் சட்ட ரணப்ரியாஹ்
புர்நாஹ் புரிட புன்யாஹ் புன்யகிர்திர் அனமயாஹ்
மனோஜவாஸ் திர்தகரோ வசுரேட வசுப்ரடாஹ்
வசுப்ரடோ வசுதேவோ வசூர் வசுமான ஹவிஹ்
ஸட்கதிஹ் சாட்-க்ருதிஹ் சட்ட சட-ப்ஃஹதிஹ் சாட்-பறையனாஹ்
சுரசெனோ யடுஸ்ரேஷ்தாஹ் சந்நிவசாஹ் சுயமுனாஹ்
புடவசோ வசுதேவாஹ் சரவசு-நிலையோ அனலாஹ்
தர்பஹா தர்படோ த்ருபதோ துர்தரோ-அத-பரஜிதாஹ்
விஸ்வமுர்திர் மகாமுர்திர் டிப்டமுர்திர் அமுர்டிமன்
அநேகமுர்திர் அவ்யக்தாஹ் ஸ்ஹதமுர்திஹ் ஷடனனாஹ்
எகோ நிகாஹ் சவாஹ் காஹ் கிம் யாத தட் படம்-அனுட்டமம்
லோகபந்துர் லோகனதோ மதவோ பாக்ட-வச்டலாஹ்
சுவர்ண வரனோ ஹெமங்கோ வரங்கஸ் சந்டனங்காடி
விரஹா விஷமாஹ் சுன்யோ க்ஹ்ருடசிர் அச்சலச்ச்சலாஹ்

அமானி மண்டோ மணா லோகச்வமி திரிலோக-திருக்
சுமேத மேதஜோ தன்யாஹ் சட்யமேத தரதராஹ்
டேஜோவ்ருஷோ த்யுதி-தராஹ் சர்வ-சாஸ்திர-பிருடம்-வர்
ப்ரக்ரஹொநிக்ரஹொ விக்ரோ நைகஸ்ருங்கோ கடக்ராஜாஹ்
சடுர்முர்திஸ் சடுர்புஹஸ் சடுர்வ்யுஹாஸ் சதுர்கதிஹ்
சடுரத்மா சடுர்பாவாஸ் சடுர்வேடேவிட் ஏகபட்
சமவர்டோ அணிவ்ருடத்மா டுர்ஜையோ டுரடிக்ரமாஹ்
டுர்லப்ஹோ துர்கமோ துர்கோ டுரவசோ டுரரிஹா
ுபாங்கோ லோகசரங்காஹ் சுடண்டுஸ் தண்டு-வர்தனாஹ்
இன்றகர்ம மகாகர்ம க்ருடகர்ம க்ருடகமாஹ்
உட்பாவாஹ் சுண்டராஹ் சுந்தோ ரத்நநப்ஹஹ் சுலோச்சனாஹ்
அரகோ வஜசனாஹ் சுருங்கி ஜெயந்தாஹ் சர்வ-விஜ-ஜி
சுவர்ண-பின்தூர்-அக்ஷோபியாஹ் சர்வ-வகிஸ்வரேஸ்வராஹ்
மகாஹ்ரடோ மஹா-கார்டோ மஹா-பூட்டோ மஹா-நிட்ஹிஹ்
குமுடாஹ் குண்டராஹ் குண்டாஹ் பர்ஜன்யாஹ் பவனோ அணிலாஹ்
அம்ருடஷோ அம்ருதவபுஹ் சர்வக்யாஹ் சர்வடோ-முக்ஹா
சுலப்ஹாஹ் சுவ்ரதாஹ் சித்தாஹ் சற்று-சித் சற்று-தபனாஹ்
ந்யக்ரோதோ அடும்பரோ-ச்வத்தாஸ் சநூரந்திரா-நிுதனாஹ்
சஹாஸ்ரர்ச்சி சாப்ட-ஜிஹ்வாஹ் சப்டைதாஹ் சாப்ட-வஹனாஹ்
அமுர்திர் அனக்ஹோ அசின்த்யோ பாயக்ருத் பாய-நஷனாஹ்
அனுர ப்ருஹட் க்ருசாஹ் ச்துளோ குனப்ருன் நிர்குனோ மகான்
அத்ருதாஹ் ச்வத்ருதாஹ் ச்வச்யாஹ் பிரக்வம்ஷோ வம்ஷவர்தனாஹ்
பார-பிருத் கதிடோ யோகி யோகிஷாஹ் சர்வ-கமடாஹ்
அஷ்ராமாஹ் ஷ்ராமனாஹ் க்ஷமாஹ் சுபர்ணோ வாயு-வஹனாஹ்
தனுர்தரோ தனுர்வேடோ தண்டோ தமிட டமாஹ்
அபரஜிதாஹ் சர்வசஹோ நியண்ட நியமோ யமாஹ்
சட்வவன் சட்விகாஹ் சட்யாஹ் சத்ய-தர்ம-பறையனாஹ்
அபிப்ரயாஹ் ப்ரியர்ஹோ-ர்ஹாஹ் ப்ரியக்ருட் ப்ரிடிவர்தனாஹ்
விஹயசகடிர் ஜ்யொதிஹ் சுருசிற் ுஹட-புக் விப்ுஹஹ்
ரவிர விரோச்சனாஹ் சூர்யாஹ் சவிதா ரவிலோச்சனாஹ்
ஆனந்தோ ுஹட-புக் போகட்ட சுக்ஹடோ நைகஜோ-க்ராஜாஹ்
அணிர்வின்னாஹ் சடமர்ஷி லோகதிஷ்தன-மட்புதாஹ்
சனத் சண்டன-தமாஹ் கபிலாஹ் கபிர் அவ்யயாஹ்
ச்வச்டிடாஹ் ச்வச்டிக்ருட் ஸ்வஸ்தி ச்வச்டிபுக் ஸ்வஸ்தி-டக்ஷினாஹ்
அருட்ராஹ் குண்டலி சக்ரி விக்ரம்யுர்ஜிட-ஷசனாஹ்
ஷப்டடிகாஹ் ஷப்டசஹாஹ் சிசிராஹ் சர்வரி-கராஹ்

அக்ருராஹ் பெஷலோ டாக்ஷோ டக்ஷினாஹ் க்ஷிமினம் வர்
வித்வாட்டமோ விடபாயாஹ் புண்ய-சரவண-கிர்டனாஹ்
உட்டரனோ டுஷ்க்ருடிஹா புனா டுஹ்-ஸ்வப்ன-நசனாஹ்
விரஹா ரக்ஷனாஹ் சாண்டோ ஜிவனாஹ் பர்யவச்திதாஹ்
ஆனந்தா-ரூபா ஆனந்தா-ஸ்ரீ ஜிடமன்யூர் பாயபஹாஹ்
சடுரஸ்ரோ கபிரத்மா விடிஷோ வ்யடிஷோ டிஷாஹ்
அன்டி புர்புவோ லக்ஸ்ஹ்மிஹ் சுவிரோ ருசிரங்கடாஹ்
ஜநானோ ஜனஜன்மடிர் பீமா பீமா-பறக்ரமாஹ்
ஆதரநிலையோ தட புஷ்பஹசாஹ் ப்ரஜகராஹ்
உர்த்வகாஹ் சாட்-பதச்சராஹ் ப்ரனடாஹ் ப்ரனவாஹ் பணாஹ்
பிரமாணம் ப்ரனநிலயாஹ் ப்ரனபிருட் ப்ரனஜிவனாஹ்
தத்வம் தத்வவிதேகத்மா ஜன்ம-ம்ருத்யு-ஜரடிகாஹ்
புர்புவாஹ் ச்வச்டருஸ்-தராஹ் சவிதா ப்ரபிடமஹாஹ்
யக்யோ யாக்ய-பதிற்-யஜ்வ யஞுங்கோ யாக்ய-வஹனாஹ்
யஞுபிருத் யஞுக்ருத் யகயி யஞுபிருக் யஞுசதனாஹ்
யஞுனண்டக்ருத் யஞுகுஹ்யம் அன்னம் அந்நாட எவ ச
அத்மயொநிஹ் ச்வயம்ஜடோ வைக்ஹனாஹ் சமகயனாஹ்
தேவகி-நந்தனாஹ் ஸ்ரஷ்த க்ஷிடிஷாஹ் பபனஷனாஹ்
ஷன்க்ஹப்ருன் -நந்தகி சக்ரி ஷரங்கத்ன்வ கடதராஹ்
ரதங்க பநிரக்ஷோபியாஹ் சர்வ-ப்ரகுஅரனயுதாஹ்
ஸ்ரீ சர்வ-ப்ரஹா-ரண-யூத ஓம் நமன் இதி
வனமலி கடி சாரங்கி ஷன்க்ஹி சக்ரி ச நந்தகி
ஸ்ரீமன் நாராயணோ விஷ்ணுர்-வசுதேவோ-அபிராக்ஷடு (ரேபெஅட் தேசே 2 டைம்ஸ்)
இடீடம் கீர்ட-நீயச்ய கேஷ-வசய மஹா-த்மனாஹ் ’
நம்னம் சஹாச்ரம் திவ்ய-நம் ஆஷே-ஷேன பிரகீர்-திட்டம்
யா எடம் ஸ்ருனுயட் நித்யம் யச்ச்ஹபி பரிகீர்டளட்
நுபாம்-ப்ரப்னுயட்-கிஞ்சித் சோ முற்றேக-ச-மனவாஹ்
வேடன்-தாகூ ப்ரம்கன-சிட் க்ஷற்றியோ விஜயீ பவேத்
வைஸயோ தன-சமரு-த்தச்யட் ஷ்ஹூட்ற சுக்ஹா மாவைப்-நியாத்
தர்மர்தீ ப்ரப்னு-யாத்தர்மம் அர்த்தர்தீ சேர்த்த மாப்னுயட்
கமான-வப்னுயட்-கமே ப்ரஜர்தீ சப்னு-யாத-பிரசம்
பாகத்-இமணிய சடோத்தய சுசி-ச்டட்கட மனசாஹ்
சஹாச்ரம் வாசு-தேவஸ்ய நமன மேடத் பிரகி-ர்டளட்
யஷாஹ் ப்ரப்னோடி விபுலம் ய்னடி ப்ராட்கன்யா மேவ-ச
அசலம் ஷ்ரிய மாப்நோதி ஸ்ரேயாஹ் ப்ரப்நோத்ய-நுட்டமம்
ந பயம் கவாச்சி டப்னோடி வீர்யம் டேஜச்ஹா விண்டடி

பாவ த்யரோகோ தயு-திமன் பாலா-ரூப குணன்-விடாஹ்
ரோகர்டோ முச்யடே ரோகட் பத்தோ முசஎட பந்தனாத்
பாய ந்முசஎட பீடச்டு முசே தபனன அப்த
துர்கன்யா-திடர த்யூ புருஷாஹ் புருஷோ-ட்டமம்
ஸ்டுவ நாம-சஹா-ஸ்ரேன நித்யம் பக்தி சமன்-விடாஹ்
வாசு-தேவ-ஸ்ரையோ மர்த்யோ வாசு-தேவ பர-யனாஹ்
சர்வ-பாபா வி்-த்ததம யடி ப்ரம்ஹா சன-தனம்
ந வாசு-தேவ பாக்ட-நம் அ்பாம் விடைடே க்வசித்
ஜன்ம மிருத்யு சர விதி பயம் நிவப ஜெயதே
ஏமம் ஸ்டவ மதி-யனாஹ் ஷரத்த-பக்தி சம-ந்விதாஹ்
யுஜ்யே தடம் சுக்ஹா-க்ஸ்ஹந்திஹ் ஸ்ரீ-திரட்டி ஸ்ம்ருதி கேர்திப்ஹிஹ்
ந க்ரோதோ ந மட்சர்யம் ந லோப்ஹோ ந சுபா-மதிஹ்
பாவண்டி கருட புன்யணம் பாக்ட-நம் புரு-ஷோட்டமே
ட்ஹ்யெள ச்சன்-தரற்க நக்ஷத்ர க்ஹம் டிஷோ போஒர்ம-ஹொடட்ஹிஹ்
வாசு-தேவஸ்ய வீரஎன வித்ருடணி மகாத்-மனாஹ்
ச-சுறா-சுறா காந்தர்வம் ச-யக்ஷோ-ரக ரக்ஷா-சாம்
சக-த்வாஷே வறட-டடம் க்ரிஷ்ணச்ய சச்சர-சரம்
இன்றி-யணி மனோ-புட்ட்ஹிஹ் சத்வம் தேஜோ-பலம் ட்ஹ்ருதிஹ்'
வாசு-தேவத்மா கஞ்ஹஹ் க்ஷேத்ரம்-க்ஷேற்றக்ய்ன எவ ச
சர்வ-கமான மச்சராஹ் ப்ரதமம் பரி-கல்படே
ஆசார பிரபாவோ தரமோ தர்மஸ்ய பிறது-ரச்யுதாஹ்
ருஷயாஹ் பிதரோ தேவாஹ் மஹா-பிஊடணி தடவாஹ் '
சங்கம-சங்கமம் சேடம் ஜகன்னறைய-நொட்பாவம்
யோகோ க்ய்னனம் தத சந்க்ஹ்யம் வித்யா சிலபடி கர்ம-ச
வெடாஹ் சாஸ்த்ரணி விக்ய்ணன் எடத்-சர்வம் ஜனார்-தானாத்
எகோ-விஷ்ணு ர்மஹா-ட்பிஊடம் பருத்த-க்பிஊட்ட ந்யநேகசாஹ்
ற்றிலோன்-லோகன்-வ்யப்ய-ப்ஹூடத்மா புஜ்க்டே விஷ்வ-புகவ்யயாஹ்
ஏமம் ஸ்தவம் பாகவடோ விஷ்ணோர்-வயசென கீர்டிடம்
பதேத்யா எச்ஹெட் புருஷாஹ் ஸ்ரேயாஹ் ப்ரப்டும் சுக்ஹனி-ச
விச்ஹ்வே-ஸ்வர மாசம் தேவம் ஜகதாஹ் பிரபு மவ்யம்
பாசண்டி எ புஷ்க-ரக்ஷம் நாடே யானடி பர-பாவம்
ந டே யானடி பர-பாவம் ஓம் நாம இடி
அர்ஜுன உவச்ச
பத்மா-பற்ற விஷ-லக்ஸ பத்மா-நபா சுரோ-ட்டம
பக்தன மனு-ரக்டணம் திருட பாவ ஜனார்-டன
ஸ்ரீ பகவன் உவச்ச

யோ-மாம் நாம சஹா-ஸ்ரேன ச்டோடு மிச்ஹடி பண்டவ
ஷோ ஹ மேகென ஷ்லோகென ஸ்டுட எவ ந சம்ஷயாஹ்
ஸ்டிட எவ ந சம்ஷய ஓம் நாம இடி
விசா உவச்ச
வாச-நாட வாசு தேவ்சைய வசிதம் டே சக-த்ரயம்
சர்வ-புத்த நிவசோ சி வாசு-தேவ நமோ ச்டுடே
வாசு-தேவ நமோச்டுடே ஓம் நாம இடி
பார்வதி உய்வச்வ்
கேனோ-பாஎன லக்ஹுணா விஷ்ணுர்-நாம சஹா-ச்க்ரகம்
பட்யடே பம்டிதெஹ் நித்யம் ஷர்டு மிச்ஹா ம்யஹும் பிரப்ஹோ
ஈஸ்வர உவச்ச
ஸ்ரீ-ராம ராம் ரமேடி ரமே ராமே மனோ-ரமே
சஹா-சரணாம தட்டுல்யம் ராம-நாம வரா-நானே
(ரேஅது தி அபோவே 2 லிங்ஸ் 2 மோர் டைம்ஸ்)
ராம-நாம வரா-நானா ஓம் நாம இடி
ப்ரம்ஹோ உவச்ச
நமோ சத்வன-நடைய சஹா-ஸ்ரமுர்தையே
சஹா-சறப்பா-டக்ஷி ஷிறொரு-பகவே
சஹா-ஸ்ரனாம்னே புரு-சாய ஷஸ்வடே
சஹா-ஸ்ரகொடி-யுக-தரினே நமாஹ்
சஹா-ஸ்ரகொடி யுக-தரின ஓம் நாம இடி
சஞ்சய உவச்ச
யற்ற யோகே-ஸ்வராஹ் க்ருஷ்னோ யற்ற பார்தோ தனுர்-தராஹ்
தற்ற-ஸ்ஹ்ரேஹ் விஜயோ ப்ஹுதிஹ் தருவ நேதிஹ் மதி ரமாம
ஸ்ரீ பகவான் உவச்ச
அனானியா-ச்சாண்ட-யண்டோ மாம் எ ஜனாஹ் பறயு-பண்டே
தேஷம் நித்ய-பீயுக்டனாம் யோகா-க்ஷேமம் வஹா-ம்யஹும்
பரித்ராயண சதுனம் வினசய ச டுஷ்க்ரிதம்,
தர்ம சம்ச்தபனர்த்தாயா சம்பவாமி யுகே யுகே
ஆர்த்த-விஷன்ன-சிதில-ச்ச்சபிதாஹ் க்ஹோறேஹுச்ச-விதி-வர்தமனாஹ்
சம்கீர்த்ய-நாராயண-சாப்ட-மற்றம் விமுக்ட-டுஹ்க்ஹாஹ்-சுக்ஹினோ-பாவண்டி
கென-வாச்ச மன-செந்த்ரிஎர்வ
புத்த்யத்மா-நாவா பிரக்ருடே-ச்வபாவட்
கரோமி யடைத் சகலம் பரசமை
நாரா-யானைஎடி சமர்பயாமி
சர்வம் ஸ்ரீ-கிருஷ்ணர்-பணமச்டு